அண்ணாஸ்வாமியின்

# அமுதமொழியாயிரம்

(முதல் ஐநூறு)

P. B. Annangaracharya
20.3.73

மஹாமஹிமோபாத்தியாய
பிரதிவாதிபயங்கரம்
ஸ்ரீஅண்ணங்கராசாரிய ஸ்வாமியின்
நூல்களிலிருந்து தொகுக்கப்பட்டவை

கிரந்தமாலா ஆபீஸ்,
சின்னகாஞ்சீபுரம்.

விலை ரூ. 5

# முன்னுரை

மஹா மஹிமோபாத்தியாய, ஜகதாசாரிய ஸ்ரீ.உ.வே. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியாரின் அமுதமொழிகள் ஆயிரத்தை பொறுக்கியெடுத்து, கோர்வையாக்கி நல்ல முறையில் நூலாகப் பதிப்பிக்க நண்பர் டி. கிருஷ்ணமூர்த்தி முன்வந்தது போற்றுதற்குரிய பணி. ஸ்வாமியின் சேவையும் கருணையும் கடலை நிகர்த்தவை. பல்வேறு சந்தர்ப்பங்களில் வெளியான வெவ்வேறு கட்டுரைகளிலிருந்து அமுதமொழிகளை சேகரித்து தொகுப்பாக்கி பிரசுரித்துள்ளார் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி. கூடியவரை விஷயங்களை வரிசைப்படுத்தி வெளியிட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

அமுதமொழி ஒவ்வொன்றும் ஒரு ரத்தினம் போல தனிப் பொலிவுடன் அமைந்துள்ளது. ஒவ்வொன்றையும் தனித்தனியாக வேண்டும்போது படித்து இன்புறுவதுடன் சிறந்த வகையில் தெய்வானுபவத்தைப் பெறுவதும் சுலபமாக இருக்கும். இப்பொழுது வெளிவரும் முதல் பாகத்தில் ஐந்நூறு அமுதமொழிகள் இடம் பெற்றுள்ளன. ஆஸ்திகர்கள் அனைவரும், குறிப்பாக வைணவர்கள், இந்தத் தொகுப்பை பெரிதும் வரவேற்பர். இதில் இதிஹாஸ புராணக் கருத்துக்களும், ஆழ்வார் ஆசாரியர்களின் அருளிச் செயல்களும் மனதை ஈர்க்கும் வகையில் வழங்கப்பட்டுள்ளன. சாமானிய தருமங்களும் விசேஷ தர்மங்களும் விவரிக்கப்பட்டுள்ளன.

அமுதமொழிகளை நூறு நூறாகப் பிரித்துத் தொகுத்திருப்பதில் ஒரு தனி விசேஷம் இருக்கிறது. முதல் நூறு மொழிகளில் ராமாநுஜ சரித்திர ஆராய்ச்சிகள் விவரிக்கப்பட்டுள்ள பகுதி குறிப்பிடத்தக்கது. ஆண்டாளுடைய மேன்மை விவரிக்கப்பட்டுள்ளது. கண்ணனுக்கும் கலியனுக்குமுள்ள பன்னிரண்டு வகை ஒற்றுமைகளைப் பற்றிய விவரணை பரவசப்படுத்தவல்லது. இரண்டாவது நூற்றில் ராமாநுஜ தர்சனத்தில் விளக்கங்கள் முக்கியமாக இடம்பெறுகின்றன. பிரபத்தியைப்பற்றிய ஆராய்ச்சிகள், உபநிஷத், ராமாயண, மேற்கோள்களுடன் தரப்பட்டுள்ளன. தேசிகனது ஸூக்திகளும் மணவாள மாமுனியின் தெள்ளிய தேன்மொழிகளும் கையாளப்பட்டுள்ள விதம் பிரமிப்பை ஊட்டுகிறது.

மூன்றாவது நூறு அமுதமொழிகள் பெரும்பாலும் தரும விசாரமாக அமைந்திருப்பது தனி விசேஷம். நல்லோர், தீயோர், மகான்

கள், வள்ளல்கள் போல்வாரின் தன்மைகள் விவரிக்கப்பட்டுள்ளன. கல்வியின் சிறப்பு, கவிதையும் வனிதையும், புதுமை பழமைகள், முதலியவை மிக ரசமான பிரஸ்தாபங்கள்: திரிவிக்கிரம அவதார மகிமையும் கண்ணனது லீலைகளும் இப்பகுதிக்குச் சிறப்புக் கூட்டு கின்றன.

ஸ்வாமியுடன் நெருங்கிப் பழகியவர்களில் பரமபதப் பிராப்தி அடைந்த நூறு பெரியவர்களின் விவரணைகளைக் கொண்டது நான்காவது நூறு. இந்த வரிசையில் ஜீயர்கள், வித்துவான்கள், விற்பன்னர்கள், லௌகிக பிரமுகர்கள் உள்பட நூறு தமிழகப் பெரியவர்கள் நமக்கு அறிமுகமாகின்றனர். இவ்வளவு ஏராளமான எண்ணிக்கையில் பெரியவர்களை இனி எந்தத் தலைமுறையாவது காண முடியுமா என்ற ஐயப்பாடு பலருக்குத் தோன்றும்.

இந்த முதல் பாகத்திலுள்ள கடைசி நூறு அமுதமொழிகள் திருவாய்மொழிக்கு அவதாரிகையாகப் பயன்படும். ஒவ்வொரு பதிகத்தின் தாத்பர்யத்தையும் ஒரு அமுதமொழி சிறந்த முறையில் வழங்குகின்றது. மணவாள மாமுனிகள் அருளிய திருவாய்மொழி நூற்றந்தாதி வெண்பாவில் இருப்பதுடன், மிகச் சுருக்கமாக அமைந்துள்ளது. அதே கருத்துக்களை சற்று விரிவாக்கி, ஒவ்வொரு பதிகத்துக்கும் ஒரு அமுதமொழியாக ஸ்வாமி தெள்ளிய வசனத்தில் வழங்கியிருப்பது ஈடு இணையற்ற சேவை.

அமுதமொழியாயிரம் காலத்துக்கு ஏற்ற மிகத் தேவையான அறநூல். இந்த முதல் பாகத்தை அடுத்து இரண்டாவது பாகமும் விரைவில் வெளிவரும் என்று எதிர்பார்க்கிறோம்.

சென்னை }
17-11-72 }

ஏ. ஜி. வேங்கடாசாரி
''தினமணி''

ஸ்ரீ ரஸ்து.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

# அண்ணஸ்வாமியின் அமுதமொழியாயிரம்

## சென்னை தே: கிருஷ்ணமூர்த்தியின் விண்ணப்பம்

ஸம்பிரதாயத்தில் அடியேனென்கிற ஸாதாரணச் சொல்லையுங் கூட அறியாதிருந்த வெனக்கு ஒரு பாக்கிய விசேஷத்தினால் ஸ்ரீமது பயவேதாந்தப்ரவர்த்தகாசார்யராய் ஜகதாசார்ய ஸிம்ஹாஸனாதி பதியா யெழுந்தருளியிருக்கும் ஸ்ரீகாஞ்சீபுரம் அண்ணஸ்வாமியின் அபிமானம் சிலவாண்டுகட்கு முன்பு வாய்த்தது. அடியேனை அவர் தம்பியென்று கொள்ளும்படியான அளவுக்கன்றோ ஏறிற்று அந்த அபிமானம். நான் அந்தணர் குலத்திலும் வைணவர் குலத்திலும் பிறந்தேனெனினும் லௌகிகப் பழக்க வழக்கங்களையே மிகமிகக் கொண்டிருந்தேன். கொண்டிருந்தேனென்று என்ன? கொண்டிருக் கிறேன். காஞ்சீபுரம் ஸ்வாமியின் பத்திரிகைகளையும் நூல்களையும் சிற்சில சமயங்களில் வாசிக்க நேரும். பெரும்பாலும் வடமொழியுங் கலந்த அவற்றைப் பரிபூரணமாகப் புரிந்துகொள்ளுமாற்றல் எனக்குச் சிறிதுமில்லை யாயினும், ஸ்ரீஸ்வாமியின் காலக்ஷேபங்களைப் பல காலமாகக் கேட்டு வருபவரும் எனது ஆருயிர் நண்பருமான ஸ்ரீமான் G.V. லக்ஷ்மீவராஹன் போல்வாருடைய ஸஹயோகத்தினால் ஓரளவு புரிந்துகொள்ள நேரும்.

முத்தும் மணியும் வயிரமும் நன்பொன்னும் போன்ற ஸ்வாமி யின் அமுத மொழிகள் அவருடைய பல பல நூல்களில் பலபலவிடங் களில் மறைந்து கிடப்பதனால் அவற்றை யெல்லாம் திரட்டி ஒரு ஆயிரம் அமுதமொழிகளைச் சேகரித்து உலகுக்கு உபகரிக்க வேணு மென்கிற உற்சாகம் எனக்கு உண்டாயிற்று. இதை நிறைவேற்று தற்குரிய யோக்யதை எனக்குச் சிறிதுமில்லையே யாயினும், மேலே பிரஸ்தாபித்த ஸ்ரீமான் லக்ஷ்மீவராஹன் ஸ்வாமி போன்ற எனது ஆப்த நண்பர்களின் உதவியையுங்கொண்டு ஒருவாறு சேகரித்து ''அண்ணஸ்வாமியின் அமுதமொழியாயிரம்'' என்னும் பெயரால் இச்சிறுநூலை வெளியிடுகின்றேன். ஆயிரமன்று, பதினாயிரமும் சேகரிக்கும்படியான அமுதமொழிக்கடலாக நம் ஸ்வாமியின் நூல்கள் விளங்குகின்றனவென்பதை உலக முழுதும் அறியும். ஆயினும் இப்போது முதன்முதலாக ஓராயிரம் வெளிவருகின்றது.

இதில் ஏதேனும் குற்றங்குறைகள் காணப்பட்டால் அது அறிவிலியான அடியேனுடையதேயாகும். இதனை அச்சிட்டு முடித்து நம் ஸ்வாமியின் திருவடிகளில் ஸமர்ப்பிக்க வெண்ணித் தொடங்குகிறேன்.

இந்த நூல் எப்படியமையவேண்டுமென்றால், விஷயங்களுக்குத் துறைகள் வகுத்து அந்தந்தத் துறைகளுக்குச் சேர விஷயங்களை வரிசைப்படுத்தி, வேதாந்த விஷயங்கள், வேத விஷயங்கள், இதிஹாஸ புராண விஷயங்கள், திவ்யப் பிரபந்த விஷயங்கள், வியாக்கியான விஷயங்கள், ரஹஸ்யார்த்த விஷயங்கள் தமிழ்க்காவிய விஷயங்கள், இலக்கண இலக்கிய விஷயங்கள், வாதவிவாத விஷயங்கள்—என்றிப்படி மகுடங்கள் கொடுத்து வெளியிட்டால் வாசிப்பவர்களுக்குச் சிறிது உபகாரமாகும். ஆனால், நம் ஸ்வாமியின் நூல்கள் கடல் போன்றிருத்தலால் அவற்றில் இப்படி துறைவகுத்து அமுதமொழிகளைத் திரட்டி வரிசைப்படுத்துவது என்போன்றவர்களுக்கேயன்றி யாருக்குமே அஸாத்யம் என்று தோன்றிற்று. இதில் நாம் இட்டிருக்கும் மகுடங்களை நோக்கி ருசிகாணுமிடங்களில் வாசித்துக்கொண்டு போமவர்களுக்குப் பேரின்ப வெள்ளம் பெருகுமென்றே நினைக்கிறேன். இலையில் தின்பண்டங்கள் பலவற்றையும் அடுக்கினால் அவரவர்கள் தம்தம் இஷ்டப்படி எடுத்து அருந்துவர்களன்றோ.

அமுதமொழியாயிரம் இஃது ஒன்றேயன்று; இங்ஙனம் பலவாயிரங்கள் வெளிவருமாறு எம்பெருமானும் அவனடியார்களும் இன்னருள் புரியவேணும்.

ஸ்ரீ அண்ணங்கராசாரியர் ஸ்வாமிக்கு அவருடைய குலத் தலைவர் பெயரையிட்டு அண்ணாஸ்வாமியென்கிற வழக்கு நமது தென்னாட்டிலுள்ளது. ஆனால் நான் இங்கு அண்ணாஸ்வாமி யென்றது அதனையடியொற்றி யல்ல? என்னை அவர் தம்பியாக்கிக் கொண்டதனால் அவரை நான் அண்ணாவென்று கொண்டு எழுதினபடி.

இங்ஙனம்,

**தாஸன் தே. கிருஷ்ணமூர்த்தி**

*EDITOR : FREE INDIA, MADRAS*

*10—11—1971.*

ஸ்ரீரஸ்து :

# அண்ணாஸ்வாமியின் அமுதமொழியாயிரம்

## 1. காலக்ஷேபமென்பதுபற்றிய விளக்கம்.

வடமொழியில் வழங்கும் "காலக்ஷேப"மென்கிற சொல்லுக்குத் தமிழில் போதுபோக்கென்பது பொருள். ஸ்ரீபாஷ்யநூலைவாசித்தல், பகவத் விஷயநூலைவாசித்தல் என்று சொல்லவேண்டிய ஸ்தானத்தில் ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம், பகவத்விஷய காலக்ஷேபம் என்றே தொன்றுதொட்டுப் பெரியார்கள் வழங்கிவருகிறார்கள். காலக்ஷேபமென்கிற சொல்லுக்கு "வாசிப்பது" என்கிற பொருள் எப்படி கூடுமென்றும் இந்த ப்ரயோகம் எப்படி பொருந்துமென்றும் சில வ்யுத்பந்நர்கள் விமர்சிப்பதுண்டு. ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபமென்றால் ஸ்ரீபாஷ்யத்தைக் கொண்டு போதைப் போக்குவது என்றுதான் பொருள். ஸ்ரீராமாயண காலக்ஷேபம், ஸ்ரீவசநபூஷண காலக்ஷேபம் இத்யாதிகளான ஸகல வ்யவஹாரங்களுக்கும் இதுதான் பொருள். இப்படி வ்யவஹரிக்கத் தொடங்கின பெரியார்களின் திருவுள்ளம் யாதெனில், வாசித்து விஷயங்களை க்ரஹிக்கிறோமோ இல்லையோ ; அது எப்படியாயினு மாகுக; நல்லபடியாகப் போதைப் போக்கினால் போதும்—என்பதேயாம்! ஆர்த்தியில் "முன்னவராம் நம் குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம், முழுதுநமக்கவைபொழுது போக்காகப் பெற்றோம்" என்று மணவாளமாமுனிகள் பணித்தபடியே பெரியோர்களுடைய ஸ்ரீஸூக்திகளைக்கொண்டு போது போக்குவதென்பது ஜன்மாந்தர ஸஹஸ்ர நற்றவப்பயன். * "காவ்ய சாஸ்த்ரவிநோதேந காலோ கச்சதி தீமதாம், அந்யேஷாம் து மநுஷ்யாணாம் நித்ரயா நிந்தயா வா" * என்கிற ச்லோகமொன்று யாவருமறிந்ததே. ஆங்காங்கு அவரவர்கள் தம்தம் போதுகளை எப்படி போக்கி வருகிறார்களென்று நாற்புறமும் பார்ப்போமாயின், உத்யோகஸ்தர்கள், வியாபாரிகள், பயிர்த்தொழிலாளர்கள், வக்கீல்கள் முதலானருடைய போதுபோக்குகள் ஒவ்வொருவிதமாக நிகழ்ந்து வருகின்றன. சிலபேர்கள் தேசவ்ருத்தாந்தப்பத்திரிகைகளைப் படித்தல்,நாவல்களைப்படித்தல், சூது சதுரங்கமாடுதல்...முதலிய காரியங்களிலே காலத்தைச் செலவிடுகிறார்கள். இது தவிர, நால்வர், எண்மர், பதின்மராகக்குழாங்கூடி ஒரு காசுக்குமுதவாத வம்புவார்த்தைகளை வெகு அட்டஹாஸங்களுடன் பேசிக்கொண்டும், தங்கள் திரளிலே

o . . . . . . . . நாராகணப்போர்,
[illegible]



அந்வயிக்கப் பெருமல், சுவடிகளிலும் பகவத் பாகவத பரிசர்யைகளிலும் போதுபோக்கிவரும் மஹான்களைப்பற்றி ஏதேனும் பறைசாற்றிக்கொண்டும், பத்துமணி காலத்தைப் பத்து நிமிஷமாகக் கழிக்கின்றவர்கள் சிறிய கிராமம் முதல் பெரிய நகரம்வரையில் எங்குமுள்ளார்கள். அன்னவர்கள் பெறுமானந்தத்தை நாமறியோம்; நமது போதுபோக்கினுல் நாம் பெறுமானந்தம் அளவு கடந்தது.

## 2. போதுபோக்கைப்பற்றித் திருமழிசைப்பிரானும் நம்மாழ்வாரும் பேசியவை.

ஆழ்வார்களுள் இரண்டு ஆழ்வார்கள் போதுபோக்கைப்பற்றி வெகுஇன்பமாகப் பேசியுள்ளார்கள். அவர்கள் திருமழிசையாழ்வாரும் நம்மாழ்வாரும். இவ்விருவருடைய இரண்டு பாசுரங்களை எடுத்துக் காட்டுகிறேம் காண்மின். திருமழிசையாழ்வார் நான்முகன் திருவந்தாதியில் (63) * தரித்திருந்தேனுகவே...............“தெரித்தெழுதி, வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும், பூசித்தும் போக்கினேன் போது” * என்றருளிய பாசுரம் ஒவ்வொருவரும் நிச்சலும் நினைக்கத்தக்கது. போதுபோக்கும் விதத்தை இவரைப்போல் எடுத்துரைத்தவர் மற்றுயாருமில்லை. தெரித்தல், எழுதுதல், வாசித்தல், கேட்டல் வணங்குதல், வழிபடல், பூசித்தல் ஆகிய இவற்றினுலேயே தாம் போதைப் போக்கினதாகவும் இவையில்லையாயின் தம்மால் உயிர் தரிக்க முடியாதாகவும் வ்யக்தமாக விளம்பியுள்ளார். நம்மாழ்வார் அருளிச் செய்வதோ இதனிலும் விலக்ஷணமானது; அதாவது பெரிய திருவந்தாதியின் முடிவில் (பா. 86)* கார் கலந்த மேனியான் கைகலந்தவாழியான், பார்கலந்த வல்வயிற்ருன் பாம்பணையான், சீர்கலந்த சொல் நினைந்து போக்காரேல் சூழ்வினையினுழ்துயரை, “என்னினைந்து போக்குவரிப்போது,” * என்றுள்ள பாசுரம் சுவை மிக்க பொருளுடைத்து, அப்பொருளைச் சிறிது விவரிக்கிறேன்; எம்பெருமானுடைய திருக்குணங்கள் நிரம்பிய ஸ்ரீஸூக்திகளை யநுஸந்தித்தால் பாவங்களும் துன்பங்களும் தொலையுமென்று சில பெரியார் நினைப்பதும் சொல்லுவதுமுண்டு; ஆழ்வார்தாம் என்ன சொல்லுகிருரென்ருல், பாவங்களும் துன்பங்களும் தொலைந்தால் தொலையட்டும், இன்னமும் வளர்ந்தாலும் வளரட்டும், அதைப்பற்றி என்ன கவலை? இவ்வுலகில் நாம் வாழ்கிறவரையில் நம்முடைய போது போகவேண்டுமே; போதை எப்படி போக்குவது? பகவத்குணங்கள் மலிந்த ஸ்ரீ ஸூக்திகளைக் கொண்டுதானே போதைப் போக்கவேண்டும்; வேறு எதைக்கொண்டு போதைப்போக்குவது! ஒவ்வொருவனும் போதைப் போக்கியாக வேண்டுமே! குணநுபவம் தவிர வேறு எந்தக் காரியஞ் செய்தால் போது போகும்?



வேறென்ருலும் போதுபோக்குவது அரிதன்ரே. சீர்கலந்த சொல் நினைந்து சூழ்வினையினுழ்துயரைப் போக்காரேல் போக்கா தொழிக; இப் போதை என்னினைந்து போக்குவர்! என்று அருளிச்செய்கிற அழகு என்னே! இத்தகைய மனப்பான்மை ஒவ்வொருவர்க்குமுண்டாகவேணும், உண்டாகுமா?

## 3. பரமைகாந்திகளிருவரின் இருகதைக்கு முன்னுரை

உலகத்தில் ஒவ்வொருவனும் பகவத்குணநுபவம் பண்ணியா போதைப் போக்குகிருன்? இல்லையே. சூதுசதுரங்கமாடியும், உண்டியே உடையே உகந்தோடியும், மாரனுர் வரி வெஞ்சிலைக்கு ஆட்செய்தும் மற்றும் பல பல செய்துமன்ரே அவரவர்கள் போதைப் போக்கி வருவது. குணநுபவத்தால் போதுபோக்குவாராக ஒருவரையுங் கண்டிலோமே; “ஸாக்ஷாத்க்ருத ஸ்வ பர வ்ருத்தாந்தர்க்கு” என்று ஆசார்ய ஹ்ருதயத்தி லருளிச் செய்கிறபடி உலகியற்கை ஒன்றுதப்பாம லுணர்ந்தவரான ஆழ்வார் “என்னினைந்து போக்குவரிப்போது” என்று குணநுபவத்தாலன்றிப் போது போக்க முடியாதென்று ஏன் சொல்லுகிருர்? என்று கேட்கக்கூடும்; அதற்கு இரண்டு கதைகள் கேண்மின்.

## 4, 5. வைதிகர்களிருவரின் விசித்திரமான கதை

(1) கள்ளங்கவடறியாத ஒரு வைதிக ஸ்வாமி தம் திருமாளிகை வாசலில் தென்னைமரம் வளர்த்திருந்தார். அதில், காய்கள் நிறையக் காய்த்திருந்தன. ஒரு நாளிரவு திருடன் மரத்தின் மீதேறிக் காய்களைப் பறிப்பதை அவர் அறிந்துகொண்டு இரண்டு மைல் தூரத்திலுள்ள டாணுவுக்குச் சென்று போலீஸ் சேவகனை யழைத்துக் கொண்டு வர எண்ணினுர். அங்குப் போய்வர ஒரு நாழிகை ஆகுமாதலால் அதற்குள் கள்ளன் இறங்கி யோடிப் போய்விட்டால் என்ன செய்வதென்றும் ஆலோசித்தார். ஒரு உபாயம் தோன்றி அப்படியே செய்தார். உள்ளிருந்து பெருமாள் திருவாராதனத் தீர்த்தத்தைக் கொணர்ந்து மரத்தின் கீழே நிறையத் தெளித்துவிட்டு ‘இது பெருமாள் தீர்த்தமாகையாலே இதை யாரும் மிதிக்கலாகாது’ என்று உரக்கச் சொல்லிவிட்டு உடனே டாணுவுக்குச் சென்ருர். ‘தேங்காய்க் கள்ளனைக் கையும் பிடியுமாகப் பிடிக்கவேணும், கையோடு வாருங்கள்’ என்று சேவகனையழைத்தார்! அதற்கு அவன் ‘ஸ்வாமீ! கள்ளன் இன்னுமா மரத்தின்மேலேயே இருப்பான்? இதுவரையில் அவன் வீடு போய்ச் சேர்ந்திருப்பனே’ என்ருன். அதற்கு இவர் சொல்லுகிருர்: “அம்மரத்தின் கீழ்ப்பாகம் முழுதும் பெருமாள் தீர்த்தத்தைத் தெளித்துவிட்டு கள்ளன் காதிலும் கேட்கும்படி அதை உரக்கச் சொல்லிவிட்டன்ரே நான்

வந்திருக்கிறேன்; பரிசுத்தமான அவ்விடத்தை மிதித்துப்போக அவனால் முடியாதாகையாலே அவன் மரத்தின்மீதுதான் இருப்பன், வாருங்கள்" என்றார். தம்மையே யொப்பப் பிறரையும் நினைக்கிற படியன்றோவிது. இத்தகைய பரமைகாந்தி இக்காலத்திலில்லை.

(2) மற்றொரு பரமைகாந்தி கதை: பரம வைதிகரான வொரு ஸ்வாமி இரவில சயனிக்கும்போது தம் தேவியை யழைத்து 'அடீ! சொம்பிலே ஜலம் வைக்காதே; கவிழ்த்து வை' என்று கட்டளையிடுவராம். இவரது கருத்து என்னெனில், இரவிலே கள்ளன் வந்தால் சொம்பைக் கொள்ளைகொள்ள நினைத்து அதனருகேவந்து அதையெடுக்கப் பார்க்கும்போது, கையலம்பாமல் சொம்பைத் தொடலாகாதென்று தீர்த்தம் தேடுவனாம்; தீர்த்தம் கிடைத்தால் கையையலம்பிக்கொண்டு சொம்பைக் கவர்ந்து கொண்டு செல்வனாம்; தீர்த்தம் கிடையாவிடில் அசுத்தமான கையாலே சொம்பை எப்படி எடுப்பதென்று கூசி, சொம்பைத் தொடாமலே போய்விடுவனாம்; இதற்காகவே 'சொம்பில் ஜலமின்றிக் கவிழ்த்துவை' என்று தேவிக்குக் கட்டளை யிடுவதாம். [பரமைகாந்தியெனினும் வைடுகரெனினும் பொருள் ஒன்றே.]

## 6. போதுபோக்கில் நம்மாழ்வார் திருவுள்ளத்தின் நிகமனம்

இதெல்லாம் ப்ராசீந ப்ராமாணிகர்களின் சரிதைகள். தங்களுடைய ஆசாரமே கள்ளர்க்கும் உள்ளதாக அவர்கள் நினைப்பது போல் ஆழ்வாரும் பகவத் குணாநுபவத்தாலன்றி மற்றெதனாலும் தமக்குப் போதுபோக்க அரிதாயிருக்குமியல்வையே உலகில் எல்லாருக்குமுள்ளதாக நினைத்து, "சீர்கலந்த சொல் நினைந்து போக்காரேல் சூழ்வினையினாழ்துயரை, என்னினைந்து போக்குவர் இப்போது" என்று உள்ளமுருகவருளிச் செய்கிறார். ஸ்ரீராமாயண பாரதாதி இதிஹாஸங்களைக்கொண்டும், ஸ்ரீவிஷ்ணு புராணம் முதலிய புராணங்களைக்கொண்டும், அருளிச் செயல்களைக்கொண்டும் பாவத்தைப் போக்கிக்கொள்ளார்களாகில் அதுபற்றி விசாரமில்லை; போதைப் போக்குவதற்கு இவையொழிய வேறு என்ன ஸாதனமுள்ளது! என்று கூறின ஆழ்வாரை வழிபடுகின்ற நாம் நம்முடைய போதை எப்படிப் போக்க ஆசைப்பட வேணுமென்று இன்னமும் விவரிக்கவேணுமோ? அது நிறைவேறாவிடிலும் அதனை ஆசைப்பட்டாலே போதும்.

## 7. உலகவியற்கையையாராய்தல்

* நலத்தால் மிக்கார் * என்றும் * கலையிலங்குமொழியாளர் * என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகளுக்கு லக்ஷ்யபூதர்களாய் விளங்கும் மஹநீயர்களைக் குறித்து * "அசக்தாஸ் தத்பதம் கந்தும் ததோ நிந்தாம் ப்ரகுர்வதே" * என்கிறபடியே நிந்தனை மொழிகளைப் பல



வகைகளாலும் பரவச் செய்துகொண்டு, அதுவே போதுபோக்காக இருப்பவர்களைக் குறித்து இங்கு நாம் விஜ்ஞாபிக்க வேண்டியதொன்றுமில்லை. ஈச்வரனுடைய ஜகத் ஸ்ருஷ்டியானது மிக விசித்திரமானது. பொய் சொல்வது, களவு செய்வது, வஞ்சனை பண்ணுவது முதலான தீயகுணங்களையும், அஹிம்ஸை, இந்த்ரிய நிக்ரஹம், க்ஷமை, ஸத்யம் முதலிய நற்குணங்களையும் ஒவ்வொரு கிராமத்திலும் ஒவ்வொரு நகரத்திலும் நாம் சமமாகப் பார்த்து வருகிறோம். நற்குணங்களோ தீயகுணங்களோ அவரவர்கட்கு இயற்கையாக அமைகின்றனவென்பதே பெரும்பான்மையான கொள்கை. வேம்புக்குள்ள கசப்பும் மாதுளைக்குள்ள புளிப்பும், கரும்புக்குள்ள தித்திப்பும் முதலியன எப்படி ஒரு நாளும் மாறுவதில்லையோ, அப்படியே மனிதர்களுக்கும் ஜன்மஸித்தங்களான குணங்கள் (நல்லவையோ தீயவையோ) பேர்க்கவும் பேரா என்றே பெரியார் கூறுவர். இளமையில் பொய் சொல்லியும், களவாடியும் வழக்கம் பெற்றவர்கள் அந்த வழக்கத்தை ஒருநாளும் விடமுடிகிறதில்லையென்பதையும், இயற்கையாகவே ஸத்யம் முதலிய நல்ல குணங்கள் அமையப்பெற்றவர்கள் ஒருநாளும் அஸத்ய வழியில் செல்கின்றிலர் என்பதையும், எந்தவூரிலும், எந்தஜாதியிலும், எக்காலத்திலும் பார்க்கலாம். ஆகவே "*பச்யதி பரேஷு தோஷாந் அஸதோபி, ஸதோபி நைவ குணாந், விபரீதமிதம் ஸ்வஸ்மிந், மஹிமா மோஹாஞ்ஜநஸ்யைஷ:"* என்று தேசிகன் சாதித்தபடி, பிறரிடத்தில் இல்லாத தோஷங்களை இருப்பனவாகக் காண்பதும், இருக்கின்ற குணங்களை இல்லை செய்வதும், தம்மிடத்தில் உள்ள தோஷங்களைக் காணாமல் இல்லாத குணங்களை இருப்பனவாக ப்ரமிக்கையுமாகிற இந்த மஹாஸம்பத்தை மோஹாஞ்ஜந மஹிமையினால் சிலர் இயற்கையாகவே பெற்று வாழ்கின்றார்களென்றும் அதற்குத் தகுந்தபடி அமையக்கூடிய அவர்களது போது போக்கை மாறுபடுத்த மாதவனாலுமாகாதென்றும், இதையும் நாம் எங்கும் அநுபவத்திற் காணாநின்றோம். யானையும் குதிரையும் பெருமாள் புறப்பாட்டுக்கு கம்பீரமாக உபயோகப்படுவது போல, மற்ற ஜந்துக்கள் ஏன் உபயோகப்படுவதில்லையென்று ஒருவர் கேட்டால் இதற்குஎன்ன பதில் சொல்வது? யோக்யதைக்குத் தகுந்தபடி உபயோகம் நேர்கின்றது என்றிவ்வளவே சொல்லமுடியும். நல்ல வழிகளில் போது போக்க யோக்யதையற்றவர்கள் ஏதோவொரு வழியில் தங்கள் போதைப் போக்கித்தானே யாகவேண்டும். குயிலும் காக்கையும் பெரும்பாலும் வடிவில் ஒத்திருக்கச் செய்தேயும் செய்கையில் ஏன் ஒத்திருக்கவில்லை யென்று யாரைநோக்கி யார்தாம் கேட்பது? அதுபோல; சிலர் சீர்கலந்த சொல் நினைந்து போது போக்க, வேறுசிலர் தங்களுக்கு ஸுலபஸாத்யமானவகையில் போது

— ஆகிலும், கொடிய வென்னெஞ்சம், அவனென்றே கிடக்கு மெல்லே, துடி கொளிடை மடத்தோழி அன்னையென் செய்யுமே" — 5-3-5.



போக்கி வருகின்றார்களென்றால் இதில் வியப்பு ஒன்றுமில்லையே. ஸத்துக்களையும் ஸாதுக்களையும் நிஷ்காரணமாகப் பழிப்பதையே போதுபோக்காகக்கொண்டவர்கள் சிறிது விவேகிகளாயிருந்தால் ஒன்று ஆலோசிக்கவேண்டும். மஹான்களைப்பற்றித் தாங்கள் செய்யும் நிந்தைகளினால் தங்களுக்கு ஜன்ம ஸாபல்யமாகிற வொரு லாபம் ஸித்தித்தாலும் அந்த மஹான்களுக்கு என்ன நஷ்டமுண்டாகுமென்பதை மாத்திரம் சற்று விமர்சிக்கவேணுமவர்கள். *

## 8. திருவாய்மொழியில் ஓர் அற்புதமான பாசுரம்

திருவாய்மொழியில் நம்மாழ்வார் அற்புதமாக ஒரு பாசுரம் அருளிச் செய்கிறார்; அதாவது (5--3--5) *"கடியன் கொடியன் நெடியமால் உலகங்கொண்டவடியன், அறிவருமேனி மாயத்தன்*"— இத்யாதி. இதன் பொருளின்பத்தைச் சிறிது விவரித்து அடியேனும் ஆனந்தித்து பக்தர்களையும் ஆனந்திக்கச் செய்கிறேன். ஆழ்வார் ஆண்மைதவிர்ந்து பெண்மையடைந்து பேசும் பாசுரமிது. பராங்குசநாயகி யென்று இப்போது ஆழ்வார்க்குத் திருநாமம். இப் பெண்பிள்ளைக்கும் தோழிக்கும் பரஸ்பரம் பேச்சு நடந்து வருகிறது தோழியானவள் இப்பெண்மணியை நோக்கி "பேதாய்! நீ பகவான் பகவானென்று எப்போதும் அவனையே வாய் வெருவி வீணாகவருந்துகிறாயே;. இந்த கஷ்டம் உனக்கு ஏதுக்காக? அவன் குணசாலியாயிருந்தால் அவனிடத்தில் நீ எவ்வளவும் ஈடுபடலாம்; குணஹீநனான அவனிடத்தில் நீ வீணாக ஆசைவைத்துத் தவிப்பது வேண்டாமே" என்று கூறினளாக, அதற்குப் பராங்குச நாயகி மறுமொழி கூறுகின்றாளிப்பாட்டினால். 'தோழீ! எம்பெருமானை நான் மஹாகுணசாலியென்கிறேனென்றுகொள்; நீயோ அவனை குணஹீநனென்கிறாய். நான் சொல்லுகிறபடியன்றிக்கே நீ சொல்லுகிறபடியே குணஹீநனானாலும் என் நெஞ்சம் அவனையல்லது அறியாது. அவனிடத்தில் நின்றும் என்னை மீட்பதற்காகவன்றோ நீ அவனை குணஹீநனென்பது. மிகவும் சந்தோஷம். குணஹீநனென்பது பற்றியே அவனை நான் மிக மிக மேல்விழுந்து விரும்புகின்றேனென்று நீ திண்ணமாகக் கொள்ளவேணும். அவனிடத்தில் குணமில்லையென்பதைச் சொல்லவேண்டுமானாலும் அம்மா தோழீ! அதை நான் சொல்லவேணுமேயல்லது நீ சொல்லலாகுமோ? அவனையும் என்னையும் கூட்டிவைத்தது மாத்திரமேயன்றோ உன் காரியம்; அவனோடு உள்கலந்து பரிமாறினவள் நானே யல்லது நீயல்லையே; அவனிடத்திலுள்ளது தோஷமோ குணமோ எதுவானாலும் எனக்குத் தெரிந்தவளவு உனக்குத் தெரிய ப்ரஸக்தியில்லையே. ஆகையாலே குணமில்லாமையையும் தோஷ முடைமையையும் என்வாயால் நான் சொல்ல நீ கேளாய்" என்று பீடிகைபோட்டுக்கொண்டு "*கடியன்



கொடியன்" என்று தொடங்கி இரண்டடிகளாலே அவனுடைய குணக்கேட்டைச் சொல்லுகிறாள் பராங்குசநாயகி (ஆழ்வார்).

## 9. எம்பெருமானுடைய குணக்கேடுகள்

தான் சொல்லுகிற குணக்கேடுகள் எவை யென்னில்; கேண்மின்:"கடியன்"—தன்காரியத்தை ஸாதித்துக்கொள்வதிலேகனவேகமுடையவன். அதாவது, தனக்கு விருப்பமுண்டானால் தானேவந்து மேல் விழுந்து விரைந்து கலக்குமவன் என்கை. "கொடியன்"—எதிர்த்தலைபடுகிற கஷ்டங்களைப் பாராதே கல்நெஞ்சனாய்ப் பிரிந்து போமவன்: "நெடியமால்" மிகவும் பெரியவன் என்பது இச் சொல்லின் பொருள். இதன் கருத்தாவது, மேல்விழுந்து கலக்கும்போது பிரிய வேணுமென்று நினைப்பன். அப்படி அவன் நினைத்ததையறிந்து 'என்னையனே! பிரியலாகாது பிரியலாகாது' என்று கால்கட்டி விலக்கப்பார்க்கலாமே. அப்படி விலக்குவதற்குக் கூசி நடுங்கி அஞ்சியிருக்க வேண்டும்படி திடீரென்று பரத்துவம் பாராட்டி நிற்பவனென்கை." உலகங்கொண்ட வடியன்"—பிறருடைமையைத் தனக்காக்கிக் கொள்ள நினைத்தால் பின்னை அவர்களுக்கு ஒன்றும் மிச்சப்படாதபடி பண்ணி அவர்களைப் பாதாளத்திலே தள்ளுமவன். "அறிவருமேனிமாயத்தன்"—வடிவைக்கண்டால் ஸர்வஸ்வதானம் பண்ணவிருக்கிறானோ? அன்றி ஸர்ஸ்வத்தையும் கொள்ளைகொள்ளவிருக்கிறானோவென்று தெரிந்து கொள்ளமுடியாதபடி ஆச்சரியமான தன்மையையுடையவன். அடியேன் சிறியேன் குடியேனென்று சில சொல்லி மயக்கிக் கண்ணிலே மணலைத்தூவி யோடிப்போவன்.

## 10. ஆழ்வாருடைய நிகமனம்

"இப்படிப்பட்ட குணக்கேடுகளைக் கோடிக்கணக்காகச் சொல்லவேணுமானாலும் நானன்றோ சொல்லவேணும்; எனக்கன்றோ மருமம் தெரியும். தோழீ! இவை உன்னாலும் சொல்லமுடியாது, இதற்கென்றே இட்டுப்பிறந்த சிசுபாலாதிகளாலும் சொல்ல முடியாது. இவ்வளவு குணக்கேடுகளையும் நான் அறிந்துவைத்தேயன்றோ அவன்திறத்தி லீடுபட்டுக்கிடக்கிறது. இவை தோஷங்களேயானாலும் அவனுடைய தோஷங்களாகையாலே அவனது ஸம்பந்தத்தையிட்டு இவை நமக்கு உபாதேயங்களேயென்று என்னெஞ்சு கொள்ளுகின்றது; (அல்லது) கீழ்ச்சொன்ன விசேஷண பூதங்களான குணக்கேடுகளில் நோக்கு இல்லாமே விசேஷ்ய பூதனான அவனைமாத்திரமே என்னெஞ்சு பற்றியிருக்கின்றது. மாயாவாதிகள் "நிர்விசேஷ சிந்மாத்ரம் ப்ரஹ்ம" என்று விசேஷண ஸம்பந்த கந்தமுற்ற விசேஷ்ய அம்சத்தை மாத்திரமே அங்கீகரிக்கிறாப் போலே குணமோ குணக்கேடோ ஆகிய விசேஷணாம்சத்தில் கண் செலுத்

தாமல் வெறும் விசேஷ்யமான அவனளவில் மாத்திரமே என்னெஞ்சு ஊன்றியிருக்கின்றது என்பதாக "ஆகிலும் கொடியவென்னெஞ்சம் அவனென்றே கிடக்குமெல்லே" என்கிற மூன்றாமடி அமைந்தது. ஆக இதனால் பெரியார் திறத்தில் நமது பக்தி ஸ்வரூப ப்ராப்தமாயிருக்க வேணுமேயல்லது குணப்ரயுக்தமன்று என்றதாயிற்று.

## 11. உலகில் அன்பர்களின் பரிமாற்றம்

கீழே விளக்கின பாசுரம் எம்பெருமான் விஷயத்தில் மட்டுமன்று, அன்பு மிக்குள்ள விடங்களிலெல்லாம் இப்படித் தான் பரிமாற்றமுள்ளது. அன்பு வைத்திருப்பாருடைய அன்பைக் குலைக்கவேணுமென்று நினைத்து எவ்வளவு தோஷங்களை நிரூபணம் செய்தாலும் "ஊரவர் கவ்வை யெருவிட்டு" என்ற பாசுரக் கணக்கிலே மெய்யன்பருடைய அன்பு மேன்மேலும் பெருகுவதற்கு ஹேதுவாகுமே யல்லது தோஷ நிரூபணங்களினால் அபூர்வமாக எதுவும் ஸித்திக்கமாட்டாதென்பது திண்ணம். இவ்வுலகில் பிறக்கின்றவர்கள் யாவரும் தோஷமே நிரம்பியவர்கள் என்றாவது, குணமே நிரம்பியவர்கள் என்றாவது யாரும் சொல்லமுடியாது. உயர்ந்த பதவியில் இருக்கின்ற மஹான்கள் முதற்கொண்டு மிகவும் தாழ்ந்திருப்பவர்கள் வரையில் யாரை யெடுத்துக்கொண்டாலும் ஒவ்வொருவரிடத்திலும் குணங்களும் தோஷங்களும் கலந்திருக்குமேயல்லாது பரிபூர்ண குணசாலியாகவும், பரிபூர்ண துஷ்டனாகவும் ஒரு மனிதனையும் காட்டமுடியாது. எவரும் அயலாரை வஞ்சித்து விடலாமானாலும் தம்முடைய ஆத்துமாவைத் தாம் வஞ்சித்து விடமுடியாததலால் தம் தம்மிடத்திலுள்ள குண தோஷங்களை உள்ளபடி அவரவர்கள் கட்டாயம் அறிந்தே யிருப்பார்கள். அப்படியறிந்திருந்தும், உள்ள தோஷங்களை அடியோடு மறைத்துக்கொள்வதற்கும் இல்லாத குணங்களை ஏறிட்டுக் கொள்வதற்குமே ஒவ்வொருவரும் முயற்சி செய்வது வழக்கம். அதில் ஸாமான்ய ஜனங்கள் ஏமாந்து போய் விடுவதும் நிபுணர்கள் உண்மையை அறிந்து கொள்வதும் இயல்பு.

## 12. மனச்சாக்ஷியின் மேன்மை

பொதுவில் ஒவ்வொருவருடைய நோக்கமும் எப்படிப் பட்டதென்றால் 'நம்மிடத்தில் எல்லாருக்கும் நல்ல மதிப்பு உண்டாக வேணும்; நம்மை நல்ல குணசாலியென்றே எல்லாரும் கொள்ள வேண்டும்; நம்மிடத்தில் தீமையிருப்பதாக யாரும் கருதக் கூடாது' என்றே ஆசை கொண்டு அதற்கு ஏற்றாப் போல் நடந்து கொள்வதிலேயே பெரும்பாலும் ஜனங்களின் நோக்கம் காண்கிறது. ஞானம், செல்வம், அழகு முதலானவை மிகச் சிறிதளவு இருந்தாலும் அவற்றை மிகவும் அதிகமாகவே காட்டிக்கொள்ள விரும்பு



வாரும் உண்டு. அவை அதிகமாகவே யிருந்தும் அவற்றை டம்பமாகக் காட்டிக்கொள்ள விரும்பாமல் வெகு அடக்கத்தோடு இருப்பவர்களும் உண்டு. சிலபேர்கள் தங்களுடைய நிலைமையை நன்றாகத் தெரிந்துகொண்டு 'நாம் எப்படி குற்றங்களுக்குக் கொள்கலமாக இருக்கிறோமோ இப்படித்தான் உலகில் பலரும் இருக்க நேரிடும்; இவ்வுலகுக்கு இது ஆச்சரியமன்று; ஆதலால் பிறருடைய குற்றங்களைப் பற்றி நாம் கவனிப்பது வேண்டா' என்றுகொண்டு பிறரது குற்றங்களில் சிறிதும் புத்தியைச் செலுத்தாமல் தங்கள் காரியத்தோடே நிற்பர்கள். இப்படிப்பட்ட அதிகாரிகள் அதிகமாகத் தேறமாட்டார்கள். நூற்றில் ஒருவர் தேறினால் விசேஷம். தொண்ணூற்றொன்பது பேர்களின் இயல்வு எப்படிப்பட்டதென்றால் தம் நிலைமையைத் தாம் அடியோடு மறந்து எப்போதும் பிறரைப் பற்றிய பழிப்புரையே போது போக்காக இருப்பதாம். அன்னவர்கள் வாய் கொண்டு பேசத் தொடங்கினாலும் கை கொண்டு எழுதத் தொடங்கினாலும். இன்னாரைப்பற்றி இன்னவிதமாகத்தான் பேசுவார்கள், எழுதுவார்கள் என்கிற வரம்பு சிறிதும் இராது. ஒன்றுமறியாத மூடர்களை உயரத் தூக்கி வைத்திடவும் பெரும் புகழ் பெற்ற பெரியோர்களைப் பாதாளத்திலே தள்ளிவிடவும் அவர்களுக்கு வல்லமை யுண்டு. இந்த இயல்பு நேற்று இன்று ஏற்பட்டதன்று. ஸ்ரீ ராமக்ருஷ்ணாதி அவதார காலங்களிலும், ஸ்ரீமந்நாதயாமுந யதிவராதி ஆசாரியர்களின் காலங்களிலுமே இப்படிப்பட்ட அதிகாரிகள் மிகவும் மலிந்திருந்தார்களென்றால் இக்காலத்தில் இருக்கக் கேட்கவேணுமோ? இப்படிப்பட்டவர்கள் நிறைந்திருப்பது இந்த லீலா விபூதிக்கே ஒரு அழகு. அவர்கள் விஷயத்தில் யாரும் வெறுப்புக்கொள்ளலாகாது. உலகுக்கு மஹோபகாரம் செய்பவர்களாகவே அவர்களைக் கருதுவர்கள் பெரியார்.

## 13. உலகரிடம் நாம் எதிர்பார்க்க வேண்டியதென்ன?

'உலகில் நம்மை எல்லோரும் பூஷிக்க வேணுமேதவிர ஒருவரும் நம்மைத் தூஷிக்கக்கூடாது' என்று விரும்பி, பூஷணைகளையே ஆவலுடன் எதிர் பார்ப்பதும் தூஷணைகள் வருங்கால் மிகவும் வருந்துவதும் சிலருடைய இயல்வாதலால் அதைப் பற்றியும் இங்கு நாம் முக்கியமாகச் சில சொல்ல விரும்புகிறோம். தூஷிக்கவேண்டிய காரணம் பூர்த்தியாக இருந்தாலுங்கூட தூஷிக்கும்வழியைக்கனவிலுமறியாமல் பூஷிப்பதே செய்வார் ஸாத்விகர்கள் பூஷிக்கவேண்டிய காரணம் பூர்த்தியாக இருந்தாலும்கூட தூஷிப்பதையே தொழிலாகக் கொள்வர் பிறர் ; எங்கும் தூஷிப்பவர்கள். பலபல மஹான்களால் கொண்டாடப் படுகின்றவர்களைத்தான் தூஷிப்பர்கள். யோக்யதை இல்லாதவர்களை தூஷிப்பதனால் எப்படி த்ருப்தியுண்

டாகும்? அதை யார் கவனிப்பார்கள்? அது பயனற்ற பணியாகுமே. நிறையப் பழங்கள் பழுத்துத் தொங்கப்பெற்ற மரங்களின்மீது கல்லடியும் தடியடியும் விழுமேயல்லது மொட்டை மரத்தையும் மலட்டு மரத்தையும் அடிப்பாரார்? அதுபோல், ஞானானுட்டானங்கள் நிரம்பியும், பலவகைகளில் புகழ்பெற்றும், பலரால் வணங்கப்பட்டும் விளங்குகின்ற மஹான்கள் பேரில்தான் தூஷணைகள் ஏற்படுமே யல்லது, யாரோ வழிப்போக்கன்' என்னும்படியான ஸாமான்ய ஜனத்தின் மீது பைத்தியக்காரன்கூட தூஷணைகள் செய்ய மனங் கொள்ளமாட்டான். ஆகவே, எந்த நபரின்மீது விசேஷ தூஷணைகள் ஏற்படுகின்றனவோ அதுவே காரணமாக அந்த நபர் மிக்க பெருமை வாய்ந்தவர் என்பது உறுதியாகும். உண்மையில் அவர் பெருமைவாய்ந்தவராக இல்லாவிடினும், தூஷணைகள் ஏற்படுவது காரணமாகவே அவர்க்குச் சிறந்த பெருமை அவசியம் ஒப்புக்கொள்ளப்படவேண்டியதே. அமுதனார் அருளிய இராமானுச நூற்றந்தாதியில் "பழிக்கில் புகழ்" என்கிற அருமையான வாசகம் இருப்பது பிரசித்தமே. அதன் பொருளே இங்கு விளக்கப்பட்டது.

## 14. ஸ்ரீராமாயணச்லோகமொன்றின் விசேஷார்த்தம்

ஸ்ரீராமாயணத்தில் யுத்தகாண்டத்தில்—

"மரணாந்தாநி வைராணி நிர்வருத்தம் ந: ப்ரயோஜநம்,
க்ரியதாமஸ்ய ஸம்ஸ்கார : மமாப்யேஷ யதா தவ."

என்பது, ஸ்ரீவிபீஷணாழ்வானை நோக்கிப் பெருமாளருளிச் செய்ததொரு சுலோகம். இராவணன் மாண்ட பின்பு "இந்த மஹா பாபிக்கு நான் உத்தரக்ரியை பண்ணமாட்டேன்," என்று ஒரு நிலை நின்ற விபீஷணாழ்வானை நோக்கிப் பெருமாளருளிச் செய்த ச்லோகமிது. ஸாதாரணமாக வடமொழி பயின்ற அனைவரும் ஸ்ரீராமாயணத்தில் இறங்கி அர்த்தம் சொல்லப் புறப்படுவது வழக்கமாதலால், அப்படிப்பட்டவர்கள் இதற்குக் கூறும் பொருள் எங்ஙனே யென்னில்: உலகத்தில் ஒருவனிடத்து ஒருவனுக்கு விளையும் பகை மரணபர்யந்தமேயாதலால், இந்த ராவணன் மாண்டொழிந்த பின்பும் இவனிடத்து நாம் பகை வைப்பது ஏதுக்கு? இவனை வதை செய்வதும் பிராட்டியைக் கைக்கொள்வதுமே நமக்குப் பிரயோஜனமாதலால் அது நிறைவேறப்பெற்ற பின்பும் இவன் மீது நாம் பகை பாராட்டலாகுமோ? பகையை மறந்து இனி இவனுக்குச் செய்ய வேண்டியதைச் செய்—என்று பெருமாள் கூறுவதாக. இப்பொருள் பொருத்தமுடையதன்றென்றும் இது இராமபிரானுடைய திருவுள்ளத்திற்கு ஒவ்வாதென்றும் நம்பிள்ளை திருவுள்ளம்பற்றி இன்சுவை பெருக ஈட்டில் வியாக்யானம் செய்தருளியுள்ளார். இதுவரையில்



பெருமாள்மீது இராவணன் பகைபாராட்டி யிருந்தானே யல்லது இராவணன்மீது பெருமாள் சிறிதும் பகை பாராட்டியிருந்ததில்லை. "விபீஷணோ வா ஸுக்ரீவ! யதிவா ராவணஸ் ஸ்வயம்!' என்றருளிச் செய்த பெருமாளுடைய திருவுள்ளத்திற்கும் இணங்கவல்லதான பொருளன்றோ பணிக்கவேணும். அதை நம்பிள்ளைதானே பணிக்க வல்லவர். இங்கு நம்பிள்ளையின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளானவை அமுதமயமேயாதலால் அவற்றை அப்படியே யெடுத்துக்காட்டி விட்டுப் பிறகு விவரிக்கிறேன்.

["மரணாந்தாநி வைராணி"] ரிஷிகளின் குடியிருப்பை யழித்து மைதிலியைப் பிரித்து, நம் உயிர்நிலையிலே நலிந்தாப்போலே ஸ்ரீ ஜடாயு மஹாராஜரை நலிந்தவிவையெல்லாம் செய்ய மாட்டானே இவன் இனி.

["நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜநம்."] இவன் ஜீவிக்கிற நாளிலே நாம் செய்யும் நன்மை இவன் விலக்காதொழிய வேணுமென்று, இத்தனையே எண்ணியிருந்தோம்; அது அந்நாளில் பெற்றிலோம். நாம் தேடியிருந்த அது முந்துறமுன்னம் ஸித்திக்கப் பெற்றோமிறே.

["க்ரியதாம் அஸ்ய ஸம்ஸ்கார :"] இவன், நாம் செய்யும் நன்மை விலக்காதவனானவளவு பிறந்தவின்றும் நாம் இழக்க வேணுமோ? வேண்டுவன செய்யப் பாரும்.

["மமாபி ஏஷ யதா தவ.)"] நீர் இருய்த்திருந்தீராகில், குடல் துடக்குடையாரிலே ஒருவன் செய்யுமித்தனை யன்றோ; நாம் இவனுக்கு வேண்டுவன செய்ய, நீர் பின்னைக் கடக்க நில்லீர்." என்று

இந்த திவ்ய ஸூக்திகளின் தாத்பர்ய ஸாரமாவது—விபீஷணா! இவ்விராவணன் ஜீவித்திருக்கும் நாளிலேயே இவனுக்குச் சில நன்மைகள் நான் செய்யக் கருதியிருந்தேன்; அவை ஈடேறாதபடிக்கு இவன் பலவகையான த்வேஷ காரியங்களை இயற்றிவந்தானாதலால் நம்முடைய மனோரதம் நிறைவேற வழியில்லையாகிறதே யென்று வருத்தத்துடனேயே நான் காலங்கழிக்க நேர்ந்தது. இப்போது இவன் மரணமடைந்து விட்டானாதலால் இனி ஒருவிதமான த்வேஷ காரியமும் இவன் பண்ண ப்ரஸக்தி யில்லையே. நாம் இவனுக்குச் செய்யநினைத்த நன்மைகளுக்கு இவன் ஆபிமுக்யம் பண்ணாதொழிந்தாலும் இவற்றைத் தடைசெய்யமாட்டாத நிலைமைக்கு இப்போது வந்திட்டானன்றோ. சேதநர்களிடத்தில் இவ்வளவுதானே நான் எதிர்பார்த்திருப்பது. பகவத் ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி மட்டும் போருமே; இதுவோ இப்போது கைபுகுந்துவிட்டது.

நண்ணாவசுரர் நலிவெய்த, நல்லவமரர் பொலிவெய்த,
எண்ணாதனகளெண்ணும் நன்முனிவரின்பம் தலைசிறப்ப,
பண்ணார் பாடல் இன்கவிகள் யானாய்த் தன்னைத் தான் பாடி,
தென்னாவென்னும் என்னம்மான் திருமாலிருஞ்சோலையானே. 10-7-5.



இவனுடைய உயிருக்கு நன்மைசெய்ய நினைத்திருந்தேன்; அது செய்ய ப்ராப்தியில்லாமே இழந்த குறைதீர இவனது உடலுக்காவது சில நன்மைகளைச் செய்யாய். நீ செய்யப் பின்வாங்கினுயாகில் இதோ நான் செய்யக் காத்திருக்கிறேன். நீ எப்படி எனக்கு ஆப்தனே அப்படி உன் உறவினனுன இவனும் எனக்கு ஆப்தன் தானே—என்பதாம். இப்பொருள் இரண்டு மணிகாலம் விவரிக்க வேண்டியது. இந்த ச்லோகத்தில் ''வைரம்'' என்று ஏக வசனமாக அன்றிக்கே ''வைராணி'' ஏன்று பஹுவசனமாக இருப்பதையே முக்கியமாக நம்பிள்ளை குறிக்கொண்டு ரஸமயமான வியாக்கியானம் செய்தருளினுரென்றுணர்க. ''வைராணி'' என்றது—வைரகார்யாணி என்றபடி. இப்பொருளின் சுவையைப் பெரியார் பக்கல் கேட்டுணர்க.

## 15. பகவத்விஷயகாலக்ஷேபம்

பகவத் விஷயமென்றால் எம்பெருமானைப் பற்றியது என்று பொருள். ஸ்ரீராமாயணம், ஸ்ரீபாகவதம், ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலிய உயரிய நூல்கள் பலவும் எம்பெருமானைப் பற்றியனவே யானாலும் அவற்றுக்கு பகவத் விஷயமென்கிற ப்ரஸித்தி விளையவில்லை. ஆழ்வார்களின் திவ்ய ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு காலக்ஷேபம் செய்வதையே பகவத் விஷய காலக்ஷேபமென்று எங்கும் வழங்கிவரக் காண்கிறோம். அவைதன்னிலும் முக்கியமாகத் திருவாய்மொழியின் ஈட்டுக்கே பகவத்விஷயமென்கிற ப்ரஸித்தி வாய்த்திருக்கின்றது. எம்பெருமானைப்பற்றி அறிய வேணுமானால் திருவாய்மொழியின் ஈடுகொண்டு அறியலாமத்தனைபோக்கி வேறொன்றாலும் அறிய இயலாதென்னில் இது மிகையாகாது.

## 16. திருவாய்மொழியின் தசாவதாரம்

திருவாய்மொழி பத்துப்பத்தாக அவதரித்திருப்பதை நோக்கினால் எம்பெருமான் தசாவதாரங்கள்செய்ததுபோலவே திருவாய்மொழியும் இங்ஙனே பத்து அவதாரங்கள் செய்ததோ! என்னலாம் படியிராநின்றது. இவ்வளவேயன்று; எம்பெருமானுடைய அவதாரங்களுக்கு என்ன என்ன ப்ரயோஜனங்களோ அவையெல்லாம் திருவாய்மொழியின் திருவவதாரத்தினாலும் நன்கு தேறுகின்றன வென்றும் அறியக்கிடக்கின்றது. இவ்விஷயம் ஆழ்வாருடைய திவ்யஸூக்திகளைக் கொண்டே இங்கு நிரூபிக்கப்படுகின்றது.

## 17. ஸாதுபரித்ராண துஷ்க்ருதவிநாசனங்கள்

1. எம்பெருமானுடைய அவதார ப்ரயோஜனங்களைச் சொல்லிவருமடைவில் பகவத்கீதையில் ''பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்'' என்று சொல்லியிருப்பது ப்ரஸித்தம். நல்லார்களைக் காப்பதற்காகவும் தீயார்களைத் தொலைப்பதற்காகவும் எம்பெருமான் அவதரித்தானென்பது விளங்கிற்று. *சாதுசனத்தை நலியுங் கஞ்சனைச் சாதிப்பதற்கு ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்திங்குப் பிறந்த வேத முதல்வன்* என்கிற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியினாலும் இதை நன்கறியலாம். திருவாய்மொழியின் அவதாரத்திற்கும் இவ்விரண்டு ப்ரயோஜனங்கள் உள்ளனவென்பது *நண்ணாவசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்த—பண்ணார் பாடல் இன்கவிகள் யானாய்த் தன்னைத் தான் பாடி* (10—7—5) என்கிற பாசுரத்தினால் விளங்கும். எம்பெருமானுடைய விரோதிகளான ஆஸுர ப்ரக்ருதிகள் அழியவும் பகவத்பக்திபரரான தேவப்ரக்ருதிகள் வாழவும் திருவாய்மொழி அவதரித்ததென்று ஆழ்வார் தாமே அருளிச்செய்து வைத்தார். அவ்விடத்திலே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின் :— ''நண்ணாவசுரர் நலிவெய்த நல்ல வமரர் பொலிவெய்தவாய்த்து திருவாய்மொழி தான் அவதரித்தது. ஸ்துத்யனுடைய அவதாரம் போலேயாயிற்று ஸ்துதியினுடைய அவதாரமும்.'' என்பதாக. நம்பிள்ளை இவ்விடத்தில் ஒரு இதிஹாஸமும் அருளிச்செய்கிறார். திருவரங்கம் பெரியகோயிலில் க்ரிமி கண்ட சோழனென்கிற பாவி திருமதிளை (முன்பு) இடித்துப் போட்டானும்; அவனுக்குப்பிறகு அவனுடைய மகன், தன் தகப்பன் செய்த அதனைக் கேட்டு ''ஐயோ! என் தகப்பனுக்கு இப்படியும் ஒரு அவிவேகம் உண்டாகுமோ? ஒரு மதிளை இடித்துப்போட்டுவிட்டதனால் ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தம் குலைந்ததாய்விடுமோ? திருவாய்மொழி யென்றும் ஸ்ரீராமாயண மென்றும் இரண்டு வலிய மதிள்கள் என்றுமழியமாட்டாதபடியன்றோ வுள்ளன. அந்த மதிள்களை இவன் அசைக்கவும் முடியாதவனன்றோ,'' என்று சொன்னானும். ஆகவே திருவாய்மொழியானது எம்பெருமானுக்குப் பெரிய திருமதிள் போலே யிருந்து ஸாதுபரித்ராணமும் துஷ்க்ருத்விநாசநமும் செய்யுமதென்றறிக.

## 18. மயர்வையறுத்து மதிநலமளித்தல்

இன்னமும், அஜ்ஞாநத்தைப் போககி ஜ்ஞாந பக்திகளைக் கொடுப்பதும் எம்பெருமானுடைய காரியமாகுமென்பது ''மயர்வற மதிநல மருளினன்'' என்கிற பாசுரத்தினால் விளங்கும். 'மயர்வு அற' என்பதனாலே அஜ்ஞானத்தைப் போக்குதலும், 'மதிநலம் அருளினன்' என்பதனாலே ஜ்ஞாந பக்திகளைக் கொடுத்தலும் சொல்லிற்று. 1. அஜ்ஞாந நிவர்த்தகத்வம், 2. ஜ்ஞாநப்ரதத்வம். 3. பக்தி ப்ரதத்வம் ஆகிற இம்மூன்றும் திருவாய்மொழிக்குமுண்டு. எங்ஙனேயென்னில் : ''காரிமாறன் சடகோபன் ஒலி புகழாயிரத்திப் பத்து உள்ளத்தை மாசறுக்குமே'' என்கிற பாசுரத்தினால் அஜ்ஞாந நிவர்த்தகத்வமும் ''வண்சடகோபன் தெருள்கொள்ளச் சொன்ன''

''பொருள் கொண்டு இவ்வுலகம் படைத்தவன் புகழ்மேல் மருளில் வண் குருகூர் வண்
சடகோபன், தெருள் கொள்ளச் சொன்ன ஓராயிரத்துள் இப்பத்தும்
அருளுடையவன் தாள் அணைவிக்கும் முடித்தே. 2-10-11



கலியுகமொன்றுமின்றிக்கே தன்னடியார்க்கருள் செய்யும்,
மலியும் சுடரொளி மூர்த்தி மாயப்பிரான் கண்ணன் தன்னை,
கலிவயல் தென்னன் குருகூர்க் காரிமாறன் சடகோபன்,
ஒலிபுகழாயிரத்திப்பத்தும் உள்ளத்தை மாசறுக்குமே. 5-2-11.

நாயகன் முழுவேழுலகுக்குமாய் முழுவேழுலகும், தன் வாயகம் புகவைத்து உமிழ்ந்தவையாய் அவையல்லனுமாம், கேசவனடியிணை மிசைக். குருகூர் ......

 6-4-11.

வோராயிரம்'' என்ற பாசுரத்தினுல் ஜ்ஞாந ப்ரதத்வமும், ''குருகூர்ச் சடகோபன் சொன்ன, தூயவாயிரத்திப்பத்தால் பத்தராவர் துவளின்றியே'' என்ற பாசுரத்தினுல் பக்தி ப்ரதத்வமும் திருவாய் மொழிக்கு முண்டென்பது அறியத்தக்கது.

## 19. எம்பெருமானுக்கு உரிய தொண்டராக்குதல்

எம்பெருமான் நம்மைத் தனக்கு அநந்யார்ஹ சேஷமாக அங்கீகரிப்பவன் என்பது ''வெறித்துளப முடியானே! வினையேனை உனக்கடிமை அறக்கொண்டாய்'' என்கிற பாசுரத்தினுல் விளங்கும். திருவாய்மொழியும் நம்மை எம்பெருமானுக்கு அநந்யார்ஹ சேஷமாக்கு மென்னுமிடம் ''தொண்டன் சடகோபன் தெரியச் சொன்ன ஓராயிரத்துளிப்பத்து உரிய தொண்டராக்கு மூலக முண்டாற்கே'' என்ற பாசுரத்தினுல் விளங்கும்.

## 20. நோய்களறுக்கும் மருந்தாதல்

எம்பெருமான் ஸம்ஸாரமாகிற வியாதிக்கு மருந்தாயிருப்பவன் என்னுமிடம் ''அறிந்தனரெல்லாம் அரியை வணங்கி அறிந்தனர் நோய்களறுக்கும் மருந்தே'' என்ற பாசுரத்தினுல் விளங்கும் திருவாய்மொழியும் ஸாம்ஸாரிக ஸகல துரிதங்களையும் உருமாய்ந்து போம்படி பண்ணு மென்னுமிடம் *தென்குருகூர்ச் சடகோபன் மிடைந்த சொல்தொடை ஆயிரத்துளிப்பத்து உடைந்து நோய்களை ஓடுவிக்குமே'' என்ற பாசுரத்தினுல் விளங்கும்.

## 21. வானின்மீதேற்றியருள் செய்தல்

எம்பெருமான் பக்தர்கட்குப் பரமபதத்தை யளிப்பன் என்னுமிடம் ''ஏற்றரும் வைகுந்தத்தை அருளும் நமக்கு—ஆற்றல் மிக்கான் பெரிய பரஞ்சோதி புக்கவரியே'' என்ற பாசுரத்தினுல் விளங்கும். திருவாய்மொழியும் பரமபத ப்ராப்தியைப் பண்ணிவைக்கு மென்னு மிடம் ''கோனை வண்குருகூர் வண்சடகோபன் சொன்னவாயிரத் துளிப்பத்தும் வானின்மீதேற்றி யருள்செய்து'' என்ற பாசுரத்தினுல் விளங்கும்.

## 22. அருளியடிக்கீழிருத்துதல்

எம்பெருமான் நம்மைத் திருவடிகளின்கீழ்ச் சேர்த்துக் கொள்ளுமென்னுமிடம் ''பெருந்துன்பம் வேரற நீக்கித் தன்தாளின் கீழ்ச் சேர்த்து அவன்செய்யும் சேமம்'' என்ற பாசுரத்தினுல் விளங்கும். திருவாய்மொழியும் அவன் திருவடிகளின்கீழே சேர்த்து வைக்குமென்னுமிடம் ''திருமாலாலருளப்பட்டசடகோபன்சொல்லா யிரத்துளிப் பத்தால் அருளியடிக்கீழிருத்தும்'' என்ற பாசுரத்தினுல் விளங்கும்.



## 23. இன்பக்கதி பயக்குந்தன்மை

எம்பெருமான் தன்னோடு அந்வயித்தவர்களுக்குத் தன்னு டைய அநுபவமாகிற நிரதிசயாநந்த யுக்தமான ப்ராப்யத்தைக் கொடுப்பன் என்னுமிடம் ''தெளிவுற்று வீவின்றி நின்றவர்க்கு இன்பக்கதி செய்யும் தெளிவுற்ற கண்ணன்'' என்கிற பாசுரத்தினுல் விளங்கும். திருவாய்மொழியும் தன்பால் அந்வயித்தார்க்கு பகவதநுபவ ஆனந்தத்தை யுண்டாக்கு மென்னுமிடம் ''வண்குரு கூர்ச்சடகோபன் இங்ஙனே சொன்னவோராயிரத்துளிப் பத்து எங்ஙனே சொல்லிலுமின்பம் பயக்குமே'' என்ற பாசுரத்தினுல் விளங்கும்.

## 24. நீராயுருக்குந் தன்மை

எம்பெருமான் தன்னை யநுபவிக்க இழிந்தவர்களை த்ரவத்ரவ்யமாம்படி உருக்குவனென்னுமிடம் ''ஊடுபுக்கு எனதா வியை யுருக்கியுண்டிடுகின்ற நின்றன்னை'' என்கிற பாசுரத்தினுல் விளங்கும். திருவாய்மொழியும் தன்னை யநுபவிக்க இழிந்தாரை நீர்ப்பண்டமாக உருக்குமென்னுமிடம் ''தென்குருகூர்ச் சடகோபன் சொல்லாயிரத்துள்ளிவை ஒன்பதோடொன்றுக்கும் மூவுலகுமுரு குமே'' என்கிற பாசுரத்தினுலும் ''தோற்றங்களாயிரத்துள் இவையுமொருபத்தும் வல்லார் ஊற்றின்கண் நுண்மணல்போல் உருகாநிற்பர் நீராயே'' என்கிற பாசுரத்தினுலும் விளங்கும்.

ஆக இப்படி பத்து ப்ரகாரங்களாலே எம்பெருமானோடு ஸாம்யத்தை யுடைத்தாகையாலே, வாச்யனான அந்த ஸர்வேச்வர னுடைய ''பத்தினுய தோற்றம்'' என்கிற பத்து அவதாரம்போலே ''தோற்றங்களாயிரம்'' என்கிற இதனுடைய பத்துப்பத்தான ஆவிர்ப்பாவமும்—என்று அறியத்தக்கது. எம்பெருமான் லோக ரக்ஷணார்த்தமாக அவதரித்தது போலே திருவாய்மொழியும் லோக ரக்ஷணார்த்தமாகவே அவதரித்ததென்றதாயிற்று.

## 25. முமுக்ஷுக்களின் நிஷ்டை

மோக்ஷமடைய விரும்புமவர்கள் முமுக்ஷுக்கள். அவர்களுக்கு முக்கியமாக வாய்க்கவேண்டுவது ப்ரபத்தி நிஷ்டை. அதாவது ''நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்'' என்று ஆகிஞ்சந்யத் தையும், ''களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்'' என்று அநந்ய கதித்வத்தையும் முன்னிட்டுக் கொண்டு, ''ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்'' என்று கிடக்கையாம். இப்படிப்பட்ட அத்யவஸாயமே ப்ரபத்தி யென்னப்படுகிறது. இது உபாயமா, அன்று என்று ஒரு விசாரம்

எடுத்துக்கொண்டு, உபாயம் என்பார் சிலரும், உபாயமன்று என்பார் பலருமாய் வாதம் நிகழும். உபாயமென்றால் ஸாதனமென்று பொருள். கீழ்ச் சொன்ன அத்யவஸாயமுண்டானாலல்லது பேறு உண்டாகாது என்று ஒப்புக்கொள்ள வேண்டியிருப்பதனால் இதை உபாயமென்று இசைந்துதானே யாகவேண்டும் என்கிற வாதம் பிரபலமாய் ஓங்கி நிற்கும். உண்மையில் ஆராய்ந்து பார்த்தால், உபாயமென்னவும் தகும், உபாயமன்று என்னவும் தகும். நாம் எப்படி ஆக்குகிறோமோ அப்படி ஆகும் அது. மேலே காண்மின்.

## 26. ப்ரபத்திக்கொரு நிதர்சனம்

இதற்கொரு சிறிய த்ருஷ்டாந்தம் ;—கடலிலே வலைவீசி மீன் பிடித்து ஜீவிப்பானொரு செம்படவன் மீன்களினிடையே விலையுயர்ந்த ரத்னமும் கிடைக்கப் பெறுவதுண்டு; அவன் அதை என்ன பண்ணுகிறானென்று பாருங்கள். அதனுடைய மதிப்பை அவன் அறியமாட்டாதவனாதலால் அந்த ரத்னத்தைக்கொண்டு போய் ஒரு வியாபாரியிடத்திலே ஒன்றிரண்டணாவுக்கு விற்றுவிடுகிறான். உண்மையில் ஆயிரக்கணக்கில் விலைபெறும்படியான அதனை அற்ப விலைக்கு வாங்கின அந்த வியாபாரி, தான் ரத்தினத்தின் மதிப்பு நன்குணர்ந்தவனாகையாலும் வியாபாரத்தையே ஜீவிகையாக வுடையவனாகையாலும், அவன் அதைக் கொண்டுபோய் ஒரு மஹாராஜனிடத்திலே கிரமமாக அதற்குள்ள விலை கூறி விற்றுவிடுகிறான். பிறகு அந்த மஹாராஜன்தான் அந்த ரத்னத்தை விற்பனை செய்ய நினைப்பதில்லை; விற்று ஆகவேண்டியது அவனுக்கு ஒன்றுமில்லை. அவன் நன்றாக அநுபவிக்கப் பிறந்தவனாகையாலே அந்த ரத்னத்தைப் பெரியதொரு ஹாரத்திலே இணைத்து ஸ்வயம் போக்யமாக அமைத்துக் கொள்ளுகிறான். அடுத்த மொழியுங்காண்மின்.

## 27. நிதர்சனத்தினால் தேறின பொருள்

இனி கவனிப்பது: ஆக ஒரு ரத்னத்துக்கே மூன்று தன்மைகள் உண்டாகின்றன. (1) அற்ப விலைக்கு மாறுதல் (2) உள்ள விலைக்கு மாறுதல் (3) விலைக்கு ஆட்படாமல் ஸ்வயம் போக்யமாகக் கொள்ளப்படுதல் என மூன்று வகைகள். ஒன்றுக்கே அதிகாரி பேதத்தால் கூடுகின்ற படியை பிரபத்தி விஷயத்திலும் தெளிவாகக் காணவேணும். ரத்னத்தின் மதிப்பை அறியமாட்டாது அதனை அற்ப விலைக்கு விற்கும் செம்படவனைப்போல் பிரபத்தியின் சீர்மையை அறிய மாட்டாத சிற்றறிவாளர் ப்ரபத்தியை ஐச்வர்யகைவல்யாதி க்ஷுத்ர பலன்களுக்கு ஸாதனமாக்கினால் அது ஆகியே தீரும். ரத்னத்தைக் குறைந்த விலைக்குக் கொடாதே தகுந்த விலைக்குக் கொடுக்கும் வியாபாரியைப் போன்ற மத்யமாதிகாரிகள் ப்ரபத்தியை மோக்ஷ ஸாதனமாக அபிமானித்து க்ஷுத்ர பலன்களைக் கொள்ளாதே உயர்ந்த மோக்ஷ பலனையே கொண்டால் உபாயத்வாபிமானம் அவ்யாஹதமாயிருக்கும். ரத்னத்தை ஒன்றுக்கும் ஸாதனமாக்காதே ஸ்வயம் போக்யமாகக் கொள்ளும் மஹாராஜனைப் போன்ற உத்தமாதிகாரிகள் ப்ரபத்தியை ஒன்றுக்கும் ஸாதனமாகக் கோலாதே ஸ்வயம் புருஷார்த்தமாகக் கொண்டு வர்த்திப்பர்கள்.



ஆகவே ப்ரபத்தி உபாயமா, அன்றா ?—என்கிற விவாதம் விரஸம். நாம் ஆக்குகிறபடி அது ஆகிறது. எப்படியாககுவது நமக்கு அழகு என்று பார்க்கவேணும். ஒரு பெரிய ஒட்டுமாம்பழத்தைக் காலணாவுக்கு விற்பாருமுண்டு; நாலணாவுக்கு விற்பாருமுண்டு; இதை விற்கையாவதென்! என்று இனிதாக புஜிப்பாருமுண்டு. அப்படியே இங்கும்.

## 28. ரோமச மஹர்ஷி நான்முகன் செருக்கையடக்கினது

ரோமசரென்பவர் சரீரமுழுவதும் கரடிபோல் அடர்ந்த ரோமங்களையுடைய ஒரு மாமுனிவர். இவர் விண்ணுலகிற் சென்று விண்ணவர்கோனைத் தொழுதிறைஞ்சி யேத்துவதிற்காட்டிலும் இம்மண்ணுலகிலேயே நெடுங்காலம் வாழ்ந்திருந்து நெடுமாலைச் சிந்தை செய்தலாகிற பேரின்பம் பெறுதலில் மிக்க குதூஹலம் கொண்டார். "கோவிந்தற்கோர் குற்றேவல் இம்மைப் பிறவி செய்யாதே இனிப் போய்ச் செய்யும் தவந்தானென்?" என்ற ஆண்டாளைப் போலே "வேதநூற் பிராயம் நூறு" என்னப்பட்ட ஆயுளில் த்ருப்தியற்றவராய் மிகவும் நீண்ட ஆயுள் பெறவேணுமென்று ஒரு புண்ணிய நதியின் கரையிலே இவர் தவம் புரிந்தார். "உள்ளுவாருள்ளிற்றெல்லா முடனிருந்தறியு மெம்பெருமான்" இவருடைய அபிலாஷையை நோக்கி மிகவும் மகிழ்ந்து இவர் முன்னே வந்து ஸேவை தந்தருளி "உம்முடைய விருப்பத்தைக் கூசாதே வேண்டிக் கொள்ளும்" என்று சோதிவாய் திறந்து அருளிச் செய்தான். அது கேட்டு உவந்த மாமுனிவர் "பரந்தாமா! பரஞ்சோதீ! பரம புருஷா! இவ்வுடம்போடே உன்னை வெகு காலம் வழிபடவேணுமென்று பேராசை கொண்டிருக்கிறேன் நான்; அனேகமாயிரம் ப்ரஹ்மாக்களுடைய ஆயுளை என்னொருவனுக்குக் கல்பித்தருளினால் மஹாப்ரஸாதமாகும்" என்று கைகூப்பி விண்ணப்பஞ் செய்ய, எம்பெருமான் அப்படியே திருவுள்ளமுவந்து "முனிவரே! ப்ரஹ்மாவினுடைய ஆயுளின் அவதி உமக்குத் தெரிந்ததே; ஒரு பிரமன் காலஞ்சென்றால் உம்முடைய உடம்பினின்றும் ஒரு ரோமம் இற்று விழக்கடவது; இப்படி ஒவ்வொரு ப்ரஹ்மாவின் முடிவிலும் ஒவ்வொரு மயிராக இற்று விழுந்து 'இனி உம்முடைய உடம்பில் ஒரு ரோமமும் இல்லை' என்று சொல்லத்தக்க நிலைமை நேருமளவும் நீர்

ஜீவித்திருந்து வழிபாடு செய்வீர்'' என்று வரம் தந்தருளி மறைந்திட்டனன். அவர் காழிச்சீராம விண்ணகரம் [சீர்காழி] என்னும் க்ஷேத்திரத்தில் அவ்வண்ணமாகவே நெடுக ஜீவித்திருந்து வழிபாடு செய்து வருகிறார். இக்கதை மேற்குறித்த திருப்பதியின் பதிகத்தில் இரண்டாவது பாசுரத்தில் ''நான்முகனுள் மிகைத்தருக்கை யிருக்கு வாய்மை நலமிகுசீர் உரோமசனால் (அவித்து) நவிற்றி'' என்று திருமங்கையாழ்வாரால் அநுஸந்திக்கப்பட்டுள்ளது. இக்கதையைச் சிறிது வேறு வகையாகவும் சிலர் சொல்லக் கேட்டதுண்டு. வல்லார் ஆகரங் கண்டு விவரிக்கவேணும்.

## 29. திருநறையூர்ப் பதிகத்தில் திருத்தமொன்று

பெரிய திருமொழியில் (6-6-6) ''தன்னாலே தன்னுருவம் பயந்த தானாய்'' என்கிற பாசுரத்தின் மூன்றாமடியில் ''மின்னாடு வேலேந்து விளைந்த வேளை'' என்றே பலரும் ஓதிவரக் காண்கிறோம்; பழம் புத்தகங்களிலும் அங்ஙனமே பாடப் பதிப்பு காண்கிறது. இப்பாடத்தின்படிஇன்னது அர்த்தம் என்று விளங்குவதில்லை. ளகரத்தின் மேலிருக்கிற ஐகாரம் தகரத்தின்மேல் இருக்கவேண்டும். ''விளந்தை வேளை'' என்று திருத்தி ஓதவேணுமென்று பெரியார் சிக்ஷிக்கிறார்கள். குடந்தை, அழுந்தை, அயிந்தை என்னுமாபோலே விளந்தை என்பது ஒரு ஊர். அவ்வூரரசனுக்கு 'விளந்தைவேள்'' என்று பெயர். வேற்படை வல்லவனான அவ்வரசனை வென்று உலகமாண்டவனான ஒரு சோழன் சேர்ந்தகோயில் திருநறையூர் என்பது பொருள்.

## 30. திருச்சேறைப் பதிகத்தில் திருத்தமொன்று

பெரிய திருமொழியில் (7—4—9) *கள்ளத்தேன் பொய்யகத்தேன் என்கிற பாசுரத்தில் ''ஆதலால் போதொருகால்'' என்றே ஓதிவருகின்றனர்; பழைய புத்தகப் பதிப்பும் அங்ஙனே காண்கிறது. 'போதொருகால்' என்பதற்கு இங்கு அர்த்தம் புலப்படவில்லை. 'போதருகால்' எனத் திருத்தவேணும். ''போதருகால்—நிகழுங்காலமெல்லாம்'' என்றபடி. இத்தகைய திருத்தங்களை நமது தீபிகையுரையில் காண்க.

## 31. மாரீசனைப்பற்றியதோர் மாண்புரை

ஸ்ரீ ராமாயணத்தில் பெருமாள் நாட்டைத் துறந்து காட்டுக்கெழுந்தருள்வதற்கு மூலகாரணம் மந்தரை என்று சொல்லப்படுவது போல, காட்டில் பிராட்டியைப் பிரிந்து படாதபாடுகளும் பட்டதற்கு மூலகாரணம் மாரீசனென்பது கதை வாயிலாக அறிந்த விஷயம். 'சுரிகுழற்கனிவாய்த் திருவினைப் பிரித்த கொடுமையிற் கடுவிசையரக்கன்'' என்று திருமங்கையாழ்வாரால் இராவணன் நிந்திக்கப்



படுவதுபோல இந்த மாரீசனும் அவனுக்குத் துணை புரிந்த காரணம் பற்றி நிந்திக்கத்தக்கவன். பிரதிகூலர்களில் தலைவனாகக் கருதத்தக்கவன் என்றுதான் நினைக்கவேண்டியிருக்கின்றது.

ஆனால் இவனது சரிதையை நன்கு ஆராய்ந்து பார்க்குமளவில் இவனைப் பிரதிகூலனாகக் கொள்ள நியாயமில்லை யென்றும், அநுகூலனாகவே கொள்ள வடுக்குமென்றும் சொல்லலாம் போலும். கேண்மின் :—சூர்ப்பணகை மூக்கறுப்புண்டு ஜனஸ்தானத்திலிருந்த தன் தமையனாகிய கரன் பக்கல் சென்று இச்செய்தியைச் சொல்லிப் புரண்டழுது அவனுக்குக் கோபத்தை உண்டாக்கினவளவில் அக்கரன் பதினாலாயிரம் சேனாதிபதிகளையும் சேனைகளையும் இராமபிரானோடு போர் செய்ய அனுப்ப, இராமன் அவர்களத்தனைபேரையும் தான் ஒருவனாகவே கொன்று வென்றிட்டு, பிறகு வந்த கரனையும் கொன்றுவிட்டு ஜனஸ்தானத்தை சூன்யமாக்கின போது அங்கு இராமபாணத்துக்குத் தப்பிப் பிழைத்து ஒளிந்து ஓடிப்போன அகம்பனன் இலங்கைக்குச் சென்று, ஜனஸ்தான மடங்கலும் பாழ்பட்ட செய்தியையும் இராமன் ஒருவராலும் வெல்ல முடியாதவனென்பதையும் சொல்லி 'ஸீதையை அபஹரித்துக் கொண்டுவந்தால் அந்த வருத்தத்தினால் இராமன் முடிந்துவிடக் கூடும்' என்று தெரிவிக்க, இராவணன் அவனது சொற்படியே ஸீதையைக் கொள்ளை கொள்ள உபாயமென்? என்று சிந்தித்து அங்கு நின்றும் புறப்பட்டு மாரீசனிருக்குமிடத்திற்கு வந்தான்.

வந்து, 'நீ எனக்கு ஒரு உதவி செய்யவேணும்' என்று சொல்லித் தன் கருத்தை வெளியிட்டபோது, மாரீசன் 'அப்பா! இராவணா! அந்த மஹாநுபாவனுடன் உனக்கு த்வேஷம் தகாது; இந்த இராமன் சிறு பிள்ளையாயிருக்கும்பொழுதே விச்வாமித்திர யாகத்தில் அவனுடைய அம்புக்கு இலக்காகி நான் பட்ட பாடு இன்னும் மறக்க முடியவில்லை. ராமனென்னும் நாமம் செவிப்படும்போதே என் உடல் நடுங்குகின்றது; இப்பேச்சை விட்டுவிடு; இதை நெஞ்சிலும் நினையாதே' என்று யுக்தமாக உபதேசிக்க, அதைக் கேட்டு இராவணன் இலங்கைக்குப் போய்விட்டான்; பிறகு சூர்ப்பணகை இலங்கைக்குச் சென்று, தான் மூக்கறுப்புண்டபடியையும் தாசரதிகளின் பல பராக்ரமாதி குணங்கள் எல்லையற்றிருக்கிறபடியையும் ஸீதையின் வடிவழகை சொல்லி ''இராகவனை எவ்விதத்திலாவது பங்கம்செய்யாவிடில் நீ ஆண்பிள்ளையே அல்லை' என்றுகூறி இராவணனை நிந்தித்துக் கீழே விழுந்து புரண்டு அழ, இராவணன் மறுபடியும் மாரீசனிடம் வந்து நயபயங்களினால் அவனைத் தன் சொல் வழிப் படுத்திக் கொண்டு அம்மாரீசனும் தானுமாய்ப் புறப்பட்டு வந்து தான் ஓர் இடத்தில் ஒளிந்திருந்தான். மாரீசன்

இராவணனுடைய வலிகட்டாயம் பொறுக்க மாட்டாமல் மனம் நொந்துகொண்டே உடன்பட்டு வந்தானே யன்றி இராமபிரானிடத்தில் கறுக்கொண்டு வந்தானல்லன்; படுபாவியான இவ்விராவணனுக்கு உடன்பட்டு நாம் காரியஞ்செய்யாவிடில் அவன் நம்மைக் கொலை செய்யப்போகிறுன்; இவனுக்கு உடன்பட்டுக் காரியம் செய்தோமாகில் இராமபிரான் நம்மைக் கொன்றுவிடப் போகிருர்; இப்பாவியின் கையில் நாம் கொலையுண்பதிற்காட்டிலும் அப்பரம புருஷன் கையிற் கொலையுண்பது நற்கதி நண்ணுவதற்கு ஹேது வாகும்" என்றெண்ணித் தன்மரணத்தைத் திடமாக நிச்சயித்துக் கொண்டே வந்தானத்தனை. பிறகு மாரீசன் பொன்மானுருவெடுத்துக் கொண்டு ஸீதையின் பார்வையில் புல்மேயத்தொடங்கி அக்காட்டில் இராகவனை நெடுந்தூரம் இழுத்துக்கொண்டு போய் விட்டான். அப்பொழுது இராகவன் 'இவன் அரக்கன்' என்று தெளிந்து அம்புகளை அவன்மீது எறிந்தார். அதனுல் அடியுண்ட மாரீசன் மானுருவைவிட்டு நிஜ ரூபத்துடன் கீழே விழுந்து 'ஹா லக்ஷ்மணு! ஹா ஸீதே! கெட்டேன்' என்று இராகவன் குரலில் கூச்சலிட்டுக் கொண்டு மரணமடைந்தான். இது கதைப்போக்கு.

இங்கு நாம் ஆலோசிக்கவேண்டியதென்னவென்றுல், இப்படி இவன் கூச்சலிட்டது இராவணனுக்கு உபகாரம் செய்யவேணுமென்கிற எண்ணத்தினுலா? அல்லது அபகாரம் செய்யவேணுமென்கிற எண்ணத்தினுலா? என்று ஆராயவேண்டும். 'இராவணன் கையிற் கொலை யுண்பதைவிட இராம பாணத்தாற் கொலையுண்டு முடிதல் நன்று' என்கிற எண்ணத்தோடு வந்த மாரீசனுக்கு இராவணன்திறத்தில் உபகாரம் செய்ய வேணுமென்கிற எண்ண முண்டாக ப்ரஸக்தியில்லை; 'நாம் மாண்டொழிவதுபோல் அவனையும் மாண்டொழியச் செய்து விடவேண்டும்' என்ற எண்ணங் கொண்டே இராகவனைப்போல் கூச்சலிட்டிருக்கவேண்டும். மாரீசன் இப்படி கூச்சலிடாமல் வெறுமனே செத்திருப்பானுகில் பிராட்டி லக்ஷ்மணனை வெருட்டியனுப்ப நேர்ந்திராது; இராவணன் பிராட்டியைக் கவர்ந்து போகவும் அது நிமித்தமாக அவன் மாண்டு போகவும் நேர்ந்திராது. தேவர்களின் வேண்டுகோள் ஈடேறவும் வழியிராது. மரணகாலத்தில் மாரீசன் போட்ட கூச்சலே ராவண ஸம்ஹாரத்திற்கு மூலகாரணமாக நின்றமையால் ஸ்ரீராம விஷயத்திலே மாரீசன் உபகாரகனேயன்றி அபகாரகனல்லன் என்று நினைக்கலாமல்லவா? "அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா" என்று வேதாந்த விழுப்பொருளை நிலையிட்டவனை மாரீசனைப் பரமபாகவதனென்று கொள்ளுவது அநுசிதமுமாகாது.



## 32. ஒருவர்க்கு இருவர் கைகொடுத்தல்

திருவாய்மொழியில் (2-9-2) *ஞானக் கை தா* என்றவிடத்து ஈட்டில்"எம்பார்க்கு ஆண்டானருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது" என்றுள்ளது. இதன் விவரணம் வருமாறு:—முதலியாண்டான் ஒருகால் திருநாராயணபுரத்திற்கெழுந்தருளியிருக்கையில் அவருடைய சிஷ்யரான வொருவருடைய திருக்குமாரர் கோயிலிலே வந்து எம்பார் ஸந்நிதியிலே கைங்கரியம் பண்ணிக்கொண்டிருந்தார். அப்போது ஒருநாள் சில ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு எம்பார் திருவிலச்சினை ஸாதிக்கவிருக்கையில் இந்த ஸ்ரீவைஷ்ணவர் தமக்கும் திருவிலச்சினை (சக்ராங்கனம்) ஸாதிக்கும்படி வேண்டினுர். அப்போது எம்பார் "உமக்கு விசேஷ ஸம்பந்தமுண்டோ?" என்று அவரைக் கேட்க, "தேவரீருடைய ஸம்பந்தமே ஸம்பந்தம்" என்று அவர் விண்ணப்பம் செய்தாராம். அவ்வளவிலே எம்பார் இவர் முதலியாண்டானுடைய ஸ்ரீபாதஸம்பந்தி என்றறியாதே இவர்க்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பண்ணி இவரைக்கொண்டு கைங்கரியங்களுங் கொண்டெழுந்தருளியிரா நிற்கையில் முதலியாண்டானும் திரும்பிக் கோயிலிலே எழுந்தருள, அப்போது அந்த ஸ்ரீ வைஷ்ணவர் ஆசார்ய ப்ரேமத்தாலே ஆண்டானிடம் சென்று சேர, ஆண்டானும் முன்புபோலே இவரைக்கொண்டு வேண்டுங் காரியங்களைக் கொண்டருளியிருந்தார். அப்போது எம்பார் விசாரித்து அந்த ஸ்ரீ வைஷ்ணவர் ஏற்கனவே ஆண்டானுடைய திருவடிஸம்பந்தி என்றறிந்து, ஆண்டானிடம் எழுந்தருளி 'கனக்க அபசாரப்பட்டேன், க்ஷமித்தருள வேணும்' என்ருராம். அப்போது ஆண்டான் எம்பாருடைய திருவுள்ளத்தில் க்லேசத்தை யறிந்து எம்பாரை நோக்கி அருளிச் செய்த வார்த்தை :—"ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கு இரண்டு பேர் கை கொடுத்தால் எடுக்குமவர்களுக்கும் எளிதாய் ஏறுமவனுக்கும் எளிதா யிருக்குமிறே. அப்படியேயாகிறது" என்ருராம். இங்குக் கைகொடுப்பதாவது ஞானமளிப்பது. "ஸம்ஸார ஸாகரத்தில் அழுந்தினவர்களுக்கு இரண்டு ஆசாரியர்கள் ஞானக்கை கொடுப்பது நல்லதேயன்றித் தீயதன்றே; நானும் கைகொடுத்து நீரும் கைகொடுத்தால் இதில் என்ன பிழை! ஏதுக்கு வருந்துகிறீர்; நன்மை செய்தீரே யொழியத் தீமையொன்றும் செய்திலீரே" என்பதாக ஆண்டானுடைய அருமையான திருவுள்ளம்.

## 33. கீதையில் ஒரு ச்லோகத்தின் விசேஷம்

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யாப்ரயச்சதி.
ததஹம் பக்த்யுபஹ்ருதம்அச்நாமி ப்ரயதாத்மந :—

இது கீதையில் (9-26) உள்ளதொரு ச்லோகம். எம்பெருமான் ஆராதனைக்கு எளியன் என்பது இதன் பரமதாற்பரியம். இதர

தெய்வங்களிற்காட்டில் எம்பெருமான் எத்தனேயோ விதங்களால் நெடுவாசி பெற்றிருப்பதுபோலே இவ்வகையாலும் நெடுவாசி பெற்றிருக்கிருன். ‘ஆடு பலி கொடு; கோழி பலி கொடு’ என்று அருந்தேவைகளேயிட்டு மஹாபரிச்ரம ஸாத்யங்களான ஆராதனேகளே அபேக்ஷித்திருக்கும் தேவதாந்தரங்கள் ; எம்பெருமான்படியோ அப்படியன்று; நாம் இட்டதுகொண்டு திருப்தி யடைவதே அவனது ஸ்வரூபம். அப்பெருமானுக்கு நாம் சில பொருள்களே ஸமர்ப்பிப்பதானது அவனுக்கு ஏற்கனவே யில்லாத வொருபூர்த்தியை உண்டாக்குவதற்காகவா? நாம் ஸத்தை பெறுவதற்காகவா? என்று ஆராய வேண்டும். அவனே அவாப்தஸமஸ்தகாமன். பூர்ணன். அன்னவன் நாமிட்டதுகொண்டு பூர்த்தி யடைகிருனென்பது அஸம்பாவிதம். கடலிலே மேகம் வர்ஷிப்பது கடல் நிரம்புவதற்காகவன்றே. “வர்ஷபிந்தோரிவ அப்தௌ ஸம்பந்தாத் ஸ்வாத்மலாப :” என்று (ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்) பட்டர் அருளிச் செய்தபடியே மேகம் தான் ஸத்தை பெறுவதற்காகவே கடலிலும் வர்ஷிக்கிறதென்பது பரமார்த்தம். அதுபோலவே ஸ்வத: பரிபூர்ணனுன பரம புருஷன் திறத்தில் நாம் சில பொருள்களே ஸமர்ப்பிப்பது நமது ஸ்வரூபம் நிறம் பெறுவதற்கேயன்றி அவனே நிரப்புவதற்கன்று என்பது வெளிப்படை. ஆகவே, நாம் சிறந்த பெரும் பொருள்களேத் தேடி ஆராதிக்க வேணுமென்பதில்லே; இடுகிற பொருள் எதுவாயினும், இடுவது ப்ரேமபூர்வமாகவேணுமென்பதிலேயே நியதியுள்ளது.

## 34. திருமங்கையாழ்வார் பாசுரமொன்று

திருமங்கையாழ்வார் “கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளேயும், முள்ளார் முளரியும் ஆம்பலு முன்கண்டக்கால், புள்ளாய் ஓரேனமாய்ப் புக்கிடந்தான் பொன்னடிக்கென்று உள்ளாதாருள்ளத்தை உள்ளமாக் கொள்ளோமே” என்று பெரிய திருமொழியில் (11-7-6) அருளிச் செய்கிருர். திருத்துழாய் முதலிய எந்த வஸ்துவைக் கண்டாலும் ‘இது எம்பெருமானுக்குச் சாத்தத்தக்கது’ என்று அத்யவஸாயம் கொள்ளாதாருடைய நெஞ்சை நெஞ்சாகக் கொள்ள மாட்டோமென்று உரைக்கின்ற இப்பாட்டில் எம்பெருமானுக்கே உரித்தான திருத்துழாயோடு விஜாதீய வஸ்துக்களும் கூட்டியெடுக்கப்பட்டிருத்தலால், எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்க வேணுமென்கிற சுத்த பாவத்துடனே கொள்ளுகிற புஷ்பம் எதுவாயிருந்தாலும் குற்றமில்லே; “செண்பகமல்லிகையோடு செங்கழுநீர் இருவாட்சி” என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற புஷ்பங்களாகவேயிருக்க வேணுமென்கிற நியதியில்லே; ஏதேனுமொரு புஷ்பமாக இருக்கலாமென்பதும், பக்திப் பெருங்காதலே முக்கியமானது என்பதும் தோற்றுவிக்கப்பட்டன. “பத்ரம்புஷ்பம்*” என்று மேலேயெடுத்த கீதாச்லோகமும், ‘இடுகிற பொருளில் வாசி பார்ப்பதில்லே ; இடுகிறவன் நெஞ்சில் ஈரமுள்ளதா? என்பதொன்றையே பார்ப்பேன்’ என்று ஸ்பஷ்டமாகக் காட்டுகின்றது. அதில் பக்தி சப்தம் இரண்டு தடவை விழுந்திருப்பது நோக்கத்தக்கது.



## 35. திருவாய்மொழியில் பட்டருடைய ரஸோக்தி

நம்முடைய பூருவாசாரியர்கள் ஸகல சாஸ்த்ரப்புலவர்களான பரம ரஸிகர்கள். “கலேயிலங்கு மொழியாளர்” என்றபடி அவர்களது வார்த்தைகளெல்லாம் அரிய பெரிய சாஸ்த்ரார்த்தங்கள் பொதிந்து விளங்குவன. அவர்களுடைய நல்வார்த்தைகளும் ரஸோக்திகளும் அருளிச் செயல் வியாக்கியானங்களில் மலிந்துள்ளன. அவை ஆங்காங்கு விவரிக்கப்படும். இப்போதொரு ரஸோக்தி கேளீர்; பட்டர் ஒருநாள் உபந்யாஸத்தில்*பரிவதிலீசனேப்பாடி* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தில் “புரிவதுவும் புகைபூவே” என்ற விடத்தை யெடுத்துக்கொண்டு “இவ்விடத்தில் அகில்புகை யென்ருவது கருமுகைப்பூ என்ருவது சிறப்பித்துச் சொல்லாமையாலே ஏதேனும் ஒரு புகையும் ஏதேனும் ஒரு பூவும் எம்பெருமானுக்கு அமையும்; செதுகையிட்டுப் புகைக்கலாம் ; கண்டகாலிப்பூவும் சூட்டலாம்” என்று ரஸமாக உபந்யஸித்தாராம். அதை நஞ்சீயர் கேட்டு “ந கண்டகாரிகாபுஷ்பம் தேவாய விநிவேதயேத்” [கண்டகாலிப்பூவை எம்பெருமானுக்குச் சாத்தலாகாது] என்று சாஸ்த்ரம் மறுத்திருக்க, இப்படி அருளிச் செய்யலாமோ? என்று கேட்டாராம். அதற்கு பட்டர் அருளிச்செய்த ரஸோக்தி;—“சாஸ்த்ரம் மறுத்தது மெய்தான்; கண்டகாலிப்பூ எம்பெருமானுக்கு ஆகாதென்று மறுத்ததன்று. அடியார்கள் அப்பூவைப் பறித்தால் கையில் முள் பாயுமே! என்று பக்தர்கள்பக்கல் தயையினுல் சாஸ்த்ரம் நிஷேதித்ததே யன்றி எம்பெருமானுக்கு ஆகாத பூ எதுவுமில்லே” என்ருராம். இது*கள்ளார்துழாயுமென்கிற (கீழே விவரித்த) திருமங்கையாழ்வார் பாசுரத்தையுட்கொண்டு.

## 36. கருப்பேந்திரப் பொருள் விளக்கம்

கம்பராமாயணத்தில் அயோத்தியா காண்டம்—கங்கைப் படலத்தில் ஆருவது செய்யுள்—“அருப்பேந்திய கலசத்துணே” என்று தொடங்குவது. இதில் மூன்ருமடி “கருப்பேந்திர முதலாயின கண்டாளிடர் காணுள்” என்பது. இராமனேடு காட்டிற் சென்ற பிராட்டி எதைக் கண்டும் அஞ்சவில்லேயென்று சொல்லும் பிரகாணத்திலுள்ள செய்யுள் இது. இங்குக் ‘கருப்பேந்திரம்’ என்பதற்குப் பொருள் யாது? என்று ஆராயவேணும். ‘கரும்பு ஏந்திரம்! என்று பிரித்து ‘கரும்பாலே’ என்று பொருள் எழுதியுள்ளார்கள்;

கவிக்கு விவக்ஷிதமான பொருள் இதுவாக இருக்கத் தகுதியில்லை. வால்மீகி ராமாயணத்தில்—*கஜம் வா வீக்ஷ்ய ஸிம்ஹம் வா வ்யாக்ரம் வாபி வராங்கநா, நாஹாரயதி ஸம்த்ராஸம் பாஹூ ராமஸ்ய ஸம்ச்ரிதா*" என்றுள்ள ச்லோகத்தை யடியொற்றியே கம்பர் இச்செய்யுளை இயற்றியுள்ளார் என்று பெரியோர் கூறுவர். ஸீதாபிராட்டி காட்டிலே செல்லும்போது யானை, சிங்கம், புலி முதலிய கொடிய விலங்குகளைக் கண்டவிடத்தும் சிறிதும் அஞ்சவில்லை! புதிய வஸ்துக்களைக் கண்டதனாலுண்டாகும் வியப்பே அவளுக்குத் தோன்றியது; இராமபிரானுடைய திருத்தோள்களை அண்டைகொண்ட மிடுக்குத் தான் இதற்குக் காரணம்—என்பது மேற்குறித்த ச்லோகத்தைக் கூறின வால்மீகி முனிவரின் கருத்தாகும். இக்கருத்துப் படவே கம்பர் இச்செய்யுள் இயற்றினாரென்றால் மிக்க பொருத்தமா யிருக்கின்றது. வடமொழி நிகண்டு ஒன்றில் "கர்ப்பேந்த்ரஸ் ஸிம்ஹபக்ஷக:" என்று காணப்படுதலால், சிங்கத்தைக்கொன்று தின்னவல்ல யாளியே இங்குக் கருப்பேந்திரமெனப்பட்டது என்றால் பொருத்தமல்லவா? கரும்பாலையைக் கண்டால் இடர்காண்கைக்கு [அஞ்சுதற்கு] ப்ரஸக்தியிருந்தாலன்றோ அதைக் கண்டு இடர்காணுளென்னத் தகுவது.

## 37. முதலியாண்டானது பதினொரு வார்த்தைகள்

உடையவருடைய பாதுகையாக ப்ரஸித்தரான முதலியாண்டானென்னுமாசிரியர் ஸ்ரீ ராமாயணத்திற்கு ஸ்வாபதேசார்த்தம்போலச் சில வார்த்தைகள் அருளிச்செய்தாராம் ; அவையாவன—(1) பிராட்டிக்குச் சிறையிருப்புப்போல ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஸம்ஸாரத்திலிருப்பு ; (2) பிராட்டி இளையபெருமாள் விஷயத்தில் அபசாரப் பட்டு உடனே பெருமாளைப் பிரியநேர்ந்ததுபோல, சேதநர்களுக்கு பாகவதாபசாரம் எம்பெருமான் திருவடி ஸம்பந்தத்தை விலகப் பண்ணும்; (3) பிராட்டிக்கு அசோகவனம் போலே இவர்களுக்கு ப்ரக்ருதி ஸம்பந்தரூபமான தேஹம் ; (4) பிராட்டிக்கு அரக்கிகளின் ஸஹவாஸம்போலே இவர்களுக்குப் புத்ரகளத்ராதிகளின் ஸஹவாஸம்; (5) பிராட்டிக்கு மாரீசமாயாமிருகக் காட்சிபோலே இவர்களுக்கு "பாவியேனைப் பல நீ காட்டிப் படுப்பாயோ" என்னும் படியான விஷயங்களின் காட்சி; (6) பிராட்டிக்குத் திருவடி நேர்பட்டாப்போலே இவர்களுக்கு ஆசார்யன் நேர்படுவது; (7) பிராட்டிக்குத் திருவடி சொன்ன ஸ்ரீ ராமகுணங்கள் போலே இவர்களுக்கு ஆசார்யனுபதேசிக்கும் பகவத்விஷயாதிகள்; (8) பிராட்டிக்குத் திருவடி அடையாளங்கள் கூறித் திருவாழிமோதிரம் கொடுத்தது போல இவர்களுக்கும் குருபரம்பரா பூர்வகமான திருமந்த்ரஉபதேசம்; (9) பிராட்டி திருவடிக்குச் சூடாமணி கொடுத்தாப் போல



இவர்கள் ஆசார்யன் விஷயத்தில் "தலையல்லால் கைம்மாறிலேனே" என்றிருக்குமிருப்பு; (10) பிராட்டிக்கு ஸ்ரீ விபீஷணாழ்வானது திருமகளாருடைய ஸஹவாஸமும் பேச்சும் தாரகமாயிருந்ததுபோல இவர்களுக்கு பாகவத ஸஹவாஸமும் அவர்களுடைய திவ்பஸூக்திகளுமே தாரகமாயிருக்கும்; (11) பெருமாள் பிராட்டியிருந்தவிடத்தே வந்து விரோதிகளைக் கிழங்கெடுத்து அவளைக் கைக் கொண்டது போல, எம்பெருமான் "ஆவாரார் துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும் நாவாய்போல் பிறவிக் கடலுள் நின்று துளங்குமிவர்களிடத்தேற வந்து" "பொய்ந் நின்றஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்பு" மாகிற விரோதிகளை வேரோடே களைந்து நித்யமுக்தர்களோடே ஒரு கோவையாகும்படி கைக் கொண்டருள்வது.

## 38. இதனையடியொற்றி தேசிகனருளிய சுலோகம்

தேசிகன் இப்பொருள்களையே பெரும்பாலும் திருவுள்ளம் பற்றி,

தர்ப்போதக்ரதசேந்த்ரியாநநமநோநக்தஞ்சராதிஷ்டிதே
தேஹேஸ்மிந் பவஸிந்துநா பரிகதே தீநாம் தசாமாஸ்தித :,
அத்யத்வே ஹநுமத்ஸமேந குருணா ஸம்போதிதார்த்தஸ்ஸுதீ :
லங்காருத்தவிதேஹராஜதநயாந்யாயேந லாலப்யதே *

என்கிற ச்லோகத்தை ஸங்கல்பஸூர்யோதயத்திலே பணித்தருளினார். பிராட்டி பெருமாளை விட்டுப் பிரிந்து கடலிடைத் தீவில் இருந்து அலற்ற, மாருதி சென்று தேற்றிப் பெருமாளோடே சேர்ப்பித்த வரலாறு உற்றுநோக்கப்படின், எம்பெருமானோடு இணைபிரியாமல் கூடிவாழ்வதற்கு இட்டுப் பிறந்த சேதநன் அவனைவிட்டு விலகி ஸம்ஸாரஸாகரத்தினிடையே கிடந்தலற்ற, ஞானமனுட்டானமிவை நன்றாகவே உடையனான வொரு ஆசாரியன் வந்து பகவத்விஷயத்தையுணர்த்தி இருவரையும் ஒன்று சேர்ப்பதான ஸம்பிரதாய விருத்தாந்தம் நினைவுக்கு வரும். திருவடிக்கு ஸ்ரீ ராமாயணத்தில் ஆசாரிய ஸ்தானம் கிடைத்திருக்கின்றது. அந்தத் திருவடியின் தன்மையும் ஆசாரிய லக்ஷணமும் "பக்ஷீ ச சாகாநிலய :" என்னும் சுலோகத்தில் மூதலிக்கப்படுகிறது. அந்த ச்லோகம் கேண்மின்.

## 39. ஸ்ரீ ராமாயணத்தில் ஆசார்ய லக்ஷணம்

பக்ஷீ ச சாகாநிலய : ப்ரஹ்ருஷ்ட :
புந : புநச்சோத்தமஸாந்த்வவாதீ
ஸுஸ்வாகதாம் வாசமுதீரயாந :
புந : புநச் சோதயதீவ ஹ்ருஷ்ட :

பிராட்டி ப்ராணத்யாகத்தை நிச்சயித்துத் துயருற்றிருக்குங் காலத்திலே ஒரு சுப சகுனமானதாக இந்த ச்லோகம் தெரிவிக்கின்றதாயினும், அதே ஸமயத்தில் அங்குத் திருவடியும் வந்திருந்தபடியால் ஆசார்ய ஸ்தானீயனுன அவனுடைய படியும் இதில் தெரிவிக்கப்படுகின்றதென்பதை விவரிக்கிறேன். ச்லோகத்தை மனனம் செய்யுங்கள்.

## 40. ஸ்ரீராமாயண ஸாரத்தின் அவதாரிகை

ஸ்ரீ ராமாயணத்தில் ஸுந்தர காண்டத்தில் பிராட்டி அசோக வனத்தில் மிக மிக வருந்துவதைக் கூறுமிடத்து த்ரிஜடை யென்னு மரக்கியின் வார்த்தையால் சில சிறந்த விஷயங்கள் தெரிவிக்கப்படுகின்றன. 23, 24 ஸர்க்கங்களில் ராக்ஷஸிகள் ஸீதா பிராட்டியை விரட்டுதலும் பிராட்டிரோதனஞ் செய்வதும் கூறப்பட்டது. 25, 26 ஸர்க்கங்களில்—பிராட்டி ராக்ஷஸிகள் சொன்னவற்றைக் கண்டித்ததும் அசோக மரத்தின் கிளேயைப் பற்றிக்கொண்டு வருந்தியதும் உயிரை மாய்த்துக் கொள்ள உறுதி கொண்டதும் சொல்லப்பட்டன. 27-ஆம் ஸர்க்கம் த்ரிஜடை தான் கண்ட கனவின் விருத்தாந்தத்தை ராக்ஷஸிகளுக்குச் சொல்லுவதாக அமைந்துள்ளது. பிராட்டி உயிரை விடுவதாகத் துணிந்து கூறின ரோஷமான வார்த்தைகளேக் கேட்ட ராக்ஷஸிகளில் சிலர் அவ் விஷயத்தை இராவணனுக்குச் சொல்லப் போயினர். மற்றவர்கள் மீண்டும் சீதையை விரட்டிக் கொண்டிருந்தனர். அப்பொழுது தூங்கிக்கொண்டிருந்த த்ரிஜடையென்னு மரக்கி திடீரென்று விழித்தெழுந்து, சீதையைத் துன்புறுத்திக் கொண்டிருந்த அரக்கியரை நோக்கி "நான் இப்போது ஒரு பயங்கரமான கனவு கண்டேன்; அது ராக்ஷஸர்களுக்கு விநாசத்தையும் இராமனுக்கு வெற்றியையும் தெரிவித்தது" என்று சொல்லிக் கனுக்கண்ட செய்திகளேயும் வெகு விரிவாகக் கூறி, "இக்கனு விடியற்காலேயில் ஏற்பட்டதால் இதில் கண்ட விஷயங்களனைத்தும் வெகு விரைவில் நிறைவேறுமென்பதில் ஐயமில்லை; ஆதலால் இனி நாம் சீதையை விரட்டுவது தகாத காரியம்; இராவணனேடு கூட நமக்கும் விநாசம் நேர்ந்துவிடும்; நாம் சீதையினிடத்துப் பட்ட குற்றங்களே அவள் மன்னிக்கும்படி வேண்டிக் கொள்வதே நலம்" என்று சொல்லிவிட்டு, பிராட்டியின் திருமேனியுறுப்புகளில் தோன்றிக் காணப்பட்ட சுபக்குறிகளேயும், மற்றும் பரம விலக்ஷணமானவொரு சுப சகுனத்தையும் தெரிவிக்கிருள். இவ்வளவோடு அந்த இருபத்தேழாவது ஸர்க்கம் முடிவு பெற்றிருக்கின்றது. அந்த ஸர்க்கத்தின் முடிவிலுள்ள சுலோகம் ஸ்ரீ ராமாயணத்தின் ஸாரமான உட்கருத்தை வ்யங்க்ய மரியாதையினுல் தெரிவிப்பதாக நம் ஆசாரியர்கள் நுட்பமாகக் காட்டியுள்ளார்கள். ஸ்ரீ ராமாயணத்திற்கு மிகச் சிறந்த வியாக்கியானம் செய்த ஸ்ரீ கோவிந்தராஜார்யரும் அவ்விடத்து வியாக்கியானத்தில் (வடமொழியில்) ஸம்க்ஷேபமாக விவரித்துள்ளார். ஸ்ரீ ராமாயணத்தின் ஜீவநாடியான அவ் விசேஷார்த்தங்களேச் சிறிது விவரித்து விளக்குகின்றேனிங்கு. ஸ்ரீ ராமாயணத்தில் இதே கட்டத்தில் தூதுவந்த திருவடி மரத்தின்மீது பதுங்கியிருப்பதாகிற செய்தியும் சொல்லப்பட்டிருக்கின்றது. ஸ்ரீ ராமாயணத்திற்கு ஸ்வாபதேசார்த்தம் கூறுகின்ற நம் ஆசாரியர்கள் திருவடியை (ஆஞ்ஜநேயரை) ஆசார்ய ஸ்தானத்தில் வைத்துப் பேசுவதன் பொருத்தங்கள் கேண்மின்.



## 41. (சுலோகத்தில்) பக்ஷீ என்பதன் உள்ளுறை

[பக்ஷீ] இரு சிறகுகளேயுடையதென்று பொருள். பறவையானது தனது இரண்டு சிறகுகளினுலும் எப்படி உயர் கதியையடைந்து நிற்கின்றதோ, அப்படியே ஞான மனுட்டானமென்னும் இரண்டு ஸாதனங்களினுல் உச்சைர் கதியை யடையவல்லவன் ஆசாரியன்;—"உபாப்யாமேவ பக்ஷாப்யாம் ஆகாசே பக்ஷிணும் கதி:, ததைவ ஜ்ஞாநகர்மப்யாம் ப்ராப்யதே புருஷோத்தம:" என்கிற ப்ரமாணவசனமும், இதையநுஸரித்து அவதரித்த "சேர்ப்பாரைப் பக்ஷிகளாக்கி ஜ்ஞானகர்மங்களேச் சிறகென்று குருஸப்ரஹ்மசாரி புத்ர சிஷ்யஸ்தாநே பேசும்" என்கிற ஆசார்யஹ்ருதய சூர்ணேயும் இங்கே அநுஸந்தேயம். வழிநடந்து செல்ல வேண்டியவனுக்குக் கண்ணும் நன்ருகத் தெரியவேணும்; காலும் நடப்பதற்குப் பாங்காகயிருக்கவேணும். குருடனும் நொண்டியுமானவன் வழி நடக்கவேணுமாளுல் கண் தெரிந்தவனும் கால் நல முடையவனுமானவொருவனேத் துணேகொண்டேயாகவேணும். ஞானமற்ற ஆசாரியன் கண்ணில்லாத குருடனே யொத்தவன்; அனுட்டானமற்ற ஆசாரியன் கால் நலமில்லாத நொண்டியையொத்தவன். ஆகவே ஆசாரியன் ஞானமனுட்டானமிவை நன்ருகவே உடையனுயிருக்க வேணும். இதனேப் "பக்ஷீ" என்கிற பதத்திஞல் தெரிவித்ததாயிற்று.

## 42. சாகாநிலய: என்பதன் உள்ளுறை

[சாகாநிலய:] சாகையென்று கிளேக்குப் பெயராயிருப்பதுபோலே வேதத்திற்கும் பெயராயிருக்கும். "யஜுச்சாகாத்யாயீ, ஸாமசாகாத்யாயீ" என்று வழங்கி வருகிருேமல்லவா. ஆழ்வார் திருவாய்மொழி தொடங்கும் போதே "உளன்சுடர்மிகுசுருதியுள்" என்றருளிச் செய்கையாலும், "ஆழ்வார்கள்வாழி யருளிச் செயல் வாழி" என்று மங்களாசாஸனம் செய்தருளுகிற மணவாள மாமுனிகள் "செய்யமறைதன்னுடனே சேர்ந்து" என்றருளிச்செய்து வைக்கையாலும் ஆசாரியன் திவ்ய ப்ரபந்தாதிகளிற் போலே வேதத்திலும் நிரதனுயிருக்கவேணுமென்று காட்டினபடி. "நாவேதவிந்

மநுதே தம் ப்ருஹந்தம்''—என்று வேதமே ஓதிவைத்தது. வேத மோதாதவன் பரமபுருஷனை அறியகில்லாதவனென்பது இந்த வேத வாக்கியத்தின் பொருள்.

## 43. ப்ரஹ்ருஷ்ட: என்பதன் உள்ளுறை

[ப்ரஹ்ருஷ்ட:] மிக்க மகிழ்ச்சியையுடையவனென்று பொருள். ஆசாரியன் எப்போதும் ஸந்தோஷமே வடிவெடுத்த சிந்தையை யுடையனுயிருப்பன். ஆநந்தமயனுன எம்பெருமானையே அநவரதம் சிந்தை செய்வதனுல் இவனும் ஆனந்தமயனுகவே ஆய்விடுவன். 'திருமாலுருவோடு அவன் சின்னமே பிதற்றுநிற்பதோர் திருமால் தலைக்கொண்டநங்கட்கு எங்கே வரும் தீவினையே'' என்கிற திருவிருத்தப் பாசுரமே நித்யாநு ஸந்தானமாக இருக்கப்பெற்றவர் களிடத்தில் ஹர்ஷ ப்ரகர்ஷம்தவிர வேருென்றுக்கு அவகாச முண்டோ? தேஹ யாத்திரையிலும் ஆத்ம யாத்திரையிலும் கவலை யற்றிருப்பவர்களே ஆசார்ய பதவிக்கு அர்ஹர்களாதலால் அன்னவர்கட்கு ப்ரஹர்ஷமொழிய வேறில்லை.

## 44. உத்தமஸாந்த்வவாதீ என்பதன் உள்ளுறை

[புந: புநச்ச உத்தமஸாந்த்வவாதீ] மிகச்சிறந்த ஹிதோபதேசங் களுக்கு ஸாந்த்வ வாதமென்று பெயர். சிஷ்யர்களின் நிர்ப்பந்தத்திற் காக வன்றிக்கே தன்பேருக அடுத்தடுத்து ஹிதோபதேசம் பண்ணு மவர் எவரோ அவரே உத்தமரான ஆசாரியர். திருக்கோட்டியூர் நம்பியைவிட எம்பெருமானுர்க்குண்டான ஏற்றம் இங்கு அநுஸந் திக்கத்தக்கது. திருத்திப் பணிகொள்ளவல்லாரைச் சொல்லுகிறது.

## 45. மூன்ருவது பாதத்தின் உள்ளுறை

[ஸுஸ்வாகதாம் வாசம் உதீரயாந:] ஸ்வாகதாம் என்றது ஸ்வஸ்மை ஆகதாம் என்றபடி. ஸுஷ்டு ஸ்வஸ்மை ஆகதாம்—ஸுஸ்வாகதாம். ஸ்வகபோல கல்பிதமான அர்த்தங்களை மனம்போனபடியே சொல்லுகையன்றிக்கே*முன்னேர் மொழிந்த முறைதப்பாமல் கேட்டுப் பின்னேர்ந்து தாமதனைப் பேசுமவரே உத்தமரான ஆசாரியராதலால் அதைத் தெரிவித்தபடி.

## 46. நான்காவது பாதத்தின் உள்ளுறை

[புந: புந: சோதயதீவ ஹ்ருஷ்ட:] ''பணிமானம் பிழையாமே அடியேனைப்பணிகொண்ட'' என்ற திருவாய் மொழிப் பாசுரப் படிக்கும், ''ஸ்காலித்யே சாஸிதாரம்'' என்ற ந்யாஸ விம்சதிஸூக்திப் படிக்கும் தவறுகள் நேருங் காலங்களில் நிர்தாக்ஷிண்யமாக சிக்ஷிப் பவரே உத்தமாசார்யராவர்;அதுவே இங்குப் பொருளாக விவக்ஷிதம். ஆக இந்த ச்லோகம் உத்தமாசார்யருடைய படியையே தெரிவிப்ப தாயிற்று. இனி இதற்குச் சார்பான கம்பர் பாசுரங்கேண்மின்.



## 47. கம்பரியற்றிய அனுமன் துதி

கம்பர் தமது இராமாயணத்தின் தொடக்கத்தில் திருவடிக்கு (ஆஞ்சனேயர்க்கு)க் காப்புச் செய்யுளொன்று இயற்றியுள்ளார்:

''அஞ்சிலே யொன்று பெற்ருன் அஞ்சிலேயொன்றைத்தாவி
அஞ்சிலே யொன்ருருக ஆரியர்க்காக வேகி
அஞ்சிலே யொன்று பெற்ற அணங்குகண்டயலாருரில்
அஞ்சிலே யொன்று வைத்தானவன் நம்மையளித்துக் காப்பான்.''

என்பது அச்செய்யுள். இச்செய்யுளில் ''அஞ்சிலே யொன்று'' என்கிற சொல்தொடர் ஐந்துமுறை வருகின்றது. நிலம் நீர் தீ கால் விண் (ப்ருதிவி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம்) என்கிற பஞ்ச பூதங்களை யுத்தேசித்தே ''அஞ்சிலே'' யென்கிற சொல்லை ஐந்து முறை பிரயோகித்திருக்கின்ருர். வாயுபுத்திரனுன அனுமான் கடலைத் தாவி ஆகாச மார்க்கமாகச் சென்று பூமிதேவியின் மகளான சீதாபிராட்டியைக் கண்டு இலங்கையில் தீயை வைத்து வந்தனன்; அன்னவன் நமக்குத் தஞ்சம் என்பதே இச்செய்யுளில் தேறின பொருள். பஞ்சபூதங்களில் ஒன்ருகிய வாயு பெற்ற பிள்ளையாதலால் 'அஞ்சிலே யொன்று பெற்ருன்' என்றது அனுமானைத் தெரிவித்தது. அவன் கடந்து சென்ற கடலாகிய ஜலதத்துவம் பஞ்சபூதங்களுள் ஒன்ருதலால் 'அஞ்சிலே யொன்றைத் தாவி' எனப்பட்டது. அவன் பறந்து சென்ற மார்க்கமாகிய ஆகாசம் பஞ்சபூதங்களுள் ஒன்ருத லால் 'அஞ்சிலே யொன்று ஆருக' எனப்பட்டது. அவனுல் காணப் பட்ட சீதையின் தாயாகிய பூமி பஞ்ச பூதங்களுள் ஒன்ருதலால் 'அஞ்சிலே யொன்று பெற்ற அணங்கு கண்டு' எனப்பட்டது. அவன் இலங்கையிலே வைத்த தீயானது பஞ்ச பூதங்களில் ஒன்ரு தலால் 'அயலாருரில் அஞ்சிலே யொன்று வைத்தான்' எனப்பட்டது.

## 48. மேலே விவரித்த கம்பர் செய்யுளின் விசேஷம்

கம்பராமாயணவுரைகாரர்கள் மேலே விவரித்த வகையான பொருளையே யெழுதிவைத்துள்ளார்கள். கம்பராமாயணப் பிரசங்கிகளும் இப்பொருளையே சொல்லி வருகின்ருர்கள். ஸ்ரீ ராமாயணத்தில் அனுமன் ஆசார்ய ஸ்தானம் வஹிப்பவராதலாலும், அவ்விஷயம் முன்னே பரக்க நிரூபிக்கப்பட்டதாலும், அதற்குச் சேர இச் செய்யுளின் உள்ளுறை பொருளை நாம் உய்த்துணர வேண்டியது அவசியமா கின்றது. இச் செய்யுளில் 'அஞ்சிலே' என்கிற சொல் ஐந்து தடவை வந்துள்ளதன்ருே. அவ்வைந்து தடவைகளிலும் பஞ்ச பூதங்களாகிற ஐந்து தான் பொருளாகக் கொள்ளப்பட்டது முன்னம்; உள்ளுறை பொருளில் அப்படியல்ல; பின்னை எப்படியென்னில்,

முதலான அஞ்சு—பஞ்சஸம்ஸ்காரம்.
இரண்டாவதான அஞ்சு—அர்த்தபஞ்சகம்.
மூன்ருவதான அஞ்சு—உபாயபஞ்சகம்.
நான்காவதான அஞ்சு—பரத்வாதிபஞ்சகம்.
ஐந்தாவதான அஞ்சு—லோகபஞ்சகம்.

இங்ஙனம் பஞ்சகம் பஞ்சகமாகச் சொல்லப்படுகிற ஐந்து வர்க்கங்கள் ஜகத்ப்ரஸித்த மானவையே. ஸம்பிரதாய நூல்களில் பரிசயமுள்ளவர்கள் இவற்றை எளிதிலுணர்வர்கள். அனைவர்க்கும் விளக்கமாக விவரிக்கின்றேன். ஆழ்ந்து நோக்கவேணும்.

## 49. "அஞ்சிலே ஒன்று பெற்ருன்'' உள்ளுறை பொருள்

பஞ்சஸம்ஸ்காரங்களில் ஒன்ருன மந்த்ர ஸம்ஸ்காரத்திஞல் பிறவி பெற்றவன் என்றபடி. பிறவி இரு வகைப்படும்; உடற்பிறவி யென்றும் உயிர்ப்பிறவியென்றும். உயிர் என்பது ஆத்மா; நித்ய மான ஆத்மாவுக்குப் பிறவி யென்பது கிடையாதென்றும் உடலுக்கு மட்டுமே பிறவியுள்ளதென்றும் கீதாசாஸ்த்ரம் முதலியவற்றில் அறுதியிடப்பட்டிருக்க, அதற்கு மாருக உயிர்க்கும் பிறவியுள்ளதாகச் சொல்லுவது எங்ஙனம்? எனில்; "அஸந்நேவ ஸ பவதி...ஸந்த மேநம் ததோ விது:'' என்கிற உபநிஷத்வாக்யத்தின்படியும், "அன்று நான் பிறந்திலேன்'' என்கிற திருமழிசைப் பிரானருளிச் செயலின் படியும் உண்டாவதாகச் சொல்லக் குறையில்லை.

''சரீரமேவ மாதாபிதரௌ ஜநயத:,
ஸ ஹி விதயாதஸ் தம் ஜநயதி தத் ச்ரேஷ்ட: ஜந்ம''

என்கிற ஆபஸ்தம்பதர்மஸூத்ரமும் உணரத்தக்கது. இந்த ஸூத்ரத்தின் பொருளாவது: தாய் தந்தையர் உடலை மட்டுமே பிறப்பிக்கின்றனர்; ஆசார்யனே வென்னில், ஞானத்திஞல் ஆத்மா வைப் பிறப்பிக்கின்றனன்; அப்பிறப்பே சிறந்தது என்கை. ஆசார்ய ஹ்ருதயத்தில் (2–35) ''வித்யை தாயாகப் பெற்று'' என்கிற சூர்ணை யின் வியாக்கியானத்திலே—''ஸ ஹி வித்யாதஸ் தம் ஜநயதி'' என்கிறபடியே ஆசார்யன் திருமந்த்ரமுகேந ஸ்வரூப ஜ்ஞானத்தை யுண்டாக்கினபோது இவ்வாத்ம ஸத்பாவமாகையாலே வித்யையை மாதாவாகக் கொண்டு இவ்வாத்ம வஸ்துவை ஜனிப்பித்து'' என்று மணவாளமாமுனிகளருளிச் செய்ததும் இங்கே அநுஸந்தேயம். ஆக "அஞ்சிலே யொன்று பெற்ரு''னென்றது—பஞ்சஸம்ஸ்காரங்களில் ஒன்ருன மந்த்ர ஸம்ஸ்காரத்திஞலே பிறவி பெற்றவனென்ற தாயிற்று. தாபஸம்ஸ்காரமான பிறகே மந்த்ர ஸம்ஸ்காரத்திற்கு ப்ரஸக்தியாதலால் முதலதான அந்த ஸம்ஸ்காரத்தையே கொள் வதும் பொருந்தும். "தீயிற் பொலிகின்ற செஞ்சுடராழி திகழ்திருச்



சக்கரத்தின் கோயிற்பொறியாலே யொற்றுண்டு நின்று குடிகுடியாட் செய்கின்ரேம்'' என்கிறபடியே திருவாழி திருச்சங்கு திருவிலச்சினை யிஞல் பிறவி பெற்றவன், திருமந்திரத்திஞல் பிறவி பெற்றவன்—என்றதாயிற்று. நம் ஆசாரியர்கள் சிஷ்யர்களை ஆசீர்வதிக்கும் போது ''திருமந்த்ரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து த்வயைக நிரதராவீர்''என்று அநுக்ரஹித்தருள்வதும் இங்கு ஸ்மரிக்கத்தக்கது.

## 50. அஞ்சிலே ஒன்றைத்தாவியின் உள்ளுறை

இப்போது அஞ்சிலேயென்றது அர்த்தபஞ்சகத்திலே யென்ற படி. முமுக்ஷுப்படியில் "அறியவேண்டுமர்த்தமெல்லாம் இதுக் குள்ளே யுண்டு; அதாவது அஞ்சர்த்தம்'' என்றருளிச் செய்தார். "ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் ப்ராப்துச் ச ப்ரத்யகாத்மந:, ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தேஸ் ததா ப்ராப்தி விரோதி ச. வதந்தி ஸகலாவேதா: ஸேதிஹாஸபுராணகா:] என்று பரமாத்ம ஸ்வரூபம், ஜீவாத்ம ஸ்வரூபம், உபாயஸ்வரூபம், புருஷார்த்தஸ்வரூபம், விரோதிஸ்வரூபம் ஆகிய இவையைந்தும் அர்த்தபஞ்சகமாக பகவச்சாஸ்த்ரத்திலே விவரிக்கப்பட்டுள்ளது. *மிக்க இறை நிலையும் மெய்யாமுயிர்நிலையும் தக்கநெறியும் தடையாகித் தொக்கி யலுமூழ்வினையும் வாழ்வினையுமோதுங் குருகையர்கோன் யாழி னிசை வேதத்தியல்* என்கிற திருவாய் மொழித்தனியன் பாசுரம் அர்த்தபஞ்சகத்தை விவரித்துக் காட்டியிருப்பதோடு திருவாய் மொழியாயிரத்திற்கும் இவ்வைந்து பொருள்களே பிரமேயமென்றும் காட்டிநின்றது. இவற்றுள் ஒன்றைத் தாவுகையாவது — அர்த்த பஞ்சகத்தில் ஒன்ருன விரோதி ஸ்வரூபத்தைக் கடத்தலாம். முமுக்ஷுப்படியில் ''விரோதிதான் மூன்று; ஸ்வரூப விரோதியும் உபாய விரோதியும் ப்ராப்ய விரோதியும்'' என்றருளிச் செய்த படியும், பட்டர் அஷ்டச்லோகியில், ''மந்த்ரப்ரஹ்மணி மத்யமே நமஸா'' என்கிற இரண்டாம் ச்லோகத்திலே நிரூபித்தருளினபடியும் அவசியம் களையவேண்டியவையாகத் தேறுகின்ற பிரதிபந்தகங் களைக் களைந்து என்றதாயிற்று. அஹங்காரமமகாரஸ்பர்ச மற்ற வராய், ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயரஹிதராய், எம்பெருமானுடைய போகத்திற்கு ஹாநியை விளைவியாதவராய் இருக்குமிருப்பைச் சொல்லிற்ருயிற்று.

## 51. அஞ்சிலே ஒன்று ஆருக என்றதன் உள்ளுறை

உபாய பஞ்சகத்திலே ஆசார்யாபிமானமாகிற ஒன்றையே உபாயமாகக்கொண்டு என்றபடி. ஐந்து உபாயங்கள் எவை யெனில், கருமயோகம், ஞானயோகம், பக்தியோகம், ப்ரபத்தியோகம், ஆசார்யாபிமானம் என்னுமிவையேயாம். இவற்றில் நான்காவது

உபாயமான ப்ரபத்தியில் இருவகையுண்டு ; ஒன்று எம்பெருமானைப் பற்றுகை ; மற்றொன்று ஆசார்யனைப் பற்றுகை. இவை தனித்தனி உபாயங்களல்ல ; ஒன்றேயாம். ஸ்ரீ வசநபூஷண சரம ப்ரகரணத்தில் "ஈச்வரனைப் பற்றுகை கையைப் பிடித்துக் காரியம் கொள்ளுமோபாதி ; ஆசார்யனைப் பற்றுகை காலைப் பிடித்துக் காரியம் கொள்ளுமோபாதி" என்றருளிச் செய்திருப்பதுகொண்டு இது தெளியலாம். அவ்விடத்து மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்தில் அத்யந்தவைசத்யம் காணலாம். இந்த நாலாவது உபாயத்திற்கு மேல் ஐந்தாவது உபாயம் எதுவென்னில், ஆசார்யாபிமானமென்பது. ஸ்ரீ வசந பூஷணத்தில் *443*-ஆம் சூர்ணை முதல் இது வெகு விசதமாக நிரூபிக்கப்பட்டுள்ளது. "ஸ்வாபிமாநத்தாலே ஈச்வராபிமாநத்தைக் குலைத்துக்கொண்ட இவனுக்கு ஆசார்யாபிமாநமொழிய கதியில்லையென்று பிள்ளை பலகாலுமருளிச்செய்யக் கேட்டிருக்கையாயிருக்கும்" என்பது அங்கு தலையான சூர்ணிகை. அவ்விடத்து வியாக்கியானத்தில் "பெருவிலையனான ஆபரணத்துக்கு நாயகக்கல் போலேயாயிற்று ஸ்ரீ வசந பூஷணத்துக்கு இப் ப்ரதேசம் நாயகரத்னமாயிருக்கும்படி. இதனையருளிச் செய்கைக்காக அதிஷ்டிகையிட்டுக்கொண்டு வந்தது கீழடங்கலும் ; மேலடங்கலும் இதில் நிஷ்டையை ஸ்தாபிக்கிறது" என்று மாமுனிகளருளிச் செய்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது. ஸர்வேச்வரனானவன் "இவன் நமக்கு சேஷபூதன் ; இவனை உஜ்ஜீவிக்கச் செய்வது நமக்கே பொறுப்பு" என்று அபிமானித்திருக்கையாகிற ஈச்வராபிமானத்தை இந்த சேதநன் தன்னுடைய அஹங்காரத்தாலே அழித்துக் கொள்ளுகிறான் ; இப்படி ஈச்வராபிமானத்தை யழித்துக்கொண்டாலும் ஆசார்யாபிமானத்தை அழித்துக்கொள்ள முடியாது. ஏனென்றால், இவனுடைய துர்க்கதியே பற்றாசாக அங்கீகரித்து இவனுடைய உஜ்ஜீவனத்திற்கு க்ருஷி பண்ணிப் போருமவனான ஆசார்யன் 'இவன் நம்முடையவன்,' என்று அபிமானித்திருக்குமபிமானத்தை ஒருகாலும் விடமுடியாது. பட்டர் ஸ்ரீ ரங்கராஜ ஸ்தவ உத்தர சதகத்தில் — 'த்வத் ஸர்வசக்தே ரதிகாஸ்மதாதே: கீடஸ்ய சக்திர் பத! ரங்கபந்தோ. யத் த்வத்க்ருபாமப்யதி கோசகாரந்யாயாதஸௌ நச்யதி ஜீவநாசம்" என்கிற ச்லோகத்தினால் சேதநன் ஈச்வராபிமானத்தைக் குலைத்துக்கொள்ளும் படியைக் காட்டியுள்ளார். ஆசார்யாபிமானம் இப்படி குலைத்துக் கொள்ளக் கூடியதன்று. அதுதான் மிகச் சிறந்த உபாயம். 'ஆக அஞ்சிலே ஒன்று'—ஐந்து உபாயங்களிலே மிகச் சிறந்ததான ஆசார்யாபிமானத்தை, 'ஆறு ஆக'—உபாயமாகக்கொண்டு என்றதாயிற்று.



## 52. அஞ்சிலே யொன்று பெற்ற அணங்கு கண்டு

பரம் வியூஹம் விபவம் அந்தர்யாமி அர்ச்சை என்னும்படியான எம்பெருமானது நிலைகள் ஐந்தினுள்ளே ஒன்றாயிருக்கப் பெற்ற அர்ச்சாவதாரத்தைக் காட்டிக்கொடுத்து என்றபடி. 'கண்டு' என்றது பிறவினையில் வந்த தன்வினை ; காணச்செய்து என்று பொருளாம். 'அணங்கு' என்று தெய்வத்திற்குப் பெயர். பரமபத நிலனாயிருக்குமிருப்பாகிய பரத்வமும், திருப்பாற்கடலில் ஸங்கர்ஷணாதி ரூபேண வ்யூஹீபவித்து நிற்கும் நிலையாகிய வ்யூஹமும் தேச விப்ரக்ருஷ்டமாகையாலே இப்போது நமக்குப் பயன்பட மாட்டா. மத்ஸ்ய கூர்ம வராஹ ராம க்ருஷ்ணாதி ரூபேண அவதரிக்கையாகிற விபவாவதாரம் காலவிப்ரக்ருஷ்ட மாகையாலே இதுவும் இப்போது நமக்குப் பயன்பட மாட்டா. "அந்த: ப்ரவிஷ்டச் சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே உள்ளே ப்ரவேசித்து ஸகல ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்கும் நியாமகனாயிருக்குமிருப்பாகிய அந்தர்யாமித்வம் கரண விப்ரக்ருஷ்டமாகையாலே நமக்குப் பயன்பட மாட்டா. *தமருகந்த தெவ்வுருவமவ்வுருவமாய்க் கொண்டு கோவில்களிலும் க்ருஹங்களிலுமெழுந்தருளி நிற்கும் நிலையாகிய அர்ச்சாவதாரமொன்றே இப்போது நம்போல்வார்க்கு உபஜீவ்யமாகையாலே இதுதன்னைக் காட்டிக் கொடுப்பதே ஆசார்ய க்ருத்யமாயிருக்குமென்க.

## 53. அயலாரூரிலஞ்சிலே யொன்று வைத்தான்

இங்கு 'அயலார்' என்பதை அவிவக்ஷிதமாக விட்டிடுவது. ஊரஞ்சிலே ஒன்றில் வைப்பது ஆசார்ய க்ருத்யம். இம்மண்ணுலகம், பாபங்களின் பலாநுபவத்திற்கான நரகலோகம், புண்ய பலாநுபவத்திற்கான ஸ்வர்க்கலோகம், ஆத்மாநுபவ ஸ்தானமாகச் சொல்லப்படுகிற கைவல்யலோகம். *நலமந்தமில்லதோர் நாடெனப்படுகிற பரமபதம் ஆகிய ஐந்து லோகங்களில் ஒன்றான பரமபதத்திற்கு ஆளாக்கித் தீருத்திப் பணிகொள்வது ஆசார்ய க்ருத்யமென்க. *ஆதலால் பிறவி வேண்டேன்* *இருள் தருமாஞாலத்துள் இனிப் பிறவி யான் வேண்டேன்* என்கையாலே இம்மண்ணுலகம் ஹேயமாயிற்று. நரகம் ஹேயமென்னுமிடம் உபபாதிக்க வேண்டுவதன்று. ஸ்ரீ விஷ்ணு புராணத்திலே—*ஸ்வர்க்கேபி பாதபீதஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருதி:* எனப்படுதலால் ஸ்வர்க்கமும் ஹேயமாயிற்று. *ஸ்வாத்மாநுபூதிரிதி யா கில முக்திருக்தா, ஸர்வம் தத் ஊஷஜல ஜோஷமஹம் ஜுஷேய ஹஸ்த்யத்ரிநாத! தவ தாஸ்யமஹா ரஸஜ்ஞ:* என்ற ஆழ்வான்ஸ்ரீஸூக்திப்படியே கைவல்ய பதவியும் ஹேயமாயிற்று. ப்ரஹ்மாநந்த நிகே

தனமான ஸ்தானவிசேஷமொன்றே பரம ப்ராப்ய மாகையாலே அதுதன்னிலே கொண்டு சேர்த்து வைக்க உபதேசாதிகளாலே திருத்திப் பணிகொள்ளுமவனாயிற்று ஆசார்யன். ஆக, பஞ்ச ஸம்ஸ்காரம் பெறுவித்து, ப்ரதிபந்தகங்களைக்கடத்தி, சரமோபாயத்தை உபதேசித்து, அர்ச்சாவதாரத்தைக் காட்டிக்கொடுத்து ஸம்ஸாராத் உத்தீர்ணனுக்கும் ஸதாசார்யனுடைய படிகளை இச் செய்யுளில வெளியிட்டாராயிற்று....*

## ஸ்ரீ ராமானுஜ சரித்திர ஆராய்ச்சிகள்

### 54. முன்னோருடைய நூல்களின் ப்ராமாண்ய விசாரம்

ஸ்ரீ வைஷ்ணவமத ஸ்தாபநாசாரியரான ஸ்ரீ ராமானுஜர்காலம் இன்றைக்கு ஏறக்குறைய ஆயிரம் வருஷமாகிறது. அப்பேராசிரியருடைய சரித்திரங்களின் உண்மையை நாம் தெரிந்து கொள்வதும் பிரவசனம் செய்வதும் பரிகணிதர்களான முன்னோர்களின் நூல்களைப் பின்பற்றியே யாகவேண்டும். ஆழ்வார்களெல்லாருடையவும் ஸ்ரீமந்நாதமுனிகள் முதலாக நம்பிள்ளைவரையிலுமுள்ள ஆசாரியர்களுடையவும் சரித்திரங்களைத் தெரிந்துகொள்ளத் தென்மொழியிலும் வடமொழியிலும் புராதன நூல்கள் பிராமாணிகங்களாகத் தொன்றுதொட்டுக் கொள்ளப்பட்டு வருகின்றன. தென்மொழியில் "குரு பரம்பராப் பிரபாவம்" என்கிற நூல் நம்பிள்ளையின் சிஷ்யரான பின்பழகிய பெருமாள் ஜீயரால் அருளிச் செய்யப்பட்டது. இதற்கு ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவமென்று ப்ரஸித்தி. பன்னீராயிரப்படி குருபரம்பரையென்றும் மூவாயிரப்படி குருபரம்பரையென்றும் அச்சிடப் பட்டிருப்பவை மிகப் பிற்பட்டவர்களால் எழுதப்பட்டவையாதலால் அவை பிரமாணங்களாகக் கொள்ளப்பட உரியனவல்ல. முன்னம் சொன்ன ஆறாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவமானது குருமுகமாகக் கேட்கும் காலக்ஷேப க்ரந்தங்களுள் ஒன்றாகக் கொள்ளப்பட்டு இற்றைக்கும் அது காலக்ஷேபக்ரந்தமாகவே விளங்கி வருகின்றது. இந்த நூலை ஒருசாரார் அப்ரமாண மென்னக்கூடும். ஒருவகுப்பினரின் கருத்தின்படி இது அப்ரமாணமாகவே யிருந்திடுக. ஸ்ரீ ராமானுஜருடைய கீதாபாஷ்யத்திற்குத் தாத்பர்ய சந்திரிகையுரை யெழுதிய ஸ்ரீமந் நிகமாந்தவாசிரியர் (அத்யாயம் 11, ச்லோகம் 27-ல்) எழுதுகிறார்—"மூன்றுமத்யாயத்தில் யாதவப்ரகாசீயர்கள் ஐந்து சுலோகங்களைச் சிலர் படிக்கிறார்களென்று காட்டி வியாக்கியானித்திருப்பதாகவும் இங்கும் சில சுலோகங்கள் காண்பதாகவும் எழுதி இவற்றினுண்மையைப் பகவானே அறிய வேண்டும்" என்று. அந்த சுலோகங்கள் ப்ரக்ஷிப்தங்களென்பதை ஸ்வாமியறிந்து வைத்தும்



இங்ஙனே யெழுதியிருப்பது குறிக்கொள்ளத் தக்கது. ப்ரக்ஷேபமென்பது ஸ்ரீ ராமாயண பாரதாதிகளிலுங்கூட ஏற்பட்டிருப்பதை மஹான்கள் நிரூபிக்கிறார்கள். அதனால் மூலக்ரந்தத்தையே அப்ரமாணமென்று தள்ளிவிடுவது ஸாஹஸமாகும். ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் முன்னோர்கள் ஆதரித்ததாதலால் ப்ரமாணமே.

### 55. பகவத் ராமானுஜ சரிதைகளை யறிவிக்கும்நூல்கள்

ஸ்ரீ ராமானுஜர் ஸாமான்ய புருஷரல்லர். அக்காலத்திலேயே உலகம் நிறைந்த புகழாளரான அவருடைய சரிதைகளை அவருடைய காலத்திலேயே பல மஹான்கள் வடமொழியில் சுலோகமாகவும் வசனமாகவும் எழுதி வைத்தார்கள். அவற்றுள் இரு மஹான்களின் இரண்டு நூல்கள் அந்நாள் தொடங்கியே மிகவும் பிரசித்தமாகப் பிரசாரத்திலிருந்து வருகின்றன. அவையாவன (1) கருடவாஹன பண்டிதரியற்றிய திவ்ய ஸூரிசரிதகாவ்யமும்; (2) ஆந்த்ர பூர்ணார்யரென்னும் வடுகநம்பி இயற்றிய யதிராஜவைபவமுமாம். இவை தெலுங்குலிபியிலும் தேவநாகரலிபியிலும் அச்சேறியு மிருக்கின்றன. வடுகநம்பி யியற்றிய யதிராஜ வைபவம் கடைசியாக மைஸூர் ஸ்ரீ பரகால மடாதிபதி ஸ்வாமிகளால் பரிசோதிக்கப்பெற்று வெகு ரமணீயமான முறையில் அந்த |மடத்தின் மூலமாகவே அச்சாகி வெளிவந்துள்ளது.

### 56. ஸ்ரீ ராமானுஜர் மேல்நாட்டுக்கெழுந்தருளின செய்தி

ஸ்ரீ ராமானுஜருடைய சரிதையில் வீரசைவனான சோழராஜனுடைய தொந்தரவு ஏற்பட்ட காலத்தில் ஸ்ரீ ராமானுஜர் வெள்ளை சாத்திக்கொண்டு மேல்நாட்டுக் கெழுந்தருளினதாகவும், கூரத்தாழ்வான் காஷாயமணிந்து கொண்டு ராஜஸபைக்கு எழுந்தருளினதாகவும் பிரஸித்தமாக வழங்கிவரும் இதிஹாஸம் அஸங்கதமென்பர் சிலர்; இந்த வரலாறு பிராமாணிகமே யொழிய நவீன கல்பிதமன்று என்பதைப் புராதனமான அதார்ட்டிகளைக் கொண்டு அறுதியிடலாம். வடுகநம்பி ஸாதித்த யதிராஜ வைபவமென்று மேலே ப்ரஸ்தாவிக்கப்பட்ட வடமொழி நூல் 114 சுலோகங்கள் கொண்டது. இதைக் கடைசியாக அச்சிட்டிருப்பவர் மைசூர் ஸ்ரீ பரகால மடாதிபதி ஸ்வாமிகளென்பதைக் கீழே காட்டினேன். "ஸ்ரீ யதிராஜ அந்தரங்க ச்சாத்ர வடுகபூர்ணவிரசிதம் யதிராஜ வைபவம் ஸம்பூர்ணம்" என்று பரகாலஸ்வாமி தமது திருக்கையாலெழுதி முடித்திருக்கிறார். ஆரம்பத்திலும், "ஸ்ரீ ராமானுஜ யோகீந்த்ர க்ஷீர கைங்கர்ய சாலிநே, நமோ வடுக பூர்ணாய மஹநீயகுணாப்தயே" என்று வடுக நம்பியின் தனியனை வெளியிட்டுள்ளார். இதனால்

ஸாக்ஷாத் ஸ்ரீ ராமானுஜர் காலத்திலேயே இந்த யதிராஜ வைபவநூல் அவதரித்த தென்பதை ஸ்ரீ பரகால மடம் கல்வெட்டாக்கி வைத்தது. இதில் 95, 96 சுலோகங்களாவன :

"காஷாயத்ருத் கூரபதிஸ் த்ரிதண்டீ
ப்ராயாந் மஹாபூர்ணயுதஸ்து தத்ர,
வாத்ஸ்யேச முக்க்யைஸ் ஸஹிதோ யதீச :
சுக்லாம்பர : ப்ராப திசம் ப்ரதீசீம்

தத்ர க்வசித் கைச்சந சிஷ்யபூதை :
காஷாயதண்டாதி ஸமர்ப்பிதம் ஸ :,
சாஸ்த்ரோக்த மார்க்கேண புந : ப்ரக்ருஹ்ய
யதாக்ரமாராதந தத்பரோபூத்."

என்பன. இந்த யதிராஜ வைபவநூல் 100 வருடங்களுக்கு முன்பு ஒரு விசை அச்சாகியுள்ளது. அந்தப் பதிப்பில் பல சொற்பிழைகள் புகுந்திருந்ததனால் இது ஸ்ரீ ராமானுஜர் காலத்தில் அவதரித்ததாயிருக்குமோவென்று சந்தேகிக்க இடமிருந்ததுபோலும். மிகச் சிறந்த வித்வத்வரேண்யரான ஸ்ரீ பரகாலஸ்வாமி ஓலை ஸ்ரீ கோசங்களைக் கொண்டு வெகு நன்றாக சோதித்து ஸுபரிஷ்க்ருதமாக அச்சிட்டு விட்டபடியால் இதில் எவ்விதமான சங்கையும் புக முடியாததாய் விட்டது. இப்பதிப்பில் **"Printed by H. Srinivasa Raghavacharya at the Srinivasa Press Mysore"** என்றுள்ளது. இந்த ஸ்ரீநிவாஸராகவாசாரியர் ஸ்வாமியை நான் நன்கு அறிவேன். இவர் பல வருடங்கள் பரகால மடத்தில் ஸ்ரீ கார்ய துரந்தரராக இருந்து சில வருடங்களுக்கு முன்பு தான் பரமபதமெய்தினார். இவரும் சிறந்த வித்வான்.

## 57. மூவாயிரப்படியின் ப்ரஸ்தாவம்

ப்ரஸ்துத யதிராஜ வைபவ நூலைப்பரகால மடம் தனிப்புத்தகமாக அச்சிட்டிருக்கவில்லை ; வடகலை ஸம்பிரதாயத்திற்கென்று கொள்ளப் பட்டிருக்கிற மூவாயிரப்படி குருபரம்பராப்ரபாவமென்று ஒன்று. அது த்ருதீய ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஸ்வாமி இயற்றியதாக வடகலை ஸம்பிரதாயஸ்தர்களுடையவும் ஸ்ரீ பரகால மடத்தினுடையவும் கொள்கை. த்ருதீய ப்ரஹ்மதந்த்ர ஸ்வாமி ஷ மடத்தின் மூல புருஷருடைய மூன்றாவது பட்டஸ்தராகக் கொள்ளப்படுகிறார். தமக்கு முற்பட்ட ஸ்வாமி, வேதாந்த தேசிகருடைய திருவடிகளில் கேட்ட சரித்திரங்களை ஆறாயிரப்படியாக ஸாதித்திருந்ததாகவும், இவர் தாம் அதைச் சுருக்கி மூவாயிரப்படியாக ஸாதித்ததாகவும் எழுதப்பட்டிருக்கின்றது. இந்த மூவாயிரப்படிகுருபரம்பராப்ரபாவநூல் வடகலை ஸம்பிரதாயஸ்தர்களால் தமிழ் லிபியிலும் தெலுங்கு லிபியிலும் பல



பதிப்புகள் ஏற்றப்பட்டுள்ளது. கடைசியாகப் பரகால ஸ்வாமியால் மடத்திலிருந்து இரண்டாயிரம் ரூபா வரையில் செலவு செய்து மிகச் சிறந்த முறையில் அச்சிடுவிக்கப்பட்டது. 204 பக்கங்கள் கொண்டது. அதில் தான் மேலே விவரித்த வடுக நம்பிபணித்த யதிராஜ வைபவம் சேர்க்கப்பட்டுள்ளது. அந்த மூவாயிரப்படி குரு பரம்பரையிலும் ஸ்ரீ ராமானுஜர் வெள்ளை சாத்துப்படி விஷயமாகவுள்ள இதிஹாஸத்தைக் காணவேணும். அதில் பக்கம் 88–89-ல்—

"கூரத்தாழ்வான் உடையவருடைய த்ரி தண்ட காஷாயாதிகளைத் தரித்துக்கொண்டு அந்த மநுஷ்யனோடே போக, பெரிய நம்பியும் கூட வெழுந்தருளினார். பின்பு நடாதூராழ்வான், முதலியாண்டான். திருக்குருகைப்பிரான், பிள்ளான் முதலானவர்கள் தேவரீர் இங்கிருக்க வொண்ணாதென்று உடையவருக்கு வெள்ளை சாத்தி மேல்நாட்டுக் கெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போக......"

என்கிற வாக்யங்கள் விளங்குகின்றன.

## 58. திவ்யஸூரிசரிதகாவ்யமுணர்த்தும் தத்துவம்

கருடவாஹந பண்டிதரியற்றியது திவ்யஸூரிசரித மஹாகாவ்யம். இந்த மஹா பண்டிதரும் வடுக நம்பியைப் போலவே ஸ்ரீ ராமானுஜருடைய திருவடிகளிலே ஸாக்ஷாத்தாக ஆச்ரயித்திருந்தவர். ஸ்ரீ ரங்கநாதனுக்கு தந்வந்தரி கைங்கரியத்திலே ஸ்ரீ ராமானுஜரால் நியமிக்கப் பட்டிருந்ததாகத் தாமே சொல்லிக் கொள்ளுகிறார். இவர் ஆழ்வார்களின் சரிதைகளை யெல்லாமெழுதி ஸ்ரீமந்நாத முனிகள் தொடங்கி ஆசாரியர்களின் வைபவங்களை யெழுதி வருகையில் ஸ்ரீ ராமானுஜருடைய வைபவத்தைப் பூர்த்தி செய்யாமல் காவியத்தை முடித்திருப்பதனால் ஸ்ரீ ராமானுஜருடைய திருவவதார ஸமாப்திக்குள்ளாகவே இவர் திருநாடு சென்றிருப்பர் போலுமென்று மஹான்கள் ஊஹிக்கிறார்கள். அதில் முடிவில் பதினெட்டாம் ஸர்க்கத்தில் (ச்லோ. 74.)

"சோளஸ்ய ச்ருதிகடு சேஷ்டிதம் யதீந்த்ர : ச்ருத்வா அத
ச்ரிதவிமலாம்பரஸ் ஸ ரங்காத் ஸ்ரீரங்கிந் அவ தவ தாம
தர்சநஞ்சேதி உக்த்வா ப்ராஸ்தித விநிவேச்ய கூரநாதம்."

இதன் பொருள் : சோழனுடைய கடினமான செய்கையை எம்பெருமானார் கேள்விப்பட்டு வெள்ளைத் திருப்பரிவட்டம் சாத்திக் கொண்டு "அழகிய மணவாளா ! உன் கோயிலையும் தர்சனத்தையும்

நீயே காத்தருள்" என்று பிரார்த்தித்துவிட்டு ஆழ்வானை நிறுத்தி விட்டுத் தாம் கோயிலில் நின்றும் புறப்பட்டருளினார் என்பதாம்.

அதற்குமேல் எழுபத்தேழாம் சுலோகத்தில்,

"ஆனைஷீத் ந்ருபஸவிதம் மஹரார்ஹபூர்ணம்
ஸ்ரீ ரங்காத் ஸஹ யதிவேஷ கூரபர்த்ரா."

யதிராஜ வேஷம் பூண்ட கூரத்தாழ்வானைப் பெரிய நம்பியுடனே ராஜஸபையில் கொண்டுசேர்த்தது ராஜஸைன்யம் என்றுரைத்தது.

## 59. வெள்ளைசாத்துப்படி வரலாற்றின் நிகமனம்

ஸ்ரீ ராமாநுஜரோ கூரத்தாழ்வானோ நூல் வரம்பைக் கடவாத மஹாசாரியர்களென்பது உலகப் பிரசித்தம். அப்படிப்பட்ட அவதார புருஷர்கள் ஒருகால் நூல்வரம்பைக் கடந்து நடந்துகொள்ள நேர்ந்ததென்றால் நேர்ந்த ஆபத்தின் கனமன்றோ ஊஹிக்கத் தக்கதாகவுள்ளது. ஸ்ரீ ராமாயணத்தில் ஆரணிய காண்டத்தில் 46-ம் ஸர்க்கத்தில் இராவணன் யதிவேஷம் பூண்டு வந்ததாகச் சொல்லிற்று. அவன் வஞ்சக புத்தியோடு வந்தவனாதலால் அஃது உற்றதே. கிஷ்கிந்தா காண்டம் மூன்றாவது ஸர்க்கத்தில் ராமலக்ஷ்மணர்களிடம் வந்த மாருதி யதிவேடம் பூண்டு வந்ததாகச் சொல்லிற்று. இந்த வேஷம் எதற்காகக் கொண்டது. இராவணனுக்குப் போலே வஞ்சக புத்தி இவர்க்குச் சிறிதுமில்லையே. தம்மைப் பற்றி உள்ளது உள்ளவாறு சொல்லிக் கொண்டே வந்து பணிந்திருக்கிறார். முதலில் சடபுத்தியுண்டாயிருந்தாலும் அதனால் யதிவேஷம் பூண அவசியமில்லையேயென்று வாதிக்கும் சிலர் இது ராமாயணத்தில் ப்ரக்ஷிப்தம் என்கிறார்களாம். அன்னவர்களில்பிராமாணிகர்கள்சேரமாட்டார்கள்.

## 60. ஸ்ரீ ராமாநுஜர் திருமந்திரத்தை வாரியிறைத்த கதை

ஸ்ரீ ராமாநுஜர் திருக்கோட்டியூரில் மந்த்ரத்தை அநதிகாரிகளுக்கு வாரியிறைத்தாரென்று கொண்டு சிலருடைய பழிப்பு; இதிலும் நல்ல தெளிவைப் பிறப்பிக்கிறோம். திருக்கோட்டியூர் நிகழ்ச்சியில் பலர் மாறுபடச் சொல்லி வருவதுண்டாதலால் அதைப்பற்றின தெளிவைப் பிறப்பிக்கிறோம். ஸ்ரீ பட்டர் அருளிச் செய்த கோஷ்டீநாத ஸ்துதியான முக்தக ச்லோகங்களில் "கோஷ்டீ பூர்ண குரூபஸத்திகுசலோ யாம் சச்வதாஸேதிவாந்" என்பது ஒரு சுலோகம். இதனால் ஸ்ரீ ராமாநுஜர் திருக்கோட்டியூர்நம்பி பக்சலில் அர்த்த விசேஷம் கேட்கப் பலகால் திருக்கோட்டியூர்க்கு எழுந்தருளினமை ஸ்பஷ்டமாகிறது. இங்ஙனே பலகாலெழுந்தருளி மிகமிக அருமையாக நம்பியிடமிருந்து அர்த்த விசேஷங்கள் பெற்றாரென்பதில்



யார்க்கும் விவாதமில்லை. அந்த அர்த்தத்தை ஆசார்ய நியமனத்தைக் கடந்து பலபேர்களுக்குச் சொல்லி விட்டாரென்று கொண்டு இது அஸங்கதமான வரலாறென்று சிலர் மறுப்பதுண்டு. இங்குத் தத்துவத்தைச் சுருக்கமாக வெழுதி முடிக்கிறேன். அடிக்கடி ராமாநுஜர் திருக்கோட்டியூருக்கெழுந்தருள்வது நம்பிபக்கலில் அர்த்த விசேஷம் பெறுவதற்காக என்று தெரிந்து கொண்ட அவ்வூர் விலக்ஷணாதிகாரிகள் சிலர் ஸ்வாமியிடம் விடைகொண்டு "நம்பிகளிடமிருந்து அர்த்தம் கிடைப்பது தேவரீருக்கே இவ்வளவு அருமையாம்போது அடியோங்களுக்குக் கிடைக்க ப்ரஸக்தியே கிடையாது. ஒருகால் தேவரீருக்கு நிதி கிடைத்தால் அடியோங்களை உபேக்ஷித்தருளலாகாது," என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள். அன்னவர்களின் ச்ரத்தையையும் அபிநிவேசத்தையும் நோக்கி உகந்தருளின ஸ்வாமி நம்பிபக்கலில் தாம் அர்த்தம் பெற்ற பிறகு அவர்களை மட்டும் ஸௌம்ய நாராயணன் ஸன்னிதிமேல்தளத்திலே ஏகாந்தமான விடத்திலே கோஷ்டியாக இருக்க வைத்து உபதேசித்தருளினார். ஆசார்ய ஹ்ருதயத்தில் "தாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும் இவர்க்கும் இவரடி பணிந்தவர்க்குமே இவையுள்ளது" என்ற (204) சூர்ணையின் வியாக்கியானத்தில் "பலகால் நடந்து துவண்டு கேட்ட பரமார்த்தத்தை ஓலக்கமாக வைத்து உபதேசித்தும்" என்பது மணவாளமாமுனிகளின் ஸ்ரீ ஸூக்தி. ஓலக்கமாக வைத்து உபதேசிக்கை யென்பது கண்டவர்களுக்கும் வாரியிறைப்பதன்று. "பத்ரேக்ஷிதோ வா வ்யர்த்தஸ் ஸ்யாத் யத்ருச்சாச்ருத ஏவ வா" என்கிற பிரமாணம் ஸ்ரீ ராமாநுஜர் அறியாததன்று; அவர் வியர்த்தமான காரியத்தை ஒருகாலும் செய்யார். பணம் காசு பைஸாவாக இருந்தால் வீதியில் வாரி யிறைக்கலாம். வருவார் செல்வார் கைக்கொண்டு போகலாம். சிஷ்ய வ்ருத்தி செய்து ஆதாரத்தோடு கேட்பார்க்கும் அறியவரிதான அர்த்த விசேஷத்தைத் தெருவில் போவார்க்கு வாரியிறைப்பதனால் என்ன பலனாகும்? அப்படி நடந்தது கிடையாது.

## 61. திருக்கோட்டியூரில் உடையவர் வெளியிட்டதென்ன?

எம்பெருமானார் நம்பி பக்கலில் பெற்றது என்ன? ச்ரத்தாளுக்களுக்கு அவர் உபதேசித்தது என்ன? என்பதை உள்ளபடி தெரிந்து கொள்ளாதவர்கள் "திருமந்திரத்தைச் சொல்லி விட்டார்" என்பர்கள். தெலுங்கு நாடுகளில் "ராமாநுஜுலு கோபுரமெக்கி திருமந்த்ரம் செப்பினாரு" என்பதுண்டு. இதற்கெல்லாம் நாம் ப்ராமாண்யம் கொடுப்பவர்களல்லோம். கோபுரத்தில் யாதொன்றும் நடந்ததில்லை; திருமந்த்ரம் செப்பினதுமில்லை. பொதுவாக ரஹஸ்யார்த்தம் என்கிற விவக்ஷையில் திருமந்த்ரம் என்று சொல்லுவதானால் அதை யுக்தமென்று கொள்ளலாம்.

## 62. ஸ்ரீ ராமானுஜருடைய ஸந்ந்யாஸகாரணம்

ஸ்ரீ ராமானுஜருடைய தேவியார்மேல் சில குற்றங்குறைகள் காணப்பட்டதனுல் ஆச்ரம ஸ்வீகாரம் செய்து கொள்ளலாயிற்றென்று வைபவ நூல்களிலுள்ளது. அந்த குற்றங்கள் இன்னின்னவை யென்றும் நிரூபிக்கப்பட்டுள்ளன. ஸ்வாமி ஸ்வாசார்யரான பெரிய நம்பிகளை ஸகுடும்பமாகக் காஞ்சீபுரத்தில் தமது திருமாளிகையி லெழுந்தருளப்பண்ணி வைத்து மிக்க பாரிப்புடன் அர்த்த விசேஷங்கள் கேட்டுக் கொண்டிருக்கையில் கிணற்றங்கரையில் தாம்புச் சண்டையிட் டுப் பெரியநம்பிதேவியாரை வெறுத்துரைத்தது காரணமாக நம்பிகள் ஸ்ரீ ராமானுஜரோடு சொல்லாமலே தேவியாருடன் ஊருக்கு மீண்டெழுந்தருளும்படியானது முதற்குற்றம். திருக்கச்சிநம்பிகளிடத்தில் போனகஞ்செய்த சேடம் ஸ்வீகரிக்க வேணுமென்று ஸ்வாமி குதூஹலங்கொண்டிருக்கையில் அதை நிறைவேற வொட்டாமல் செய்தது இரண்டாங் குற்றம். பசித்து வந்த வொரு ஸ்ரீ வைஷ்ணவர்க்கு ப்ரஸாதமிட நியமித்தருள, அவர்க்கு இல்லை யென்று சொல்லி, தன் உற்ருருறவினர்க்கு இட்டது மூன்ருவது குற்றம். இங்ஙனே மற்றுஞ்சில குற்றங்களுமிருக்கும். இவற்றுக்காக ஸ்ரீ ராமானுஜருடைய திருவுள்ளம் புண்பட்டது. இதில் சிலர் குத்ஸித வாதங்கள் செய்வது பிசகு. ஸந்ந்யாஸத்திற்கு ஹேது வைராக்யம். வைராக்யத்திற்கு ஹேதுக்கள் பல பல. ஸ்ரீ ராமானுஜ தேவியாரிடத்தில் சர்யாதோஷம் யாரும் எழுதியிருக்கவில்லை. ஸ்வாமி திருவுள்ளத்திற்குப் பாங்கல்லாதபடி நடந்து கொண்டதுதான் குற்றம். அதுவே வைராக்யஹேதுவாயிற்று.

## 63. ஸ்ரீ பாஷ்யாவதரணத்தில் ஆழ்வானுடைய உதவி

ஸ்வாமி ராமானுஜர்க்கு முற்பட்டவரும் மஹாஜ்ஞான நிதியுமான ஆளவந்தார் ஸ்ரீ பாஷ்யமருளிச் செய்யத் திருவுள்ளங் கொண்டிருந்தும் போதாயந வ்ருத்தி க்ரந்தத்தைக் கடாக்ஷித்து விட்டு எழுத வேணுமென்கிற விருப்பமிருந்தது. ஆனுல் அவருடைய வாழ்நாளில் அந்த விருப்பம் நிறைவேறப் பெற்றிலது. காச்மீரத்தில் ஸரஸ்வதீ பண்டாரத்திலிருந்த அந்த வ்ருத்தியை ஸேவிக்க ஸ்ரீ ராமானுஜர் கூரத்தாழ்வானுடன் அந்த தேசத்திற் கெழுந்தருளி மஹாப்ரயாஸை ஸ்ரீ கோசத்தைப் பெற்று அரைகுறையாகவே ஸ்வாமி கடாக்ஷிக்க முடிந்தது. கூரத்தாழ்வான் இரவும் பகலுமாக வாசித்துப் பூர்த்திசெய்திருந்தார். ஸ்ரீ கோசம் திடீரென்று வாங்கி உள்ளே சேமிக்கப்பட்டுவிட்டது. அப்போது பூர்த்தியாக ஸேவிக்க ப்ராப்தமாகவில்லையே யென்று ஸ்வாமி திருவுள்ளம்நொந்திருந்தார். கூரத்தாழ்வான் வ்ருத்தியைத் தரித்துக் கொண்டிருப்பதறிந்து உள்ளம்



பூரித்தார். பிறகு ஸ்வஸ்தானம் சேர்ந்து ஸ்ரீ பாஷ்ய மிட்டருளத் தொடங்கும்போது ஆழ்வானைப் பட்டோலை கொள்ளும்படி நியமித்து "நீர் வ்ருத்தி க்ரந்தத்தைப் பூர்த்தியாகப் பார்த்தவராகையாலே நான் சொல்லி வருவது எங்கேனும் தவறுதலாக உமக்குத் தோன்றினுல் அங்கு உத்போதனம் செய்யவேணும்" என்று கோரினுர்ஸ்வாமி. ஆனுல் ஆழ்வான் அதற்கு இசையவில்லை. திருத்திக் கொடுக்கவுமில்லை. திருத்திக்கொடுத்திருந்தால் அது ஆசார்யாஜ்ஞாநுவர்த்தனத்தில் சேருமேயன்றி அபசாரமாக வழியில்லை. ஸ்வாமி திருமாலையாண்டானிடம் திருவாய்மொழிப் பொருள் கேட்டபோது திருத்திக் கொடுத்தது அபலபிக்கமுடியாதபடியுள்ளது. உபபத்திகாட்டினபடி அது. அதைப்பற்றின விளக்கம் மேலே ஆகும்.

## 64. ஆழ்வான் பரமபதிக்கையில் உடையவர் சோகித்தது

பெரியாழ்வார் திருமொழியில் (3—8—4) "ஒரு மகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால், திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால் தான் கொண்டு போனுன்" என்ற பாசுரத்தின் வியாக்கியானத்தில் அருளிச் செய்திருப்பதாவது, "ஆழ்வான் திருநாட்டுக் கெழுந்தருளினபோது உடையவர் விச்லேஷம் பொறுக்கமாட்டாமல், 'ஒருமகள் தன்னையுடையேன்' என்றும் 'உலகம் நிறைந்த புகழால் திருமகள் போல வளர்த்தேன்' என்றும் 'செங்கண்மால் தான் கொண்டு போனுன்' என்றும் அருளிச் செய்தாரென்று ப்ரஸித்தமிறே" என்று. இப்பாசுரத்தை யருளிச்செய்தாரென்னுதே பாசுரத்தை மூன்று கண்டமாகப் பிரித்து என்றும், என்றும், என்றும் அருளிச் செய்தாரென்றிருப்பதன் மருமமுணரவேணும்; பாசுரத்தைப் பூர்த்தியாகச் சொல்லமாட்டாமல் இடையிடையே நிறுத்தி விக்கினுரென்பது காட்டப்பட்டது. ஆழ்வான் பரமபதித்த செய்தியை குருபரம்பராப்ரபாவாதிகளில் ஸேவிக்கும்போது இற்றைக்கும் கல்நெஞ்சினரும் கண்ணநீர் பெருக நிற்கின்ருர்கள். மொழியைக் கடக்கும் பெரும்புகழாளரான ஆழ்வானுடைய வியோகத்திலே எம்பெருமானுர் எத்தனை விரக்தாக்ரேஸரரா யிருந்தாலும் சைதந்ய கார்யமின்றிக்கே யொழிய எப்படி முடியும்: *ஸமுத்ர இவ காம்பீர்யே* என்னப்பட்ட சக்ரவர்த்தி திருமகனுரும் ஸீதாவியோகத்திலே பட்டபாடுகளை யெழுதிவைத்த வான்மீகி முனிவர் ஒரு மஹா கவியினுல் "வல்மீகஜந்ம முநிரேவ கடோரசேதா:" என்று பழிக்கப்பட்டார். "வைக்லப்யம் மம தாவத் ஈத்ருச மஹோ ஸ்நேஹாத் அரண் யௌகஸ:" என்று சகுந்தலைக்காக கண்வர் அழுதபடியன்றிது. இதில் ஏச்சாகப் பேசுமவர்கள் அவைஷ்ணவர்கள்.

## 65. ஸ்ரீ ராமாநுஜர் தீர்த்தக்குடம்சுமந்தது

“சதுச்சாஸ்த்ர பண்டிதரான ராமாநுஜர் தேவப்பெருமாளுக்குத் தண்ணீர்க்குடம் சுமந்து வந்தாரென்ருல் இது நம்பத்தகுமா?” என்கிருர் சிலர். ஸ்வாமி தேசிகன் யதிராஜ ஸப்ததியில் “தத்தம் யேந தயாஸுதாம்புநிதிநா பீத்வா விசுத்தம் பய: காலே ந: கரிசைலக்ருஷ்ணஜலத: காங்க்ஷாதிகம் வர்ஷதி” என்கிற சுலோகத்தில் இவ்விதிஹாஸத்தைப் பொறித்து வைத்தார். இது பூர்வாசார்ய ஸம்பிரதாய நூல்களிலிருந்தும் கர்ண பரம்பரையாகவும் தேசிகனுல் கிரஹிக்கப்பட்டதென்பதில் ஐயுறவேண்டா.

## 66. யாதவப்ரகாசர் உடையவரடிபணிந்தது

யாதவப்ரகாசர் பிறகு ஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்து உய்ந்தாரென்கிற இதிஹாஸமும் ஸப்ததியில் “ஸ்வபலாத் உத்த்ருத யாதவப்ரகாச:” என்பதனுல் பொறிக்கப்பட்டது. இதை ஸ்ரீ வைஷ்ணவர்களுங்கூட அனேகர் இசைவதில்லை. இதுவும் தேசிகனுல் பூர்வாசார்ய நூல்களிலிருந்தே கொள்ளப்பட்டது.

## 67. உடையவர்க்குத் திருப்பாவை ஜீயரென்கிற திருநாமம்

ஸ்வாமி ராமாநுஜர் கிடாம்பியாச்சானைப் பாசகராகக் கொள்வதற்குமுன்பு பிக்ஷை செய்தருளுங் காலத்தில் திருப்பாவை யநுஸந்தானம் செய்து போந்தபடியினுல் திருப்பாவை ஜீயரென்று திருநாமம் பெற்ருரென்கிற ஐதிஹ்யத்தை யதிராஜ ஸப்ததியிலேயே “லிப்ஸே லக்ஷ்மண யோகிந: பதயுகம்” என்கிற சுலோகத்தில் பூர்வார்த்தத்திலிட்ட திருவடி விசேஷணத்தினுலும், உத்தரார்த்தத்திலிட்ட பூமி விசேஷணத்தினுலும் வெகு அற்புதமாகக் காட்டியருளினுர். இதன் விவரணம் மற்ருேரிடத்தில் விரிவாகக் காணலாகும்.

## 68. ஸ்ரீ ராமாநுஜ ஸம்பந்த ஸம்பந்திகளுக்கும் முக்தி

ஸ்ரீ ராமாநுஜருடைய ஸம்பந்த ஸம்பந்த ஸம்பந்திகளுக்கெல்லாம் [ஸாக்ஷாத்பரம்பரா விபாகமின்றிக்கே] முக்தி ப்ராப்தியுண்டென்னுமர்த்தத்தை தேசிகன் தத்வடீகையில் “விநத விவித பூதவ்ராத ரக்ஷை கதீக்ஷே” என்றவிடத்து வியாக்கியானத்தில், ஸாமாந்யமாகவும், ந்யாஸதிலகத்தில் “உக்த்யா தநஞ்ஜய...ச்ருத்வா வரம் தததுபந்த மதாவலிப்தே நித்யம் ப்ரஸீத பகவந் மயி ரங்கநாத!” என்கிற சுலோகத்திலும் ஸ்பஷ்டமாகவும் பொறித்துவைத்தார்.



## 69. எம்பெருமானுர்க்கு ஆசார்யர்கள் பலர்

ஸ்ரீ ராமாநுஜர் திருமாலை யாண்டான் பாடே திருவாய்மொழிப் பொருள் கேட்டாரென்றும், திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே ரஹஸ்யார்த்தங்கள் சிக்ஷித்தாரென்றும், ஆளவந்தாராழ்வார் ஸ்ரீபாதத்திலே அருளிச் செயலும் நல்வார்த்தைகளும் அதிகரித்தாரென்றும் திருமலை நம்பி பக்கலிலே ஸ்ரீ ராமாயணம் கேட்டாரென்றும் குருபரம்பரா ஸாரத்திலே தேசிகன் எழுதி வைத்திருப்பதுகொண்டுமறியலாம். இதில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு விவாதமில்லை.

## 70: ஸ்ரீ ராமாநுஜர் தம்மை ஏகலவ்யனுக ஸாதித்தது

திருமாலையாண்டான் திருவடிகளில் பகவத்விஷய மதிகரிக்கும் நாளிலே ஸ்வாமி ராமாநுஜர் பலபல விடங்களில் இப்படி அர்த்தமானுலோவென்று ஸாதித்துத் தாம் வேறுவிதமாக நிர்வஹிப்பரென்றும், அப்போது ஆண்டான் ‘இது விச்வாமித்ர ஸ்ருஷ்டி; ஆளவந்தாரருளிச்செய்ய நான் கேட்டதில்லை’ என்று ஸாதிப்பரென்றும், அப்போது ஸ்வாமி ராமாநுஜர் ‘த்ரோணுசார்யருக்கு ஏகலவ்யன்போலே ஆளவந்தார்க்கு நான்’ என்று அருளிச்செய்வரென்றும் பூர்வாசார்ய ஸம்பிரதாய நூல்களிலுள்ளது. இதைச் சில வைணவர்கள் ஏற்றுக்கொள்ளாததோடு ஏசுவதுமுண்டு. இவ்வைதிஹ்யத்தை தேசிகன் கீதா பாஷ்யோபக்ரமத்திலுள்ள *யத்பதாம்போருஹ* ச்லோக வியாக்யானத்தில் “த்ரோணுசார்யஸ்ய ஏகலவ்ய இவ யாமுநாசார்யஸ்ய அஹம்–இத்யபிப்ராயேண த்யாந சப்த:” என்று ஸ்பஷ்டமாக எழுதிவைத்தார்.

## 71. ஈடுமுப்பத்தாருயிரப்படி விவரணமொன்று

திருவாய்மொழியில் *கேசவன்தமரில் *விட்டிலங்கு செஞ்சோதியென்கிற பாசுரத்தின் ஈடு முப்பத்தாருயிரப்படி அவதாரிகையில் காணும் ஸ்ரீஸூக்திகளிவை—

> “திருமாலையாண்டானேடே எம்பெருமானுர் திருவாய்மொழி கேட்டருளுகிறநாளிலே பாட்டுக்கள்தோறும் சில வார்த்தைகளருளிச் செய்து இது அர்த்தமானுலோ வென்ருல் ‘இது விச்வாமித்ரஸ்ருஷ்டி; ஆளவந்தாரருளிச் செய்யக் கேட்டறியேன்’ என்று பணிக்குமா மாண்டான். ஆண்டான் ‘இப்பாட்டுக்கு விச்வாமித்ர ஸ்ருஷ்டி வேண்டாவாயிருந்ததீ!’ என்ன, இப்பாட்டுக்குத் தன் அவயவ ஸௌந்தர்யத்தாலே என்னைத் தனக்காக்கினுன் என்றருளிச் செய்தருளினுராம். அதுவுங்கிடக்க பட்டரருளிச் செய்வ

> தொன்றுண்டு; 'ஆழ்வாரையும் ஆழ்வார் பரிகரத்தையும் விஷயீகரித்து அத்தாலே திருமேனியிற் பிறந்த ஔஜ்ஜ்வல்யத்தைச் சொல்லுகிறது"......ஆக இவை ஈட்டு ஸ்ரீஸூக்திகள்.

இந்த ஸ்ரீஸூக்திகளின் தாற்பரியம் ஸாமான்ய ஜனங்கள் அவகாஹித்துக் கொள்ள முடியாததாலால் நம்முடைய திவ்யார்த்த தீபிகையுரையில் மிகத் தெளிவாக விவரித்துரைக்கப்பட்டுள்ளது. அது நிற்க.

## 72. கபந்தரக்ஷையின் அவலக்ஷணம்

மேலே குறித்த ஈட்டு ஸ்ரீஸூக்திகளைப்பற்றி நூதன தேசிக நாமதாரியொருவர் கபந்தரக்ஷையில் எழுதியிருப்பவை பாரீர்.

> "இங்கோர் ஐதிஹ்ய மீட்டிலுள்ளது; திருமாலையாண்டான் பக்கல் எம்பெருமானுர் திருவாய் மொழியின் பொருளைக் கேட்டு வரும்போது பாட்டுக்கள் தோறுமே இது அர்த்தமானுலோ? என்றவாறு விண்ணப்பம் செய்வராம்; அவரும் 'இது விச்வாமித்ரஸ்ருஷ்டி, ஆளவந்தாரருளிச் செய்யக் கேட்டறியேன்' என்பராம். அவ்வாண்டான் இங்கே 'இப்பாட்டுக்கு விச்வாமித்ரஸ்ருஷ்டி வேண்டுவதில்லை போலும்' என்ருராம். தன் ஸௌந்தர்யத்தாலே ஆழ்வாரைத் தனக்காக்கினது இங்கு கூறப்படுமென்று அங்கே அருளிச் செய்தது. இதில் ஆளவந்தார் அருளினதும் எம்பெருமானுர் அருளினதும் ஒன்றே யாயிற்றென்பர் சிலர்; எம்பெருமான் மேவுந் தன்மையாக்கினதைக் கண்டு மகிழ்ந்து ஏத்துகிருரென்று ஆளவந்தார் அருளினதாகவும், மேவச் செய்தது ஸௌந்தர்யத்தாலே யென்பதற்கு இப்பாசுரமென்று எம்பெருமானுர் அருளினதாகவும் சிலர் கொள்வர். எந்த அழகைக் கெண்டு மேவச் செய்தானே அவ் அழகை யெடுத்துரைக்கிருரென்ருல் எல்லாம் சொன்னதாம். ஆக எல்லா மொன்றே. இங்கே விச்வாமித்ர ஸ்ருஷ்டி எம்பெருமானுரை விட்டு பட்டரிடம் நின்றது. ஆண்டான் எழுந்தருளியிருந்தால் அருளியிருப்பர்."...என்பன. (இவை கபந்தரக்ஷைக் கடுமொழிகள்)

இந்த வாக்ய ராசியில் 'என்பர் சிலர்; சிலர் கொள்வர்' என்பவற்றில் விவக்ஷிதமானதை அவராவது அறிந்து கொண்டிருப்பரா? என்பதை விவேகிகள் தாம் உணர வேணும். *ஸ்வயமபிலிகிதம் ஸ்வயம் நஜாநாதிக்கு இதுதான் ப்ரதமலக்ஷ்யம். இது எப்படியாவது கிட்-



கட்டும். "இங்கே விச்வாமித்ரஸ்ருஷ்டி எம்பெருமானுரை விட்டு பட்டரிடம் நின்றது," என்ற வார்த்தை விரலுக்குத் தகாத வீக்கமெனத் தகும். மேலே "ஆண்டான் எழுந்தருளி யிருந்தால் அருளியிருப்பர்" என்றதற்குத்தான் என்ன அர்த்தமோ? எம்பெருமானுர் திருமாலையாண்டான் பக்கலில் திருவாய்மொழி கேட்டதில்லை யென்கிருரா இவர்? அல்லது, திருவாய்மொழிப் பொருள் கேட்கும்போது இது விச்வாமித்ர ஸ்ருஷ்டியென்று ஆண்டான் சொல்லும்படியாக நடந்ததில்லை யென்கிருரா? எதுவும் சொல்லப் போகாதிவர்க்கு. திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழி கேட்டதை வேதாந்தவாசிரியர் தமது குருபரம்பராஸாரத்தில் பொறித்து வைத் திருக்கையாலே அது சொல்லப் போகாது. ஆண்டான் விச்வாமித்ர ஸ்ருஷ்டி யென்னும்படியாக வொன்றும் நடந்ததில்லை யென்னில், இதுவும் வேதாந்தாசார்ய ஸூக்தி விசேஷமறியாமையினு லத்தனை. அந்த ஸூக்தி விசேஷமாவது கீதாபாஷ்ய தாத்பர்ய சந்திரிகை ஸாதிக்குமவர் *யத்பதாம்போருஹ ச்லோகத்தை விவரிக்குமிடத்துப் பணித்திருப்பதைக் கீழே காட்டினேம். "த்ரோணுசார்யஸ்ய ஏகலவ்ய இவாஹம்" இத்யாதி. அது ஐதிஹ்யத்தையுட்கொண்டது.

## 73. திருமாலையாண்டானைதிஹ்யம்

பின்பழகிய பெருமாளருளிச் செய்த ஆருயிரப்படி. குருபரம்பரா ப்ரபாவத்தில் எம்பெருமானுர் திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழி கேட்கிற செய்தியை எழுதி வருமிடத்து,

> "பின்னையும் திருவாய்மொழி தொடங்கி நடவாநிற்கச் செய்தே மீண்டும் ஓர் அர்த்த ப்ரஸ்தாவத்திலே ஆண்டான் ப்ரதிபாதித்த அர்த்தங்கேட்டு 'ஆளவந்தார் இப்படி யருளிச் செய்யார்' என்று உடையவர் விண்ணப்பஞ் செய்ய, ஆண்டானும் 'நீர் ஆளவந்தாரைக் கண்ணிலும் காணுதிருக்க, இப்படியருளிச் செய்யாரென்கை யாவதென்?' என்று கேட்டருள, உடையவரும், 'நான் ஆளவந்தாருக்கு ஏகலவ்யனன்ருே' என்று விண்ணப்பஞ்செய்ய, ஆண்டானும் 'திருக்கோட்டியூர் நம்பி நமக்கு உரைத்தது ஒத்திருந்தது; இதுவும் ஒரு திருவவதாரம்; ஆளவந்தார் பக்கல் கேளாத அர்த்தமெல்லாம் இங்கே கேட்கப்பெற்ருேம்' என்று இவரைத் தெண்டனிட்டருளினர்."

என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. இதுவும் ஒரு காலக்ஷேப க்ரந்த மாலையாலே தேசிகன் தாம் இதை குருமுகமாக க்ரஹித்தோ ஆப்தோபதேசத்தாலறிந்தோ இது விச்வஸநீயமான ஐதிஹ்யமென்று உலகுக்கு உணர்த்த வேண்டியே இதை ஸம்ஸ்க்ருதத்தி

லெழுதிவைத்தார். விச்வாமித்ர ஸ்ருஷ்டி ப்ரஸ்தாவ முண்டாகாதிருந்தால் "ஏகலவ்யோஹம்" என்று ஸ்வாமி ஸாதிக்க ப்ரஸக்தியேயில்லையாம். ஆக கபந்தரக்ஷையில் எழுதியிருப்பது வெறுக்கத்தக்கதென்று முடிந்தது. தமிழோடு ஸம்ஸ்க்ருதத்தோடு வாசியறஎல்லாவற்றிலும் இவருடையது விபரீத வுணர்ச்சியே யென்பதற்கு நாம் காட்டியுள்ள ஸாக்ஷியங்கள் அபரிமிதம்.

## 74. திருமுடி ஸம்பந்தமும் திருவடி ஸம்பந்தமும்

ஸ்ரீ ராமாநுஜர்க்கு முற்பட்ட ஆசாரியர்கள் அவருடைய திருமுடி ஸம்பந்தத்தினுலும், பிற்பட்ட ஆசாரியர்கள் அவருடைய திருவடி ஸம்பந்தத்தினுலும் உத்தீர்ணரானுர்கள் என்கிற ஐதிஹ்யம் பூர்வாசார்ய ஸம்பிரதாய நூல்களிலுள்ளது. இதை ஏகதேசிகள் அஸங்கதமென்று சொல்லி வருகிருர்கள். தேசிகன் இவ்வைதிஹ்யத்தை ந்யாயபரிசுத்தியின் உபக்ரமத்திலிட்ட "பத்யுஸ் ஸம்யமிநாம் ப்ரணம்ய சரணௌ தத்பாத கோடீரயோஸ் ஸம்பந்தே ஸமித்யமாநவிபவாந்......" என்கிற சுலோகத்தில் பொறித்து வைத்தார். இதையறியாதவர்கள் தங்களுடைய குயுக்திகளினுல் இதைப் பழிக்கின்றனர். அடுத்தபடி காண்மின்.

## 75. கூரத்தில் நடந்ததோர் இதிஹாஸம்

காஞ்சீபுரியில் ஸ்ரீ உ. வே. அய்யா. க்ருஷ்ணஸாமி தாதாசாரியரென்பவரை [வைகுண்டவாஸியை]ப் பலருமறிவர். இவர் ஸம்ப்ரதாய நிஷ்ணுதர். இவர் ஒரு ஸமயம் கூரத்தாழ்வான் திருநக்ஷத்ரோத்ஸவம் ஸேவிக்கத் திருவவதார ஸ்தலமான 'கூரத்'திற்குச் சென்றிருந்தார். அங்குள்ள ஸ்வாமிகள் இவருடைய வருகைக்கு உகந்து ஏதாவது உபந்யாஸம் ஸாதிக்க வேணுமென்று வேண்டிக் கொண்டார்களாம். அங்கே பல ப்ரகரணங்களில் "அர்வாஞ்சோ யத்பத ஸரஸிஜத்வந்த்வ மாச்ரித்ய, பூர்வே மூர்த்நா யஸ்யாந்வயமுபகதா தேசிகா முக்திமாபு:, ஸோயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தாம் யத்ஸம்பந்தாத் அமநுத கதம் வர்ண்யதே கூரநாத:" என்கிற ச்லோக ரத்னம் (பட்டர் அருளிச் செய்தது) அநுஸந்திக்கப்பட்டு வருகிறது. அதைக் கேட்டிருந்த இந்த தாதாசாரியர் அதைத் தம்முடைய உபந்யாஸத்திற்கு விஷயமாகக் கொண்டு,

> "இந்த ச்லோகத்தில் சொல்லுவதென்னவென்ருல் எம்பெருமாஞருடைய திருமுடி ஸம்பந்தத்தினுல் முற்பட்ட ஆசாரியர்கள் உஜ்ஜீவித்தார்களென்றும், பிற்பட்ட ஆசார்யர்கள் அவருடைய திருவடி ஸம்பந்தத்தினுல் உஜ்ஜீவித்தார்களென்றும் சொல்லுகிறது. இது தப்பான ஐதிஹ்யத்தைக்கொண்டு கல்பிக்கப்பட்ட சுலோகமே யொழிய புராதனச்லோகமன்று. பிற்பட்டவர்களுக்கு பாஷ்யகாரருடைய திருவடி ஸம்பந்தத்தினுல் மோக்ஷமென்ருல் இது பொருந்தும். இதில் ஆக்ஷேபமுதிக்க வழியில்லை. முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தத்தினுல் மோக்ஷமுண்டாயிற்றென்ருல் இது அநந்விதமான வார்த்தையல்லவா? இது எப்படி பொருந்தும்? ஸ்ரீமந்நாத முனிகள், உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி போல்வார்தானே பாஷ்யகாரர்க்கு முற்பட்டவர்கள். அவர்கள் என்றைக்கோ பரமபதம் போய்ச் சேர்ந்தவர்களன்ருே? அவர்கள் காலத்தில் பாஷ்யகாரர் அவதரித்திருந்தாலன்ருே இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு நேர்ந்ததென்று சொல்ல இடமுண்டு; இவருடைய அவதாரமே நடந்திலாத ஸமயத்தில் இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு எப்படி ப்ராப்தமாகக் கூடும்? இது ஸர்வாத்மநா அஸம்பாவிதமான வார்த்தை. நீங்கள் இங்கே சொல்லி வருகிற சுலோகம் தப்பான ஐதிஹ்யத்தையே உட்கொண்டது. இதை அநுஸந்திப்பது இனி வேண்டாவென்று வேண்டுகிறேன்."



என்று அரைமணி காலம் உபந்யஸித்து அங்குள்ள யதாச்ருதக்ராஹிகளான ஸ்ரீ வைஷ்ணவர்களின் மனத்தை மிகவும் குழப்பிவிட்டார். இது காலை 11 மணிக்கு அங்கு நடந்தது. அங்குள்ளார் உடனே அடியேனுக்குச் செய்தி தெரிவித்து உடனே இவ்விடம் வந்து சேரவேணு மென்று கோரினுர்கள். விஷயத்தையும் தெரிவித்திருந்தார்கள். உடனே நான் ந்யாய பரிசுத்தி ஸ்ரீகோசத்துடன் புறப்பட்டு மாலை 4 மணிக்கு அவ்விடம் சென்று சேர்ந்தேன். ந்யாய பரிசுத்தியில் தேசிகன் எம்பெருமாஞரைப் பற்றிப் பணித்த மங்கள ச்லோகத்தில் [பத்யுஸ் ஸம்யமிநாம் ப்ரணம்ய சரணௌ தத்பாதகோடீரயோஸ் ஸம்பந்தே ஸமித்யமாநவிபவாந் தந்யாந் ததாந்யாந் குரூந்] என்றுள்ளது. இதன் பொருளாவது, ஸம்யமிநாம் பத்யு: சரணௌ ப்ரணம்ய—; தத்பாத கோடீரயோ: ஸம்பந்தே—அந்த எம்பெருமாஞருடைய திருவடி யென்ன திருமுடியென்ன இவற்றினுடைய ஸம்பந்தத்தினுல், ஸமித்யமாநவிபவாந்—பெருமை பெற்றவர்களாய், தந்யாந்—க்ருதார்த்தர்களான, குரூந் ப்ரணம்ய—ஆசாரியர்களை வணங்கியும்......ந்யாயபரிசுத்தி யென்கிற இந்த க்ரந்தம் செய்யப்படுகிறது என்கை. இதில் "தத்பாத கோடீரயோஸ் ஸம்பந்தே" என்றது உயிரான வார்த்தை. கோடீரமென்று திருமுடிக்குப் பெயர். பிற்பட்டவர்களுக்குத் திருவடி ஸம்பந்தம் போல முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்

பந்தம் உத்தாரகமென்று இதனால் நன்கு காட்டப்பட்டதாயிற்று. இந்த ச்லோகமானது "அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜ த்வந்த்வ மாச்ரித்ய" என்கிற ஆழ்வான் தனியனை யடியொற்றியே தேசிகன் பணித்தது. "யச்சோபயோஸ் ஸமோ தோஷ: பரிஹாரோபி வா ஸம:" இத்யாதி என்று பரக்கவுபந்யஸித்தேன். அவர் இவை முழுதும் கேட்டு இதற்குமேல் ஒன்றும் சொல்ல வழியில்லாமையாலே 'இப்படியன்றோ விஷயஞ் சொல்லவேணும்' என்று கொண்டாடி விட்டு அப்போது ஸாரமாகவும் ரஸமாகவும் சில வார்த்தை சொன்னார்; "ஒரு க்ஷணத்தில் தேசிகனுடைய ஸ்ரீஸூக்தியைக் கொண்டே என்னை வாய்மாளப் பண்ணின ஏற்றம் இந்த அண்ணா ஸ்வாமி யொருவர்க்குத்தான் ஏற்கும். மற்ற பேர்கள் ஏதாவது கதை சொல்லிக்கொண்டிருப்பார்களேயொழிய இப்படி ச்ருங்க க்ராஹிகயா ப்ரமாணமெடுத்துக்காட்ட, அதிலும் தேசிக ஸூக்தி யையே யெடுத்துக்காட்ட சக்தரல்லர். எங்கடவர்கள் எதையும் ஆழ்ந்து பாராமல் "விதததைதிஹ்ய ஸஹஸ்ரவர்ணநோ" என்று உபாலம்பம் செய்து போனார்கள். வாயெடுத்ததற்கெல்லாம் பின் புள்ளாரான எங்கடவர்கள் அதையே சொல்லி வருகிறார்கள். நானும் தப்பான ஐதிஹ்யமென்றே கருதிப் பல பேசிவிட்டேன், ஆழ்வானே க்ஷமித்தருளவேணும்" என்று முடித்தார்.

## 76. திருமழிசைப்பிரானைதிஹ்யப்ராமாண்யம்

நாற்பதைம்பது வருடங்களுக்கு முன்பிருந்தவொரு வித்வான் காஞ்சீபுரத்தில் ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் தையில் மகத்தன்று கண்டருளும் பைந்நாகம் பாய்சுருட்டி யுத்ஸவத்தைப் பழித்துக் கொண்டிருந்தார். அசல மூர்த்தியான அர்ச்சாவதாரப் பெருமாள் திருமழிசைப்பிரானைப் பின்சென்று தானும் எழுந்து போனாரென்றும், அவர் மீண்டவாறே தானும் மீண்டாரென்றும் கதை சொல்லுவதும், அதை ஒரு உத்ஸவமாக நடத்திக்காட்டுவதும் பரிஹாஸ்யமென்று பழித்துக்கொண்டிருந்தார். தேசிகர் ஸாதித்த வேகாஸேது ஸ்தோத்ரமென்கிற ஸ்ரீயதோக்தகாரி ஸ்தோத்ரத்தில் ஆறும் சுலோகத்தில் இவ்வைதிஹ்யம் வெகு ஸமத்காரமாக அநுஸந்திக்கப் பட்டுள்ளது காணும் என்று காட்டியும்கூட "அஸங்கதமான ஐதிஹ்யத்தை யார் எழுதிவைத்தால் தானென்ன? அசலமூர்த்தி எப்படி வெளிக்கிளம்ப முடியுமென்பதை ஆலோசியாமல் யார் எழுதிவைத்தாலென்ன?" என்று சொல்லிக்கொண்டே வர்த்திய காலத்தைக் கழித்தார். அவர் தொலையட்டும்; இவ்வைதிஹ்யத்தை தேசிகன் பொறித்து வைத்திருக்குமழகைக் காணீர்; "ப்ரத்யாதிசந்தி பவஸஞ்சரணம் ப்ரஜாநாம் பக்தாநுகந்துரிஹ யஸ்ய கதாகதாநி" என்பது. இதன் கருத்தாவது, யதோக்தகாரி யெம்



பெருமான் பக்தனைப் பின்சென்று, போவதும் வருவதுமான ஸஞ்சாரம் செய்தருளினபடியை யநுஸந்தித்தால் அஸ்மதாதிகளுக்கு ஸம்ஸார காந்தாரத்தில் போவதுவருவதாக நேரும் ஸஞ்சாரம் தொலையுமென்கை. மஹா மேதாவிகளான பூருவர்களுக்குத் தோன்றாத அநுபபத்திகளன்றோ இக்காலத்து விமர்சகர்களுக்குத் தோன்றுகின்றன.

## 77. திருமங்கையாழ்வாரைதிஹ்யப்ராமாண்யம்

ஐம்பது வருடங்களுக்குமுன் திருவள்ளூரில் வாழ்ந்த திவான் பஹதூர் T. T. ரங்காசாரியரென்னும் பெரியார் வேதாந்த தீபிகைக்கு ஆசிரியராயிருந்த காலத்தில் சில நவீன ஆராய்ச்சிகளில் இறங்கி, ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் வழங்கும் ஐதிஹ்யங்களை ஆராயப் புகுந்து விப்ரதிபத்திகள் செய்யத் தொடங்கினார்; முந்துற முன்னம் திருமங்கையாழ்வார் சரித்திரத்தை விமர்சிக்கப் புகுந்து அவ்வாழ்வார் நாகப்பட்டினத்தில் ஸுவர்ணமயமாயிருந்த நைஜ பௌத்த விக்ரஹங்களை ஹரித்துக் கொண்டுவந்து ஸ்ரீ ரங்க பிராகார மண்டபாதி நிர்மாண கைங்கர்யத்தில் உபயோகித்தார் என்று குருபரம்பராப்ரபாவத்தில் எழுதப்பட்டுள்ள சரித்திரத்தை யெடுத்துக் கொண்டு "இது மிகவும் அநீதியான வரலாறு; ப்ராமாணிகர்களாய் யோக்யர்களாய்ப் பரம பக்தர்களான ஆழ்வார்கள் இப்படி அநீதி யான செயல்களைச் செய்தார்களென்று எழுதிவைப்பது நமது பரம பாவனமான மதத்திற்கு இழுக்காகும்" என்று விபுலமாக எழுதி வேதாந்ததீபிகையில் பிரசுரமும் செய்துவிட்டார். அப்போது அதைக் கண்ட நாம் 'ஒரு ப்ரதிஷ்டிதரான மஹான் இப்படி ஸஹஸா எழுதி விட்டாரே!' என்று மிக வருந்தி அவருக்கு அந்தரங்கமாக வொரு விண்ணப்ப மெழுதலானோம் (அதாவது) 'வெறுந் தமிழ் வசன நூல்களில் மட்டும் காணும் ஐதிஹ்யங்களில் தேவரீர்கள் எவ்விதமாக ஆராய்ச்சி செய்தாலும் செய்க. கூரத்தாழ்வான், பட்டர், வேதாந்த தேசிகன் போன்ற பூருவாசாரியர்களின் ச்லோகபத்தங்களாய் ஸர்வ ஸம்ப்ரதிபந்நங்களான திவ்யஸூக்திகளினால் நிர்விவாதமாக ஏற்படுகிற ஐதிஹ்யங்களிலும் விவாதப்படுவதும், ஹாஹாகாரம் செய்வதும் தேவரீரைப் போன்ற ஆஸ்திகர்களுக்குத் தகுமா? பட்டர் ஸ்ரீ ரங்கராஜ ஸ்தவத்தில், *ஜிதபாஹ்ய ஜிநாதிமணி ப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டப வப்ரகணாந் விததே பரகால கவி: ப்ரணமேமஹி தாந்* என்கிற ச்லோக ரத்நத்தில் நிஸ்ஸந்தேஹமாகப் பொறித்து வைத்த திருமங்கையாழ்வார் சரித்திரத்தை தேவரீர் அநியாயக் கதையென்று எழுதிவிட்டால் இதை ஸ்ரீ வைஷ்ணவ வுலகம் ஏற்குமா? அந்த ச்லோகம் பிற்காலத்தவர்களால் கல்பிக்கப்பட்டு பட்டர் ஸ்ரீ ஸூக்திமத்யே புகுத்தப்பட்ட

தென்று தேவரீர் திருவுள்ளமா? இவ்வளவு கம்பீரமான ச்லோகம் பட்டர் தவிர வேறொரு வ்யக்தியால் நிருமிக்க முடியுமா? ஏறக்குறைய ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு அவதரித்த இந்த ச்லோகத்தைக் காற்கடைக்கொண்டு, நெஞ்சில் தோன்றினதை எழுதி வெளியிட்டு விடுவது யுக்தமாகுமா?......’ இத்யாதிகள் விஜ்ஞாபனம் செய்திருந்தேன். உண்மையில் அவர் பரமாஸ்திகராகையாலே அந்த பட்டர் ஸ்ரீஸூக்தியிலே அத்யந்த ப்ராவண்யங்கொண்டு தாம் அவஸரப்பட்டு எழுதினதற்கு மஹத்தான அநுதாபமுங் கொண்டு எனக்கு பதில் எழுதினார்—“ஸ்காலித்யே ஸாஸிதாரம்” என்ற முறையை தேவரீர் கைக்கொண்டு சிக்ஷித்ததற்கு மிகவும் க்ருதஜ்ஞனாகிறேன் இத்யாதி. நேரிலும் காஞ்சிக்கு வந்து நன்றி பாராட்டினார்.

இங்ஙனே பல ஐதிஹ்யங்கள் நம் பூர்வாசார்யர்களின் ச்லோக ரூபங்களான ஸ்ரீ ஸூக்திகளில் திகழ்கின்றன. அவற்றைப் பாராமலே பலர் ‘அந்த ஐதிஹ்யம் தவறு; இந்த ஐதிஹ்யம் புளுகு;’ என்றிப்படி ப்ரஸங்க மேடைகளிற் பேசப் புறப்பட்டுவிடுகிறார்கள், எழுதியும் வைக்கிறார்கள்.

## கலியனுக்கும் கண்ணனுக்கும் 12 வகைகளாலொற்றுமை

### 78. ஸூர்யத்வாத்

[ஸூர்யத்வாத்] ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் கண்ணபிரானுடைய திருவவதாரத்தைக் கூறுகின்ற பராசரமஹரிஷி கண்ணனவதரித்தானென்று சொல்லவில்லை; *ததோகிலஜகத்பத்மபோதாய அச்யுதபாநுநா, தேவகீபூர்வஸந்த்யாயாம் ஆவிர்ப்பூதம் மஹாத்மநா* என்கிற ச்லோகம் க்ருஷ்ணவதாரத்தைக் கூறுமது. இதில், தேவகியாகிற பூர்வஸந்தியையிலே க்ருஷ்ணஸூரியன் ஆவிர்ப்பவித்தான் என்றது. இதனால் க்ருஷ்ணன் ஸூர்யனென்னுமிடம் ஸித்தித்தது. கலியனும் ஸூர்யனாகவே பேசப்பட்டிருப்பதை “கலயாமி கலித்வம்ஸம் கவிம் லோகதிவாகரம்” என்கிற அவருடைய ஸ்துதிபத்யத்தினால் உணரலாம். ஆக இருவரும் ஸூர்யர்களென்னு மத்தாலே ஸாம்யம்.

### 79. ஸூசிதத்வாத்

[ஸூசிதத்வாத்] ஸூசிப்பிக்கப்பட்டபடியாலே என்பது இதன் பொருள். கண்ணனுடைய அவதாரமும் கலியனுடைய அவதாரமும் இவர்கள் அவதரிப்பதற்கு வெகுநாள் முன்னமே ஸூசிப்பிக்கப் பட்டிருந்தது. எங்ஙனே யென்னில்; கண்ணனுடைய திருத்தாயாரான தேவகிப்பிராட்டி கம்ஸனுக்கு உடன்பிறந்தவள். அக்கம்ஸன் தேவகிக்கு மிகச் சிறப்பாக விவாஹமஹோத்ஸவத்தை நடத்தி



வைத்துப் பரமப்ரீதியுடன் தம்பதிகளை ரதத்தில் வீற்றிருக்கச் செய்து அதனைத் தானே ஓட்டிக்கொண்டு போகையில் ஆகாசவாணியொன்று செவிப்பட்டது! ‘இத் தேவகியின் எட்டாவது குழந்தையினால் உனக்கு ம்ருத்யு விளையும்’ என்று. அந்த வாக்கு அப்படியே பலித்தது. இதனால் ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய திருவவதாரம் முன்னமே ஸூசிதமாயிற்றென்பது விளங்கிற்று. இது போலவே திருமங்கையாழ்வாருடைய திருவவதாரமும் முன்னமே ஸூசிதமாகியுள்ளது. திருவாய்மொழியில் (5—2—1) “கலியுங் கெடும் கண்டு கொண்மின்” என்கிற பாசுரத்தை ஆகாசவாணி யென்றே கொள்க. தவறாமல் பலிப்பது ஆகாசவாணி. இந்தப் பாசுரமும் தவறாமல் பலித்திருக்கின்றது. ஆசார்யஹ்ருதயத்தில் “கலியுங் கெடும் போலே ஸூசிதம்” என்றவிடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் “இவர் தாம் மயர்வற மதிநலம் பெற்றவராகையாலே ‘கலியுங் கெடும்’ என்று—திருமங்கையாழ்வார், உடையவர்போல்வார் அவதரித்துக் கலியுகஸ்வபாவமும் கழியுமென்று மேல் வரும் அம்சத்தை தர்சித்து அருளிச்செய்தாப்போலே” என்று திருவாய்மலர்ந்தருளியுள்ள திவ்யஸூக்தி இங்கே அநுஸந்தேயம். கண்ணன் கம்ஸவதம் செய்தவன்; இவ்வாழ்வார் கலிபுருஷவதம் செய்தவர்.

### 80. அபஹ்ருதிகரணாத்

[அபஹ்ருதிகரணாத்] கண்ணன் கள்வனென்று ப்ரஸித்தி பெற்றதுபோல இவ்வாழ்வாரும் கள்ளரென்று ப்ரஸித்திபெற்றவர். ‘வெண்ணெய் களவுசெய்தான், பெண்களைக் களவுசெய்தான்’ என்று ஸ்ரீ க்ருஷ்ண சரித்திரங்களிலே வாசிக்கிறோம். இவருடைய சரித்திரத்திலும் திருவரங்கம் பெரியகோயிலில் கோபுர ப்ராகார மண்டபாதி நிர்மாணத்திற்காகப் பலபல களவுகள் செய்த செய்திகளை வாசிக்கின்றோம். ஆக இத்தகைய கள்வத்தினாலும் ஸாம்யம்.

### 81. கோகுலோத்தாரகத்வாத்

[கோகுலோத்தாரகத்வாத்] “ஆயர்பாடிக்கணிவிளக்கே” என்றும், “ஆயர்குலத்தினில் தோன்று மணிவிளக்கை” என்றும் சொல்லுகிறபடியே கண்ணன் திருவாய்ப்பாடியில் திருவவதரித்துக் கோகுலத்தை உத்தரிப்பித்தமை பிரஸித்தம். இவ்வாழ்வாரும் கோகுலோத்தாரணம் செய்ததுண்டு; எங்ஙனே யென்னில்; ‘ந்ருபசு:’ என்று ஆளவந்தாரும், “வ்ருத்த்யா பசுர் நரவபு:” என்று மணவாள மாமுனிகளும் அருளிச்செய்தபடி நாமெல்லாரும் பசுக்களேயன்றோ. “ஜ்ஞாநேந ஹீந: பசுபிஸ் ஸமாந:” என்றும் ப்ரஸித்தமாகவுள்ளது. ஞானமும் நன்னடத்தையும் ஒன்றுமின்றிக்கே யிருப்பதனால் கோக்களாயிருக்கின்ற நம்முடைய குலத்திலே ஆழ்வார் வந்து அவதரித்து உத்தாரகராயினர்.

## 82. பத்தத்வாத்

[பத்தத்வாத்] கண்ணன் "மத்துறு கடை வெண்ணெய் களவினிலுரவிடையாப் புண்டு" என்றும் "கண்ணிக் குறுங்கயிற்ருல் கட்டுண்டான்" என்றும் சொல்லுகிறபடியே கட்டுண்டமை ப்ரஸித்தம். இவ்வாழ்வாரும், பகவதாராதனத்திற்காட்டிலும் பரமபாவனமான பாகவதாராதனத்தில் ஊன்றியிருந்த காலத்தில் தாம் அரசனுக்குச் செலுத்தவேண்டிய பகுதிப்பொருளுமுட்படச் செல்வம் முழுதையும் செலவிட்டுவர, அச்செய்தியைச் சிலர் சொல்லக்கேட்ட கொற்றவன் கோபங் கொண்டு இவரை ஒரு தேவாலயத்தில் சிறைவைக்கச் செய்தனனென்பது இவ்வாழ்வாருடைய சரித்திரத்தில் பிரஸித்தம். ஆக, கட்டுண்டமையினுல் இருவர்க்கும் ஸாம்யம்.

## 83. சாஸ்த்ரதத்வாத்

[சாஸ்த்ரதத்வாத்] சேதநர்களுக்கு உஜ்ஜீவநோபாயமான சாஸ்திரத்தைக் கொடுத்ததனுலே என்று பொருள். கண்ணபிரான் "அறிவினுல் குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய, நெறியெல்லாமெடுத்துரைத்த நிறைஞானத் தொருமூர்த்தி" என்கிறபடியே ஸகலார்த்தப்ரகாசகமாய் ஸகலசேதநோஜ்ஜீவநஸாதனமான கீதா சாஸ்த்ரத்தை யருளிச்செய்தான். திருமங்கையாழ்வாரும் "நெஞ்சுக்கிருள் கடிதீபம் அடங்காநெடும்பிறவி நஞ்சுக்கு நல்லவமுதம், தமிழநன்னூல் துறைகளஞ்சுக்கிலக்கிய மாரணசாரம், பரசமயப்பஞ்சுக்கனலின் பொறி பரகாலன் பனுவல்களே" என்கிறபடியே கீதா சாஸ்த்ரத்திற்காட்டிலும் பரமோத்க்ருஷ்டமான திவ்யப்ரபந்த மஹா சாஸ்த்ரத்தை யுபகரித்தருளினுர். கண்ணன் தந்த சாஸ்திரத்தை "கீதோப நிஷத்து" என்னுமாபோலே இதையும் "பொங்கு புகழ் மங்கையர்கோனீந்த மறையாயிரம்" என்பர்கள். ஆக, சாஸ்த்ர ப்ரதாநத்தாலே இருவர்க்கும் ஸாம்யம் பொருந்தும்.

## 84. படுஜநஸஹயோகாத்

[படுஜநஸஹயோகாத்] கண்ணபிரான் "தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர்நடையிட்டுவருவான்" என்கிறபடியே "கொந்தளமாக்கிப் பரக்கழித்துக் குறும்பு செய்வானேர்மகனை தான் செய்யும் தீமைகளுக்குத் துணைவராகப் பல சதுரர்களை உடன் கொண்டிருந்தான். திருமங்கையாழ்வாரும், நீர்மேல் நடப்பான், நிழலிலொதுங்குவான், தாளூதுவான், தோலாவழக்கன் முதலான சதுரர்களைத் தமது செய்கைகளுக்குத் துணைவராகக் கொண்டிருந்தார்.



## 85. லக்ஷ்மீபதித்வாத்

[லக்ஷ்மீபதித்வாத்] கண்ணபிரான் ஸாக்ஷாத் நாராயணமூர்த்தியாதலால் லக்ஷ்மீபதியாவன். திருமங்கையாழ்வாரும் லக்ஷ்மீபதியாவர். எங்ஙனே யென்னில்: இவர் வளர்ந்து வருகையில் அந்நாட்டில் அண்ணன்கோயில் என்று வழங்குகின்ற திருவெள்ளக்குளமென்னுந் திருப்பதியில் மிகச் சிறந்ததொரு தாமரைப் பொய்கையில் தேவலோகத்து அப்ஸர ஸ்த்ரீகள் பலர் வந்து ஜலக்ரீடைசெய்து செல்ல, அவர்களுள் திருமாமகளென்பாள் தன் இச்சையால் தெய்வவடிவத்தைவிட்டு மானுடவடிவங்கொண்டு தனியே குமுதமலர் கொய்து நின்ருளாக, அங்கு அநுஷ்டாநத்திற்காக வந்த ஒரு வைஷ்ணவ வைத்யன் அவளைக் கண்டு செய்தி விசாரிக்க, அவள் "என்னேடு கூடவந்த மாதர்கள் என்னைவிட்டுப் போய்விட்டார்கள், தனியிருந்து அலைகின்ற என்னை நீர் பாதுகாத்தருளவேணும்' என்று வேண்டிக்கொள்ள, மலடனுன அம்மருத்துவன் மகிழ்ச்சியோடு அதற்கு உடன்பட்டு அம்மகளைத் தன் மாளிகைக்கு அழைத்துப் போய் மனையாள் வசம் ஒப்பித்து, குமுதமலர் கொண்டு நின்றது காரணமாகக், குமுதவல்லியென்று அப்பெண்ணுக்கு நாமமிட்டு வளர்த்து வருகையில் அக்கன்னிகைக்கு விவாஹத்துக்குரிய பிராயம் வந்தவளவிலே அவளை வளர்க்கிற அந்த வைத்தியனுக்கு 'மஹா குணவதியான இப் பெண்ணுக்கு ஏற்ற கணவன் உலகத்திலுளனே' என்ற கவலையுண்டாக, அப்பொழுது அவளுடைய ரூபலாவண்ய ஸௌந்தரியங்களையும் குணுதிசயங்களையும் சாரர்கள் திருமங்கை மன்னனிடம் கொண்டாடிக் கூற, உடனே அவர் அங்கு வந்து அந்த வைத்தியனிருக்கும் வீட்டிலே புக்கு அவனேடு ஸம்பாஷணை செய்து அப்பெண்ணின் வரலாற்றை வினவி அதைத் தந்தையார்வாயில் அறிந்த வளவில் 'இவளை எனக்குத் தாரைவார்த்துக் கொடுக்கவேணும்' என்று அவரை வணங்கிக்கேட்டார். அப்போது குமுதவல்லி குறுக்கிட்டு "திருவிலச்சினை திருமண்காப்பு முதலிய பஞ்ச ஸம்ஸ்காரமுடைய ஒரு ஸ்ரீ வைஷ்ணவர்க்கேயன்றிப் பிறர்க்கு வாழ்க்கைப்பட மாட்டேன்" என்று தன் உறுதியைத் தெரிவித்தாள். அதுகேட்ட திருமங்கை மன்னன் உடன் திருநறையூர்க்குச் சென்று அங்கு எழுந்தருளியுள்ள நம்பி என்னு மெம்பெருமானுடைய திருமுன்பே நின்று பிரார்த்தித்து அப்பிரானிடத்தில் திருவிலச்சினை பெற்றுப் பன்னிரண்டு திருமண் காப்புகளும் சாத்திக் கொண்டு விவாஹார்த்தமாக விரைவில் வந்துசேரக் கண்டு மீண்டும் குமுதவல்லி "நீர் ஓராண்டளவும் நித்தியமாக ஆயிரத்தெட்டு ஸ்ரீ வைஷ்ணவர்களை அமுதுசெய்வித்து அவர்களுடைய ஸ்ரீ பாத தீர்த்தத்தையும் போனகஞ் செய்த சேஷத்தையும் உட்கொண்டாலன்றி உம்மை நான்

பாணிக்கிரஹணஞ் செய்து கொள்ளமாட்டேன்" என்ன, அவளிடத்தில் கொண்ட ஆசையின் கனத்தால் அவர் இவ்வரிய விரதத்தைச் செய்து முடிப்பதற்கும் உடன்பட்டு அங்ஙனமே செய்வதாகச் சபதஞ் செய்து கொடுக்க, அதன்பின் இருவர்க்கும் திருமணம் நடைபெற்றது. லக்ஷ்மீபதித்வமானது பகவானுக்கு அஸாதாரணமாயிருந்தாலும் லக்ஷ்மியின் பெயரைத் தரித்திருந்த குமுதவல்லித் தாயாருக்குப் பதியென்னுங் காரணத்தினால் ஆழ்வாரும் லக்ஷ்மீபதியாயினர். ஸ்ரீ வைஷ்ணவலக்ஷ்மிக்குப் பதியென்றுங் கொள்ளலாம்.

## 86: நீலத்வாத்

[நீலத்வாத்] கண்ணபிரான் "கண்ணனென்னுங் கருந்தெய்வம்" என்றும் "கானகமெல்லாந் திரிந்து உன் கரிய திருமேனிவாட" என்றும் சொல்லுகிறபடியே நீலநிறத்தழகார்ந்தவன். திருமங்கையாழ்வாரோவென்னில் நீலனென்னுந் திருநாமமுடையவர். இராமானுச நூற்றந்தாதியில் "தண்டமிழ் செய்த நீலன் தனக்கு" என்னுமிடத்தில் நீலனென்ற சொல்லால் திருமங்கையாழ்வாரே விவக்ஷிதரென்பதறிக. குருபரம்பராப்ரபாவத்திலு முள்ளதேயிது.

## 87: நீதிமார்க்கச்யுதிமதிபஜநாத்

[நீதிமார்க்கச்யுதிமதிபஜநாத்] கண்ணபிரானுடைய சரித்திரங்களை நோக்குமிடத்து "மச்சொடுமாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடுபட்டைக் கிழித்துக் காம்பு துகிலவை கீறி நிச்சலுந் தீமைகள் செய்வாய்" என்றும் "பிறர் மக்களை மையன்மை செய்து தோளாலிட்டவரோடு திளைத்து நீ சொல்லப்படாதன செய்தாய்" என்றுமுள்ள பாசுரங்களின்படி கொடிய கடிய சேஷ்டிதங்களைச் செய்த விவன் நீதிநெறியில் நின்றும் நழுவினவனல்லவா? என்று நினைப்பதற்கு இலக்காயிருப்பன் கண்ணபிரான். திருமங்கையாழ்வாரும் அப்படியேயன்றோ. இத் தன்மையினால் ஒரு ஸாம்யம். நீதிநெறியில் நழுவினதாக நினைக்கலாமத்தனையன்றி உண்மையில் இருவரும் நீதிநெறிவழுவாதவர்களே. நமது ச்லோகத்தில் "நீதிமார்க்கச்யுதிமதிபஜநாத்" என்றது 'ச்யுதிமதிவிஷயத்வாத்' என்றபடி. கண்ணபிரானுடைய நீதிநெறிவழுவாமையை வேதாந்த தேசிகன் யாதவாப்யுதயத்தில் (4—64) "விமோஹநே வல்லவகேஹிநீநாம் நப்ரஹ்மசர்யம் பிபிதே ததீயம், ஸம்பத்ஸ்யதே பாலகஜீவநம் தத் ஸத்யேந யேநைவ ஸதாம் ஸமக்ஷம்" என்னும் ச்லோகத்தினால் தெளிவித்தார். அதாவது, பாரதப்போரில் அச்வத்தாமா பிரயோகித்த அபாண்டவாஸ்த்ரத்தினால் உத்தரையின் கருப்பிண்டம் கரிக்கட்டையாக, அப்போது கண்ணபிரான் "யதி மே ப்ரஹ்மசர்யம் ஸ்யாத் ஸத்யஞ்ச மயி திஷ்டதி, அவ்யாஹதம் மமைச்வர்யம் தேந ஜீவது பாலக:"



(நான் ப்ரஹ்மசர்யமும் ஸத்யமும் வழுவாதவனாயிருந்தேனாகில் இது உயிர்பெற்றெழுக) என்று பலருமறிய ப்ரதிஜ்ஞை செய்து நிறைவேற்றப்பெற்ற கதையினால் கண்ணன் நீதிநெறிவழுவாதவனென்பது விளங்கிற்று. திருமங்கையாழ்வார் நீதிநெறிவழுவாதவரென்பதை பட்டர் ஸ்ரீ ரங்கராஜஸ்தவதத்தில் "ஜிதபாஹ்யஜிநாதி மணிப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டபவப்ரகணாந் விததே பரகாலகவி: ப்ரணமேமஹி தாந்" என்னும் ச்லோகரத்நத்தினால் வெளியிட்டருளினர்.

## 88: அந்ததச்ச அவதாராத்

[அந்ததச்ச அவதாராத்] பகவானது விபவாவதாரங்களில் க்ருஷ்ணாவதாரமே முடிவானது. கல்கியவதாரம் பவிஷ்யத்தென்கிறார்கள். அது வந்தபோது பார்த்துக்கொள்வோம். இதுகாறும் முடிந்துள்ள அவதாரம் க்ருஷ்ணாவதாரமே. திருமங்கையாழ்வாரும் ஆழ்வார்களுக்குள் கடைப்பட்டவர். "பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ் மழிசையையனருள்மாறன் சேரலர்கோன், துய்யபட்டநாதன் அன்பர்தாள்தூளி நற்பாணன் 'நன்கலியன்', ஈதிவர்தோற்றத்து அடைவாமிங்கு" என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரமுங் காண்க. ஆக இருவரும் சரமாவதாரபூதர் என்பதனால் ஸாம்யம் பெற்றனர்.

## 89: சத்ருத்வம்ஸோத்படத்வாத்

[சத்ருத்வம்ஸோத்படத்வாத்] கண்ணபிரான் "தேனுகன் பிலம்பன் காளியனென்னும் தீப்பப்பூடுகளடங்கவுழக்கி" என்றும் "மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய, நூற்றுவரும் பட்டழிய" என்றும் சொல்லுகிறபடியே பகைவர்களையெல்லாம் வேரோடு களைந்தொழிப்பதில் பேர் பெற்றவன். ஆழ்வாரும் "அருள் மாரி அரட்டமுக்கி அடையார் சீயம்" என்றும் "ஒற்றலர் தங்களை வெல்லு மாடல்மாவலவன் கலிகன்றி" என்றும் தாமேயருளிச் செய்தபடியே புறமதத்தவர்களாகிற பகைவர்களைக் களைந்தொழித்து இதனாலேயே பரகாலனென்று பேர்பெற்றவர். ஆக இப்பன்னிரண்டு படிகளாலே கண்ணனுக்கும் கலியனுக்கும் ஒற்றுமை நிர்வஹிக்கப் பட்டதாயிற்று. இந்த 12 அர்த்தங்களைக் காட்டுவதொரு சுலோகம்—

ஸெளர்யத்வாத் ஸெளசிதத்வாத் அபஹ்ருதிகரணாத்
கோகுலோத்தாரகத்வாத்
பத்தத்வாத் சாஸ்த்ரதத்வாத்படுஜநஸஹயோகாச்ச
லக்ஷ்மீபதித்வாத்
நீலத்வாத் நீதிமார்க்கச்யுதி மதிபஜநாத் அந்ததச்சாவதாராத்
சத்ருத்வம்ஸோத்படத்வாத் கலிரிபுமுநிராட் க்ருஷ்ணதுல்யோ
விபாதி.

## 90. கோதாஸ்துதி அவதரித்த வரலாறு

கோதாஸ்துதியில் இரண்டாம்சுலோகத்தின் முடிவில் (''மௌநத்ருஹோ முகரயந்தி குணாஸ் த்வதீயா:'' என்றவிடத்து ஓர் ஐதிஹ்யம் பெரியார் கூறுவதுண்டு. இந்த ஸ்துதிநூல் தேசிகனால் ஸ்ரீவில்லிபுத்தூரிலேயிருந்து அருளிச் செய்யப்பட்டது. ஸ்வாமி அங்கு த்ரயோதசியன்று எழுந்தருளி ஒரு வீதியில் ஒரு திருமாளிகையில் தங்கியிருந்தார். அன்று ஆண்டாளுடைய திருவீதிப்புறப்பாடு நடந்து கொண்டிருக்கிறது. இவர் எழுந்தருளியிருக்கும் வீதியில் அன்று ஆண்டாள் எழுந்தருளுகிற முறை இல்லை. அன்று மஹா ப்ரதோஷமாகையால் மௌநவ்ரதத்தை ஸங்கல்பித்துக் கொண்டு திருமாளிகையிலேயே யெழுந்தருளியிருக்கையில், ஆண்டாளெழுந்தருள வேண்டிய திருவீதியில் ஏதோ அநுபபத்தி விளைய, திடீரென்று இந்த வீதியில் எழுந்தருள நேர்ந்துவிட்டது. அப்போது இவர் மஹாப்ரதோஷ ப்ரயுக்தமான மௌநவ்ரதத்தை ஸஹஸா விஸர்ஜநம் செய்தருளி இந்த ஸ்துதியை விஜ்ஞாபிக்க உபக்ரமித்தாராயிற்று. அதையே ''ஸஹஸைவ கோதே! மௌநத்ருஹோ முகரயந்தி குணாஸ் த்வதீயா:'' என்கிற அதனால் ஸூசிப்பித்தருளினபடி:

## 91. கோதாஸ்துதியில் காணும் கவித்திறமை

இவ்விஷயத்திற்கு இந்த ஸ்துதியில் பெரும்பாலும் எல்லா சுலோகங்களுமே லக்ஷ்யமாகக் கூடுமானாலும் சில சுலோகங்களைக் கொண்டு இதனையநுபவிப்போம். (''சோணாதரேபி குசயோரபி துங்கபத்ரா) என்கிற ஆறாவது சுலோகம், (த்வந்மௌலிதாமநி) என்கிற பதினாறாவது சுலோகம் ஆகிய இவ்விரண்டையும் முக்கியமாகக் கொள்வோம். ''சோணாதரேபி'' என்கிற சுலோகத்தில் சோணா, துங்கபத்ரா, ஸரஸ்வதி, விரஜா, கோதாவரி, நர்மதா என்கிற ஆறு மஹா நதிகளின் பெயர்கள் பொருளுக்குப் பொருந்த அவலீலையாகத் தொடுக்கப்பட்டிருப்பது ஓர் அற்புதம்: அதற்கு மேல், அபிசப்தத்தை ஐந்து விசை பிரயோகித்திருக்கு மழகை நோக்கும்போது சோணாஅபி துங்கபத்ரா,. துங்கபத்ரா அபி ஸரஸ்வதீ ஸரஸ்வத்யபி விரஜா; விரஜா அபி கோதா (கோதாவரி): கோதா அபி நர்மதா! என்றிங்ஙனே அனேக வாக்ய விந்யாஸம் ஸ்வாமி திருவுள்ளத்தில் விவக்ஷிதமென்று தெரியவருகின்றது.

இதர கவிகள் மஹாப்ரயாஸப் பட்டாலும் இங்ஙனே கவனம் செய்யகில்லார். இனி ''த்வந்மௌலிதாமநி விபோச் சிரஸா க்ருஹீதே'' என்கிற சுலோகத்தில் ஒரு விலக்ஷணமான



மங்கலவாத்ய முழக்கத்தை ஸ்வாமி ப்ரஸ்தாவித் தருளுகிறார். இந்த ப்ரஸ்தாவத்திற்குச் சேர இந்த சுலோகத்தில் பிரயோகிக்கப்பட்டுள்ள சப்தங்கள் யாவும் மங்கள மயமாகவே அமைந்திருக்குமழகு காணவேணும். உலகில் விவாஹ காலங்களில் பூச்சூடுதல், குழாங் கூடியுண்ணுதல், ஸந்தோஷங்களையநுபவித்தல், மங்கலவொலி மல்குதல், இனிய வுணவுகளை யுட்கொள்ளுதல், மங்கல வாத்தியங்கள் பல முழங்குதல் முதலியன நிகழ்வது முறைமை. இவையத்தனையும் இந்த ச்லோகத்தில் சொல்தொடை நயத்தில் அமைந்திருக்கின்றன. ''மௌலிதாமநி சிரஸா க்ருஹீதே'' என்பதனால் பூச்சூடுதல் பேசப்பட்டது. ஸபீதி யென்பதனால் கூடியுண்ணுதல் கூறப்பட்டது. ப்ரமோத சப்தத்தினால் ஸந்தோஷமநுபவித்தல் தெரிவிக்கப்பட்டது.'' ''மஞ்ஜுஸ்வநா,'' என்பதனால் மங்கலவொலி மல்குதல் மொழியப்பட்டது.'' ''மதுலிஹ:'' என்பதனால் இனிய உணவு அருந்துதல் இயம்பப்பட்டது. ஏற்றடியினால் மங்கல வாத்திய முழக்கம் தெரிவிக்கப்பட்டது. ஸ்வாமியினுடைய வச்யவாக்த்வப்ரபாவமிது.

## 92. கோதா ஸ்துதியில் வேதத்தின் பரிமளம்

''வல்மீகதச் ச்ரவணத:'' என்கிற ஏழாவது ச்லோகம் வேத நறு மணம் கமழ நின்றது. ''தைத்திரீய யஜுர்ப்ராஹ்மணத்தில், ''ச்ரோத்ரம் ஹ்யேதத் ப்ருதிவ்யா: யத்வல்மீக:'' என்று ஓதப்பட்டுள்ளது. இதன் பொருளாவது: நிலத்தில் தென்படும் புற்றானது பூமிதேவியின் காது என்பதாம். ஆண்டாள் பூமிப்பிராட்டியின் அம்சமாதலால் அவள் பூமியென்றே கொள்ளத் தகுதியுடையவள்; ஆகவே புற்று இவளுடைய காதாக ஆயிற்று. புற்றில் நின்றும் தோன்றிய வால்மீகி முனிவர் ஆண்டாளுடைய காதில் நின்றும் தோன்றினவரென்று சொல்வதற்கு உபபத்தி ஏற்பட்டுவிட்டது. இங்ஙனம் உமது காதில் நின்றும் தோன்றிய ஒருவர், கவியரசர் என்று உலகமெங்கும் புகழ் பெற்றிருப்பதும், அவருடைய பிரபந்தமாகிய ஸ்ரீராமாயணம் மதுரமென்று புகழ்பெற்றிருப்பதும் அபலபிக்க வொண்ணாத விஷயங்களாகும். உலகத்தில் ஒருவருடைய காதில் நின்று உண்டான வஸ்துவுக்கு இவ்வளவு அதிசயம் ஏற்படுவது அப்ரஸித்தம். உம்முடைய காதின் பெருமையோ லோகவிலக்ஷணமாயுள்ளது. காதினுடைய பெருமையே இதுவானால் திருவாக்கின் பெருமையைப்பற்றிப் பேசத்தானாவதுண்டோ? உமது திருவாயோ அரவிந்தம்; அரவிந்தத்தில் மகரந்தம் ஸ்ரவிப்பது ஸஹஜமேயாதலால், மகரந்தம் போன்ற திவ்ய ப்ரபந்தங்களானவை உமது திருவாக்கில் நின்றும் தோன்றின வென்பதில் வியப்பு ஒன்றுமில்லைகிடீர். ஸ்ரீராமாயணத்திற்கு ஏற்பட்டிருக்கும்

போக்யதையைப்பற்றிச் சிறிது வியக்க வேண்டுமேயல்லது உம்முடைய திவ்ய ப்ரபந்தங்களுக்கு ஏற்பட்டிருக்கின்ற போக்யதையைப்பற்றிச் சிறிதும் வியக்கவேண்டிய பரஸக்தி யில்லை என்பது உள்ளுறை. இதனால், வால்மீகி கோகிலத்தின் சொற்களினும் கிளிமொழிக் கோதையின் சொற்களே பரம மதுரங்கள் என்பது பெறுவிக்கப்பட்டது. ஆசிரியரின் இந்த நிரூபணத்திற்கு வேத பாண்டித்தியமே உதவி செய்தது...

## 93. ஆழ்வார்களிற் காட்டிலும் ஆண்டாளுக்கேற்றம்

"போக்தும் தவ ப்ரியதமம் பவதீவ கோதே" என்கிற எட்டாவது சுலோகம் ஆண்டாள்தான் ஆழ்வார்களுக்கும் வழிகாட்டியாயிருந்தவளென்று தெரிவிக்கின்றது. இந்த ச்லோகத்தின் கருத்தாவது: ஆண்டாளே! உம்முடைய திருத்தகப்பன்மார்களான பெரியாழ்வார் முதலிய ஆழ்வார்கள் உமது வல்லபரான பெருமாளை நீர் அநுபவிப்பது போலவே தாங்களும் அநுபவிக்க விரும்பித் தங்களுடைய பக்தியை அநுராகசைலியிலே மாற்றிப் பேசா நின்றவர்களாய்ப் பல வகைப்பட்ட ஸம்ச்லேஷ விச்லேஷப் பாசுரங்களினால் தமது திருவுள்ளத்தை ச்ருங்கார ரஸாநுபவசாலியாக ஆக்கிக் கொள்ளுகிறார்கள் என்பதாம். ஆண்டாள் இயற்கையாகப் பெண்ணாய்ப் பிறந்தவள்; புருஷனைப் புருஷர்கள் அநுபவிப்பதிற் காட்டிலும் பெண்டிர்கள் அநுபவிப்பது பாங்குடைத்தாதலால் புருஷோத்தமனான பெருமாளை ஸ்த்ரீரத்னமான ஆண்டாளனுபவிப்பது பாங்காக அமைந்தது. அமையவே, இவளுடைய திவ்ய ப்ரபந்தத்தில் "ஊனிடையாழி சங்குத்தமற்கென்று உன்னித்தெழுந்த வென்தடமுலைகள்" என்றும், "கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்தொருநாள், தங்குமேல் என்னாவி தங்குமென்றுரையீரே" என்றும் "கொள்ளும் பயனொன்றில்லாத கொங்கை தன்னைக் கிழங்கோடும், அள்ளிப்பறித்திட்டவன் மார்பிலெறிந்து என்னழலைத் தீர்வேனே" என்றும் "கொம்மை முலைகளிடர்தீரக்கோவிந்தற்கோர்குற்றேவல்" என்றும் உள்ள பாசுரங்கள் பொருத்தமாகவும் ஸஹ்ருதய ஹ்ருதயங்கமமாகவும் விளங்கின. இங்ஙனம் ஆண்டாளைப் போலவே புருஷோத்தமனை நாமும் அநுபவிக்க வேணும் என்று ஆசைகொண்ட ஆழ்வார்கள் என் செய்தார்களென்னில், பரமபுருஷ விஷயத்திலே தங்களுக்குண்டான பக்தியை நாயக விஷயத்தில் நாயகிகளுக்குண்டாகும் அநுராகத்தின் ஸமாதியிலே அமைத்து, தாங்களும் ஸ்த்ரீபாவனை கொண்டவர்களாகி எம்பெருமானோடு ஸம்ச்லேஷிப்பதும் விச்லேஷிப்பதுமான நிலைமையையும் எய்தி, அந்த ஸம்ச்லேஷவிச்லேஷங்களுக்கு அநுரூபமான பாசுரங்களையும் பேசி, இங்ஙனே தங்களுடைய ஹ்ருதயத்தையும் ச்ருங்கார



ரஸைகதாநமாக ஆக்கிக்கொண்டார்கள் என்றதாயிற்று. இத்தால், அநுகாரரீதியிலே அமைந்த ஆழ்வார்களின் பகவதநுபவத்திற் காட்டிலும், தன் இயற்கைக்கு இணங்கினதாகவே அமைந்த ஆண்டாளுடைய பகவதநுபவம் ரஸவத்தரம் என்பது பெறப்படும்.

## 94. "குரவஸ் த்வதீயா:" என்றதன் விளக்கம்

மேலே காட்டின சுலோகத்திலுள்ள 'குரு' சப்தம் பித்ருபர்யாயம், "பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண் பிள்ளை வாழியே!" என்று நாடோறும் ஸ்ரீவைஷ்ணவவுலகம் ஸேவிக்கிற வாழித் திருநாமத்தின்படி ஆண்டாள் பெரியாழ்வார் திருமகளென்று ப்ரஸித்தி பெற்று இருந்தாலும் ஆழ்வார்கள் பதின்மருக்கும் இவள் ஒரு திருமகள் என்பது பூருவாசாரியர்களின் ஒருமிடறான திருவுள்ளம். அதையடியொற்றியே ஸ்வாமி இங்கு "குரவ: த்வதீயா:" என்றருளிச் செய்தபடி. மணவாள மாமுனிகளும் உபதேச ரத்தினமாலையில் "*அஞ்சுகுடிக்கொரு சந்ததி*" என்றருளிச் செய்கிறாராண்டாளை; அஞ்சுகுடி யென்றவிதற்கு இரண்டு வகையான பொருள் ஏற்கும்; பொய்கையாழ்வார் தொடங்கிப் பெரியாழ்வாரளவுமுள்ள ஆழ்வார்களைக் கணக்கிட்டால் அவ்வாழ்வார்களின் குடி ஐந்து என விளங்கும். எங்ஙனேயென்னில், பொய்கை, பூதம், பேயாழ்வார் மூவரும் சேர்ந்து முதலாழ்வார்களென்று ஒரு ஸமுதாயமாக வழங்கப் பெறுதலால் அம்மூவருஞ் சேர்ந்து ஒரு குடி; திருமழிசைப்பிரான், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார் ஆகிய நால்வரும் நான்கு குடி. ஆகவே அஞ்சுகுடி யென்பது ஆண்டாளுக்கு முன்னே திருவவதரித்த ஆழ்வார்களனைவரையும் சொல்லிற்றாகி அவர்கட்கெல்லாம் ஒரு சந்ததியாகத் தோன்றியவள் ஆண்டாள் என்றதாக ஒரு நிர்வாஹம். இனி மற்றொரு நிர்வாஹமாவது—"அஞ்சுகுடி" யென்பதை அஞ்சுகின்ற குடி எனக்கொண்டு ஆழ்வார்கள் பதின்மரையும் விவக்ஷிக்கிறபடி; எம்பெருமானுக்கு என் வருகிறதோவென்று அஞ்சுகின்ற தன்மை பெரியாழ்வார்க்கு மிகவும் விசேக்ஷித்து இருப்பினும் ஆழ்வார்கள் பதின்மர்க்கும் அந்த அச்சம் ஸாதாரணமாகவுண்டு. இது "மங்களாசாசனத்தில் மற்றுள்ள வாழ்வார்கள் தங்கள் ஆர்வத்தளவு தானன்றி" என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரத்தினாலேயே நன்கு காட்டப்பட்டது. பெரியாழ்வார்க்குப்போலே பொங்கும் பரிவு மற்றையோர்க்கு இல்லை யெனினும், மங்களாசாசனத்தில் ஆர்வம்(அதாவது அஞ்சுகின்ற தன்மை) அனைவர்க்குமுண்டு என விளங்குதலால், "அஞ்சுகுடி" யென்ற சொல்லால் ஆழ்வார்களனைவரையும் கொள்வது பொருத்தமுடையதேயாகும். ஆகவே பதின்மர்க்கும் ஆண்

டாள் புதல்வி யென்றதாயிற்று. ஆக, "குரவஸ த்வதீயா:" என்றவிது ஆழ்வார்கள் பதின்மரையுமே சொல்லிற்ருகும். சில ஆழ்வார்களுக்கு "பக்திம் நிஜாம் ப்ரணயபாவநயா க்ருணந்த:" என்ற அம்சம் இல்லையாளுலும் "ச்சத்ரிங்யாய"த்தாலே அவர்களையுங் கூட்டிக் கூறக் குறையில்லை யென்க.

## 95. ஆண்டாளுடைய திருக்குழலின் மேன்மை

கோதா ஸ்துதியில் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியின் திருக்குழற் பெருமையைப் பல சுலோகங்களிற் பேசியிருந்தாலும் "தாதஸ்துதே மதுபித: ஸ்துதிலேசவச்யாத்" என்கிற பத்தாவது சுலோகம் மிக மேம்பட்டது. இந்த ச்லோகத்தின் கருத்தாவது: ஆண்டாளே! உம்முடைய திருத்தகப்பஞராகிய பட்டர்பிரான், ஸ்வல்ப ஸ்தோத்திரத்திற்கு வசப்படக் கூடியவஞன எம்பெருமானிடத்தில் நின்றும் செவிக்கினிய செஞ்சொற்களை நூற்றுக்கணக்காகப் பாடின மற்றையாழ்வார்களாலே முன்பு அடையப்படாததான பெரியாழ்வாரென்னும் சிறப்புப்பெயரை, நீர் சூடிக் களைந்த மாலையை ஸமர்ப்பித்ததனுல் அடைந்தார் என்பதாகும். ஆழ்வார்களுக்குள்ளே ஆண்டாளுடைய திருத்தகப்பஞரான பட்டர்பிரான் பெரியாழ்வாரென்று வழங்கப்படா நின்ருர். இவ்வாழ்வார்க்கு எந்த அம்சத்திஞல் பெருமை என்று ஆராயவேணும். மற்றுள்ள ஆழ்வார்களுக்கு முன்னே வந்துதித்தவர்களான முதலாழ்வார்களும் திருமழிசைப்பிரான் நம்மாழ்வார் முதலானவர்களும் இவரைக் காட்டிலும் திருநக்ஷத்திரத்தில் பெரியவர்களாதலால் வயதிஞல் பெருமை இவர்க்கு சொல்லவொண்ணுது. இனி எண்ணிக்கையில் அதிகமான பாசுரங்களை அருளிச் செய்வதனுலாம் பெருமையாவது சொல்லத் தகுமோ வென்று பார்க்கில், அவ்விஷயத்தில் நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாருமே பெருமை பெற்றவர்களாவர். ஆகவே, எக்காரணத்திஞல் இப் பட்டர்பிரானுக்குப் பெரியாழ்வாரென்றபெயர் வழங்கலாயிற்றென்று உணரவேண்டுவது அவசியமாயிற்று' ஆண்டாள் சூடிக்களைந்த பூமாலையைஇவ்வாழ்வார் எம்பெருமானுக்கு நாடோறும் ஸமர்ப்பித்து வந்ததனுல் மிகவும் திருவுள்ளமுவந்த எம்பெருமான் இவர்க்குப் பெரியாழ்வார் என்று விருது உண்டாகும்படி அருள்புரிந்தனன்—என்கிறது இந்த ச்லோகத்தில்.

## 96. மேலெடுத்த சுலோகத்தில் பாட பரிஷ்காரம்

இந்த ச்லோகத்தில் இரண்டாவது பாதத்தை "கர்ணும்ருதை: ஸ்துதிசதை:" என்று வ்யஸ்தமாக ஓதிவருகிருர்கள். இது புராதன பாடமன்று. "கர்ணும்ருதஸ்துதிசதை:" என்று ஸமஸ்தமாகவே



ஆசிரியர்பணித்தது. அது பஹுவ்ரீஹி கர்ப்பமான பதமென்பதையுணராமல் இங்கு கர்மதாரய ஸமாஸமென்றெண்ணி ஸ்மஸ்தமாயிருப்பதிற் காட்டிலும் வ்யஸ்தமாயிருப்பதே யுக்ததரமென்றெண்ணி "கர்ணும்ருதை: ஸ்துதிசதை:" என்று திருத்தி விட்டார்கள். நம்முடைய தேசிக க்ரந்தமாலா ஸ்தோத்ராவளீ விபாகப் பதிப்பிலும் அப்பாடத்தையே நிவேசித்திருக்கிருேம். ஆனுல் அது ஆசிரியருகந்தபாடமன்று என்பதை நம்முடைய கோதாஸ்துதி வியாக்கியானத்தில் நிருபணம் செய்திருக்கிருேம். இங்கு ஸாரமாகத் தெரிவிக்கிருேம். "கர்ணும்ருதாநி ஸ்துதிசதாநி யேஷாம் தே-கர்ணும்ருதஸ்துதி சதா:; தை: என்று விக்ரஹமாகக் கடவது. கர்ணும்ருதமான ஸ்துதிசதங்களைப் பாடின மற்றையாழ்வார்களாலும் ('நம்மாழ்வாராலுங்கூட') அடையப்படாததான அநுக்ரஹத்தை இவ்வாழ்வார் பெற்ருர் என்பது இங்கு விவக்ஷிதம். *இன்கவிபாடும் பரமகவிகளென்று சிறப்பித்துக் கூறப்பட்ட முதலாழ்வார்களுக்கும்* 'பாலேய்தமிழரிசை காரர்பத்தர்பரவுமாயிரம்* தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்றும் சொல்லுகிறபடியே கர்ணும்ருதஸ்துதி ததிகளைப்பாடின நம்மாழ்வார்க்கும், மற்றும் இத்தகையரான திருமழிசைப்பிரானுக்கும் குலசேகரப் பெருமாளுக்கும் கிடைக்காததான அநுக்ரஹத்தை ஆண்டாள் சூடிக்களைந்த மாலையை யுபஹரித்ததுகாரணமாக இவ்வாழ்வார் பெற்ருர் என்பதுதான் இன்சுவைமிக்க பொருள். இப்பொருளுக்கு வ்யஸ்த பாடம் சேராது; ஸமஸ்தமானபாடமே சேரும். அன்றியும் வ்யஸ்தமான பாடத்தில் பிரபலமானவொரு அநுபபத்தியுமுண்டு. பெரியாழ்வார் தம்முடைய திவ்யஸூக்திகளை யெல்லாமருளிச் செய்தபிறகே ஆண்டாள் சூடிக்களைந்த மாலையை வடபெருங்கோயிலுடையானுக்கு ஸமர்ப்பித்ததாக வ்யஸ்தபாடத்தில் ஏற்படும். அது அஸங்கதம். பெரியாழ்வார் திருமொழியில் (2—2—6) *மின்னனைய நுண்ணிடையார் விரிகுழல்மேல் நுழைந்த வண்டு இன்னிசைக்கும் வில்லிபுத்தூரினிதமர்ந்தாய்!* என்கிற பாசுரத்தில் ஸூசிதமான இதிஹாஸம் முற்பட்டதேயொழியப் பிற்பட்டதன்று.

## 97. கோதா ஸ்துதியில் விரோதாபாஸம் அமைந்திருத்தல்

ஆலங்காரிகர்கள் விரோதாபாஸ மென்ருெரு அலங்காரம் கூறுவர்கள். சதுரர்களான கவிகளின் வாக்கில் இது நன்கு இடம் பெறும். கீழே விவரித்த "சோணுதரேபி" என்கிற சுலோகத்திலும் விரோதாபாஸம் காணு நின்றதெனினும் "திக்தக்ஷிணுபி" என்கிற பதிஞேராவது சுலோகம் மிகவினிது. மேலெழப் பார்க்குமிடத்து விரோதமுள்ளதுபோல் தோன்றி, ஆழ்ந்து பார்க்குமிடத்து

விரோதம் காணுதபடி பேசுவதே விரோதாபாஸ லக்ஷ்யம். இந்த சுலோகம் அங்ஙனே அமைந்துள்ளது. ஆண்டாள் திருவவதரித்தது ஸ்ரீவில்லிபுத்தூரில். அவ்வூர் உள்ளது தென் திசையில். அது தென்திசையா யிருக்கச் செய்தேயும் வடதிசையாக விருக்கின்ற தென்று விரோதாபாஸாலங்காரம் தோன்ற ஒரு சமத்காரமாக அருளிச் செய்கிறுர். "உத்தரா" என்கிற வடசொல் வட திசையைச் சொல்வது போலவே, 'சிறந்தது' என்னும் பொருளையும் சொல்வ தாதலால் முந்தின பொருளைக்கொண்டு விரோதோத்பாவநமும், பிந்தின பொருளினுல் அதற்குப் பரிஹாரமும் உய்த்துணரத் தக்கது. ஆண்டாளுடைய திருவவதாரத்தினுல் தென்திசை மிகவும் சிறந்ததாயிற்று என்றவாறு, அந்தச் சிறப்பை ஸம்ர்த் தித்து உத்தரார்த்தம் அருளிச் செய்கிறுர்—"யத்ரைவ" என்று தொடங்கி, "குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி வடதிசை பின்பு காட்டித் தென்திசையிலங்கை நோக்கி" என்றும் "மன்னுடைய விபீடணற்காய் மதிளிலங்கைத் திசை நோக்கி மலர்கண் வைத்த" என்றும் சொல்லுகிறபடியே பெரிய பெருமாள் தென்திசை நோக்கிப் பள்ளிகொண்டிருப்பதானது விபீஷணுழ்வானைக் கடாக்ஷிப்பதற்காக என்று புராண வரலாறு இருந்தாலும், ஆண்டாளுடைய திருவவதாரஸ்தலமாகிய ஸ்ரீவில்லி புத்தூரில் அபிநிவேசத்தினுல்தான் அத்திசையை நோக்கியிருக் கின்ருரென்று கொள்வது சிறக்கும் என்று இங்கு ஆசிரியர் திருவுள்ளம் போலும்...

## 98. கோதாஸ்துதியில் விலக்ஷணமான உல்லேகமொன்று

"ப்ராயேணதேவி! பவதீவ்யபதேச யோகாத்" என்கிற பன்னிரண்டாம் சுலோகத்திலே அற்புதமான உல்லேகமுள்ளது. பஞ்சவடியில் இராவணன் பிராட்டியை அபஹரித்துக்கொண்டு போகும்போது "ஹம்ஸ காரண்ட வாகீர்ணும் வந்தே கோதாவரீம் நதீம், க்ஷிப்ரம் ராமாய சம்ஸ த்வம் ஸீதாம் ஹரதி ராவண:" என்று கோதாவரியை நோக்கி 'என்னை இராவணன் கவர்ந்து சென்ற தாகப் பெருமாளிடம் அறிவிப்பாயாக' என்று வேண்டிக்கொண் டாள்; அங்ஙனம் வேண்டிக்கொள்ளாவிடினும் பெருமாள் பக்கலில் அறிவிக்க வேண்டிய முறைமை யிருந்தும், வேண்டிக்கொண்ட பின்பும் அறிவியாதே யொழிந்தது. இது இராவணன் பக்கலில் அச்சத்தாலேயாம். யமுனை கம்ஸனுடைய மாளிகையின்கீழே பெருகா நின்றதாகையாலே தீயபுந்திக் கஞ்சனுக்கு அஞ்சவேண்டி யிருந்தும் அஞ்சாதே "யமுநாம் ச அதிகம்பீராம் நாநாவர்த்தஜஷா குலாம் வஸுதேவோ வஹந்க்ருஷ்ணம் ஜாநுமாத்ரேதகோ யயௌ" என்னும்படி முழங்காலளவாகத் தன்னை வற்றிக் கொடுத்தது.



ஆதலால் அது * தூய பெருநீர் யமுனை * என்று கோதை குளாவிக் கூறப்பெற்றது. அங்ஙனம் கிஞ்சித்கரிக்கும்படியான பாக்கியத்தை கோதாவரி இழந்தமையால் அபரிசுத்தியே இதற்கு உண்டாயிற்று. அந்த அசுத்தி தொலைந்து தூய்மை பெறுதற்காக அந்தக் கோதா வரி தவம் புரிந்ததாகவும், தவத்தினுல் ப்ரஸந்நமான தேவதை ஒப்புயர்வற்ற தூய்மையை வரமாக அநுக்ரஹித்ததாகவும் புராண வரலாறு உள்ளது. அவ்வளவு தூய்மை அதற்கு உண்டானதற்கு உண்மையில் யாது காரணமென்னில் "கோதா" என்கிற திருநாமத் தைத் தன்னுடைய நாமத்தில் ஏகதேசமாக வஹிக்கச் பெற்றிருப் பதுவே காரணமாகும் என்று ஸ்வாமி சமத்காரம் பொலிய உத்ப் ரேக்ஷிக்கிறபடி.

## 99. கோதாஸ்துதியில் சாஸ்த்ரார்த்தஸந்தர்சனம்

"ரங்கேச்வரஸ்ய தவச ப்ரணயாநுபந்தாத்" என்னுமிருபத் தோராம் சுலோகத்தில் ஒரு விலக்ஷணமான சாஸ்த்ரார்த்தம் அவ லீலையாகக் காட்டப்படுகிறது. இந்த சுலோகத்திற் சொல்லப் படுவதாவது: விவாஹ காலங்களில் தம்பதிகளுக்கு மாலை மாற்றுதல் நடைபெறும் முறைமையின்படியே ஆண்டாளுடைய திருக்கல்யா ணத்திலும் நடைபெறக் குறையில்லையே; அக்காலத்தில் குழாங் கூடிக் கண்டுகளிக்கப் பலர் திரள்வர்களே. அந்தத் திரளில் ரஸி கராயிருப்பார் வாளா விருக்ககில்லாமல் தம்தம் நெஞ்சில் தோற்றிய வாறு சொல்லுவர்கள். இராமனுக்கும் ஸீதைக்கும் திருமணம் நடந்த காலத்தில் "நம்பியைக் காண நங்கைக்கு ஆயிரநயனம் வேண்டும்" என்று சிலர் கூறினதாகவும், "கொம்பினைக் காணுந் தோறும் குரிசிற்கு மன்னதேயாம்" என்று சிலர் கூறினதாகவும் கம்பர் பேசினுரன்ருே. அப்படியே இங்கும் எம்பெருமானைத் தாழ்த்தி ஆண்டாளை உயர்த்திப் பேசுவாரும், ஆண்டாளைத் தாழ்த்தி எம் பெருமானை உயர்த்திப் பேசுவாரும், இருவரும் ஏற்றத் தாழ்வின் றியே ஸமமாகவே விளங்குகின்றனர் என்று பேசுவாருமாய் இங்ஙனே பேச்சுக்கள் அதிகரித்துப் பேரொலி யுண்டாயிற்று என்பதாம். எம்பெருமானையும் பிராட்டியையும் அநுபவிக்கின்ற ஆசாரியர்கள் மேற்குறித்த மூவகையான பேச்சுக்களையும் தமது திவ்யக்ரந்தங்களிற் பேசியுள்ளார்கள். எம்பெருமானுக்கு சேஷித்வ மும் பிராட்டிக்கு சேஷத்வமும், அப்படியே எம்பெருமானுக்கு ஸகல ஜகத்பதித்வப்ரயுக்தமான ஏற்றமும், பிராட்டிக்கு பத்நீத்வப்ரயுக்த மான தாழ்வும் அபலபிக்க வொண்ணுதவை. ஆகவிப்படி சாஸ்த் ரீயமான ஏற்றத்தாழ்வு இருக்கச் செய்தேயும், ஒரு அபிமாந விசே ஷத்தினுல் "ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதம்" என்று எம்பெருமானும் சொல்லி வைத்த கணக்கிலே, பிராட்டியை உயர்த்தியும் எம்பெரு

மானைத் தாழ்த்தியும்—இருவரையும் ஸமதுலையிலே வைத்தும் ஆசார்யர்கள் ரஸமயமாக அருளிச் செய்வதுண்டு. பட்டர் ஸ்ரீகுணரத்ந கோசத்தில் "ச்ரியம் த்வத்தோப்யுச்சைர் வயமிஹ பணும:" என்றும், "தவ ஸ்பர்சாதீசம் ஸ்ப்ருசதி கமலே மங்கலபதம்" என்றும் அருளிச் செய்தவை ப்ரஸித்தம். எம்பெருமானும் மோக்ஷோபாயம், பிராட்டியும் மோக்ஷோபாயம் என்று ஸமமாகச் சிலர் சொல்லுவதும் ப்ரஸித்தம். இப்புடைகளிலே ஆண்டாள் திருக்கல்யாணத்திலும் ரஸிகர்களுள் பிரியமான பேச்சு பலவிதமாக நிகழ்கின்றதாம். "இப்பெருமானுக்கு எங்களுடைய ஆண்டாள் தேவியாக வாய்க்காவிடில் இவனுடைய புருஷோத்தமத்வம் காசுக்கு உதவுமோ?" என்று பெண் வகுப்பினர் பேசுவர்; உங்களுடைய ஆண்டாளுக்கு எங்கள் பெருமான் மணவாளனுக வாய்க்காவிடில் 'கோங்கலரும் பொழில் மாலிருஞ்சோலையிற் கொன்றைகள் மேல் தூங்கு பொன் மாலைகளோடுடனுய் நின்று தூங்குகின்றேன்' என்று இவள் தானே சொல்லிக்கொண்டபடி இவள் உபயோகமற்றவளாக ஆய்விடுவளன்ரே' என்று பேசுவர் மணமகன் வகுப்பினர். இரு வகுப்பிலும் சேராத தடஸ்தர்கள் "ஏற்றத் தாழ்வு பேசுவதில் நமக்கென்ன யோக்கியதை" என்று கொண்டு இருவரையும் பற்றி ஸமமாகப் புகழ்ந்து பேசுவர்கள்; ஆனுல் ஸமமாகப் பேசுகிற வார்த்தை எடுபடாது. ஏற்றத் தாழ்வான வார்த்தையில் கக்ஷி ப்ரதி கக்ஷிகள் விரைவில் மலிந்து பெரிய இரைச்சலாக ஆய்விடும். அது "த்ரிலோகீம் வாசாலயந்தி" என்பதனுல் காட்டப்பட்டது. தம்பதிகளுள் ஒரு வ்யக்தியினிடத்திலும் சிறிதும் விரோதமின்றியே இவை விநோத வார்த்தைகளே என்பதை "ரஸிகா" என்ற அழகிய சொல்லால் ஸூசிப்பித்தருளினுர். இதில் காட்டிய ந்யூநாதிகத்வ ஸமத்வங்கள் மூன்றும் சாஸ்த்ரார்த்தங்களே யென்க.

## 100. கோதாஸ்துதியில் அதிலலித வாக்விந்யாஸம்

"பதாநாம் ஸௌப்ராத்ராத் அநிமிஷநிஷேவ்யம் ச்ரவணயோ:" என்று பட்டரருளிச் செய்தபடி செவிக்கினிய செஞ்சொல் வாய்த்திருப்பது மிகப் பெரிய விசேஷம். இந்த ஸ்துதியில் எல்லா ச்லோகங்களுமே செவிக்கினியவை யெனினும்,

"சதமகமணிநீலா சாருகல்ஹாரஹஸ்தா,
ஸ்தநபர நமிதாங்கீ ஸாந்த்ரவாத்ஸல்யஸிந்து:.
அலகவிநிஹிதாபிஸ் ஸ்ரக்பிராக்ருஷ்டநாதா
விலஸது ஹ்ருதி கோதா விஷ்ணுசித்தாத்மஜா ந:"

என்கிற இருபத்தெட்டாம் சுலோகம் மிகவும் செவிக்கினிது. ★

**அண்ணுஸ்வாமியின் அமுதமொழியாயிரத்தில்
முதல் நூறு முற்றிற்று.**

ஸ்ரீ:

# அண்ணுஸ்வாமியின் அமுதமொழியாயிரத்தில் இரண்டாவது நூறு

**[ஸ்ரீ லோகாசார்யஸம்ப்ரதாய ஸாரார்த்தங்கள்]**

## 101. ராமாநுஜ தர்சனத் திறவுகோல்

விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு ஒரு திறவுகோலும், லோகாசார்ய ஸித்தாந்தத்திற்கு ஒரு திறவுகோலும் முக்கியமாகத் தெரிந்து கொள்ளத்தக்கவை. "சரீராத்மபாவம்" என்பது விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத் திறவுகோல் 'ஸர்வேச்வரன் ஸகல சேதநா சேதநங்களையும் சரீரமாகக் கொண்டவன்' என்கிற உண்மையைச் செவ்வனே தெரிந்துகொள்ளும் வேதாந்திக்கு ஸகல உபநிஷத் வாக்யங்களும் எளிதாக அந்வயித்துவிடும். ஒன்றிலும் ஒரு அவத்யமும் தோன்றமாட்டாது—என்பது சீரியதோர் கொள்கை. இதை நன்கு தெரிந்து கொண்ட வித்வான் முன்னிலையில் எந்த மதாந்தரஸ்தனும் பங்கமடைந்தே தீர்வன் என்கிருர் ஸ்ரீ வேதாந்ததேசிகன் "யத்யேதம் யதிஸார்வபௌமகதிகம்" இத்யாதியான ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார ச்லோகத்திஞல். அதைப் பெரியாரிடம் கேட்டுணர்வது.

## 102. லோகாசார்ய ஸித்தாந்தத் திறவுகோல்

அதுபோல, "எந்த விதத்திலும் எம்பெருமானுடைய பெருமையிலேயே முழுநோக்கு" என்பதே லோகாசார்ய ஸித்தாந்தத்தின் ஸாரம் என்று தெரிந்துகொள்ளவேண்டும். இதுவே இந்த ஸம்பிரதாயத்திற்குத் திறவுகோல். இதர ஸம்ப்ரதாயத்தில் சேதநகருமங்களுக்கே ஆதிக்யம் தெரியவரும். இந்த ஸம்ப்ரதாயத்தில் அப்படியன்றிக்கே ஸர்வேச்வரனுடைய க்ருஷிக்கே ஸர்வாத்மநா ஆதிக்யம் காணும் இதனை நன்கு தெளிவிக்கின்றேன். இந்த ஸம்ப்ரதாயஸ்தர்கள் "ஒருதடவை நமஸ்காரம்" செய்வதென்றும் பிறர் "பலதடவை நமஸ்காரம்" செய்வதென்றும் காண்கின்றது. பகவானை நமஸ்கரிப்பதென்பது மிகச் சிறந்ததொரு காரியமே. இதனை ஒருதடவைக்குப்
லதடவையாகச் செய்தால் நல்லதல்லவென்று யாரேனும் நினைக்க
'புமோ? நமஸ்கரிப்பவனுடைய கரணக்ராமமும் க்ருதார்த்தமாய்,
ப ரிக்கப்படுபவனுன எம்பெருமானுடைய திருவுள்ளமும் ஸுப்ர
முடி 'தற்கு உறுப்பான காரியமன்ரே இது. அப்படியிருக்க,
நமஸ்க நான் நமஸ்காரம் செய்ய வேணுமென்று ஒரு விரதமாகக்
ஸங்கமாவ வேண்டிய அவசியம் என்ன? என்று ஒவ்வொரு
ஒருதடவை ந சங்கை தோன்றும்.
கொண்டிருக்க
விவேகிக்கும் இந்

## 103. நமஸ்காரத் ...தில் ஒரு மருமம்

நமஸ்கார விஷய ...'த்தில் தென்ஞசார்யர்களின் திருவுள்ளம்
...ர்த்தால் நாம் எத்தனை தடவை நமஸ்கரித்
...மானைப் பார்த்தால் ஒரு தடவை நமஸ்
கேண்மின். நம்மைப் பா
தாலும் போராது. எம்பெரு

கரிப்பதும் மிகையாகும். அப்பெருமான் கீதை முதலியவற்றில் தன்னை அல்ப ஸந்துஷ்டனாகச் சொல்லிக்கொள்ளுகிறான். "பத்ரம் புஷ்பம் பலம் தோயம்" இத்யாதிகள் அவனுடைய அமுத மொழிகளாகக் காண்கின்றன. தேவதாந்தரங்கள் மிகவும் சிரமப்பட்டு ஆராதிக்கப்படவேண்டியவை யென்றும், எம்பெருமான் ஆராதனைக்கு மிக எளியன் என்றும் ப்ரஸித்தம். ஆழ்வார்கள் அவனுடைய பெருமையைப் பேசுமிடத்து "தொழுது மாமலர் நீர்சுடர் தூபங்கொண்டு எழுதுமென்னுமிது மிகையாதலின்" என்றும், "தொழக் கருதுவதே துணிவது சூதே" என்றும் இப் புடைகளிலே அருளிச்செய்கிறார்கள்.

## 104. பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம

இந்த உபநிஷத் வாக்யத்திற்கு "தே பூயிஷ்டாம் நமஉக்திம் விதேம" என்று அந்வயம் காட்டி 'நம: என்று வாயினால் சொல்லுவதும் எம்பெருமான் திருவுள்ளத்தாலே மிகக் கனத்ததாகும்' என்று நம் பூருவர்கள் அர்த்தம் செய்தருளுகிறார்கள். பட்டர் "அஞ்ஜலிபரம் வஹதே" என்கிறார். நாம் ஒரு அஞ்சலி செய்துவிட்டாலும் அது அத்தலைக்குப் பெரிய பளுவாகத் தோன்றுமென்பதை நன்கு காட்டுகின்றார். ஆகவே ஆராதனைக்கு எளியனான எம்பெருமான் முன்னிலையில் நாம் பலகால் விழுந்தெழுந்தால் அவன் திருவுள்ளம் என்னாகுமோ? 'நம்மையும் தேவதாந்தரங்களைப்போலே நினைத்துவிட்டார்கள் போலும்!' என்று அவன் திருவுள்ளம் புண்படலாகுமோ என்னவோ வென்று அஞ்சி, "ஆராதனைக் கெளியன்" என்கிற அவனுடைய பெருமைக்தக் குறைவு வாராதபடி நடந்து கொள்வோமென்றே நமஸ்காரத்தில் ஆவ்ருத்தி ஸஹிக்கப்படவில்லை.

## 105. நம்முடைய முக்கியமான குறிக்கோள்

நாம் சேதநராகப் பிறந்திருக்கிற வாசிக்கு ஏதோ சைதந்ய கார்யமாக ஸ்வல்பம் செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம்; இது கார்யகரமேயன்று; அவன் திருவுள்ளத்திலிரக்கமே கார்யகரம்; அது நம்முடைய ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமுமடியாக விளையக்கூடியது; ஆகிஞ்சந்யத்துக்கு எதிராக அதிக ப்ரவ்ருத்திகளைக் காட்டினோமாகில் நாம் ஏதோ உபாயாநுஷ்டாநம் செய்கிறோமாகத் திருவுள்ளம்பற்றி எம்பெருமான் கைவாங்கி நிற்க நேரும்; அப்படி அவன் உதாஸீநனாகைக்கு நாம் அவகாசம் கொடுக்கலாகாது என்பதே முக்கியமான குறிக்கோள்.



## 106. கருவிலே ஊறின அத்யவஸாயம்

உபாயாநுஷ்டானங்கள் செய்யும்படி அவனே சாஸ்த்ரங்களில் விதித்திருக்கும்போது அவற்றை யதேஷ்டமாக நாம் செய்தாலென்ன? செய்யவேண்டியதுதானே என்று பிறர் நினைக்கலாம். தென்னாசார்யர்கள் அங்ஙனம் நினைப்பவர்களல்லர். "நெறிகாட்டி நீக்குதியோ?" என்று நம்மாழ்வார் அருளிச்செய்தபடி, தன்னைவிட்டு நீக்குவதற்காக (நம்மை நன்கு சோதிப்பதற்காக) அவன் காட்டின வழிகளிலே நாம் கிடந்து துவளலாகாது; "காம்பறத்தலைசிரைத்து உன் கடைத்தலை யிருந்து வாழுஞ் சோம்பரை யுகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே" என்று தொண்டரடிப்பொடியாழ்வாரருளிச் செய்தபடி திண்ணிதான அத்யவஸாயங் கொண்டிருப்பதே உற்றது—என்கிற உறுதி தென்னாசார்யர்களின் கருவிலேயே ஊறிக்கிடப்பதாகும்.

## 107, 108. நம்பிள்ளை ஸூக்திகளிரண்டு

நம்பிள்ளையினுடைய திவ்ய ஸூக்திகளிலே இரண்டு ஸூக்திகளை இங்கெடுத்துக்காட்டி இவ்விஷயத்தை நெஞ்சில் பதிய வைக்கின்றேன். (1) திருவாய்மொழியில் *பத்துடையடியவர்க் கெளியவன் பிறர்களுக்கு "அரிய வித்தகன்" என்ற விடத்து ஈட்டில்—"நம்முடையவர்கள் எம்பெருமானையே உபாயமாகப் பற்றாநிற்க, அல்லாதார் அசேதந க்ரியாகலாபங்களைப் பற்றுகிறாப்போலேயிறே துர்யோதனன் நிலை" என்றுள்ளது. இதனால் நம்முடையவர்கள்படியும் அல்லாதார்படியும் அறியத்தக்கது. (2) மேலே அந்தப் பதிகத்திற்கு அடுத்த பதிகத்திலே (1–4–7) "என் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு" என்ற விடத்து ஈட்டில்—"தேவரீர் க்ருபைக்குத் தண்ணீர்த் துரும்பாக ஏதேனும் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் பண்ணிற்றுண்டோ வென்று நம்பிள்ளை யருளிச்செய்யும்படி" என்றுள்ளது. இந்த ஸ்ரீஸூக்தியை நன்கு விமர்சிக்கவேணும். எம்பெருமானிடத்தில் தூதுவிடுகிற ப்ரகரணம் இது. என்ன தப்பு செய்து விட்டதாக உபேக்ஷித்திருக்கிறீரென்று கேளுங்கோளென்று இங்கே மூலமுள்ளது. "நாங்கள் ஏதேனும் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் செய்துவிட்டதாக எண்ணி உபேக்ஷித்திருக்கிறீரா வென்று கேளுங்கோள்" என்பதாக நம்பிள்ளை விவரணம் செய்தருளுகிறார். இதனால் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் செய்வது எம்பெருமானுடைய க்ருபைக்கு ப்ரதிபந்தகம் என்று ஸ்பஷ்டமாக விளங்குகின்றது. இப்படி யருளிச்செய்திருக்கிற நம்பிள்ளை பகவத்ஸந்நிதியில் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் செய்திருக்கமாட்டாரா? செய்திலர்என்றால் இதை யாரேனும் நம்பமுடியுமா? அது சாஸ்த்ரார்த்தந்தானாகுமா? எதற்காக இங்ஙனே

நம்பிள்ளை யருளிச்செய்தார்? என்று விவேகிகள் விமர்சிக்கவேண்டு மன்றோ? விமர்சித்தால், அதிகப்ரவ்ருத்தி அவத்யமென்றதாகத் தேறு மத்தனை போக்கி ப்ரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்வது பாவ மென்றதாகாது.

## 109. "தான்பின்னும்நேராதனவொன்று நேர்ந்தாள்"

சிறிய திருமடலில், "செங்குறிஞ்சித் தாரார் நறுமாலைச் சாத்தற் குத் தான் பின்னும் நேராதனவொன்று நேர்ந்தாள்'' என்றவிடத்துப் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியான ஸ்ரீஸூக்தியையும் சேர்த்து முன்னேகாட்டிய நம்பிள்ளை ஸ்ரீஸூக்திக்கு அர்த்தம் செய்யுமளவில் தென்னாசார்யர்களின் திருவுள்ளம் நன்கு புலப்படும். உபாயகோடியில் எள்ளளவும் அந்வயியாமல் ஸ்வரூபத்தளவிலே நிற்கும்படி சில செய்வதே உற்றது; எதையேனும் அதிகப்படியாகச் செய்தால் அது உபாயகோடியிலே அந்வயித்து ஆகிஞ்சந்யத்தைக் குலைத்து எம்பெருமானுடைய திருவருளுக்கு இடையூறாக நிற்குங் கொல்! என்கிற அதிசங்கை இவர்களுக்கு உள்ளதென்னுமிடம் விளங்காநின்றது. எந்த விஷயத்திலும் சாஸ்த்ரங்கள் ஒரு வழியையே காட்டமாட்டா! பல வழிகளையும் காட்டி நிற்கும். ஒவ்வொரு அதிகாரிகள் ஒவ்வொரு வழியைப் பற்றி நிற்பது ஸஹஜம்.

## 110. ஸக்ருத்ப்ரணாமத்தில் தோன்றும் ஒரு சங்கை

கீழே விவரித்தபடி லோகாசார்யஸம்ப்ரதாயஸ்தர்கள் ஒரு தடவை நமஸ்கரிப்ப தென்றுள்ளது. 'பலமுறை நமஸ்காரம் செய்வதனால் ப்ரத்யவாய முண்டோ? பகவத் பாகவத விஷயங்களில் ஒரு தடவைக்குப் பல தடவையாக நமஸ்கரிப்பதனால் ஸ்வரூபம் நிறம் பெறுமே யல்லது கெட்டுப்போய் விடாதே. ஆகவே ஒரு தடவையே நமஸ்கரிக்க வேணுமென்று ஒரு நிபந்தனை கொள்ளவேண்டுமோ? பல தடவை நமஸ்கரிக்கக்கூடாதென்று சாஸ்த்ரம் மறுத்திருப்பதாகத் தெரியவில்லையே. தேஹத்தில் சக்தியற்றவர்கள் ஒரு தடவையோ அரை தடவையோ நமஸ்கரிக்கட்டும்; சக்தியும் உத்ஸாஹமுமுள்ள வர்கள் பலமுறை நமஸ்கரித்தால் அதைக் குற்றமாகக் கொள்ளும்படி ஒரு ஸம்ப்ரதாயம் இருக்கத்தகுமோ?' என்றிங்ஙனேயொரு சங்கை தோன்றக் கூடியதுண்டு.

## 111. தோன்றின சங்கைக்குப் பரிஹாரம்

இதில் நம் ஆசாரியர்களின் திருவுள்ளத்தை விளங்கவுரைக்கி றோம் கேண்மின். எந்த விஷயத்திலும் சாஸ்த்ரங்களின் போக்கு பலவகைப்பட்டிருக்கும். "மறைப்பாற் கடலைத் திருநாவின் மந்தரத் தாற் கடைந்து" என்னுமாபோலே நூற்கடல்களை நன்கு கடைந்து



நுண்பொருள்களைக் கடைப்பிடித்துப் பரமாசாரியர்கள் காட்டி யருளின அனுஷ்டானமே பரம சாஸ்த்ரம். ஸக்ருத் ப்ரணாம விஷயத் தில் என்ன நுண்பொருள் காணலாகும்? என்னில்; கேண்மின். நமஸ்காரத்தின் ப்ரயோஜனம் என்ன? என்பதை முந்துற முன்னம் விமர்சிப்போம். "நந்த்ருநந்தவ்யபாவோயம் ந ப்ரயோஜநபூர்வக:, நீசோச்சயோஸ் ஸ்வபாவோயம் நந்த்ருநந்தவ்யதாத்மக:" என்று அஹிர்ப்புத்ந்யஸம்ஹிதையிலுள்ள வசனத்தை தேசிகன் முதலானார் களும் எடுத்துக் காட்டியுள்ளார்கள். பெரியாரைக் கண்டால் சிறியார், தங்களுடைய சிறுமைக்கும் எதிர்த்தலையின் பெருமைக்கும் ப்ரதர்சக மாக நமஸ்காரம் செய்யவேணு மென்றது. வேறொரு ப்ரயோஜநமும் இதற்கில்லை யென்றும் சொல்லிற்று. ஒருகால் தொழுத மாத்திரத்தி னால் ஸ்வநிகர்ஷமும் பரோத்கர்ஷமும் ப்ரதர்சிதமாயிற்று. பலகால் தொழவேணு மென்கிற நிர்ப்பந்தத்திற்கு ப்ரஸக்தியில்லை.

## 112. சாஸ்த்ரவசனங்களின் விமர்சம்

சாஸ்த்ரங்களில், ஒற்றைக் கையால் நமஸ்கரிப்பது அபசாரம். ஒரு ப்ரதக்ஷிணம் பண்ணுகை அபசாரம் என்று சொல்லியிருப்பது போல ஒருமுறை நமஸ்கரிப்பது அபசாரம் என்று சொல்லப்பட வில்லை. "ஏகேந பாணிநா யஸ் து ப்ரணமேதி புருஷோத்தமம், ந்யாய்யஸ் தஸ்ய கரச்சேத இதி வேதவிதோ விது:" என்றும், "ஏகஹஸ்தப்ரணாமச்ச ஏகஞ்சாபி ப்ரதக்ஷிணம்" என்றும் இத்தகைய ப்ரமாணங்களையே ஸ்தோத்ர பாஷ்யாதிகளில் ஸ்ரீ தேசிகாதிகள் உதாஹரிக்கக் காண்கிறோம். ஏகப்ரணாமத்தை நிஷேதிக்கும் வசனம் காண்பரிது. அப்படியொரு வசனம் கிடைத்தால் அது தேவதாந்தர விஷயமாயிருக்கும்.

## 113. ஸ்ரீ வைகுண்டகத்யஸூக்தியின் பொருள்

எம்பெருமானார் ஸ்ரீவைகுண்ட கத்யத்தில் "ப்ரணம்ய உத்தா யோத்தாய புந: புந:ப்ரணம்ய" [தொழுது எழுந்தெழுந்து மீண்டும் மீண்டும் தொழுது] என்றருளிச் செய்திருக்கும் விஷயத்தில் தெளிவு பிறப்பிக்கிறோம். இங்கு "ப்ரணம்ய உத்தாயோத்தாய புந: புந: ப்ர ணம்ய" என்றது ஓரிடத்திலேயே இருந்துகொண்டு பலமுறை நமஸ் கரிப்பதைச் சொல்லுவதன்று. அந்த வாக்கியத்திற்கு முன்னே "தூராதேவ" என்றருளிச் செய்திருப்பதனால், எம்பெருமானைக் கிட்டுமளவும் காலால் நடந்துசெல்லாமல் தெண்டனிட்டுக்கொண்டே வழியைக் கடந்து ஸ்ரீமந் நாராயணனை அணுகுவதாகவே அங்குப் பொருள்படும். இக்காலத்தில் இந்நிலத்தில் அஸக்ருத் ப்ரணாமகர்த் தாக்கள் செய்வது போன்ற செயல் அங்கு விவக்ஷிதமன்று. தெண் டன் ஸமர்ப்பித்துக்கொண்டே போய் வழியைக்கடந்து எம்பெரு

மாணைக் கிட்டினபிறகு அங்கு ஒரே தடவை நமஸ்கரிப்பதென்னுமது அவ்விடத்திலேயே அடுத்தபடியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. “யாசமாந: ப்ரணம்ய ஆத்மாநம் பகவதே நிவேதயேத்” என்று அந்த வாக்யஸமாப்தியுள்ளது காண்க. இங்ஙனமல்லாமல் ஓரிடத்திலேயே நின்றுகொண்டு பலமுறை தொழுவதைத்தான் “உத்தாயோத்தாய புந: புந: ப்ரணம்ய” என்கிற வாக்கியம் சொல்லுகிறதென்று கொண்டாலும் குறையொன்றுமில்லை. “ந சாஸ்த்ரம் நைவ ச க்ரம:”* என்கிற ரீதியிலே நூல்வரம்புக்கு அடங்காத அவ்விபூதியிலே நிகழுமது கொண்டு என்ன ஸாதிக்கலாகும்?

## 114. நித்யக்ரந்தஸூக்தி விளக்கம்

இங்கிலத்தில் நம்பூருவாசார்யர்களின் அநுஷ்டானம் ஸக்ருத் ப்ரணுமமே யென்பதை அந்த எம்பெருமானுர் தாமே ஸ்பஷ்டமாகக் காட்டியுள்ளபடி பாரீர். அவ்வாசிரியர் திருவாராதனக்ரம மருளிச் செய்கிற நித்யக்ரந்தத்தில்—“ஆராதநாபிமுகோ பவ: இதி மூலமந்த்ரேண ப்ரார்த்ய। தண்டவத் ப்ரணம்ய உத்தாய” என்றருளிச் செய்திருப்பது ப்ரஸித்தமிறே. இது கொண்டு ஸ்ரீவைகுண்டகத்யஸ்ரீஸூக்தியின் பொருளை நாம் விவரித்தபடியே தெளிய ப்ராப்தம்.

## 115. நமோ நம: நமோ நம:

ஸ்தோத்ர ரத்னத்தில் இருபத்தோராம் ச்லோகத்தில் ‘நமோ நம; நமோ நம:’ என்று பலகால் அருளிச்செய்திருப்பதை ஸமன்வயப் படுத்தத் திருவுள்ளம் பற்றிய தேசிகன் அவ்விடத்து (ஸ்தோத்ர) பாஷ்யத்தில், “ப்ரசம்ஸாயாம் ப்ரதிஜ்ஞாயாம் ப்ரலாபே தர்ஜநேபிச, பயே ச விஜயேசைவ பௌந:புந்யம்அலங்க்ருதி:” என்கிறவொரு ச்லோகத்தை யெடுத்துக் காட்டியுள்ளார். இந்த ச்லோகத்தின் பொருளாவது: ஸ்தோத்ரம் செய்தல், ப்ரதிஜ்ஞை செய்தல், அழுதல், வெருட்டுதல், அச்சந்தோற்றச் சொல்லுதல், வெற்றி தோற்றச் சொல்லுதல் முதலிய ஸந்தர்ப்பங்களில் ஒரு சொல்லையே அடுத்தடுத்துச் சொல்வதானது ஒருவகையான அலங்காரமாகும் என்பது இந்த ச்லோகத்தின் பொருள். உலகத்தில் இதை நாம் நன்ருகக் காண்கிறோம். ‘பாம்பு பாம்பு பாம்பு’ என்று பலமுறை சொன்னுலும் உள்ளது ஒரு பாம்பேயல்லது பல பாம்புகள் வந்துவிடமாட்டா. *பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பலகோடி நூறுயிரம்* என்று நூறுயிரந்தடவை சொன்னுலும் ‘விஜயீபவ’ என்று ஒருகால் சொல்வதற்கு என்ன அர்த்தமோ அந்த அர்த்தமேயன்றோ தேறுவது. அப்படியே, நமோ நம:, * தொழுது தொழுது * என்று எத்தனை பர்யாயம் சொன்னுலும் அலங்காரமேயாகு மத்தனையென்று தேசிகன் தாமே ஸ்பஷ்டமாக நிர்ணயித்தார். இனி வேறு விஷயம்—



## 116. பகவத்க்ருபையின் பெருமை

“பகவத்க்ருபை நிர்ஹேதுகமா? ஸஹேதுகமா?” என்பது ஒரு விசாரம். நமது நற்குண நற்செய்கைகள் காரணமாக எம்பெருமானுடைய திருவருள் தோன்றுகின்றதென்று ஒப்புக்கொண்டால் ஸஹேதுகம் என்றதாகும். அப்படியல்லாமல் அவ்வருள் தானேதோன்றுகின்றதென்று ஒப்புக்கொண்டால் நிர்ஹேதுகம் என்றதாகும். பகவத்க்ருபை, தானே தோன்றுகின்றதென்று எப்படி ஒப்புக் கொள்ளமுடியும்? அப்படி தோன்றுவதானுல் என்றைக்கும் எல்லார் விஷயத்திலும் தோன்றலாமே. அருளுக்கு இலக்காகாதார் ஒரு நாளும் ஒருவரும் இல்லாதபடியன்றோ இருக்கவேண்டும். அப்படி காணுமையாலும், சில கால விசேஷங்களில் சில அதிகாரிகள்மீது மாத்திரம் அருள் தோன்றக் காண்கையாலும் அப்போது ஒரு ஹேதுவை முன்னிட்டுத் தோன்றினதாகவே கொள்ளவேணும். ஆகவே அருள் ஸஹேதுகமே யல்லது நிர்ஹேதுகமென்கைக்கு ஔசித்யமில்லை என்று சங்கிக்கக்கூடும் இங்கு உண்மை யென்ன வென்பதை அடுத்தபடி சொல்லுவோம்.

## 117. நம்மிடமுள்ள ஹேது விசேஷங்கள்

அவனது மிகக் கனத்த அருளுக்கு ஹேதுவாக நம்மிடத்தில் என்ன சரக்கு உள்ளதென்று ஆராய்ந்து பார்த்தால் ஒரு அணு மாத்திரம் கிடைக்கக்கூடும். விஷயப்ரவணரான நாம் வேசிகளைப் பின்தொடர்ந்து அடிக்கடி கோவில்களிலே நுழைந்து புறப்பட நேரும். நம்முடைய வயலில் பட்டிமேய்ந்த பசுவை அடிப்பதாகத் துரத்திக் கொண்டு போம்போது அது ஒரு கோவிலை ப்ரதக்ஷிணஞ் செய்து கொண்டு ஓடுகிறவளவிலே அதை விடமாட்டாத ஆக்ரஹத்தாலே நாமும் அக்கோவிலை வலஞ் செய்து போகக்கூடும். சிசுபாலாதிகளைப் போலே நிந்தை செய்வதற்காக அடிக்கடி பகவானுடைய நாமங்களைச் சொல்லக்கூடும். இவ்விதமாகச் சில ஸுக்ருத விசேஷங்கள் காரணமாக எம்பெருமானருள் நம்மீது தோன்றிற்றென்ருல் இதைக்கொண்டு ஸஹேதுகமென்று சொல்லிவிடலாமோ? கொடிய தண்டனைக்குரிய பாவங்களையன்றோ நாம் செய்திருப்பது. இதில் அதிஸ்வல்பமானஸுக்ருதம் கலந்திருப்பதுகொண்டு எம்பெருமான் அருள்செய்தானென்ருல் அநுக்ரஹோந்முகனுன அவன் திருவுள்ளத்தால் ஸஹேதுகமானுல் ஆகலாம். “எந்நன்றி செய்தேனே என்னெஞ்சில் திகழ்வதுவே” “என்னுணர்வினுள்ளேயிருத்தினேன் அதுவுமவன தின்னருளே” “வெறிதேயருள் செய்வர்” என்றிவை போலும் பாசுரங்களையநுஸந்திக்கப் பிறந்த நம் நினைவால் நிர்ஹேதுகமேயாகக்கடவது.

## 118. நாம் அநுஸந்திருக்கவேண்டிய விதம்

நம்மிடத்தில் சில குணங்கள் இருந்தாலுங்கூட அவற்றை ல்பமாக நினைத்து 'அமர்யாத: க்ஷுத்ர: சலமதிரஸூயாப் அஸத் *ஈவிலாத தீவினைகளைத்தனை செய்தனன் கொல், ரஸவபூ: ய்து பாவியானேன்* என்று அநுஸந்திக்க வேண்டிய *பாவமே செ பகவத்க்ருபைக்கு உறுப்பாக ஸ்வல்ப ஹேதுக்கள் தானுப்போலே அவற்றை நாம் அஸத்கல்பமாகவே நினைக்கவும் இருந்தாலுங்கூட லே அவன் அருள் செய்யவல்லவன்' என்று 'இவையும் இல்லாம ்தமாகையாலே நிர்ஹேதுகமென்கிற ஸித் அநுஸந்திக்கவும் ப்ரா ம்பெருமானருளாகிற மிகச் சிறந்த பல தாந்தமே நிலைநிற்கும். சமன்று' என்று சொல்லலாமே தவிர, னுக்கு இந்த ஹேதுக்கள் ஸத் லாகுமோ ? என்று ஆக்ஷேபங்கள் நிர்ஹேதுகமென்று சொல்லிவிட ரயஸாரத்தில் "ப்ரதா ந ஹேது: விளைவதுண்டு. தேசிகன் ரஹஸ்யத என்று கல்வெட்டுச் செய்து ஸ்வாதந்த்ர்யவிசிஷ்டா கருணா விபோ: ் பத்தாந் திருவாய்மொழி போனர். திருவாய்மொழியில் முதற்பத்தி யை ஆழ்வார் அநுப யில் எம்பெருமானுடைய நிர்ஹேதுக கருணை. யாக்கியானித்தருளி வித்து ஈடுபடுவதாக நம்பிள்ளை திருவடிகள் வ திற்கு *'அவ்யா னர்கள். அதையநுஸரித்து தேசிகனும் அவ்விட ஜோதாரபாவாத்'* என்று ச்லோகமிட்டருளினர்.

## 119. பகவத்க்ருபையைப்பற்றி ஸாரமான முடி

இவ்விஷயத்தில் ஸாரமாகச் சொல்லுவதாவது—எம்பெருமானை வசீகரிப்பதற்கு உபாயமாக சாஸ்த்ரங்களில் கர்மஜ்ஞான பக்தி ப்ரபத்திகள் கூறப்பட்டுள்ளனவென்பது ப்ரஸித்தம். சேதனர்களை ரக்ஷித்தருள்வதில் இயற்கையாகவே ருசியுடையனான எம்பெருமான் *'ஸம்ஸாரதந்த்ரவாஹித்வாத் ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே'* என்கிறபடியே இத்தலையில் சிறிது எதிர்பார்க்கிறானென்று சொல்லி வைத்ததுண்டு ஒரு பக்கத்தில். எம்பெருமானுடைய திருவாக்கைப் பார்த்தாலோ *'நாஸௌ புருஷகாரேண நசாப்யந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந'* என்று காண்கிறது;—"நான் புருஷகாரத்தைக்கொண்டும் கடாக்ஷிப்பதில்லை, வேறு எந்த ஹேதுவை யிட்டும் கடாக்ஷிப்பதில்லை; என்றைக்கோ வொருநாள் யாரோவொரு அதிகாரியை என் இச்சையினாலே நான் கடாக்ஷிப்பேன்" என்பது மேலே காட்டின ச்லோகத்தின் பொருள். இங்ஙனம் பேசுகின்ற எம்பெருமானது திருவருளை ஸஹேதுகமென்றுநினைக்க நாமார்? நம்பக்கல் கைம்முதல் கொண்டே எம்பெருமான் நம்மைக் காத்தருள்கின்றானென்று கொள்வது ஹேயமாகும். * மருவித்தொழும் மனமே தந்தாய்* *என்னைத் தீமனங் கெடுத்தாய் * என்கிற அநுஸந்தானம் அக்ருத்ரிமமாகக்கடவது. ...



## 120. ப்ரபத்தியைப்பற்றின ஆராய்ச்சிகள்

ப்ரபத்தி உபாயமா அன்றா என்பது ஒரு விசாரம். உபாயமென்பர் சிலர்; உபாயமன்றென்பர் தேசிகாதிகள். பகவத் க்ருபையின் நிர்ஹேதுகத்வ நிரூபணம் பண்ணினது கொண்டே ப்ரபத்தியின் அநுபாயத்வமும் நிஷ்கர்ஷிக்கப்பட்டதாகும். மேலும் தனிப்படவும் நிரூபிக்கப்படுகிறது. 'கடையில் சென்று எண்ணெய் வாங்கிக் கொண்டுவா' என்று கட்டளையிடப்பெற்ற வொருவன் அது வாங்கக் தோணியையோ கூடையையோ எடுத்துக்கொண்டு புறப்பட்டானாகில் 'எண்ணெயின் ஸ்வரூபத்தையே இவன் தெரிந்துகொள்ளவில்லை போலும்' என்று நினைக்கத் தடையில்லை யன்றோ. அதுபோல, ப்ரபத்தி உபாயமென்று சொல்லப்புகுமவர்கள் ப்ரபத்தியின் ஸ்வரூபத்தையே உள்ளபடி யறிந்திலர் போலும் என்றே நினைக்க வேண்டியதாகும்.

## 121. ப்ரபத்திஸ்வரூப நிரூபணம்

ப்ரபத்தியாவது என்ன? *த்வமேவோபாய பூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி:, சர்ணாகதி:* என்று சாஸ்த்ரம் சொல்லுகிறது. எம்பெருமானையே உபாயமாக அத்யவஸிக்குமதுவே ப்ரபத்தி யென்பது. இத்தகையதான ப்ரபத்தியானது தன்னிடத்தில் உபாயத்வத்தை எங்ஙனே ஸஹிக்கும்? ப்ரபத்தி யென்கிற வஸ்து தேறும்போதே அதன் அநுபாயத்வமும் தேறியே தீரும்.

## 122. நியாயஸித்தாஞ்ஜன காரிகை

*இயம் கேவல லக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா,
ஸ்வஹேதுத்வதியம் ருந்தே கிம்புநஸ் ஸஹகாரிணம்*

என்பது தேசிகனுடைய ஸ்ரீஸூக்திகளில் தலையானது. எம்பெருமானொருவனையே உபாயமாகக் கொள்வதாகிற இந்த ப்ரபத்தியானது தன்னிடத்தில் உபாயத்வ புத்தியைத் தடைசெய்கின்றது; ப்ரபத்திக்கே உபாயத்வ மில்லாதபோது அதன் ஸஹகாரிகளானவற்றுக்கு அது இல்லையென்னுமிடம் தனிப்படச்சொல்லவேணுமோ? என்பது இந்த ச்லோகார்த்தம்.

## 123. நியாஸதிலகஸூக்தி

சாஸ்த்ரங்களில் ஒன்று விதிக்கப்படுமானால் அது உபாயமாக (ஸாதனமாக) இருந்து தீரும் என்பது பொதுவான வொரு கொள்கை. உபாயமாக மாட்டாததை சாஸ்த்ரம் எதற்காக விதிக்கும்? எப்போது விதி ஏற்படுகிறதோ அப்போது விதிக்கப்படுகின்ற

றிருப்பர்கள்; பரமசேதநனுயிருப்பானொருவன் பரிஸமாப்யவர்த்திக்கு மென்றல் இது கூடாதென்று ஸம்சயியாநிற்பர்கள்,'' என்று.

## 187. ந்யாயஸித்தாஞ்ஜன ஸ்ரீஸூக்தி

தேசிகனும் ந்யாய ஸித்தாஞ்ஜந-ஈச்வரபரிச்சேதத்தில் இவ்வா க்ஷேபத்தை யெடுத்துக்காட்டி *ச்ருதேஸ் து சப்த மூலத்வாத்* என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தையே கொண்டு ''யதாகமம் ஸர்வத்ர பூர்ண ஏவ பகவான் [சாஸ்த்ரம் சொன்னபடி பகவான் எங்கும் பூர் ணனே] என்று தலைக்கட்டியருளினுர்.

## 188. வேதாந்தஸங்கிரஹ வியாக்கியானத்தில்

ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிச் செய்த வேதாத்த ஸங்க்ர ஹத்திற்கு ச்ருதப்ரகாசிகா பட்டர் அருளிச் செய்த தாத்பர்ய தீபிகையில். ''நிரம்சே ப்ரதிபதார்த்தம் பூர்ணவர்த்திர்யபி ஸ்வரூபே அம்சபத வ்யவஹார: ஏகஸ்மிந்நேவ வஸ்துநி ஸ்வரூபஸ்ய பூர்ணவர்த்திதயா அந்யத்ர வ்ருத்த்ய யோக்யத்வ சங்காவ்யுதாஸார்த்த:'' என்கிற ஸ்ரீ ஸூக்திகள் உள்ளன. பரம புருஷன் ப்ரதிவஸ்து பூர்ணன் என்கிற விஷயத்தில் இவ்விதமான ஆக்ஷேபந்தன்னையே ச்ருதப்ரகாசிகாசார் யர் உத்க்ஷேபித்து அதற்கு நிராஸம் வந்துவிட்டதாக அருளிச் செய் திருக்கிருரென்பது இதில் ஸுஸ்பஷ்டம். இந்த ஸ்ரீ ஸூக்தி அமைந் திருக்கிற விதம் நன்கு ஆராயத்தக்கது. ''அந்யத்ர வ்ருத்த்யயோக் யத்வ சங்காவ்யுதாஸார்த்த:'' என்று கண்ணுடிபோலுள்ளது. ஒரு வஸ்துவிலேயே ஸ்வரூபம் பரிஸமாப்தமாக இருந்து விட்டால் அது மற்ருெரு வஸ்துவில் இருக்கமுடியாதே யென்கிற சங்கை தள்ளுண்ட தாக இந்த மஹாசார்யர் அருளிச் செய்திருக்கும்போது இன்னமும் அந்த சங்கையையே பிரபலமாகச் செய்து போருமவர்கள் ஸ்ரீ பாஷ்ய கார ஸம்ப்ரதாயஸ்தர்களாகக் கூடுமோ? ''ஏகத்ர ஸமாப்தஸ்வரூ பஸ்ய அந்யத்ர வ்ருத்தியோக்யத்வவாதோ வ்யுதஸ்யதே'' என்று ஸ்ரீ ஸூக்தியிருந்தால் கீழே விவரிக்கப்பட்ட ஆக்ஷேபம் இன்னமும் ஜீவித்துக் கொண்டிருக்கலாம். ஸ்ரீ ஸூக்தியோ அப்படியில்லை. சங்கைக்கு (அதாவது ஆக்ஷேபத்திற்கு)க் கண்டனம் வந்து விட்ட தாக ச்ருதப்ரகாசிகாசார்யர் நிஸ்ஸந்தேஹமாக ஸாதித்துள்ளார். அப்படி யிருக்கவும் இன்னமும் அந்த ஆக்ஷேபமே பிறருடைய மதத்தில் ஓங்கி நிற்கின்றது.

## 189. உபநிஷத்துக்கள் ஓதியிருப்பது

ஸர்வசக்தியுக்தனென்றும் விசித்ர சக்தியுக்தனென்றும் விலக்ஷண சக்தியுக்தனென்றும் அத்புத சக்தியுக்தனென்றும் ஆச்சர்ய சக்தியுக்தனென்றும் அகடித கடநா ஸமர்த்தனென்றும் பல படியாக எம்பெருமானை உபநிஷத்துக்கள் புகழ்கின்றன. ''பரா அஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே'' என்கிற உபநிஷத் வாக்யமொன்றே போதும்.



## 190. கூரத்தாழ்வான் ஸ்ரீஸூக்தியொன்று

இவ்வத்புத சக்தியின் வைகரியைக் கூரத்தாழ்வான் ஸ்ரீ வைகுண்ட ஸ்தவத்தில் ஒரு ச்லோகத்திஞல் விவரித்தருளுகிருர் காண்மின் :—

''கிம்ஸாதந: க்வ நிவஸந் கிமுபாததாந:
கஸ்மை பலாய ஸ்ருஜதீச இதம் ஸமஸ்தம்,
இத்யாத்யநிஷ்டிதகுதர்க்க மதர்க்கயந்த:
த்வத்வைபவம் ச்ருதிவிதோ விதுரப்ரதர்க்யம்.''

என்னுமிந்த ச்லோகத்தின் கருத்தாவது :—எம்பெருமானே ஸர்வ ஸ்ரஷ்டா என்னுமிடத்தில் பிறர் சில குசோத்யங்களைக் கூறுகின்ருர் களாம்; உலகத்தில் ஸ்ருஷ்டி செய்பவர்கள் யாவரும் சில ஸஹகாரி காரணங்களோடு கூடியே படைக்கக் காணுநின்ருேம். ஸர்வஸ்ரஷ் டாவான பரம புருஷனுக்கும் ஸஹகாரி காரணங்கள் இன்னவை யென்று காட்டவேணும். அப்படி காட்டா தொழியில் அவன் ஸ்ருஷ்டிகர்த்தாவென்பது அஸம்பாவிதமாகும். இதற்காகச் சில ஸஹகாரிகளை நிரூபிப்பதாஞல், ஸஹகாரிகளான அப்பொருள்களைப் படைத்தது யார்? என்று கேள்வி வரும். ஈச்வரனே படைத்ததாகச் சொல்லுவீர்கள். அவற்றைப் படைக்கும்போது எவை ஸஹகாரி களா யிருந்தனவென்று கேள்வி வந்தே தீரும். இப்படியே ப்ரச்ந பரம்பரை போய்க்கொண்டே யிருக்கும். கடைசியாக ஸர்வேச்வரஞல் ஸ்ருஷ்டிக்கப்படாத சில பொருள்களுண்டென்று இசையவேண்டி வரும். ஆகவே பகவான் ஸர்வஸ்ரஷ்டா அல்லன் என்றதாகும். இப்படியே மற்ருெரு கேள்வியு முண்டாகிறது; ஸ்ருஷ்டிக்கும்போது பகவான் எந்த இடத்திலிருந்து கொண்டு ஸ்ருஷ்டிக்கிருன். ஒரு அதிகரணமின்றி ஸ்ருஷ்டிக்க முடியாதன்ருே. அதிகரணமாக ஒரு தேசத்தைக் காட்டிஞல் அதைப் படைக்கும்போது எந்த இடம் அதிகரணமாயிருந்ததென்று கேள்வி வரும். இப்படியே இவ்விஷயத் திலும் ப்ரச்ந பரம்பரைகள் சென்று கொண்டே போம். கடைசியாக, பகவாஞல் ஸ்ருஷ்டிக்கப்படாத ஒரு இடம் ஸித்தித்தே தீரும். இத ஞலும் பகவான் ஸர்வஸ்ரஷ்டாவல்லன் என்றதாகும். இங்ஙனே மற்ருெரு கேள்வியு முண்டாகிறது. பிரபஞ்சத்தைப் படைக்கின்ற பரமாத்மாவுக்கு எது உபாதாந காரணமாகின்ற தென்று கேட்கி ருேம். கீழ் ஸஹகாரிகாரண விஷயத்திற் போலவே இதுதன்னிலும் ப்ரச்ந பரம்பரையும் ஆபத்தியும் துல்யம். இனி, பகவான் என்ன பலனைக் கருதிப் படைக்கிருனென்கிற கேள்வியு முண்டாகிறது. ''ப்ரயோஜநமநுத்திச்ய ந மந்தோபி ப்ரவர்த்ததே,'' என்பராதலால் ஸ்ருஷ்டிக்கு ஒரு ப்ரயோஜனம் சொல்லியே யாகவேணும். அந்த ப்ரயோஜனமானது ஸ்ருஷ்டிக்கு முன்னே ஸித்தித்திருக்கவில்லை யென்று கொள்ளவேண்டியதாகும். ஆகவே பகவான் அவாப்த

ஸமஸ்தகாமன் என்கிற ஸித்தாந்தம் குலைந்ததாகும்—என்றிப்படியாகப் பிறர் செய்யும் குசோத்யங்கள் மேற்குறித்த ச்லோகத்தின் பூர்வார்த்தத்தால் அநுவதிக்கப்பட்டு, மேல் உத்தரார்த்தத்தில் ஒரே வார்த்தையால் ஸமாதானம் சொல்லப்பட்டுள்ளது. "த்வத்வைபவம் ச்ருதிவிதோ விதுரப்ரதர்க்யம்" என்கிறவிதுவே ஸமாதானமாய்த்து. விசித்திர விலக்ஷண சக்திசாலியான பகவான்திறத்தில் ப்ரபல ப்ரமாண ஸித்தமான அர்த்தங்களில் குசோத்யம் செய்வது தகாது என்கிறவிதுவே ஸமாதானமாக முடிந்து நின்றது.

## 191. இதைப்பற்றி தேசிகதிவ்யஸூக்தியொன்று

தேசிகனும் அச்யுத சதகத்தில் இப்படியே கூறுகின்றார்; "புரிஸ பஹாண ஸரீரோ புவணணம் ஹோஸி அச்சுய உவாயாணம், ணிஅ ஸங்கப்பஸணஹோ வஹஸி ணிமித்தத்தணம் வி அப்புஅஸத்தீ" என்றார். இதில் முடிவில் "அத்புதசக்தி:" என்றதே ஸாரம். பிறர் செய்யும் குசோத்யங்களையெல்லாம் பகவானுடைய அத்புதசக்தி யோகத்தை நிரூபித்தே நிரஸிக்கவேணு மத்தனையென்று காட்டினாராயிற்று. இப்படி யெல்லாம் அருளிச்செய்கிற ஆசார்யர்களுக்கு 'ச்ருதேஸ்து சப்த மூலத்வாத" என்கிற ப்ரஹ்மஸூத்ரமே வழிகாட்டியாக நிற்கிறது. பிறர் இந்த ஸூத்ரத்தை மேலெழுந்த வாரியாக நிர்வஹித்துவிட்டு, எம்பெருமானுடைய விசித்ரசக்தியை அபதார்த்தமாக எண்ணித் தள்ளிவிட்டுக் குத்ருஷ்டிகளைப் போலவே அந்தர்வ்யாப்தி விஷயத்தில் பூர்வபக்ஷங்களைச் செய்து போருகிறார்கள்.

## 192. ஒரு மருத்துவரின் மனோரதங்கள்

ஒருவர் ஆயுர்வேதம் படித்து (L.M.P.,M.B.B.S.) எல்லாப் பரீக்ஷைகளிலும் தேறினார். ப்ராக்டிஸ் செய்வதற்கு எங்கே போகலாமென்று ஆலோசித்தார். எந்த ஊரில் ஒரு டாக்டருமில்லையோ, அந்த ஊருக்குச் செல்வோமென்று நிச்சயித்து அப்படிப்பட்ட வூரைத் தேடிப்பிடித்து அங்கே குடியேறினார். தமது ஜாகையின் வாசலில் பெரிய போர்டு (Board) மாட்டினார். விளம்பரப்பத்திரிகைகள் அச்சிட்டு ஊரெங்கும் பிரசுரம் செய்தார். ஏழைகளுக்கு இலவசமாக சிகித்ஸைகள் செய்வதாகவும் பிரசுரம் செய்தார். மாதம் ஒன்றாயிற்று. தலைநோவு, வயிற்றுநோவு என்று சொல்லிக்கொண்டுகூட ஒருவரும் இவரிடம் வரவில்லை. இவ்வளவு பெரியவூரில் நோயாளிகள் ஒருவர்கூட இல்லாமலிருக்க முடியுமா ? என்று சிந்திக்கிறார். இவ்வூரில் மூலைமுடுக்குகளில் வேறு டாக்டர்கள் இருக்கக்கூடுமென்றெண்ணி விசாரித்தார். சாதாரண வைத்தியர்கூட இல்லையென்றறிந்தார். பிறகு தானே பல வீதிகளிற் சென்று ஆங்காங்குச் சிலரைச் சந்தித்து 'இவ்வூரில் ஒருவித நோயாளிகளும் கிடையாதா?' என்று கேட்கிறார். ஒவ்வொருவரும் ஒரேவிதமான விடைகூறுகின்றார்கள். என்ன கூறுகின்றார்களென்னில் : "இவ்வூரில் ஒரு



பேராசிரியர் எழுந்தருளியிருக்கிறார் ; அவரிடம் சென்று நாங்களெல்லோரும் உபதேசம் கேட்கிறோம். அதன்படியே ஒழுக்கமுமுடையோம் ; அதனால் எங்களுக்கு ஒருவிதமான பிணியும் வருவதில்லை ; சுகமாக இருந்து வருகிறோம்" என்றார்கள். அந்த உபதேசம் என்னவென்றுகேட்க, (1) தினம் இரண்டு. (2) வாரம் இரண்டு. (3) பக்ஷம் இரண்டு. (4) மாதம் இரண்டு. (5) ருது இரண்டு. (6) அயனம் இரண்டு. (7) வருடம் இரண்டு என்று சொல்லி விவரித்தார்கள். அந்த விவரணத்தை வரிசையாக விளக்குவோம்.

## 193. தினம் இரண்டு

இதற்கு இரண்டு வகையாகப் பொருள். முதல்வகை என்னவென்றால்; பகலில் ஒரு வேளையும் இரவில் ஒரு வேளையுமாக தினப்படி இருமுறை மட்டும் உணவு கொள்வது. இடைப்பலகாரம் கடைப் பலகாரம் என்று ஏதும் அதிகப்படியாகக் கொள்ளாமல் இங்ஙனே அளவுபட உணவு கொள்வது தேஹத்திற்கு ஆரோக்யம். "தஸ்மாத் த்விரஹ்நோ மநுஷ்யேப்ய உபஹ்ரியதே; ப்ராதச்ச ஸாயஞ்ச" என்று வேதமும் இருமுறையுணவையே விதித்தது. கண்டபோதெல்லாம் கண்டபடி தின்பது பிணிக்குமூலமாகும். இது ஒருவகையான பொருள். மற்றொருவகையாவது, உண்பதும் உறங்குவதுமான இரண்டும் தினந்தோறும் கட்டளைப்பட்டிருக்கவேணுமென்பதாம்.

## 194. வாரம் இரண்டு

வாரத்தில் சனிக்கிழமையும் புதன்கிழமையுமாகிற இரண்டுநாள் எண்ணெய் தேய்த்துக்கொள்ளவேணும். சிலர் வாரத்தில் ஒரேநாள் தைலஸ்நானம் செய்வரெனினும் அவ்வாசிரியர் ஆரோக்யமிகுதிக்காக இரண்டுநாள் விதித்தாரென்பர்.

## 195. பக்ஷம் இரண்டு

பதினைந்து நாள் கொண்டது ஒரு பக்ஷமெனப்படும். வாரந்தோறும் தலைசிரைத்துக் கொள்ள வேணும் என்றபடி. இங்கே ஒரு திருத்தம். "வாரம் இரண்டு" என்றதற்கு—வாரத்தில் இரண்டு நாளாவது ஆலயம் சென்று பகவானைத் தொழுவது என்றும், "பக்ஷம் இரண்டு" என்பதற்கு வாரந்தோறும் (வாரத்தில் ஒருநாள்) எண்ணெய் தேய்த்துக்கொண்டு ஸ்நானம் செய்யவேண்டுமென்றும் திருத்திக் கூறுவர் பெரியோர்.

## 196. மாதம் இரண்டு

பதினைந்து நாளைக்கொருமுறை ஏகாதசி வருமல்லவா ? ஏகாதசி தோறும் உணவு கொள்ளாமல் உபவாசமிருக்கவேண்டுமென்றபடி. சாஸ்திரம் ஏகாதசி யுபவாஸத்தை விதித்தது தேஹத்தின் ஆரோக்கியத்தைக் கருதியேயென்க.

### 197. ருது இரண்டு

இரண்டு மாதங்கள் கொண்டது "ருது" எனப்படும். மாதந் தோறும் (அதாவது மாதத்திற்கு ஒருமுறை) வபனம் செய்வித்துக் கொள்ளவேண்டும்; தலை சிரைத்துக் கொள்ளவேண்டுமென்றபடி. சில பெரியோர்கள் எப்போதும் தீக்ஷைவளர்த்திருப்பது தனிப்பட்ட விஷயம். கூரத்தாழ்வான் தேசிகன் போல்வார் அப்படி.

### 198. அயனம் இரண்டு

ஆறு மாதங்கள் கொண்டது ஒரு அயனமெனப்படும். மூன்று மாதங்களுக்கு ஒருமுறை விரேசனங்கொள்ளவேணுமென்றபடி. தேஹத்திலுள்ள கசடுகள் தீர்வதற்காக இதை நியமமாகக் கொள்வர். விரேசனமாவது எண்ணெய் முதலியன அருந்துதல்.

### 199. வருடம் இரண்டு

சிலர் எப்போதும் தேச ஸஞ்சாரமே செய்துகொண்டிருப்பர்; சிலர் ஒருநாளும் இடத்தைவிட்டுப் பெயராமலேயிருப்பர். இரண்டும் பிணிக்கு ஹேதுவாகும். ஆறுமாதங்களுக்கொருமுறை இரண்டொரு வாரமாவது க்ஷேத்ரதீர்த்த யாத்திரை செய்யவேண்டும். ஆக இங்ஙனே ஓர் ஆசிரியர் உபதேசம் செய்வதைக் கேட்டு அதன்படி ஒழுகுபவர்களுக்குப் பிணியொன்றும் வாராதென்ருர்கள். மருத்துவர் இதைக்கேட்டு உடனே வேருேர் ஊரைத் தேடிச் சென்ருர். அங்குச் சென்ற சிலநாட்களிலேயே அவர் இரண்டு மூன்று ந்ர்ஸிங்ஹோம் அமைத்து விட்டார். அது கிடக்க. அன்பர்களே! இந்த உபதேசங் களைக் குறிக்கொள்வீர்களா?

### 200. மருத்துவனுய் நின்றமாமணிவண்ணன்

ஸ்ரீமஹாவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் பகவானுக்கு "பேஷஜம்" என்ற திருநாமமும் "பிஷக்" என்ற ஒரு திருநாமமுமுள்ளது. பேஷஜ மென்ருல் மருந்து; பிஷக்கென்ருல் மருத்துவன். ஆழ்வார்கள் எம்பெருமானை மருந்தாகவும் பேசுகிருர்கள், மருத்துவனுகவும் பேசு கிருர்கள். பேயாழ்வார் "மருந்தும் பொருளுமமுதமும் தானே" என்ருர். நம்மாழ்வார் திருவாய்மொழியில் (7–2–5) "ஆர்மருந்தினி யாகுவார்?" என்கிருர். எது மருந்து? என்னவேண்டியிருக்க, ஆர்மருந்து என்கையாலே அசேதனமன்றிக்கே சேதனமான, அதிலும் பரம சேதனமான மருந்தையே விரும்புமவர் ஆழ்வார் என்று தேறுகிறது. பெரியாழ்வார் "மருத்துவனுய் நின்ற மாமணிவண்ணு!" என்றே எம்பெருமானை விளிக்கின்ருர். ஆழ்வார்களை அடியொற்றி யிருக்கும் நாம் வேறு மருந்தையும் வேறு மருத்துவனையும் தேடா திருக்க முயல்வோமாக.

★

அண்ணுஸ்வாமியின் அமுதமொழியாயிரத்தில்
இரண்டாவது நூறு முற்றிற்று.

## அண்ணுஸ்வாமியின் அமுதமொழியாயிரத்தில் மூன்ருவது நூறு

### [விநோதசுலோகங்கள் நூறு]

### 201. மிக அழகிய ஸ்ரீராமஸ்துதி

"அதஸீஸுமஸுகுமாராத் அவயவஸௌந்தர்யலேசஜிதமாராத்,
கோஸலஸுதாகுமாராத் கோஂயோ தேவ: கரோது ஸுகமாராத்."

முற்காலத்தில் ஒரு ஸ்ரீ வைஷ்ணவ பண்டிதர் ஒரு நீசப்ரபுவிடத் தில் யாசகத்திற்குச் சென்ருர். அந்த பிரபுவுக்கு "மாராத்" என்று பெயர். 'என் பெயரையிட்டுக் கவிபண்ணினீராகில் காசு கொடுக்கி றேன்' என்று கூறின அந்தப் பிரபுவை த்ருப்தி படுத்த விரும்பிய பண்டிதர் "வாய் கொண்டு மானிடம் பாடவந்த கவியேனல்லேன்" என்கிற தமது உறுதியையும் விடமாட்டாதவராய் இந்த ச்லோகத்தை உடனே இயற்றிக் கொடுத்தாராம். 'மாராத்' என்கிற பெயர் இதில் அடிதோறும் வந்திருக்கின்றது. ஆனுல் ச்லோகம் முழுவதும் ஸ்ரீ ராமபிரான் விஷயம். ["அதஸீஸுமேத்யாதி"] காயாம்பூப்போல் ஸுகுமாரனும், வடிவழகின் ஏக தேசத்தினுல் மன்மதனை வென்ற வனுயுமிருக்கிற கௌஸல்யாகுமாரனைக் காட்டிலும் வேறு எந்த தெய்வம் விரைவில் நன்மை செய்யும்? எந்த தெய்வமும் செய்யாது என்கை.

### 202. திராசைப்பற்றின விநோதவார்த்தை

"லகுஸ் ஸமதுலாரூடோ ஹ்யதரீகுருதே குரும்.
அத்ர மத்யஸ்தஜிஹ்வைவ தாரதம்யபரீக்ஷிணீ"

உலகத்தில் அல்பஞன ஒரு மனிதன் மிக்க பெரியானேடு ஸம மாகக் கலந்து பழக ஆரம்பித்து உடனே அப்பெரியானைக் கீழே தள்ளித் தான் மேலேறி நிற்க ஆசைப்படுவது இயல்பு. இவ்விஷ யத்தை நாம் திராசுத் தட்டில் காணலாம். ஒரு தட்டில் மிகவும் கனத்த தான வொரு பொருள் இருக்கின்றது; லேசான [அற்பமான] ஒரு பொருளானது அந்த கனத்த பொருளோடு ஸமமாகத் தானும் அதற்கீடான மற்ருெரு தட்டில் ஏறி யிருந்துகொண்டு உடனே என்ன பண்ணுகிறதென்ருல், அந்த கனத்த பொருளைக் கீழே யிறக்கிவிட்டுத் தான் மேலேறி நிற்கின்றது. (கனமுள்ள பொருள் தாழ இழிவது இயல்பு.) ஆக இப்படி அல்பவஸ்து மேலேறி நிற்க வும், அது கனத்த வஸ்துவைத் தாழ்மைப்படுத்தவும் நேர்ந்தாலும், எந்த வஸ்து உண்மையில் உயர்ந்ததோ, எந்த வஸ்து உண்மையில் தாழ்ந்ததோ இவ்வுயர்த்தி தாழ்வுகளை உள்ளபடி காட்டுவதற்கு ஒரு வஸ்து இருக்கின்றது. அது எது என்னில்; ["மத்யஸ்தஜிஹ்வா"] இதற்கு இரண்டு பொருள். (1) நடுவிலே இருக்கின்ற நாக்கு. (2) நிஷ்பக்ஷபாதிகளாய் மத்யஸ்தர்களா யிருக்கின்றவர்களுடைய

நாக்கு. துலாக்கோலில் நடுவிலே யிருக்கின்ற நாக்கைக் கொண்டு தாரதம்யம் அறிகின்றோம். மத்யஸ்தர்களாயுள்ளவர்கள் ‘இன்னான் அல்பன், இன்னான் கனவான்’ என்பதை அநாயாஸமாகச் சொல்லி விடுவர்கள் என்றபடி.

## 203. யாசகனுடைய அற்பத்தனம் கூறுதல்

“த்ருணாத் லகுதரஸ் தூல: தூலாதபி ச யாசக:,
வாயுநா கிம் ந நீதோஸௌ மாமயம் பீடயேதிதி.”

புல்லைக் காட்டிலும் பஞ்சு லேசு; பஞ்சைக்காட்டிலும் யாசகன் லேசு—என்று ஒருவர் சொன்னார். அவரைப் பார்த்து மற்றொருவர் கேட்டார்—நீர் சொல்வது உண்மையானால் காற்றானது புல்லையும் பஞ்சையும் அடித்துக்கொண்டு போகிறாப்போலே யாசகனையும் அடித்துக்கொண்டு போகவேணுமே! அப்படி எங்கும் காண வில்லையே ஏன்? என்றார். அதற்கு அவர் பதில் சொல்லுகிறார்–[“மாம் அயம் பீடயேத் இதி”] காற்று யாசகனையும் அடித்துக்கொண்டு போகத் தடையில்லை; ஆனால் அதற்கு ஒரு பயம்: இந்த யாசகன் ‘அதைக் கொடு இதைக் கொடு’ என்று, யாரையும் பிடுங்கித் தின்பதையே இயல்பாக வுடையவனாதலால் நம்மையும் பிடுங்கித் தின்பன் என்று அஞ்சியே காற்றானது யாசகனைக் கொண்டு போவ தில்லை யென்றார். இதனால் யாசகத்தொழிலின் தன்மை தெரிவிக்கப் பட்டதாம்.

## 204. தந்தையிற்காட்டிலும் மகனுக்கு ஏற்றம்

“கும்ப: பரிமிதமம்ப: பிபதி, பபௌ கும்ப ஸம்பவோம்போதிம்
அதிரிச்யதே ஸுஜந்மா கச்சித் ஜநகாந் நிஜேந சரிதேந”

உலகத்தில் சில பேர்கள் தாங்கள் தம் தந்தையிற் காட்டிலும் அதிசயித்த செய்கையை யுடையவர்களாக ஆவதுண்டு. இதற்கொரு த்ருஷ்டாந்தம் காணலாம். குடமானது ஒரு மரக்கால் அல்லது இரண்டு மரக்கால் ஜலத்தையே கொள்ளக்கூடியது ; குடத்தில் நின்று பிறந்தவரான அகத்திய முனிவரோ வென்னில், கடல் முழு வதையும் பருகவல்லவரானார். ஜநகமான குடத்தின் செய்கையிற் காட்டிலும் தஜ்ஜந்யரான முனிவரின் செய்கை மிக அதிசயித்ததா யிற்றன்றோ. அகத்தியர் கடல் பருகின வரலாறு புராண ப்ரஸித்தம்.

## 205. மூர்க்கனைத் திருத்த ஒருவராலுமாகாது

“அஜ்ஞ: ஸுகமாராத்ய: ஸுகதரமாராத்யதே விசேஷஜ்ஞ:,
ஜ்ஞாநலவதுர்விதக்தம் ப்ரஹ்மாபி நரம் ந ரஞ்ஜயதி.”

உலகத்திலுள்ள அதிகாரிகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம். 1. ஒன்றுமறியாத மூடர்கள். 2. எல்லாம் நன்கு தெரிந்த விசேஷ



வித்துக்கள். 3. ஸ்வல்பம் தெரிந்து எல்லாம் தெரிந்து விட்டதாக நினைத்துக் கொக்கரிக்குமவர்கள் என மூவகை. இவர்களுள், ஒன்று மறியாத மூடர்களை எளிதில் தெளிவிக்க முடியும். ஏனென்றால், அவர்கள் நல்லாரிடத்து நல்லது தெரிந்துகொள்ள வேணுமென்கிற விருப்பமுடையவர்களாதலால். இவர்களுக்கு மேற்பட்டவர்களான விசேஷ வித்துக்களை த்ருப்தி படுத்துவது மிகவும் எளிது. அவர்கள் பரம ரஸிகர்களாகையாலே அன்னவர்களோடு பேசுவது பரம ரஸமாயிருக்கும். சொல்லுகிற விஷயங்களை மிகவும் ரஸமாகவும் எளிதாகவும் அவர்கள் க்ரஹிக்க வல்லவர்களாதலால் அவர்களை ஆராதிப்பது மிகவெளிது. மூன்றாமவர்களாகத் தெரிவிக்கப்பட்டவர் களுண்டே, அவர்களைத் தெளிவிக்க ப்ரஹ்மாவாலுமாகாது. எல்லா மறிந்ததாகப் பாவனை கொண்டு எதிலும் குதர்க்கம் செய்வதும், இன்னது சொல்லி யிருக்கிற தென்று உணராமலே தூஷிப்பதும் அன்னவர்களது செயலாதலால் அவர்களுடைய வாழ்நாள் அப்படியே கழியவேண்டியதாகுமேயன்றி, தெளிவுபெற்றுக் களிக்க அவர்கள் பாக்கியமற்றவர்களே.

## 206 அவிவேகிகளின் தன்மை கூறுதல்

“வாசாடோக்தௌ வாகம்ருதே வா ஸுகவீநாம்
ஸ்தோகப்ரஜ்ஞாஸ் துல்யத்ருசோ ஹந்த பவந்தி,
கோமாயூநாம் கோகிலயூநாமபி சாப்தேஷு
ஏகாகாரா மாநஸவ்ருத்திர் மஹிஷாணாம்”

உலகத்தில், வீண் வம்பு பேசுகிற வாயாடிகளுமுண்டு. அமு தொழுகுகின்ற இன்சொற்களைப் பொழிகின்ற உண்மைப் பண்டிதர் களுமுண்டு. வாயாடிகளென்பவர்கள் சிறிதும் படிப்பில்லாமல் எதை யாவது வாய்வந்தபடி பேசிக்கொண்டிருப்பதையே தொழிலாக வுடையவர்கள். ரஸிகர்கள் காது கொடுத்துக் கேட்கும்படியான பேச்சு அவர்களிடத்தில் ஒன்றுமிராது. கசடறக் கற்றுணர்ந்தவர் களோ வென்னில், அமுத மயமாகப் பேசி “கலையிலங்கு மொழி யாளர்” என்னும்படி ஸகல சாஸ்த்ரார்த்தங்களும் ரமணீயமாகத் தொனிக்கும்படியான வாய்வீறு உடையவர்களாயிருப்பர்கள். இவ்விருவகைப் பட்டவர்களுடையவும் பேச்சுக்களை விவேகிகளான ரஸிகர்கள் கேட்டால், வாயாடிகளின் பேச்சை வெறுத்து உண்மைப் பண்டிதர்களின் பேச்சை உவப்பர்கள். அறிவிலிகளான அற்ப ஜனங்களோ வென்னில், பேச்சில் வாசி அறிய மாட்டாமல் இரண்டி லும் ஒரு நிகராயிருப்பர்கள். இது என் போல வென்னில் ; காட்டில்

ஒரு புறத்தில் நரிகள் ஊளையிடுகின்றன; மற்றொரு புறத்தில் குயில்கள் பஞ்சமராகம் பாடுகின்றன; இவ்விரண்டு த்வனிகளும் எருமைக் கடாக்களின் காதிலே விழும்; விழுந்ததனால் என்னாகும்? ஏதேனும் வாசி தெரியுமோ? அதுபோல வென்க: சொற்களில் ரஸமறிந்து உகப்பார் சிலரேயாவர். வம்பும் பேச்சுக்களையுகப்பவர்களே உலகில் மலிந்துள்ளார்கள்.

## 207. நாம் எண்ணினபடியாகாதென்பது

“ராத்ரிர் கமிஷ்யதி பவிஷ்யதி ஸுப்ரபாதம்
பாஸ்வாந் உதேஷ்யதி ஹஸிஷ்யதி பங்கஜஸ்ரீ:,
இத்தம் விசிந்தயதி கோசகதே த்விரேபே
ஹா ஹந்த ஹந்த நளிநீம் கஜ உஜ்ஜஹார.”

காட்டில் ஒரு வண்டு; அது தாமரைப் பூவினுள் மதுவைப் பருக வேணுமென்னும் விருப்பத்துடன் ஒரு தாமரை யோடையில் ஒரு கமலத்தினுட் சென்று புக்குப் பருகத் தொடங்கிற்று; அப்பொழுது மாலைப் பொழுதாயிருந்தபடியால் இரவி மறைந்தவாறே அம்மலர் மூடிக்கொண்டது. எவ்வளவு பிரயாஸப்பட்டும் வண்டு வெளிக் கிளம்ப முடியவில்லை. இரவு முழுவதும் அங்கேயே தங்கியிருக்க நேர்ந்தது. அது மனதில் எண்ணமிட்டுக் கொண்டிருந்ததாவது—‘சிறிது பொறுத்துக்கொண்டு இங்கே யிருந்தோமாகில் இராப் பொழுது கழிந்திடப்போகிறது; கதிரவன் வந்து தோன்றப் போகிறான்; தாமரை மலரப்போகிறது; உடனே நாம் வெளியில் யதேஷ்டமாகத் திரிந்து களிக்கப்போகிறோம்’—என்று. இங்ஙனே எண்ணிக் கொண்டிருக்கும்போதே ஒரு காட்டானை வந்து அவ்வோடையிற் புகுந்து அங்கிருந்த தாமரை மலர்கள் முழுவதையும் ஒரே கபளமாக வாரி விழுங்கிவிட்டது; இவ்வண்டும் அவ்வானையின் வயிற்றினுள்ளே ஜீர்ணித்துவிட்டது.

இதனால் இவ்வுலகில் நாமெல்லாரும் பலபலவாறு எண்ணமிட்டுக் கொண்டிருக்க, நம் எண்ணமெல்லாம் ஊமனூர் கண்ட கனவிலும் பழுதாயொழிய பகவத் ஸங்கல்பமே பலீயஸ்ஸா யிருக்குமென்று காட்டியவாறு. “அந்யோ ஹ்யந்யத் சிந்தயதி ஸ்வச்சந்தம் விததாம் யஹம்,” என்று பகவான்தானும் பணித்துளன்.

## 208. இளமையில் கல்விபயிலாமையினாலாகும் கஷ்டம்

“அங்குஷ்டாக்ரபரீணாஹ ஜிஹ்வாக்ராயாஸபீரவ:,
ஸர்வாங்கீணபரிக்லேசம் ஸஹந்தே ஹந்த ஸந்ததம்.”

கட்டை விரலின் நுனியளவான நாக்கின் நுனியை இளமையில் சிரமப்படுத்த அஞ்சி யிருந்தவர்கள் தங்கள் வாழ்நாள் முழுவதும்



ஸகல அவயவங்களையும் சிரமப்படுத்தக் கடமைப்பட்டவர்களாவர். இதன் கருத்து யாதெனில், இளமையில் நாவைச் சிறிது சிரமப்படுத்திக் கல்வி பயின்று விட்டால் ஸுகமாக ஜீவனம் நடத்திக் கொள்ளலாம்; அங்ஙனம் கல்வி பயிலாதவர்கள் பிறகு ஜீவிகைக்காக ஸகல அவயவங்களினாலும் சிரமப்பட வேண்டியதாகும். தலையாலே மூட்டைகள் சுமந்தும், காலாலே வழி நடந்தும், கையாலே விறகு பிளத்தல் முதலியன செய்தும் ஆகவிப்படிப் பல பல அவயவங்களைச் சிரமப்படுத்தியே ஜீவிக்க நேரும். ஸ்வல்ப காலம் ஒரு அவயவத்தைச் சிரமப்படுத்தக் கூசுமவர்களுக்கு வாழ்நாள் உள்ள வரையில் இப்படி சிரமப்பட நேர்கின்றபடியால் இளமையில் கல்வி பயில முயல்வதே நன்று என்று தெரிவித்தவாறு.

## 209. தருமஞ்செய்யவேண்டியதன் அவசியம்

சத்வாரோ தநதாயாதா: தர்மாக்நிந்ருபதஸ்கரா:,
ஜ்யேஷ்டபுத்ராவமாநேந த்ரய: குப்யந்தி ஸோதரா:”

பணத்திற்குப் பங்காளிகள் நான்கு பேர்கள்; 1. தருமம். 2. நெருப்பு. 3. அரசன். 4. கள்ளன் ஆக இந்த நால்வரும் பணத்தைக் கூறுகொண்டு அனுபவிக்கப் பிள்ளைகளாகப் பிறந்தவர்கள். “தஸ்மாத் ஜ்யேஷ்டம் புத்ரம் தநேந நிரவஸாயயந்தி” என்று வேதத்தில் சொல்லியபடி மூத்த புதல்வனுக்கு அதிகமான ப்ராப்தி உண்டாதலால் இங்கு மூத்த குமாரனாகச் சொல்லப்பட்ட தருமத்திற்கு அதிக பஹுமானம் அமைய வேண்டும். அப்படியல்லாமல் அவனை அவமானம் செய்யுமளவில் மற்ற மூன்று ஸஹோதரர்களும் சீற்றங் கொள்வர்களாம். (அதாவது) செல்வத்திற்கு தர்ம விநியோகம் இல்லையானால் அக்நிநஷ்டமாகவும், அரசர்களால் அபஹ்ருதமாகவும், கள்ளர்களால் கவரப்பட்டதாகவும் இப்படி தீயவழிகளிலே அந்தப் பணத்திற்குச் அழிவு ஏற்பட்டு விடுமென்றபடி. ஆதலால், தர்மத்திலே முக்கியமாகக் கண் செலுத்த வேணுமென்றதாயிற்று.

## 210. சிறந்தபொருளின் சீர்மையறியாமை

“ஆக்ராதம் பரிசும்பிதம் பரி முஹுர் லீடம் புநச் சர்விதம்
த்யக்தம் வா புவி நீரஸேந மநஸா தத்ர வ்யதாம் மா க்ருதா:,
ஹேஸத்ரத்ந! தவைததேவ குசலம் யத் வாநரேணாதராத்
அந்தஸ்ஸாரவிலோகநவ்யஸநிநா சூர்ணீக்ருதம் நாச்மநா.”

ஒரு குரங்கின் கையில் மிகச் சிறந்த ரத்னமொன்று கிடைத்தது. அது ஒரு சிறு பழம்போல் மிக அழகியதாகக் காணப்பட்டது. அதை அந்தக் குரங்கானது மோந்து பார்த்தது, முத்தமிட்டது, பலகால் நக்கிப் பார்த்தது; வாயினுள் போட்டு மென்று பார்த்தது. ஒன்றிலும்

ஒரு ரஸமும் ஏற்படவில்லை. முடிவில், இது பயனற்றதென்று கருதி நிலத்தில் வீசி யெறிந்துவிட்டது. இதைக் கண்டுகொண்டிருந்தவொருவன் அந்த ரத்னத்தை விளித்துக் கூறுகின்ருன். "ஓ விலையுயர்ந்த ரத்னமே! நீ ஒரு குரங்கின் கையில் அகப்பட்டுக்கொண்டு இப்படி மோந்து பார்க்கப் பட்டும் முத்தமிடப்பட்டும் நக்கப்பட்டும் வாயிலிட்டு மென்று பார்க்கப்பட்டும் கடைசியாக நிலத்தில் வீசி யெறியப்பட்டது பற்றிச் சிறிதும் வருந்தாதே. இங்கு நீ மிகவும் ஸந்தோஷிக்கத் தக்க விஷயம் ஒன்றுண்டு. அதாவது—'இதனுள்ளே என்ன இருக்கிறது பார்ப்போம்' என்று உள்மருமம் காணவிரும்பிக் கல்லையிட்டு நறுக்கிப் பார்க்க அந்தக் குரங்கு விரும்பியிருக்குமானுல் நீ பொடி பொடியாகவன்ரே போயிருப்பாய். அப்போது ஒருவர்க்கும் பயன்பட்டிலையாவாயே. அவ்வளவு பரிபவம் உனக்கு நேராமல், ஒருகால் வாசியறிந்தவர்களின் கையில் அகப்பட்டு அநுபவ யோக்யமாகும்படியான நிலைமை உனக்கு நேர்ந்திருக்கின்றதன்ரே. இதற்கு நீ மிகவும் உகக்க வேணும்" என்ருனுயிற்று. இது அந்யாபதேசமான பேச்சு. இதில் ஸ்வாபதேசம் விவேகிகளால் உய்த்துணரத்தக்கது. ஸகல சாஸ்த்ரஜ்ஞானமும் படைத்து மஹா ப்ராஜ்ஞனைவொரு மஹாவித்வான் ஞானச்சுவடறியாத அவிவேகியின் கையில் பரிபவப்பட்டுக்கொண்டு கிடக்க அது நோக்கிக் கூறிய வார்த்தை இது.

இங்கே நினைவுக்கு வருகிற ஒரு லௌகிக கதையுமுண்டு. ஒருவனுக்குக் காலில் சொரிசிரங்கு கிளம்பியது. அதை அவன் ஒரு வைத்யனிடம் காட்டினுன். 'நாலு நாழிகை பொடுதலையை வைத்துக் கட்டியிருந்தால் குணமாய்விடும்' என்று அந்த வைத்தியன் கூறினுன். பொடுதலை என்பது ஒரு பச்சிலை. அது தெரிந்துகொள்ளப் பெருத இந்த நோயாளி பொடுவுள்ள தலைபொடு தலை என்று கிரஹித்தான். தலையில் தோன்றும் ஒருவகையான விகாரத்திற்குப் "பொடு" என்று பெயர். அதுவுள்ள தலையுடையானெருவனைத் தேடிப் பிடித்துக் கொணரும்படி கட்டளையிட்டான். அவன் பெரிய தனிகனுகையாலே அக் கட்டளையைச் சிரமேற்கொண்ட சேவகர்கள் ஓடிச்சென்று ஒரு பொடுதலைக்காரனைத் தேடிப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்தார்கள். உடனே அவனது தலையை நோயாளி தன் காலிலே நாலு நாழிகை கட்டிவைத்துப் பின்னர் விடுதலை செய்தான். எதற்காக இவனிப்படி செய்தானென்றறிந்து கொள்ள வேண்டி அந்தப் பொடுதலைக்காரன் வினவினுன். மருத்துவன் சொல்லியிருந்ததை அப்படியே நோயாளி உரைத்தான். வைத்தியன் சொன்ன பொடுதலையென்பது ஓஷதிவிசேஷமென்று அவனுக்குத் தெரியுமாகையாலே உடனே அந்த வைத்யனிருக்கிற திக்கை நோக்கித் தெண்டனிட்டுக் கைகூப்பி நின்று, "மஹாநுபாவரே! பொடுதலையை நசுக்கி யிடித்துக் கட்டவேண்டியதென்று கட்டளையிடாமல், பொடுதலையைக் கட்டவேண்டியதென்று இம்மட்டில் கட்டளையிட்டு வைத்தீரே! உமக்கு நல்ல புண்ணியமுண்டு" என்ருனும். அவன் தலை இடிபடாதது போல ரத்னமும் குரங்கின் கையில் பொடிபடாமல் தப்பினது விசேஷம்



## 211. இயற்கையான புத்தியின் இனிமை

"நிபுணுநாம் ஆபால்யாத் ப்ரதிபா: காலே ஸ்வத: ஸ்புரந்த்யேவ,
நஹி கோபி கோகிலாநாம் பஞ்சமராகாந் கதாப்யுபாதிசதி."

"ப்ரதிபை" என்பது விலக்ஷணமான புத்தியின் தோற்றம். அது ஒருவருடைய கற்பனையினுல் விளைவதன்று. இயற்கையாகவே இளமையிலேயே நிபுணர்களுக்கு அந்த ப்ரதிபை உண்டாய் விடுகின்றது. குயில்களுக்குப் பஞ்சமராகத்தை ஒருவன் கற்பிக்கின்ருனே. இல்லையே; அது போலவே இதுவும்.

## 212. அறிஞரின்அறிவு வாய்திறந்தாலன்றித் தெரியாது

"ரேரே கோகில! மாபஜ மௌநம் கிஞ்சி துதஞ்சய பஞ்சம் ராகம்,
நோ சேத் த்வாமிஹ கோ ஜாநீதே காக கதம்பக பிஹிதே சூதே.'

ஒரு குயிலானது காக்கைக் கூட்டங்கள் நிறைந்தவொரு மாமரத்தின் மீதேறி வாய் திறவாமலிருக்க, அதை நோக்கி ஒருவன் சொல்லுவதாக அமைக்கப்பட்டது இந்த சுலோகம். "ஓ குயிலே! நீ வாய் திறவாதிருப்பது தகுதியன்று. உனது பஞ்சமராகத்தைச் சிறிது காட்டாய்; நீ வாய்திறவா திருந்தாயாகில், இந்த மாமரத்தில் வந்து உட்கார யோக்யதை யில்லாமலிருக்கச் செய்தேயும் மதியீனத்தால் வந்து உட்கார்ந்திருக்கின்ற இக்காக்கைக் கூட்டங்களுக்கும் உனக்கும் வாசி தெரிந்துகொள்வதெப்படி.?" (இதற்கு உள்ளுறை பொருள் யாதெனில்;) வாக்மிகளான பண்டிதர்களே வந்து வீற்றிருக்கத்தக்கவொரு மஹா ஸபையிலே வாய் திறக்க யோக்யதையற்ற சில மூடர்கள் இருந்து காச்சு பூச்சென்று கத்திக்கொண்டிருக்கையில் அவர்களிடையே மஹாவாக்மியானவொரு சிறந்த வித்வான் வாய்திறவாதிருப்பதைக் கண்டவொரு ரஸிகன் அவரை நோக்கிக் கூறுகின்ருன்: "ஸ்வாமிந்! தேவரீருடைய திருநாவீறு யாவர்க்கும் தெரியும்படி வாய்திறந்தொன்று பணிக்க வேணும்," என்று.

## 213. பழகப்பழகப் பாலும் புளிக்கும்

"அதிபரிசயாத் அவஜ்ஞா ஸந்ததகமநாத் அநாதரோ பவதி
மலயே பில்லபுரந்த்ரீ சந்தநதருகாஷ்டமிந்தநம் குருதே."

"பழகப் பழகப் பாலும் புளிக்கும்" என்கிற கதையாய் அதிக பரிசயம் செய்தால் அவமதிப்பு நேரிடும்; ஓரிடத்திற்கு அடிக்கடி சென்றால் அநாதரவு ஏற்படும். (இதற்கு உதாரணம்) மலய மலையில் குறத்திகளின் கையில் சந்தனக் கட்டைகள் மலிவாகக் கிடைத்து விட்டபடியால் அக்குற மாதர் அவற்றின் மதிப்பை யறியாமல் அவற்றை விறகாக உபயோகிக்கக் காணா நின்றோம். அருமையான வஸ்து அருமையாகவே யிருந்தால் இப்படியாகாதன்றோ.

## 214. தங்கமும் குன்றுமணியும்

"ஹேம்ந: கேதோ ந தாஹேந ச்சேதேந கஷணேந வா,
ஏததேவ மஹத் து:க்கம் யத் குஞ்ஜாஸம தோலநம்."

தங்கத்தை நெருப்பிலிட்டு தஹிக்கிறோம்; உளியையிட்டு வெட்டுகிறோம்; உரை கல்லிலேயிட்டுத் தேய்க்கிறோம். இத்தகைய தண்டனைகளுக்காக அந்தத் தங்கம் சிறிதும் வருந்துவதில்லை; திராசில் நிறுக்கும்போது அதை யொரு தட்டிலும் குன்றுமணியை யொரு தட்டிலுமிட்டு நிறுக்கிறோமல்லவா? இது பற்றியே அதற்குப் பெருந் துயரம். (இதன் உட்கருத்து;) ஒரு சிறந்த வித்வானை அடித்தாலும் புடைத்தாலும் அவற்றால் அவனுக்கு வருத்தமுண்டாகாது; ஒரு அல்பஜ்ஞனோடு ஒப்பிட்டுச் சொன்னால் அதுவே அவனுக்கு துக்ககரம்.

## 215. முயற்சிசெய்வது அவசியமானது

ப்ரயத்ந: கலு கர்த்தவ்யோ மார்ஜாரஸ் தந்நிதர்சநம்,
ஜந்மப்ரப்ருதி கௌர் நாஸ்தி பய: பிபதி நித்யச:

"முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்" என்றபடி எப்போதும் முயற்சிசெய்து கொண்டிருக்கவேணும். அதனால் லாபமுண்டாகியே தீரும். இவ்விஷயத்திற்குப் பூனையே நிதர்சனம். அது பிறந்தநாள் தொடங்கிப் பசுவுக்கு ஒரு புல் வாங்கி யிட்டதில்லை; பசு எங்கிருக்கிற தென்பதையும் அறியாது அது. ஆனால் நிரந்தரம் முயற்சி செய்து கொண்டே யிருப்பதனால் அது பால்குடியாத நாளே யில்லை.

## 216. கஸ்தூரிமானைப் பற்றின பரிதாபம்

"கஸ்தூரிகாம்ருகாணாம் அண்டாத் ஸௌரபமசேஷமாதாய
யதி புநரஹம் விதிஸ் ஸ்யாம் கலஜிஹ்வாயாம் நிவேசயிஷ்யாமி"

மான் ஜாதியில் கஸ்தூரிமான் என்பது ஒரு ஜாதி. அந்த மானுடைய தொப்புளில்தான் கஸ்தூரியுள்ளது. பகவானுடைய ஸ்ருஷ்டிகளில் இஃதொன்று. அந்த நாபியிலிருந்து கஸ்தூரியெடுக்க



வேணுமானால் நாபியைக் கத்தியினாலறுத்தேயெடுக்கவேணும். இதனால் அந்த மானுக்கு உண்டாகும் ஹிம்ஸையைப் பற்றிச் சொல்லவேணுமோ? இதற்கு வருத்தமுற்ற ஒரு ரஸிகன் இந்தச்லோகம் சொல்லுகிறான்: ப்ரஹ்ம ஸ்ருஷ்டியில் இப்படி ஏற்பட்டிருப்பது மிகவும் சோசநீயம். நான் ஸ்ருஷ்டிகர்த்தாவாகப் பிறப்பேனாகில் கஸ்தூரிம்ருகங்களிடத்துள்ள கஸ்தூரியையெல்லாமெடுத்து துர்ஜனங்களின் நாக்கிலே வைத்திடுவேன். எதற்காக? துர்ஜனங்களின் நாக்கு ஸதா பகவத்பாகவத நிந்தையிலேயே ஊன்றியிருப்பதால் அந்த நாக்கை யறுக்கவேண்டியது மிகவும் அவசியம். இந்த வியாஜத்தினால் அதையறுக்க நேருமன்றோ. [இந்த ச்லோகத்தில் "அண்டாத்" என்றுள்ளது. அண்டத்திலிருந்து நாபி வரையிலும் கஸ்தூரியிருப்பதாக ப்ரஸித்தி. நாபியை யறுத்தே கஸ்தூரியெடுப்பதாகவும் ப்ரஸித்தி. ஆனது பற்றியே கஸ்தூரிக்கு "ம்ருகநாபி" யென்றே பெயர் வழங்குகின்றது].

## 217. மஹான்களின் வள்ளல்தனம்

"சாதகஸ் த்ரிசதுராந் பய:கணாந் யாசதே ஜலதரம் பிரபாஸயா
ஸோபி பூரயதி விச்வமம்பஸா ஹந்த ஹந்த மஹதாமுதாரதா."

மஹான்களின் ஔதார்ய விசேஷத்தைப்பற்றி அந்யாபதேசமாகச் சொல்லுகிறது இந்த ச்லோகம். சாதகபக்ஷியானது தன்னுடைய தாஹசாந்திக்காகக் குளம் குட்டை ஏரி மடுக்கள் எதிலும் வாய்வைக்காமல் மேகத்திலிருந்து நேராகப் பெருகுகின்ற தாரையையே பருகுவதாக நூற்கொள்கை. அநந்ய கதியான சாதகத்திற்காகவே மேகம் வர்ஷிப்பதாக வைத்து இந்தச்லோகம் சொல்லப்படுகிறது. சாதகபக்ஷியானது பெருமழையை விரும்பவில்லை; தனது தாஹம் தணிய ஸ்வல்ப ஜலபிந்துக்களையே விரும்புகின்றது. மேகமோவென்னில் அதற்காகப் பெய்யும் வியாஜத்தினால் உலகத்தையெல்லாம் ஜலத்தினால் நிரப்புகின்றது. மஹான்களின் வள்ளல் தனம் இப்படியன்றோ இருக்கும். சிலர் ஸ்வல்பப்ரார்த்தனை பண்ண, அதுவே வியாஜமாக உலகத்துக்கெல்லாம் உதவி செய்வது மஹான்களின் இயல்பு. தேவர்களும் தசரதவஸு தேவாதிகளும் ப்ரார்த்திக்க ஸ்ரீ ராமக்ருஷ்ணாதி பகவதவதாரமென்று இதிஹாஸமுள்ளது. அவதாரத்தினால் அன்னவர்களடைந்த பலன் மிகச் சிறிது. உலகமெல்லாம் பெறும் பேறு அபரிமிதம்.

## 218. சேரத்தகாதஇடத்தில் சேரலாகாது

"லோகாநந்தந சந்தநத்ரும ஸகே நாஸ்மிந் வநே ஸ்தீயதாம்
துர்வம்சை: பருஷைரஸாரஹ்ருதயைராக்ராந்தமேதத் வநம்

தே ஹி அந்யோந்ய நிகர்ஷஜாத தஹநஜ்வாலாவலீ ஸங்குலா:
ந ஸ்வாந்யேவ குலாநி கேவலமஹோ ஸர்வம் தஹேயுர் வநம்

ஒரு மூங்கிற் காட்டில் சந்தநமரமொன்று முளைத்து வளர்ந்து கொண்டிருந்தது. அதைப் பார்த்துச் சொல்லுவதாக இந்த ச்லோகம் வைக்கப்பட்டது. மூர்க்கர்களும் அரஸிகர்களும் துஷ்டர்களும் நிறைந்த வொருக்ராமத்தில் குடிபுகுந்தவொரு மஹானை நோக்கிச் சொல்லுவது இங்கு விவக்ஷிதம். சுலோகத்தின் பொருள் கேண்மின்: உலகத்தை யெல்லாம் மகிழச் செய்யவல்ல ஓ சந்தனமரமே! நீ இந்தக் காட்டிலிருக்கத் தகாது. இந்தக் காடோவென்ருல், தீக்ஷ்ணங்களாயும் உள்ளே ஸாரமற்றவையாயுமிருக்கிற "துர்வம்சங்களாலே"—தீய மூங்கில்களினுல் ஆக்ரமிக்கப்பட்டிரா நின்றது. இவை ஒன்ருேடொன்று நெருக்குண்டு நெருப்பைக் கிளப்பும்; அந்த நெருப்பினுல் தங்கள் கூட்டத்தைமட்டு மன்றிக்கே காடு முழுவதையும் கொளுத்திவிடும்; மூங்கிற் காடு தொலைந்தொழிவதனுல் நஷ்ட மொன்றுமில்லை. உலகமெல்லாம் விரும்பும்படியான உனக்குக் கெடுதி விளைந்தால் உலகமேதபிக்கும். ஆதலால் சந்தனமரமே! நீ இங்கிருக்கவேண்டா—என்கை. இதில் "துர்வம்சை: பருஷை ரஸாரஹ்ருதயை:" என்ற மூன்று பதங்களும் சிலேடையுள்ளவை. மூங்கில்களுக்கு வம்சமென்று பெயர். இங்குச் சொல்லப்படுகிற தன்மைக்கு ஏற்ப "துர்வம்சை:" எனப்பட்டது. முட்கள் நிரம்பியிருப்பதால் "பருஷை" எனப்பட்டது. உள்ளே உளுத்துக் கொட்டும்படியாய் ஸாரமற்றிருப்பதால் "அஸாரஹ்ருதயை:" எனப்பட்டது. இங்கு மூங்கில்களைக் குறித்துச் சொல்லுவது ப்ரஸ்துதமாதலால் "துர்வம்சை:" என்பது முதலான மூன்று பதங்களும் அங்கு மிகப் பொருந்தும். ஸத்குலப் ரஸூதர்களல்லர், கொடுமையையே இயல்பாகவுடையவர்கள், நல்ல நெஞ்சு இல்லாதவர்கள் என்றவாறு. மூங்கில்கள் ஒன்ருேடொன்று நெருக்குண்ணும் போது நெருப்புக்கிளரும். அதனுல் அங்குள்ள இதர விருக்ஷங்களுக்கும் சேத மேற்படும். மூர்க்க ஜனங்கள் தாங்கள் பரஸ்பரம் பிணங்கி முடிவதோடு நில்லாமல் அருகேயுள்ள ஹிதபரர்களான மஹான்களையும் முடித்துத் தொலைப்பர்கள். ஆகவே மூர்க்க ஜனங்களுள்ள விடத்தில் மஹநீயர்கள் வஸிக்கத் தகாது என்பது அந்யாபதேசத்தாலே தெரிவிக்கப்பட்டதாயிற்று.

## 219. துர்ஜனங்களின் இயல்பு

"ஜீவநக்ரஹணே நம்ரா: க்ருஹீத்வா புநருந்நதா:,
கிம் கநிஷ்டா: கிமு ஜ்யேஷ்டா: கடீயந்த்ரஸ்ய துர்ஜநா:"

ஏற்றச் சாலுக்கும் துர்ஜனங்களுக்கும் சிலேடை. "ஜீவநக்ரஹணே" என்றதில் ஜீவனமென்று ஜலத்திற்கும் பெயர், ஜீவிகைக்கும் பெயர். ஏற்றச்சால் ஜலம் மொண்டுகொள்வதற்காக வணங்கும்; [கீழேயிழிவதுதான் வணக்கமாகச் சொல்லப்படுகிறது.] தண்ணீரை மொண்டு கொள்ளும் வரையில்தான் வணக்கம்; மொண்டு கொண்டாயிற்றென்ருல் உடனே தலைதூக்கும். இவ்வண்ணமாகவே துர்ஜனங்களும் தமக்கு ஜீவிகை வேண்டும்போது தாழ்ச்சியுடனிருந்து, ஜீவிகை கைப்பட்டவாறே செருக்குக் கொண்டு கிடக்கும். இத்தன்மையொற்றுமையினுல் துர்ஜனங்கள் ஏற்றச்சாலுக்கு ஜ்யேஷ்ட ப்ராதாக்களோ? கநிஷ்ட ப்ராதாக்களோ? என்று ஸந்தேஹித்துக் கூறுவது சமத்காரம்.



## 220. குற்றத்தை மறைத்து நற்றத்தைப் புகழவேண்டும்

"குணதோஷௌ புதோ க்ருஹ்ணந் இந்துக்ஷ்வேளாவிவேச்வர:,
சிரஸா ச்லாகதே பூர்வம் பரம் கண்டே நியச்சதி."

உலகில் நபர்களிடத்திலும் அவர்களது உக்திகளிலும் குணமேயிராது; தோஷமேயிராது; குணதோஷங்கள் கலசியேயிருக்கும். ஆனுல், விவேகிகள் இரண்டையும் தெரிந்துகொண்டு தோஷங்களை வாய்விட்டு வெளியிடாமலும், குணங்களைத் தலைகுலுக்கிக் கொண்டாடியும் போரவேணும். (இதற்கொருநிதர்சநம்.) மஹாவிவேகியான பரமசிவனிடத்தில் சந்திரனும் விஷமும் கிடைத்தன. சந்த்ரமௌலீச்வரனென்னும் பெயருக்குத் தகுதியாக சந்திரனை சிரஸாவஹித்துக் கொண்டாடுவதையும், நீல கண்ட:, காலகண்ட: என்னும் பெயர்களுக்குத் தகுதியாக விஷத்தைக் கழுத்தினுள்ளே யடக்கிவிட்டதையும் காணுநின்ருேம். இதற்குமாருகக் குணங்களை மறைப்பதும் தோஷங்களையே வெளியிடுவதுமான உலக வியற்கை வெறுக்கத்தக்க தென்றதாயிற்று.

## 221. தீயார்கள் வாக்கின் கொடுமை

"அஹமேவ குருஸ் ஸுதாருணாநாம்
இதி ஹாலாஹல! மா ஸ்மதாத த்ருப்ய:
நநுஸந்தி பவாத்ருசாநி பூயோ
புவநேஸ்மிந் வசநாநி துர்ஜநாநாம்"

ஹாலாஹல விஷத்தைப் பார்த்துச் சொல்லுவதிது. "ஓ ஹாலாஹலமே! க்ரூரவஸ்துக்களில் நானே மேம்பட்டவனென்கிற செருக்கு உனக்கு வேண்டாம்; இவ்வுலகில் துர்ஜனங்களின் வாக்குக்கள் உன்னைப் போன்றவை மலிந்திருப்பது ப்ரஸித்தமன்ருே, உன்னைப் போன்று ஒருவருமில்லாவிடில் நீ அத்விதீயனென்று செருக்குக்

கொள்ளலாம்; அப்படிக்கு இல்லையே" என்றவிதனுல்—துர்ஜனங்கள் விஷவாக்குக்களென்றும், அது வியக்கத்தக்கதன்று என்றும் தெரிவித்தவாறு.

## 222. காதலிகளின் காதல்சிறப்பு

"யாமி நயாமீதி தவே வததி புரஸ்தாத் க்ஷணேந தந்வங்க்யா:
களிதாநி புரோவலயாநி அபராணி புநஸ் ததைவ தளிதாநி."

உத்தம நாயகியின் ஸ்வபாவத்தைத் தெரிவிக்கும் சுலோகமிது. நாயகியை விட்டிட்டுத் தனியே தேசாந்தரம் போக நினைத்த நாயகன் அவளை நோக்கி "யாமி" என்ருன்; வெளியூருக்குப் போகிறே னென்றபடி. இதைக் கேட்டவாறே, அக்காதலி கையிலணிந்து கொண்டிருந்த வளைகள் கழலத் தொடங்கிப் பாதிவளைகள் கழன்று விழுந்துவிட்டனவாம்; காதலனுடைய தேசாந்தர ப்ரயாண ப்ரஸ் தாவ மாத்திரத்திலேயே காதலி உடலிளைத்துப் போயினளென்ற வாறு. மேனி மெலிந்தால் வளை கழலுமன்ருே. இதைக்கண்ட காதலன் நம்முடைய விரஹத்தை ஸஹிக்க மாட்டாளிவளென்று தெரிந்துகொண்டு உடனே "நயாமி" என்ருனும். இதற்கு இரண்டு பொருள். ந-யாமி என்று இருபதங்களாகக் கொண்டால் 'அம்மா! உன்னைவிட்டு நான் போவதில்லை' என்று பொருள்படும். "நயாமி" என்று முழுப்பதமாகக்கொண்டால் 'ஒருகால் போவதாயிருந்தால் உன்னைவிட்டுத் தனியே போகையன்றிக்கே உன்னையும் உடனழைத் துக் கொண்டு போகிறேன்' என்று பொருள்படும். இவ்விரு பொருள் களையும் விவக்ஷித்தே "நகச்சாமி" என்று சொல்லாமல் "நயாமி" என்ருன் காதலன். இது கேட்டவுடனே காதலியின் மற்றுள்ள கைவளைகள்படீல் படீலென்று வெடித்துப் போயினவாம். மகிழ்ச்சி யினுல் உடல் பூரித்ததனுல் இங்ஙனே யாயிற்றென்க. திவ்யப் பிரபந்தங்களில் "சங்கம் சரிந்தன" என்றும், "என்னுடைய கழல் வளையைத் தாமும் கழல்வளையே யாக்கினரே," என்றும் "என்னங்கம் மெலிய வளைகழல" என்றும் வருகின்றதேயன்றி உடல் பூரித்து வளை வெடித்துப் போனமை பேசப்பட வில்லை. பட்டர் ஸ்ரீ குணரத்ந கோசத்தில் "புநர் ஹர்ஷோத்கர்ஷாத் ஸ்புடது புஜயோ: கஞ்சுகச தம்" என்றருளிச் செய்தார்.

## 223. கொடியவர்களின் இயல்பு மாருதென்பது

"யச் ச நிம்பம் பரசுநா யச் சைநம் மதுஸர்ப்பிஷா
யச் சைநம் கந்தமால்யாத்யைஸ் ஸர்வத்ர கடுரேவ ஸ:"

துர்ஜனங்களிடத்தில் நாம் எவ்விதமாக நடந்துகொண்டாலும் [அதாவது, நன்மையாக நடந்துகொண்டாலும் தீமையாக நடந்து



கொண்டாலும்] பலனில் வாசி சிறிதுமிராதென்பதற்காக இந்த சுலோகம். வேப்பமரத்தை ஒருவன் கோடாலியினுல் வெட்டுகிருன்; மற்றொருவன் தேனும் நெய்யுமிட்டு அபிஷேகம் செய்கிருன். வேருெருவன் சந்தனமும் பூமாலைகளுமிட்டு அர்ச்சிக்கிருன். இத்தனை பேர்களுக்கும் வேம்பு கசக்குமேயொழிய ஒருவர்க்கும் தித்திக்கும தன்று. இதுபோலவே துஷ்டர்கள் உபலாலநம் செய்பவர்களோடும் உபமர்த்தநம் செய்பவர்களோடும் வாசியற அனைவர்க்கும் அப்ரியர் களேயாவர் என்றதாயிற்று. இந்த ச்லோகத்தில் முதல் பாதத்தின் முடிவில் "ச்சிநத்தி" என்றும், இரண்டாம் பாகத்தின் முடிவில் "ஸிஞ்சதி" என்றும், மூன்ரும் பாதத்தின் முடிவில் "அர்ச்சதி" என்றும் கிரியாபதங்கள் [வினைமுற்றுக்கள்] வருவித்துக் கொள்ளத் தக்கன. அல்லாதபோது பொருள்படாது.

## 224. மூவரின் மேன்மை

"ஸுவர்ண கர்ப்பாம் ப்ருதிவீம் சிந்வந்தி புருஷாஸ் த்ரய:,
சூரச் ச க்ருதவித்யச் ச யச் ச ஜாநாதி ஸேவிதும்."

பூமிக்கு "வஸுமதீ" என்றும் "வஸுதா" என்றும் "வஸுந்தரா" என்றும் பல பெயர்களுள்ளன. பூமிக்குள் பணம் நிறைந்துள்ள தென்கை. ஸுவர்ண ரஜதாதிகளும் பூமியிலிருந்தே யெடுக்கப்படு கின்றன; நிலத்தில் விளையும் பலவகைப் பொருள்களும் விநிமயத்தி னுல் நமக்கு ஸுவர்ண ரஜதாதிகளைத் தருகின்றன. ஆகவே பூமியை ஸுவர்ண கர்ப்பையென்று கூறத் தட்டில்லை. இத்தகைய பூமியில் விளையும் செல்வத்தை மூவர் கொள்ளை கொள்கின்றனராம்; 1. சௌர்ய வீர்ய பராக்ரம சாலிகள். 2. கல்வி கற்றவர்கள். 3. தொண்டு செய்ய வல்லவர்கள். இம் மூவகுப்பினர்க்கே பொருள்கிடைக்கின்ற தென்றவாறு. இதில் நான்காவது பாதத்தில் "யச் ச ஸேவதே" என்ருே "ஸேவக." என்ருே சொல்லாமல் 'ய: ஸேவிதும் ஜாநாதி' என்றதனுல் தொண்டு செய்து பணம் பெறுவது அனைவர்க்கும் எளிதன்று; அதிலும் விரகறிந்து தொண்டுசெய்து எஜமானனை உகப்பிக்கவல்லவர்கள் சிலரேயுளர்—என்பது காட்டப்பட்டதாகும். சதுரர்களான ஸேவகர்கள் துர்லபர்கள்.

## 225. அறிஞர்கள்பட்டசிரமம் அறிஞர்கட்கே தெரியும்

"வித்வாநேவ விஜாநாதி வித்வஜ்ஜநபரிச்ரமம்
ந ஹி வந்த்யா விஜாநாதி குர்வீம் ப்ரஸவவேதநாம்"

வித்வான்களென்று தேறுமவர்கள் பட்டபரிச்ரமத்தை வித்வான் களே யறியமுடியுமே யல்லது மூர்க்கர்கள் அறியகில்லார்; ப்ரஸவ வதனையை எப்படி மலடிகள் தெரிந்து கொள்ள முடியாதோ

அப்படியே வித்வான்கள் கல்விகற்பதில் பட்ட பரிச்ரமத்தை "கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்குமவையல்ல நல்லமரங்கள்..." என்னப் பிறந்தவர்கள் அறியார்களென்கை.

## 226. குணமிருந்தால் அது தானேதிகழும்

"யதி ஸந்தி குணா: பும்ஸாம் விகஸந்த்யேவ தே ஸ்வயம்
ந ஹி கஸ்தூரிகாமோதச் சபதேந நிவார்யதே."

மனிதர்களிடத்தில் குணங்களிருந்தால் [அதாவது, பாண்டித்யம் ஔதார்யம் வாக்மித்வம் முதலிய குணங்களிருந்தால்] அவை பரப்ரயத் நமின்றிக்கே ஸ்வயமாகவே வெளி வரும். கஸ்தூரி மறைவாக இருந்தாலும் அதன் நறுமணம் வெளிவந்தே தீரும். 'கஸ்தூரிகந்தமே! நீ வெளிவரக் கூடாது' என்று ஆணையிட்டுரைத்தாலும் அது வெளி வருகை தவிராதன்றோ.

## 227. அரசர்களிடம் சேவகம் செய்வது ஆபத்து

"ராஜஸேவா மநுஷ்யாணாம் அஸிதாராவலேஹநம்
பஞ்சாநநபரிஷ்வங்கோ வ்யாலீவதநசும்பநம்"

ப்ரபுக்களிடத்தில் தொண்டு செய்வதென்பது மிகவும் அபாயகரமாதலால் வெகு ஜாக்கிரத்தையோடு செய்ய வேணும். கூரிய கத்தியை நக்குவது, சிங்கத்தையணைந்து கொள்வது, பாம்பை முத்தமிடுவது ஆகிய இவை எப்படி ஸாபாயமோ அப்படியே ராஜசேவையும் அபாயபஹுளமென்கை. இதுசெய்வார் வெகு ஜாகரூகதையுடன் செய்யவேணுமென்கை.

## 228. நீசர்களுக்கு உயர்பதவி ஏற்காது

"உந்நதம் பதமவாப்ய யோ லகுர் ஹேலயைவ ஸ பதேதிதி ப்ருவந்
சைலசேகரகத: பலாலக: சாருமாருதுதுத: பதத்யத:"

அற்பனுக்கு உயர்ந்த பதவியைக் கொடுக்கத்தகாது என்பதற்காக இந்த ச்லோகம். அற்பனுனவொருவன் உயர்நிலையை யடைந்தானுகில் அவன் அவலீலையாகவே கீழேயிறங்கிவிடுவனென்பது நமக்கு ப்ரத்யக்ஷம். [பலாலகமென்பது வைக்கோல்.] இது மிகவும் அற்பமான வஸ்து. இது உயர் நிலையில் இருக்கத் தகாதது. ஆனாலும் இது காற்றில் பறந்து போய் உயர்நிலையை யடைந்துவிடக்கூடும். உடனே மற்றொரு காற்று வந்து வீசி அதனைக் கீழே தள்ளிவிடும். இதனைக் கண்கூடாகப் பார்த்துக் கொண்டிருக்கிறோமல்லவா? ஆகவே அற்பர்கள் உயர்நிலையை ஆசைப் படத் தகாது ஒருகால் புருஷகாரபலத்தாலே அவர்களுக்கு உயர்நிலை கிடைத்தாலும்



யோக்யதையின்மையால் கீழே யிறங்கவே நேர்ந்துவிடுமென்று தெரிவித்தவாறு. "பலாலக:" என்ற ஸ்தானத்தில் "ப்ருஷத்கண:" என்ற பாடமு முண்டு. ஜலபிந்துத்திரள் என்கை.

## 229. கிருபணனுடைய இழிவு

"த்ருடதர நிபத்தமுஷ்டே: கோசநிஷண்ணஸ்ய ஸஹஜமலிநஸ்ய
க்ருபணஸ்ய க்ருபாணஸ்ய ச கேவலமாகாரதோ பேத:"

ஒருவர்க்கும் ஒரு காசு கொடுக்கமாட்டாத க்ருபணனுக்கும் கத்திக்கும் சிலேடை. க்ருபணன்—லுயாபதந்தன். க்ருபாணம்—கத்தி. இவ்விரண்டுக்கும் ஆகாரத்தினுல் பேதமேயொழிய ஸ்வபாவத்தில் பேதமில்லை. ஆகாரத்தினுலென்றதற்கு இரண்டு பொருள்; உருவத்தினுல் பேதம் காண்பது போலச் சொல்வடிவத்தில் ஸ்வல்ப பேதம் காண்கிறது. க்ருபண பதத்தில் அகாரமுள்ளதேயொழிய ஆகாரமில்லை; க்ருபாண பதத்திலோ ஆகாரமுள்ளது (இடையெழுத்தில்); ஏவஞ்ச இவ்வளவே வாசியென்கை. ஸ்வபாவ ஸாம்யத்தை மூன்று விசேஷணங்கள் நிரூபிக்கின்றன. "த்ருடதர நிபத்த முஷ்டே:" கத்தியைப் பிடிக்கவேணுமானுல் முஷ்டி பிடிக்க வேணும்! க்ருபணனும் கெட்டியாக முஷ்டிபிடிப்பன். கையைத்திறந்தால் காசு விழுந்துவிடுமோ என்றஞ்சி மிகவும் கெட்டியாக முஷ்டிபிடித்திருப்பவனன்றோ க்ருபணன். "கோச நிஷண்ணஸ்ய" கோசமென்று கத்தியுறைக்கும் பொக்கிசத்திற்கும் பெயர். கத்தியானது உறையில் தங்கும்; க்ருபணன் பொக்கிசத்தைக் காவல் காத்தபடியே கிடப்பன். பூட்டைப் பற்றிக்கொண்டு தொங்கலாடுவானும். "ஸஹஜமலிநஸ்ய" கத்தி இரும்பினுல் செய்யப்படுவதனுல் இயற்கையில் கறுப்பாயிருக்கும்; க்ருபணன் வெள்ளைத் துணியை யணியமாட்டான்; துணியை ஸலவை செய்யக் கொடுத்தால் காசு செலவழிந்து விடுமேயென்று அழுக்குத் துணியையே யுடுத்துத் திரிவான்; ஒரு கோலமும் செய்து கொள்ளமாட்டான். அதனுல் மலினனுகவே காணப்படுவன். ஆகவே க்ருபணனுக்கும் க்ருபாணத்திற்கும் வாசியில்லையென்க.

## 230. நன்றியறிவின்மையின் கொடுமை

"ப்ரதிதம் பாதகி வர்க்கம் க்ருதந்ந ஏகோ ஹி க்ருத்ஸ்நமதிசேதே
தமிமம் க்ரியமாணக்ந: தமபி துராத்மா கரிஷ்யமாணக்ந:"

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாம் உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்ற குறளின்படியும் "க்ருதக்நே நாஸ்தி நிஷ்க்ருதி" என்ற சாஸ்த்ரத்தின் படியும் ஸகலபாபிகளிற் காட்டிலும் க்ருதக்நன் மேம்பட்டவன்; என்றைக்கோ செய்த வுதவியை மறந்து

தீங்கு செய்யும் க்ருதக் நனிற் காட்டிலும் "க்ரியமாணக்நன்' [அதாவது, நாடோறும் தான் அநுபவித்து வருகிற மஹோபகாரத்திற்கு பதிலாக அபகாரங்கள் செய்பவன்] மேம்பட்டவன். அவனிற் காட்டிலும் "கரிஷ்யமாணக்நன்" [அதாவது, எதிர்காலத்தில் ஒருவன் செய்வதாகச் சொல்லியிருக்கிற மஹோபகாரத்திற்கு முன்னுடியே அபகாரங்கள் செய்து போருமவன்] மேம்பட்டவன். உலகில் இத்தகைய மஹாபாவிகள் உள்ளார்களென்று காட்டினபடி. இது ஸங்கல்ப ஸூர்யோதயச்லோகம்.

## 231. போலிப்பண்டிதரின் பொல்லாங்கு

ஆபத்த க்ருத்ரிமஸடா ஜடிலாம்ஸபித்தி:
ஆரோபிதோ ம்ருகபதே: பதவீம் யதி ச்வா
மத்தேப கும்பதட பாடநலம்படஸ்ய
நாதம் கரிஷ்யதி கதம் ஹரிணுதிபஸ்ய.

ஒரு மஹாராஜன் தன்னிடத்தில் நெடுநாளாக இருந்த ஆஸ்தான பண்டிதனை ஏதோ மநஸ்தாபத்தினுல் தள்ளிவிட்டு வேறு மூர்க்கனெருவனைப் பண்டிதனுக அமர்த்திக் கொண்டான்; அப்போது பழைய உண்மைப் பண்டிதன் அரசனுக்குத் தெரிவித்தது இது. சிங்கமிருந்த விடத்தில் ஒரு நாய்க்கு ஸிம்ஹத்தின் வேஷத்தை போட்டு அதை உட்கார வைத்துவிட்டால் அது சிங்கம்போல் சில பாமரர்களுக்குக் காணப்படுமேயொழிய மதவாரணங்கள் அஞ்சி நடுங்கும்படியான சிங்கநாதத்தைச் செய்யவல்லதோ? என்றவிதனுல்—இந்த மூர்க்கன் பட்டு பீதாம்பரங்களும் கநக குண்டல கங்கணங்களும் அணிந்து கொண்டு பண்டித ஸ்தானத்தில் இருந்து விடலாமேயொழிய எதிரிகளான பண்டிதர்கள் குமுறும்படி வாயைத் திறக்க முடியுமோ? என்று குறிப்பிட்டபடி.

## 232. உண்மையான அன்பை உணரும் வழி

"ஸௌஹார்தஸ்வர்ணரேகாயா உச்சாவசபிதாஜுஷ:,
பரோக்ஷமிதி கோப்யஸ்தி பரீக்ஷாநிகஷோபல:"

நேச மென்பது தங்கக் கட்டிபோன்றது. தங்கத்தில் மாற்றுயர்ந்த தங்கமுமுண்டு, போலித்தங்கமுமுண்டு. அதேபோல நேசத்திலும் அக்ருத்ரிமமான நேசமுமுண்டு, க்ருத்ரிமமான நேசமுமுண்டு. தங்கத்தின் உண்மையை உரைகல்லினுல் தெரிந்துகொள்ள முடியும். அதுபோலவே நேசத்தின் உண்மையைத் தெரிந்துகொள்வதற்கும் ஓர் உரைகல் உண்டு; அது எதுவென்னில், "பரோக்ஷம்" என்பதே. ப்ரத்யக்ஷத்தில் நேசமிருப்பதாகக் காட்டிவிட்டுப் பரோக்ஷத்தில் அதற்கு மாருக நடந்து கொள்வார் பலருளரே; அப்படியல்லாமல் ப்ரத்யக்ஷத்திற்போலவே பரோக்ஷத்திலும் நடந்துகொள்வாருடைய நேசமே நம்பத்தகுந்த தென்றதாயிற்று.



## 233. ஒன்றுக்குமுதவாத பிறப்பின்பழிப்பு

கஸ் த்வம் போ:, கதயாமி தைவஹதகம் மாம் வித்தி சாகோடகம்,
வைராக்யாதிவ வக்ஷி ஸாது விதிதம் கஸ்மாதிதம் கத்த்யதே?
வாமேநாத்ர வடஸ் தமத்வகஜநஸ் ஸர்வாத்மநா ஸேவதே
ந ச்சாயாபி பரோபகாரகரணீ மார்க்கஸ்திதஸ்யாபி மே.

ஒரு மனிதனுக்கும் ஒரு மொட்டை மரத்திற்கும் ஸம்பாஷணையாக இந்தச்லோகம் அமைக்கப்படுகிறது. யாவரும் போகிறவொரு பெரிய பாதையில் ஒரு மொட்டைமரமிருந்தது. இலை தழை காய் கனி எதுவுமில்லாமல் தடிபோல் நிற்கிற மரத்திற்கு மொட்டைமரமென்று பெயர். அதுவே வடமொழியில் "சாகோடக" மெனப்படுவது. அதைப்பார்த்து ஒரு வழிப்போக்கன் கேட்கிருன் [கஸ் த்வம் போ:]! உன் பெயர் என்ன? என்றபடி. இக்கேள்விக்கு அது பதில் சொல்லுகிறது "கதயாமி தைவ ஸதகம் மாம் வித்தி சாகோடகம்" அப்பா! பாழுந்தெய்வம் என்னை சாகோடகமாகப் படைத்திருக்கின்றதென்று தெரிந்து கொள் என்றது. அதன்மேல் வழிப்போக்கன் கேட்கிருன் "வைராக்யாதிவ இத்யாதி". நீ மிகவும் நிர்வேதத்தோடு சொல்லுவதாகத் தெரிகிறது; ஏன் இவ்வளவு துக்க முனக்கு? என்ன; இதற்கு அந்த மரம் பதில் கூறுகின்றது—உத்தரார்த்தம் முழுவதும். அப்பா! இதோ இடபுறத்தில் ஒரு பெரிய ஆலமரமுள்ளது பார்! அதை ஈச்வரன் மஹோபகாரமான விருக்ஷமாகப் படைத்தபடியினுல் வழிப்போக்கர்கள் யாவரும் அதனையறிந்து சிறிது வழி விலகிச் சென்ருகிலும் அதையடைந்து பரம ஸௌக்கியமடைகிருர்கள். நான் வழியிடையே இருந்துகொண்டும் ஒருவர்க்கும் ஒன்றுக்குமுதவாதவனுகியிருக்கிறேன்; இதுதான் எனக்கு மஹத்தான துக்கம் என்றது. இதன் பரமதாற்பரியத்தை நாம் விவரிக்கவேணுமோ?

## 234. டாம்பிகனிடத்தில் நேரும் ஏமாற்றம்

நீலதயா ஸ்தூலதயா தூரதயா தாநலோலுபைர் மதுபை:,
தாவிதமிபராஜதியா ஹந்தாஸீத் அந்ததோ மஹிஷ:.

ஒரு பெரிய எருமைக்கடா சென்று கொண்டிருந்தது; அதை வண்டுகள் பார்த்து யானையென்று மயங்கி, 'இதன் கண்ட ஸ்தலத்தில் மதஜலமிருக்கும், அதைப் பருகுவோம்' என்னுமாசையினுல் பின் தொடர்ந்து ஓடிச்சென்றனவாம்; அருகே சென்று பார்த்தவளவில் அது எருமைக் கடாவாகக் காணப்பட, வருந்தி மீண்டனவாம்;

கடாவைக் களிறாக மயங்கினது எதனாலென்னில் "நீலதயா ஸ்தூலதயா தூரதயா" கறுப்பாயிருந்ததனாலும் பருத்திருந்ததனாலும் தூரத்தில் போய்க் கொண்டிருந்தபடியாலும். இந்தச்லோகத்தின் பரமதாற்பரிய மென்னவென்றால், ஒரு டம்பக்காரன் தனிகன்போல் சொக்காய் தலைப்பாகை முதலியன அணிந்து கொண்டு சென்றான்; அவனை தூரத்தில் கண்டு மஹா தனிகனாக மயங்கின சிலர் இவனிடத்தில் ஏதாவது தானம் பெறலா மென்றெண்ணித் தொடர்ந்தோடி இரக்க, அவன் வெருட்டி விட்டான்; அதனால் இவன் வீண் டம்பக்காரனென்று தெரிந்து கொண்டு மீண்டனர் என்பதாம். இதில் "தாந லோலுபை: மதுபை:" என்னுமிரண்டு பதங்களில் சிலேடையுள்ளது. "தாந" மென்று மத ஜலத்திற்கும் பெயர், கொடைக்கும் பெயர். மதுப மென்று வண்டுக்கும் பெயர், பாமரனுக்கும் பெயர்.

## 235. மூர்க்கனியல்பு கூறுதல்

பச்யதி பரேஷு தோஷாந் அஸதோபி ஸதோபி நைவ குணாந்
விபரீதமிதம் ஸ்வஸ்மிந் மஹிமா மோஹாஞ்ஜநஸ்யைஷ:.

மூர்க்கனுடைய ஸ்வபாவம் சொல்லப்படுகிறது இதில். மூர்க்கன் பிறரிடத்தில் எத்தனையோ குணங்களிருந்தாலும் அவற்றை எள்ளளவும் காணகில்லான்; அப்படியே குற்றங்களையும் காணாமலிருந்துவிடலாமே; அது கிடையாது. இல்லாத குற்றங்களை யெல்லாம் ஏறிட்டுப் பேசுவன். தன்னளவில் வந்தாலோ இது விபரீதமாகும்; அதாவது, தன்னிடத்தில் மலையத்தனை தோஷங்களிருந்தாலும் சிறிதும் காணமாட்டான்; கடுகத்தனை குணங்கூட இல்லாமலிருந்தாலும் மலை மலையாகக் குணமிருப்பதாக எண்ணிக் கொண்டு பேசுவன். இப்படிப்பட்ட துஷ்டர்களோடு ஸஹவாஸம் தகாது என்று சேஷபூரணம் செய்து கொள்வது. இது தேசிகனுடைய ஸுபாஷித நீவீச்லோகம்.

## 236. தகாதசெயலை யாரும் தடுக்கலாம்

யத்யபி ந காபி ஹாநி: பரகீயாம் சரதி ராஸபே த்ராக்ஷாம்
அநுசிதமிதமிதி மத்வா ஹாஹா ஹாஹேதி தூயதே சேத:

காசியிலிருந்து ராமேச்வரம் [பாதசாரமாகப்] போய்க்கொண்டிருக்கிறானொருவன். போம் வழியில் ஒரு திராக்ஷைத்தோட்டம்; அதில் திராக்ஷைப்பழங்கள் அபரிமிதமாய்ப் பழுத்துத் தொங்குகின்றன. அந்தத் தோட்டம் இந்த யாத்ரிகனுடையதுமன்று, அவனுக்கு நண்பனான வொருவனுடையதுமன்று. அத்தோட்டத்தின் காவல்காரன் அந்யபரனாயிருந்த காலத்தில் ஒரு கழுதை உள்ளே நுழைந்து திராக்ஷைப்பழங்களை யதேஷ்டமாக மேய்ந்துகொண்டிருக்



கின்றது. அதை இந்த யாத்ரிகன் பார்த்து ஸஹியாதவனாய் கல்லை யெடுத்து வீசியும் தடியையெடுத்து ஓச்சியும் அக் கழுதையை வெருட்டிக்கொண்டிருக்கிறான். இதைக் கண்ட வேறொரு வழிப்போக்கன் 'அப்பா! திராக்ஷைத்தோட்டம் உன்னுடையதன்றே; கழுதை மேய்ந்ததனால் உனக்கொன்றும் நஷ்டமில்லையே. நீ ஏதுக்கு வீணாகக் கழுதையை வெருட்டுகிறாய்? நஷ்டமடைபவன் செய்ய வேண்டிய வேலையில் நீ ஏதுக்கு ச்ரமம் கொள்ளுகிறாய்?' என்றான். அதற்கு இந்த யாத்ரிகன் பதில் சொல்லுகிற ச்லோகமிது. 'அண்ணே! எவனோவொருவனுடைய திராக்ஷையைக் கழுதை மேய்ந்ததனால் எனக்கு யாதொரு நஷ்டமுமில்லையென்பது உண்மையே; கழுதையோ திராக்ஷையின் இனிமையை அறியாதது. எதையோ மேய்ந்து வயிறுவளர்க்க வேண்டிய கழுதை 'இன்று நமக்கு திராக்ஷை கிடைத்துவிட்டதெ'ன்று மகிழ்ச்சியோடு மேய்கின்றதன்று. இப்பழத்தை மகிழ்ச்சியோடு புஜிக்கக் கூடிய வொருமனிதன் பறித்து உண்டானாகில் அவனை நான் வெருட்டப் போகிறதில்லை; நல்லது தீயதின் வாசியறியாத வொரு கழுதை தமட்டங்காய் போன்றவற்றை மேய்ந்தால் அதில் நமக்கு உத்வேகமுண்டாகாது. ரஸிகன் புஜிக்கவேண்டிய இதனை ஒரு கழுதை மேய்கிறதென்றால் இது மிகவும் அநுசிதமான செய்கையல்லவா? இதைக் கண்டு எப்படி ஸஹித்திருக்கமுடியும்! ஹாஹாகாரம் செய்யாமலிருக்க முடியுமா' என்றான்.

இந்த அந்யாபதேசத்திற்குப் பொருத்தமான ஸ்வாபதேசார்த்தம் விவேகிகளால் உய்த்துணரத்தக்கது. தன்னுடைய நிலைமைக்குத் தகாத அநுசிதமான காரியத்தை ஒருவன் செய்தால் அதைத்தடுக்க இன்னாரினையாரென்னும் வாசியின்றிக்கே அனைவர்க்கும் உரிமையுண்டு என்பது சுருக்கமாக அறியத்தக்கது.

## 237. ஒரு குரங்கு படும்பாடு

கபிரபி ச காபிசாயநமதமத்தோ வ்ருச்சிகேந ஸந்தஷ்ட:,
அபி ச பிசாசக்ரஸ்த: கிம் ப்ரூமோ வைக்ருதம் தஸ்ய.

ஒரு குரங்கு அது இயற்கையாகவே விஷம சேஷ்டைகள் செய்யுமது. சாராயமும் குடித்துவிட்டது. அதைத் தேளும் கொட்டிவிட்டது; பிசாசும் ஆவேசித்தது. அதன் வெறியாடலைப்பற்றிப் பேச வேணுமோ? இந்த அந்யாபதேசத்தால் தெரிவிக்கப்படுவதாவது, இயற்கையாகவே துஷ்டர்களாய்ப் பிறந்தவர்களுக்கு தௌஷ்ட்ய ஸாமக்ரிகள் மேன் மேலும் ஏறிவிட்டால் அன்னவர்களால் ஸாதுக்களுக்கு ஏற்படும் நலிவு சொல்லுந்திறத்ததன்று என்பதாம்.

துர்ஜனங்களுக்குப் பணமும் கிடைத்து அதிகார பதவியும் கிடைத்து விட்டால் பின்னை என்சொல்ல வேணும்!

## 238. ஆசையை வெல்லாதவனுக்குச் சுகமில்லை

ஆசாயா யே தாஸாஸ் தே தாஸாஸ் ஸர்வலோகஸ்ய
ஆசா தாஸீ யேஷாம் தேஷாம் தாஸாயதே லோக:.

(இந்த ச்லோகம் மிகச் சிறந்தது.) ஆசைக்கு எவர் அடிமைப் படுகிறார்களோ, அவர்கள் ஆசைக்கு மட்டும் அடிமைப்பட்டவர் களல்லர்; உலகுக்கெல்லாம் அடிமைப்பட்டவர்களேயாவர். ஆசை யானது எவர்களுக்கு அடிமைப்பட்டதாகுமோ, அவர்களுக்கு உலக மெல்லாம் அடிமைப்பட்டதாகும். இதன் தாற்பரிய மென்னவென் றால்! எப்பொருளிலும் ஆசை கொள்ளாமல் ஆசையை வென்றிருக்க வேணும். அப்படியிருந்தால் உலகமெல்லாம் அவற்கு ஆட்படும். ஆசைப்பட்டுப் பெறவேண்டிய பொருள்களெல்லாம் எளிதில் கிடைத்துவிடும். இந்த மருமம் தெரியாமல் ஆசையை மிகமிக வளர்த்துக்கொண்டு போருபவர்கள் இன்னாரினை யாரென்று பாராமல் யாவரிடத்திலும் பல்லைக் காட்டி நிற்பர்களென்பதாம்

## 239. தெய்வச்செயலை யாரேயறிவார்?

ராமே ராஜ்யம் பிதுரபிமதம் ஸம்மதஞ்ச ப்ரஜாநாம்
மாதா வவ்ரே ததிஹ பரதே ஸத்யவாதீ ததௌ ச.
சிந்தாதீதம் ஸமஜநி ததா பாதுகாக்ர்யாபிஷேக:
துர்விஜ்ஞாநஸ்வஹ்ருதயமஹோ தைவமத்ர ப்ரமாணம்.

(இதுவும் மேல் சுலோகமும் பாதுகாஸஹஸ்ரத்திலுள்ள ஸுபாஷிதங்கள்.) நாமொன்று நினைத்தால் தெய்வமொன்று நடத் தும் என்கிறது இதில். ஸ்ரீ ராமாயண கதையினால் இது தெரிய வருகின்றது. இராமனுக்கு முடிசூட்டி மகிழவேணுமென்று தந்தை தசரதன் பாரித்தான். அந்த மனோரதத்தை ஒருவர் தப்பாமல் யாவரும் ஆமோதித்தார்கள். இதன்படி ஸ்ரீராம பட்டாபிஷேகம் நடைபெறவேணும். இது நடைபெற்றதோ? இல்லை. கைகேயிவந்து என்மகனே ராஜ்யமாளவேணுமென்று கோரினாள். ஸத்யத்திற்குக் கட்டுப்பட்ட தசரதசக்ரவர்த்தி அப்படியேயாகுக வென்றான். இதன்படி பரதபட்டாபிஷேகம் நடக்கவேணும். இதுவாவது நடந்ததோ? இல்லை. பின்னை என்ன நடந்ததென்னில்; ஒருவரும் எண்ணியிராத பாதுகா பட்டாபிஷேகமென்று ஒன்று நடந்தது. இதனால் என்ன தெரிந்துகொள்கிறோம்? எதுவும் பகவானுடைய



எண்ணப்படிதான் நடக்கும்; அவனெண்ணியிருப்பது காரியத்தினால் தெரிந்து கொள்ளலாகுமேயொழிய முன்னாடி ஒருவராலும் தெரிந்து கொள்ள முடியாதென்பதாம்.

## 240. பெரியார்களையடுப்பது பழுதுபடாது

அதரீக்ருதோபி மஹதா தமேவ ஸேவேத ஸாதரம் பூஷ்ணு:
அலபத ஸமயே ராமாத் பாதாக்ராந்தாபி பாதுகா ராஜ்யம்.

நாம் எப்போதும் ஒரு மஹானை அடுத்திருக்கவேண்டும். அந்த மஹான் நம்மை நீசஸ்தானத்தில் வைத்திருந்தாலுங்கூட 'மஹதாச் ரயம் பழுதுபடாது' என்றே கொண்டு அவ்வாச்ரயத்தை விடாம லிருப்பதே நன்று. பாதுகையானது ஸ்ரீராமபிரானுகிய மஹானை அடுத்திருந்தது. அங்கே அதற்கு நீசஸ்தானந்தான் கிடைத்திருந் தது. ஆனாலும் மஹதாச்ரயம் பழுதுபடாதென்று திருவடியை விடாமலிருந்தது. அதற்கு திடீரென்று கோஸலராஜ்யாபிஷேக பாக்கியம் கிடைத்துவிட்டதன்றோ. இத்தால், நீசர்களிடத்தில் நமக்கு உச்சஸ்தானம் கிடைத்தாலும் கொள்ளத் தகாதென்பதும் காட்டப் பட்டதாகும்.

## 241. சஞ்சலசித்தனுடைய விசித்திரமனப்பான்மைகள்?

க்வாகார்யம் சகலக்ஷ்மண: க்வ ச குலம் பூயோபி த்ருச்யேத ஸா
கிம் வக்ஷ்யந்த்யபகல்மஷா: க்ருததியா:, கோபேபி காந்தம் முகம்
தோஷாணாம் ப்ரசமாய ந: ச்ருதமஹோ; ஸ்வப்நேபி ஸா துர்லபா
சேதஸ் ஸ்வாஸ்த்யமுபேஹி, க: கலு யுவா தந்யோதரம் தாஸ்யதி

சஞ்சல மனஸ்கர்களின் தன்மை சொல்லப்படுகிறது இதில். மிக வுயர்ந்த சந்திரவம்சத்திற் பிறந்த வொருவனுக்கு அஸத் ஸஹவா ஸத்தினால் விஷய ப்ராவண்யம் ஏற்பட்டுவிட்டது. அவனுக்குத் தன் குலப்பெருமை கல்விப்பெருமை முதலியவற்றை நினைத்து இடை யிடையில் அநுதாபமும் தோன்றுகிறது. ஆனாலும் விஷயப்ராவண் யத்தையும் விட முடியாமல் தத்தளிக்கிறான். அவனது நிலைமையைச் சொல்லும் சுலோகமிது. "அகார்யம் க்வ? சசலக்ஷ்மண: குலம் க்வ? நாம் செய்கிற தப்புக்காரியமெங்கே? நாம் பிறந்த சந்திரவம்சம் எங்கே? உயர் குலத்திற்குத் தகாதபடி நாம் நடந்துகொள்வதை இனி விட்டிடவேண்டும் என்றுகருதி அநுதபித்தபடி. ('சசலக்ஷ்மண:' என்றது ஷஷ்டீவிபக்தி; சசாங்கஸ்ய என்றபடி.) இங்ஙனே அநுத பித்தவன் புத்தி சபலித்துப் பேசுகிறான். "பூயோபி த்ருச்யேத ஸா', அவள் மறுபடியும் நம் கண்ணில் தென்படுவாளா? என்கிறான். மறுபடியும் அநுதாபம் காட்டுகிறான். "கிம் வக்ஷ்யந்தி அபகல்மஷா:

க்ருததியா:? தூய நடத்தைக்கு உரிய நமது தீய நடத்தையை ஸத்துக்கள் கண்டால் ஏசமாட்டார்களா? என்று சிந்திக்கிறான். மறுபடியும் சொல்வதோவென்றால் “கோபேபி காந்தம் முகம்” அவளுடைய முகமுண்டே அது மிகவழகியது. கோபதசையிலுங்கூட அழகு மாறாத முகம் அவளது என்கிறான். மீண்டும் அநுதாபத்தோடு எண்ணுகிறான். “தோஷாணாம் ப்ரசமாய ந: ச்ருதமஹோ” இத்தகைய தவறுகள் செய்வதற்காகவா நாம் படித்தது? குற்றங்கள் புகாதபடி அகற்றிக் கொள்வதற்கன்றோ நாம் படித்தது என்று தேறுகிறான். உடனே கலங்கிப் பேசுகிறான். “ஸ்வப்நேபி ஸா துர்லபா” கனவிலுங்கூட அவள் காட்சி தரமாட்டேனென்கிறாளே. பாழுங்கனவில் எங்கெந்த வஸ்துக்களோ வந்து தென்படுகின்றனவே! ஒருகாலாகிலும் அவள் தென்படக் கூடாதா என்று கரைகிறான். மறுபடியும் நெஞ்சைத் தேற்றுகிறான் “சேத: ஸ்வாஸ்த்யமுபேஹி” நெஞ்சே! ஏதுக்கு இப்படி வீணாக அலைபாய்கிறாய்? தவறான சிந்தனையைத் தவிர்ந்திரு என்றான். உடனே பிதற்றுகிறான். “க: கலு யுவா தந்ய: அதரம் தாஸ்யதி?” பாக்யசாலியான எந்த புருஷன் அவளுடைய அதராம்ருதம் பருக இட்டுப் பிறந்திருக்கிறானோ தெரியவில்லை......நம்போல்வாருடைய நிலைமை இங்ஙனே தானுள்ளதென்று ஒவ்வொருவரும் நினைக்கலாம்.

## 242. கண்ணனுடைய மாயச்செயலொன்று

கும்குமிதி கிம் ப்ரமதி அம்ப ததிமத்யே
டிம்ப நநு பூதமிஹ தூரமபயாஹி
அம்ப! நவநீதமிதி ஸம்கததி க்ருஷ்ணே
மந்தஹஸிதம் ஜயதி மாதுரதிரம்யம்.

கண்ணபிரானுடைய மாயச்செயலொன்று இனிமையாக அநுபவிக்கப்படுகின்றது. தாயான யசோதை தயிர் கடையாநின்றாள்; கண்ணன் அருகேநின்று பார்த்துக் கொண்டிருக்கிறான். எதற்காக? வெண்ணெயை யெடுத்து விழுங்குவதற்காக. இப்படியிருக்கையில் தயிர்த்தாழியில் வெண்ணெய் திரளத்தொடங்கிற்று. அப்போது கண்ணன் கேட்கிறான் “கும் குமிதி கிம் ப்ரமதி அம்ப! ததிமத்யே” அம்மா! தயிரினிடையே குமு குமு குமுகுமுவென்று ஏதோ சுழல்கின்றதே, இது என்ன அம்மா! என்றான். அதற்கு யசோதை சொன்னாள் “டிம்ப! நநு பூதமிஹ தூரமபயாஹி” பையா! இதில் பூதமொன்று கிளம்புகின்றது; அது அருகேயிருக்கிற சிறுவர்களை விழுங்கிவிடும்; சடக்கென அப்பால் சென்றுவிடு என்றாள். இது கேட்ட கண்ணன் ‘அம்மா! அந்த பூதம் என்னை விழுங்குவதற்கு முன்னே அதை நான் விழுங்கிவிட்டாலோ’ என்று சொல்லிக்



கொண்டே அதை யெடுத்து விழுங்கிவிட்டு ‘அம்மா! பூதமென்று பொய் சொன்னாயே, இது வெண்ணெயல்லவா?’ என்றான். அது கேட்ட யசோதை ‘நம் குழந்தைக்கு இது வெண்ணெயென்று தெரிந்துவிட்டதே!’ என்று மகிழ்ந்து புன்னகைசெய்து ‘என் குட்டனே! முத்தம் தா’ என்றாள்.

## 243. மாவலிபக்கல் சென்ற வாமனன் வேஷம்

கௌபீநம் கடிஸூத்ரஸீம்நி கடயந் மௌஞ்ஜீமபிவ்யஞ்ஜயந்
க்ருத்திம் க்ருஷ்ணம்ருகஸ்ய வக்ஷஸி வஹந்
ஆஷாடமம்ஸேர்ப்பயந்.
ஸ்வாத்யாயஸ்வரஸம்பதா பரிஷதாம் ப்ரீதிம் ஸமுத்பாதயந்
யாச்ஞாயை பலியஜ்ஞவாடநிகடம் ப்ராப்தோ வடு: பாது வ:.

மஹாபலி வேள்வியிற் சென்ற வாமனமூர்த்தியின் திருக்கோலம் இதில் அழகுபட வருணிக்கப்படுகிறது. *குறட்பிரமசாரியாய்ச் சென்றதனால் அவ்வாச்ரம லக்ஷணம் வழுவாதபடி கடிஸூத்ரத்தில் கௌபீநம் விளங்கவும், முஞ்சி ஸுவர்ண மேகலைபோல் திகழவும், திருமார்பில் க்ருஷ்ணாஜினம் பொலியவும், தோள்மேல் பலாசதண்டம் திகழவும் பெற்று, ‘இவன் மெய்யான யாசகப்ராஹ்மணன்’ என்று தெரியுமாறு வேத வாக்யங்களை ஸுஸ்வரமாக ஓதிக்கொண்டு யாகசாலையிலுள்ளவர்களை யெல்லாம் மகிழச்செய்துகொண்டு யாசனைக்காக மாவலி வேள்வியில் புக்க மாணிக்குறளன் உம்மைக் காத்தருள்க.

## 244. மாவலிக்கும் வாமனனுக்கும் ஸம்பாஷணை

கஸ்த்வம் ப்ரஹ்மந்? அபூர்வ:, க்வ ச தவ வஸதி:? யாகிலா
ப்ரஹ்மஸ்ருஷ்டி,
கஸ் தே த்ராதாஸ்தி? அநாத:, க்வ ச தவ ஜநக:? நைவ தாதம்
ஸ்மராமி
கிம் தேபீஷ்டம் ததாநி? த்ரிபதபரிமிதா பூமி:, அத்யல்பமேதத்
த்ரைலோக்யம் பாவகர்ப்பம் பலிமிதி நிகதந் வாமநோ வஸ் ஸ
பாயாத்.

மஹாபலிக்கும் வாமநமூர்த்திக்கும் ஸம்பாஷணையாக அமைக்கப்பட்டதிந்த ச்லோகம். மஹாபலி தன்னிடம்வந்த மாணிக்குறளனை நோக்கிச் சில கேள்விகள் கேட்க, அவற்றுக்கு விடை கூறுகின்றான் வாமனன். வாமனனுடைய விடைகளெல்லாம் சிலேடையாக அமைந்துள்ளன. தன்னை ஸாமாந்ய மனிதனாகக் காட்டும் ஒரு பொருளும் பரமாத்மாவாகக் காட்டும் மற்றொரு பொருளும் அமைய விடை

கூறுவது நோக்கத்தக்கது. மாவலி:—"கஸ் த்வம் ப்ரஹ்மந்!' அந்தணனே, நீ யார்? வாமனன் "அபூர்வ" (1) முன்னே பின்னே நான் யாசனைக்கு வந்தவனல்லேன். (2) எனக்கு முற்பட்டவர் யாருமில்லை; எல்லார்க்கும் நானே முற்பட்டவன். "க்வ ச தவ வஸதி:?" உன் இருப்பிடம் யாது? "யா அகிலா ப்ரஹ்மஸ்ருஷ்டி" (1) எனக்கு இருப்பிடம் ஒருகேடு; எங்கும் தட்டித்திரிபவன். (2) *எங்குமுளன் கண்ணனென்றபடி ஸர்வவ்யாபிகாண் நான். "கஸ் தே த்ராதாஸ்தி?" நீ யாருடைய ஸம்ரக்ஷணையிலிருக்கிறாய்? "அநாத:" (1) எனக்கு நாதனேது? அநாதையாய்க்கிடக்கிறேன். (2) எனக்கு மேற்பட்ட நாதன் உலகத்திலேயே கிடையாது. "க்வ ச தவ ஜநக:" உன்னுடைய தகப்பனார் எங்கிருக்கிறார்? "நைவ தாதம் ஸ்மராமி" இளமையிலேயே தகப்பனார் போய்விட்டார்; அவரைப் பற்றின நினைவே எனக்கில்லை. (2) ஸகல ஜகத்பிதாவான எனக்குத் தகப்பனாருரிக்க ப்ரஸக்தியேது? "கிம் தே அபீஷ்டம் ததாநி?" உனக்கு என்ன விருப்பம்? என்ன கொடுக்கவேணும் நான்? "த்ரிபத பரிமிதா பூமி:" மூவடிமண் வேணுமத்தனை. "அத்யல்பம் ஏதத்" என்னிடம் வந்து மிக அற்பமான பொருளைக் கேட்கிறாயே. "த்ரைலோக்யமித்யாதி". மூவுலகங்களையும் திருவுள்ளத்திலே கொண்டு இங்ஙனே மூவடிமண் வேணுமென்று பேசின வாமனன் காத்தருள்க.

## 245. மாவலி வேள்வியில் அற்புத நிகழ்ச்சி

ஸ்வஸ்தி ஸ்வாகதம் அர்த்த்யஹம், வத வடோ! கிம் தீயதாம், மேதிநீ,
கா மாத்ரா? மம விக்ரமத்ரயபதம், தத்தம் ஜலம், தீயதாம்.
மா தேஹீத்யுசநா:, குதோ நு? பகவாந், பாத்ரம் கிமஸ்மாத் பரஞ்
சேத்யேவம் பலிநார்ச்சிதோ மகமுகே பாயாத் ஸ வோ வாமந:

இதுவும் மாவலிவேள்வியில் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கூறுவது. [ஸ்வஸ்தி] இது மாவலிக்கு வாமனனுடைய மங்களாசாஸனம். [ஸ்வாகதம்] வருகவருகவென்று மாவலி வாமனனை கௌரவிக்கிறபடி. [அர்த்தீ அஹம்] 'நான் ஒரு பிச்சைக்காரனாதலால் என்னை இவ்வளவு கௌரவிக்கத் தகாது' என்று வாமனன் விநயமாகக் கூறுகிறபடி. [வத வடோ! கிம்தீயதாம்] 'மாணீ! என்ன தேவை?' [மேதிநீ] 'பூமிதானம் தேவை.' [காமாத்ரா] 'எவ்வளவு பூமி தேவை?' [மம விக்ரமத்ரயபதம்] 'என்னுடைய பாதத்தால் யானளப்ப மூவடி மண்.' [தத்தம் ஜலம்] 'இதோ தாரைவார்த்துத் தருகிறேன்.' [தீயதாம்] 'தாராய் மன்னவனே!' [மா தேஹீதி உசநா:] 'இவ்வளவில் தைத்ய குருவான சுக்கிரன் வந்து தடைசெய்தான்.' [குதோ நு?] 'கொடுக்கவேண்டாமென்று ஏன் தடை செய்கிறீர்?' என்றான் மாவலி. [பகவான்] 'இவன் ஸாமாந்ய யாசகனல்லன்; உன்னிடத்து ஸர்வஸ்வாபஹாரம் பண்ணவந்த பகவான் கிடாய்' என்றான் சுக்கிரன். [பாத்ரம் கிமஸ்மாத் பரம்] 'நாராயணனே என்னிடம் யாசகனாக வந்தானாகில் வேறு ஸத்பாத்ரமுண்டோ? நான் மஹாபாக்யசாலியன்றோ' வென்று தன்னைக் கொண்டாடி வாமனனை ஆராதித்தானாயிற்று.



## 246. கண்ணனுடைய விடமச்செயல்

அம்ஸே ஸலீலமதிரோப்ய சுகம் ஸ்வஹஸ்தாத்
கோப்யா பயாகுலத்ருச: குதுகீ முகுந்த:,
அம்ஸம்கதம் சுகமிஹாபநயேதி வாசம்
தஸ்யா நிசம்ய ஸ ததம்சுகமாசகர்ஷ.

கண்ணபிரானுடைய வொரு லீலாவிநோதம் அநுபவிக்கப் படுகிறது. (விச்வகுணாதர்ச ச்லோகமிது.) கண்ணன் ஒரு கோபியின் தோளின்மேல் விளையாட்டாக ஒரு கிளியை ஏறவிட்டான். அதனால் அவள் சிலுகிட்டு 'கண்ணா! தோளின்மேலேறியுள்ள இக்கிளியை அகற்று' என்றாள். அதுகேட்ட கண்ணன் அவளுடைய மேலாடையை அகற்றினான். இங்கே வடமொழி வல்லுநர் சுவைக்கக் கூடிய சொல்லின்பமுள்ளது. கோபி வடமொழியில் சொன்னது "அம்ஸம் கதம் சுகம் அபநய" என்பது. அம்ஸம்—தோளை, கதம்—அடைந்திருக்கிற, சுகம்—கிளியை, அபநய—அப்புறப்படுத்து, என்று பொருள். இச்சொல்தொடரைக் கண்ணன் 'அம்—ஸங்கதம். சுகம் அபநய' என்றதாக ஆக்கிக்கொண்டான். "அம்" என்கிற எழுத்தோடே சேர்ந்த சுகத்தைத் தள்ளு என்று கோபி சொல்லுவதாக வைத்துக்கொண்டு மேலாடையைப் பிடித்திழுத்தான். அம் என்பதோடே சேர்ந்த சுகம்—அம்சுகம். அதற்கு ஆடையென்று பொருள். இங்ஙனே செய்துவிட்டு "கோபீ! நீ சொன்னபடியேதான் நான் செய்தேன்" என்கிறான் கண்ணன். இது உக்தி சமத்காரம்.

## 247. யாசகன் உணர்த்துமது

த்வாரம்த்வாரமடந் பிக்ஷு: சிக்ஷதே ந து பிக்ஷதே,

அதத்வா மாத்ருசோ மா பூ: தத்த்வா த்வம் த்வாத்ருசோ பவ.

வாசல்தோறும் ஏறியேறியிறங்கிப் பிச்சை யெடுப்பதாகக் காணப்படுகிற யாசகன் உண்மையில் யாசிக்கிறானல்லன்; மனை தோறும் புகுந்து ஒரு விஷயத்தை உத்போதனம் செய்துவருகிறான். அவ்விஷயம் யாதெனில்; "முற்பிறவியில் நான் ஒருவர்க்கும் ஒன்றுங் கொடாமல் 'இரந்தவர்க்கு இல்லையேயென்று நெடுஞ்சொலால் மறுத்த நீச' னாக இருந்தபடியால் இப்பிறவியில் யாசகனாய்ப் பிறந்

தேன். நீ முற்பிறவியில் சிறந்த வள்ளலாக இருந்தபடியால் இப்போது மஹாதனிகனுக ஜனித்திருக்கிருய். ஆகவே இப்பிறப்பிலும் நன்ருக தானம் செய்து அடுத்தபிறப்பிலும் தனிகனுகவே பிறக்கக்கடவை. முன்னே தானமொன்றும் செய்யாது தரித்திரனுய்ப் பிறந்த என்னைப் போல் பிறவாதே," என்னுமிவ்விஷயத்தை உத்போதனம் செய்கிருனென்க.

## 248. கல்வியும் பொருளுமீட்டுதல்

அஜராமரவத் ப்ராஜ்ஞோ வித்யாம் அர்த்தஞ் ச ஸாதயேத்
க்ருஹீத இவ கேசேஷு ம்ருத்யுநா தர்மமாசரேத்.

கல்வியையும் பொருளையும் ஈட்டும்போது தன்னைச் சாவில்லாதவனுகவும் கிழத்தனமில்லாதவனுகவும் கருதவேண்டும். தருமம் செய்யும்போது அங்ஙனே கருதலாகாது. "யமன் நம்மைப் பிடிக்க வந்துவிட்டான்; இதோ போகப்போகிருேம்; ஆகவே இப்போதே தருமம் செய்து முடிக்க வேண்டும்" என்று உறுதிகொண்டு தாமதமின்றித் தருமஞ்செய்யவேணும்.

## 249. தருமத்தை விரைந்து செய்யவேண்டும்

கரிஷ்யாமி கரிஷ்யாமி கரிஷ்யாமீதி மாவத,
கரோமி க்ருதவாநஸ்மீத்யபிதேஹி ஸதா ஸகே.

தருமத்தைச் செய்வோம் செய்வோம் செய்வோமென்று காலத்தையோட்டிக்கொண்டு கிடவாதே; செய்துகொண்டிருக்கிறேன், செய்து விட்டேன் என்று சொல்லி க்ருத க்ருத்யனுயிருக்கக்கடவை.

## 250. கவிதையும் வனிதையும்

ஸா கவிதா ஸா வனிதா யஸ்யாச் ச்ரவணேந தர்சநேநாபி,
கவிஹ்ருதயம் முநிஹ்ருதயம் ஸரலம் தரலஞ்ச ஸத்வரம் பவதி

பண்டிதர்கள் இயற்றுவதெல்லாம் கவிதையன்று. பெண்ணுய்ப் பிறந்தவளெல்லாம் பெண்ணல்லள். எந்தக் கவிதையைக் கேட்ட வளவிலேயே கவிகளின் உள்ளம் கரையுமோ அதுதான் கவிதை. எந்தப் பெண்மணியைப் பார்த்தவளவிலே ஜிதேந்த்ரியரான முனிவரின் உள்ளமும் சலிக்குமோ, அவளே பெண்மணி. இதில் "முநிஹ்ருதயம்" என்ற ஸ்தானத்தில் 'விடஹ்ருதயம்" என்று சிலர் பாடங் கொள்வர்; அதிற் சுவையில்லையென்க; விடன் எவளைக் கண்டாலும் காமுறுவனன்ருே.



## 251. கல்வியெனும் செல்வத்தின் சிறப்பு

ந சோரஹார்யம் ந ச ராஜஹார்யம் ந ப்ராத்ருபாஜ்யம் ந ச பாரகாரி
வ்யயே க்ருதே வர்த்தத ஏவ நித்யம் வித்யாதநம் ஸர்வதநப்ரதாநம்.

கல்வியாகிற செல்வமே எல்லாவகைச் செல்வங்களுள்ளும் மிகச் சிறந்தது. இதைக் கள்வர் கொள்ளார். இதற்கு அரசர்கள் வரி விதிக்க மாட்டார்கள். பங்காளிகள் பங்குகொள்ள வரமாட்டார்கள். எந்த தனரக்ஷக நிதியில் இதைவைத்து ரக்ஷிப்பதென்கிற கவலைக்கு மிடமில்லை. செலவு செய்யச்செய்யக் குறைந்துவரும் தனம்போலன்றிக்கே இது மேன் மேலும் வளரும். ஆகவே கல்விச்செல்வத்தை ஆர்ஜனம் செய்யக் காதலிப்பதே நலம்.

## 252. தீயாரின் தீமை தொலையமாட்டாது

கர்ப்பூரதூலீகலிதாலவால: கஸ்தூரிகா கல்பித தோஹத ஸ்ரீ:,
ஹிமாம்புபூரை: பரிஷிச்யமாந: ப்ராஞ்சம் குணம் முஞ்சதி கிம்பலாண்டு:.

"கற்பூரப் பாத்திகட்டிக் கத்தூரி யெருப்போட்டுக் கமழ்நீர் பாய்ச்சிப் பொற்பூரவுள்ளியினை விதைத்தாலும் அதன் குணத்தைப் பொருந்தக் காட்டும்" என்னுஞ் செய்யுள் இந்த சுலோகத்தின் பொருளை விளக்குமது.

## 253. மரணத்தை எதிர்பார்ப்போர்

ப்ராயோ ஹி அக்ருதக்ருத்யத்வாத் ம்ருத்யோருத்விஜதே ஜந:
க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரிய மிவாதிதிம்.

மரணமென்ருல் அதற்கு அஞ்சாதவர்களில்லை; பெரும்பாலும் அஞ்சுகிறவர்களேயுள்ளார்கள். அதற்கு என்ன காரணமென்ருல், தாம் தாம் செய்து தீரவேண்டிய காரியங்களைச் சரிவரச் செய்யாமையினுலே 'மேலுலகில் நமக்குத் தண்டனை கிடைக்குமே' என்பது பற்றியே அஞ்சுகிருர்கள். செய்யவேண்டுமவற்றைச் செய்து தலைக்கட்டி க்ருதக்ருத்யர்களென்று பேர்பெற்றவர்கள் மரணத்திற்குச் சிறிதும் அஞ்சார்கள். தம்முடைய க்ருதக்ருத்யத்வத்திற்காக மேலுலகில் தமக்கு நல்ல பரிசு கிடைக்கப்போகிறதென்று அறுதியிட்டு அவர்கள் ம்ருத்யுவை ஆவலோடு எதிர்பார்த்திருப்பர்கள்.

## 254. க்ஷேத்ர தீர்த்த யாத்திரை எதற்காக?

யமோ வைவஸ்வதோ ராஜா யஸ் தவைஷ ஹ்ருதி ஸ்தித:,
தேந சேத் அவிவாதஸ் தே மா கங்காம் மா குரூந் கம:.

கங்கை நீராடப் போகவேணுமென்றும் குருக்ஷேத்ர யாத்திரை செல்லவேணுமென்றும் பலர் பாரிப்பதுண்டு. அன்னவர்களை நோக்கிச் சொல்லுவதிது. "ஸர்வநியந்தாவாய் ஸூர்யமண்டலவர்த்தியாய் ஸகல கல்யாணகுணசாலியான எம்பெருமான் உள்ளத்துள்ளே உறைகின்றான்; அவன் பக்கலில் அடிமைக்கு இசையாதே 'த்வம் மே' என்றால் 'அஹம் மே' என்னும்படி பிணக்குக் கொண்டிருக்கிற நீ கங்கையாடியும் குருக்ஷேத்ரம் சென்றும் யாது பயன்? அந்தப் பிணக்கு இல்லை என்னும் பக்ஷத்தில் அப்போதும் க்ஷேத்ர தீர்த்த யாத்திரை வேண்டியதில்லை." இதில் 'தேந சேத் அவிவாத:' என்றதை இரண்டுபடியாக யோஜித்துக்கொள்வது; தேந தே விவாதச் சேத், மா கங்காம் மா குரூந் கம:; தேந தே அவிவாதச் சேத், (ததாபி) மா கங்காம் மா குரூந் கம:.

## 255. மானிடரைப் பாடுதல் தகுதியற்றது

காசாய நீசம் கமநீயவாசா மோசாபலஸ்வாதமுசா ந யாசே
தயாகுசேலே தநதே குசேலே ச்ரிதே குசேலே ச்ரிதமாகுசேலே.

"என்னாவிலின்கவி யானொருவர்க்கும் கொடுக்கிலேன்" என்ற திருவாய்மொழிப் பாசுரத்தை யடியொற்றிப் பேசுவதிது. பரம தயாளுவும் குசேலனுக்குச் செல்வமளித்தவனும் *மலராள் தனத்துள்ளானுமான ஸர்வேச்வரனிருக்க என்னுடைய மதுரமான வாக்கை அற்பமான காசுக்காக நீசர்களிடத்தில் உபயோகித்து யாசனை செய்யமாட்டேன். "மோசா பலம்" வாழைப்பழம். "ஸ்வாத:"—ரஸ:. உத்தரார்த்தத்தில் "குசேலே" என்னும் பதம் நான்கு தடவை வருகிறது. "தயாகுசேலே" கருணைக்கடலென்றபடி. "கோத்ரா கு: ப்ருதிவீ ப்ருத்வீ" என்ற அமரகோசத்தின்படி (கு) என்பது பூமிக்கு வாசகம். சேலமென்று வஸ்த்ரத்திற்குப் பெயர். பூமிக்கு வஸ்த்ரம் கடல். "கண்ணார் கடலுடுக்கை" என்ற சிறிய திருமடல் காண்க. ஆக 'தயாகுசேலே' என்றதற்குக் கருணைக்கடலென்று பொருள் தேறிற்று. "ச்ரிதே குசேலே குசேலே தநதே"— ஆச்ரிதனாய் கந்தைத் துணியணிந்தவனான குசேல முனிவனிடத்திலே செல்வமளித்தவனென்றபடி. [ச்ரிதமாகுசேலே] குச ஏவ இலா. குசேலா; மாயா: குசேலா—மாகுசேலா; ச்ரிதா மாகுசேலா யேந ஸ:—ச்ரிதமாகுசேல:; தஸ்மிந். என்று விக்ரஹம் காண்க. "கௌரிலா கும்பிநீ க்ஷமா" என்ற அமரகோசத்தின்படி "இலா" என்பது நிலம்; பிராட்டியினுடைய ஸ்தநதேசத்தைப்பற்றியிருக்கும் பெருமானென்றதாயிற்று.



## 256. உபத்திரவம் செய்பவர்களுக்கே உயர்ந்த பூஜை

அக்ருதோபத்ரவ: கச்சித் மஹாநபி ந பூஜ்யதே
அர்ச்சயந்தி நரா நாகம் ந தார்க்ஷ்யம் ந ச ஹஸ்திநம்.

மஹான்களாயிருந்தாலும் பிறர்களுக்கு ஹிம்ஸை செய்பவர்களே பூஜிக்கப் பெறுவார்கள். உலகில் எங்கும் நாகபூஜையென்று நடந்து வருகிறது. கருடபூஜை யென்றோ கஜேந்திரபூஜை யென்றோ நடத்துவாருளரோ? இல்லை. கருடனுக்கும் கஜராஜத்திற்கும் மஹத்துவத்தில் குறையில்லை. ஆனால் உபத்ரவம் செய்யாமையே காரணமாக அவற்றுக்குப் பூஜை யேற்படவில்லை. இதை யொரு விநோதோக்தியாகக் கொள்வது.

## 257. கவிதையின் திறமை

காளிந்தி ப்ரூஹி, கும்போத்பவ, ஜலதிரஹம் நாமக்ருஹ்ணாஸி கஸ்மாத்
சத்ரோ மே? நர்மதாஹம் த்வமபி வதஸி மே நாம கஸ்மாத் ஸபத்ந்யா:?
மாலிந்யம் கஸ்ய ஹேதோர் வஹஸி? பரிமிலத்கஜ்ஜலைர் மாலவீநாம்
நேத்ராம்போபி, கிமாஸாம் ஸமஜநி? குபித: குந்தலக்ஷோணிபால:

நர்மதா நதிக்கும் ஸமுத்ரராஜனுக்கும் ஸம்பாஷணையாக வைத்து இயற்றப்பட்டது இந்தச்லோகம். குந்தல தேசத்து அரசனுக்கும் மாளவ தேசத்து அரசனுக்கும் பெரும்போர் நடந்தது. அதில் குந்தல தேசத்தரசனுக்கு வெற்றியுண்டாகி மாளவதேசத்தரசன் மாண்டொழிய நேர்ந்தது. வெற்றி பெற்ற அரசன் தனது வெற்றியைப் பற்றிக் கவிபாடும்படி பலகவிகளுக்குக் கட்டளையிட்டிருந்தான். அதற்கிணங்கிப்பல கவிகளும் சுலோகங்களியற்றினார்கள். அவர்களுள் ஒரு மஹாகவிக்குத் தான் உத்தமஸன்மானம் கிடைத்தது. அந்தக்கவியின் சுலோகமிது. ஒரு விஷயத்தை நேராகவே சொல்லிவிடுவதைக் காட்டிலும் வ்யங்க்யமாகச் சொல்லுவதுதான் உத்தமகாவ்யஸரணியாகும். பரக்ருதவிஷயத்தில் கவிபாடின கவிகள் யாவரும் குந்தலதேசத்தரசன் மாலவதேசத்தரசனைக் கொன்றுவிட்டானென்றே வெட்ட வெளிச்சமாக சுலோகமியற்றி வாசித்தார்கள். இந்தச்லோகம் அப்படிப் பட்டதன்று; ஆழ்ந்து அறியவேண்டிய கருத்துடையது. கேண்மின். *நதீநாம் ஸாகரோ கதி:* ஆகையாலே நர்மதா நதியானது கடலிலே போய்ச் சேர்ந்தது. இந்த நதி மாலவ தேசத்தில் பெருகுவதென்பது அறியத்தக்கது. தன்னிடம் வந்து சேர்ந்த நர்மதாநதி எப்போதும்போல் வெண்ணிறமாகவல்லா

மல் அன்று கருநிறத்ததாயிருந்தமையால் இதை யமுனையாக ப்ரமித்த கடலரசன் "யமுனாநதியே!" என்று விளித்து யோக க்ஷேம விசாரம் செய்தானாம். நர்மதையான தன்னை யமுனையாகச் சொன்னது பற்றிச் சினங்கொண்ட நர்மதை கடலை நோக்கி "அகஸ்திய முனிவரே! க்ஷேமமா?" என்று வினவியதாம். அது கேட்ட கடலரசன் "அடீ யமுனையே! ஒரு ஸமயத்தில் என்னை முற்றும் பருகியதனால் எனக்கு சத்துருவாகிய அகஸ்த்யனுடைய பெயரை யிட்டு என்னை நீ விளிக்கத் தகுமா?" என்று கேட்க; "அப்பா! நான் நர்மதையாயிருக்க, என்னை நீ என் சக்களத்தியான யமுனையின் பெயரையிட்டு விளிக்கத் தகுமா?" என்று கேட்டதாம் நர்மதை. அதற்குக் கடலரசன் "அப்படியா? நர்மதையா நீ? அப்படியானால் நீ ஏன் கறுப்பாயிருக்கிறாய்? யமுனைதானே கறுப்பாயிருப்பவள். உனக்கு இந்தக் கருநிறம் எப்படி வந்தது?" என்று கேட்டனனாம். அதற்கு நர்மதை சொல்லிற்று: "மாளவ நாட்டு மாதர்கள் தங்கள் கண்களிலிட்ட மையைக்கழுவி என்பால் நீராடினார்கள்; அதனால் நான் கறுப்பாயினேன்," என்றது. கண்களில் மையைக் கழுவி நீராடுவது வைதவ்யம் வருங்காலத்திலேயாதலால் "அந்த மாதர்களுக்கு அப்படி என்ன நேர்ந்தது?" என்று கடலரசன் கேட்க; "குபித: குந்தலக்ஷோணிபால:" என்றதாம் நர்மதை. குந்தல நாட்டரசனுக்குச் சீற்றமுண்டாயிற்று என்பதே இதன் பொருள். ஆனாலும், சீற்றத்தினால் மாலவதேசத்தரசனை மாய்த்தொழித்தனன் என்பது தேறின கருத்து. இங்ஙனே ஸம்வாதம் வைத்து ஜயபராஜயங்களைக் காட்டினது கவியின் அப்ரமேயமான சாதுரியம். ஒரு மஹாநதி தன்னிறம் மாறிக் கருநிறம் கொண்டதற்குக் காரணம் மாதர்களின் மை கொண்ட கண்ணீரென்று கூறினால் எத்தனை மாதர்கள் அழுதிருக்கவேணுமென்பதை ஊஹிக்க வேணும். அத்தனைமாதர்கள் மனைவியராகக் கொண்ட அரசன் எத்தனை மதிப்பனாயிருக்க வேணுமென்பதையும் ஊஹிக்கவேணும். அன்னவனை வென்ற மஹாராஜனது மிடுக்கு எத்தகைத்தென்று ஊஹிக்கவேணும். "காசியில் திருடுவதற்குக் கராச்சியில் கன்னமிட்டான்" என்கிற பழமொழியை நினைப்பது.

## 258. ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கும் பார்வதிக்கும் ஸம்பாஷணை

பிக்ஷார்த்தீ ஸ க்வ யாத:? ஸுதநு! பலிமகே, தாண்டவம் க்வாத்ய பத்ரே!
மங்யே ப்ருந்தாவநாந்த:, க்வ நு ஸம்ருகசிசு:? நைவஜாநே வராஹம்.
பாலே! கச்சிந் ந த்ருஷ்டோ ஜரடவ்ருஷபதி:? கோப ஏவாஸ்ய வேத்தா
லீலாஸம்வாத இத்தம் ஜலநிதிஹிமவத்கன்யயோஸ் த்ராயதாம் வ:



ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கும் பார்வதிக்கும் ஸம்பாஷணையாக வைத்து இயற்றிய சுலோகமிது. விஷ்ணுபக்தர்கள் சிவபெருமானிடத்தில் வெறுப்புக்கொள்ளலாகாது என்பதற்கு இந்தச்லோகம் பொருத்தமானது. ஸ்ரீ மஹாலக்ஷ்மி பார்வதியை நோக்கிக்கேட்டாள் 'தோழீ! அந்த பிச்சையாண்டி எங்குப் போனான்?' என்று. பரமசிவன் *பிண்டியார் மண்டையேந்திப் பிறர்மனை திரிதந்துண்ணு முண்டியானாகையாலே அதனைப் பரிஹஸித்துக் கூறினபடி. இங்ஙனம் வினவப்பட்ட பார்வதி விடை கூறினாள் "ஸுதநு பலிமகே" அம்மா! அந்த பிச்சையாண்டி மஹாபலியின் வேள்வியிலே சென்றாரென்றாள். என் பர்த்தாமட்டும் பிச்சைக்காரரல்லர்; உன் பர்த்தாவும் பிச்சைக்காரரே யென்று காட்டினபடி. பிறகு லக்ஷ்மி அதை விட்டிட்டு வேறொரு கேள்வி "பத்ரே! அத்ய தாண்டவம் க்வ" நங்காய்! இன்று கூத்து எங்கே? என்று கேட்டாள். பரமசிவன் நடராஜனாகையாலே அதைப் பரிஹஸித்தபடி. அதற்குப் பார்வதியின் விடை "மங்யே ப்ருந்தாவநாந்த:" அம்மா! லக்ஷ்மீ! இன்று கூத்து ப்ருந்தாவனத்திலிருக்குமென்று நினைக்கிறேனென்றாள். *கன்றப் பறை கறங்கக் கண்டவர்தம் கண்களிப்ப மன்றில் மரக்கால் கூத்தாடினான் காணேடீ* குடங்களெடுத் தேறவிட்டுக் கூத்தாடவல்ல வெங் கோவே! இத்யாதிப்படியே உனது கணவனும் கூத்தாடியேயென்று காட்டினபடி. அதன் பிறகு லக்ஷ்மியின் வினா "க்வ நு ஸம்ருக சிசு:" அம்மா பார்வதீ! அந்த மான் குட்டி எங்கே? என்றாள். பரமசிவன் மான் குட்டியை வைத்துக் கொண்டிருப்பதாக ஐதிஹ்யமாகையாலே அதைப் பரிஹஸித்தபடி. அதற்குப் பார்வதியின் விடை "நைவ ஜாநே வராஹம்" அந்தப் பன்றி எங்கே போயிற்றோ அறியேன் என்றாள். என்பார்த்தா மான் குட்டியை வைத்துக்கொண்டிருப்பது பரிஹாஸ்யமன்று; உன் பர்த்தா *பண்டொருநாள் மாசுடம்பில் நீர் வாரா மானமிலாப்பன்றி* என்கிறபடியே தாமே பன்றியாக வடிவெடுத்தாரே, அது தான் பரிஹாஸ்ய மென்றவாறு. அதற்குமேல் லக்ஷ்மியின் வினா "பாலே! கச்சிந் ந த்ருஷ்டோ ஜரடவ்ருஷபதி:" அந்தக் கிழ எருது எங்கே? பார்த்தாயா? என்றாள். பரமசிவன் வ்ருஷபவாஹனனாகையாலே அதைப்பரிஹஸித்தபடி. பார்வதியின் விடை "கோப ஏவ அஸ்ய வேத்தா" எருதைப்பற்றி இடையனுக்குத் தான் தெரியுமென்றாள். என்பர்த்தா ஒரு எருதை வைத்துக்கொண்டிருப்பது ஹேயமன்று; உன்பர்த்தா எண்ணிறந்த மாடுகளை மேய்க்க இடையனானதுதான் ஹேயம் என்று காட்டினபடி. இவ்வாறாக மலர் மகளுக்கும் மலைமகளுக்கும் விநோதமான ஸம்பாஷணை நடந்த தென்கை.

## 259. எதற்கும் ஸ்தானவிசேஷத்திலேற்றமுண்டு

கர்ணுருந்துதமந்தரேண ரணிதம் காஹஸ்வ காக ! ஸ்வயம்
மாகந்தம் மகரந்தசாலிநமிஹ, த்வாம் மந்மஹே கோகிலம்
தந்யாநி ஸ்தலவைபவேந கதிசித் வஸ்தூநி, கஸ்தூரிகாம்
நேபாலக்ஷிதிபாலபாலபதிதே பங்கே ந சங்கேத க:.

ஒரு காக்கையானது தேன்மாமரத்தின் கிளையிலுட்கார்ந்து கொண்டு கர்ணகடோரமாகக் கத்தா நிற்க, அதுகண்டு ஒரு ரஸிகன் சொல்லுகிருன்: காக்கையே! நீ மாமரத்திலிருப்பதைப்பற்றி ஆக்ஷேப மில்லை. கர்ண கடோரமாகக் கத்துவதை விட்டிட்டு வாயைத் திறவாமலிருந்தாயாகில் ஆகாரஸாம்யத்தையிட்டு உன்னைக் குயிலாகவே நினைத்துக்கொள்வோம். சில வஸ்துக்களுக்கு இடத்தின் பெருமையினுல் சிறப்பு ஏற்பட்டுவிடும். நேபாள தேசத்தரசன் நெற்றியில் சேற்றை யணிந்து கொண்டிருந்தாலும் ஸ்தல வைபவத்தினுல் அதனைக் கஸ்தூரீ திலகமாகவே யெண்ணி விடுவர்களன்ரே; அதுபோல வென்கை. வித்வான்களிருக்க வேண்டுமிடத்தில் ஒன்றுந் தெரியாத மூடன் இருக்க நினைத்தால் வாயைத்திறவாமல் வாளா விருந்தாணுகில் அவன் வித்வான்களிலொருவணுக எண்ணப்பட்டு விடுவானென்றவாறு.

## 260. பொருளை மறைத்துப்பேசுமழகு

கோபால இதி க்ருஷ்ண ! த்வம் ப்ரசுரக்ஷீரவாஞ்சயா,
ச்ரிதோ மாத்ருஸ்தநக்ஷீரமப்யலப்யம் த்வயா க்ருதம்.

ஸ்ரீ க்ருஷ்ணபகவானைப் பற்றினவர்களுக்குப் புநர்ஜன்மமில்லை யென்பது ஒரு சமத்காரமாகத்தெரிவிக்கப்படுகிறது இதில். "கண்ணு! நீ இடையனுகையாலே உன்னைப் பற்றினுல் விசேஷமாகப் பால் கிடைக்குமென்ருசைப்பட்டு வந்தடைந்தேன். என்னெண்ணம் விபரீதமாயிற்று. ஏற்கெனவே நெடுநாளாகக் கிடைத்துக்கொண்டிருந்த தாய் முலைப்பாலும் அரிதாம்படி செய்துவிட்டாயே" யென்கிருன். புநர்ஜன்ம முண்டாணுலன்ரே தாய் முலைப்பால் கிடைக்கும்? அஃது இல்லையாயிற்றென்கை.

## 261. அஸத்துக்கள் அறஞ்செய விரும்புவது அனர்த்தம்

அஸதாம் தர்மபுத்திச் சேத் ஸதாம் ஸந்தாபகாரணம்
உபோஷி தஸ்ய வ்யாக்ரஸ்ய பாரணம் பசுமாரணம்

உலகில் அஸத்துக்களுக்கு தருமத்தில் ருசி ஏற்படக்கூடாது; அது ஏற்பட்டால் ஸத்துக்களுக்குத் தீமையாகவே முடியும். (இதற்கு



ஒரு நிதர்சனம்.) ஒரு புலி 'இன்று ஏகாதசியாதலால் நான் ஒன்றும் பக்ஷிக்கப் போகிறதில்லை' என்று சொல்லிக்கொண்டு உபவாஸமிருந்ததாம். அதற்கு த்வாதசீபாரணை ஸாதுக்களான பசுக்களைக் கொன்று நடைபெற்றதாம். "மறக்குடி அறம் செய்யக் கெடும்" என்பர்.

## 262. யாசகம் செய்வதன் இழிவு

யாசநா ஹி புருஷஸ்ய மஹத்த்வம் நாசயத்யகிலமாசு ததாஹி
ஸோபி விச்வஜகதீபதிரீசோ வாமநோ பவதி யாசிதுமிச்சந்

ஒருவரிடத்தில் சென்று யாசனை செய்வதென்பது மனிதனுடைய பெருமையை மிகவும் குறைத்துவிடும். யாசகம் செய்யப்போமவன் மானியாயிருந்தால் அவனுடல் குன்றியேபோகும். த்ரிலோகநாதனை பகவான் மஹாபலியினிடத்தில் ஸ்வார்த்தமாக யாசனை செய்யப் போகவில்லை; பரார்த்தமாகவே யாசிக்கப்போனுர். ஆனுலும் செய்வது யாசகமே யாதலால் அவருடையவுடல் குன்றிப்போய் வாமன மூர்த்தியாக வேண்டி வந்தது. பெருமாள் ஸ்வேச்சையாலே வாமன வேஷம் கொள்ளவில்லை. கொண்டது யாசகவ்ருத்தியாதலால் அது அவரை வாமன மூர்த்தியாக்கிற்று. எண் சாணுடம்பை ஒரு சாணுடம்பாக ஆக்கியது. ஆகவே யாசகவ்ருத்தி மிகவும் இழிவானது என்றதாயிற்று.

## 263. ஸம்ஸ்க்ருத கவிகள் உகக்கும் கவிதை

பவித்ரீ ரம்போரு! த்ரி தசவதநக்லாநிரதுநா
ஸ தே ராமஸ் ஸ்தாதா ந யுதி புரதோ லக்ஷ்மணஸக:.
இயம் யாஸ்யத்யுச்சைர் விபதமதுநா வாநரசமூ:
லகிஷ்டேதம் ஷஷ்டாக்ஷரபரவிலோபாத் பட புந:.

(இந்தச்லோகம் ஸம்ஸ்க்ருதஜ்ஞர்களுக்கே மிகவும் ரஸிக்கத்தக்கதாகும். ஸ்ரீ ராம லக்ஷ்மணர்கள் வானர ஸேனையுடன் இலங்கையிற் புகுந்த பின்பு இராவணன் ஸீதையிடம் வந்து மூன்று வார்த்தைகள் சொல்ல, அவற்றை உடனே ஸீதை வெகு சாதுரியமாகக் கிள்ளிக் களைந்தமை இதில் தெரிவிக்கப்படுகிறது. கவி புத்தியின் சமத்காராதிசயம் கொண்டாடத்தக்கது.) ஸீதையை நோக்கி ராவணன் சொன்ன மூன்று வார்த்தைகளாவன : [1. "பவித்ரீ ரம்போரு! த்ரிதசவதநக்லாநிரதுநா"] ஸீதே! பார். இப்போது தேவதைகளின் முகம் வாட்டமடையப் போகிறது. [2. "ஸ தே ராமஸ் ஸ்தாதா ந யுதி புரதோ லக்ஷ்மணஸக:"] ராம லக்ஷ்மணர்கள் போர்க்களத்தில் என்னெதிரே நிற்கவல்லவர்களல்லர். [3. "இயம் யாஸ்யதி உச்சைர்விபதமதுநா வாநரசமூ:"] இங்கே வந்து சேர்ந்திருக்கிற வானர சேனையெல்லாம்

மிகவும் விபத்தையடையப் போகிறது காண். ஆக இம் மூன்று வார்த்தைகளையும் கேட்ட ஸீதை சிறிதும் ஆலோசியாமல் உடனே சொன்னாள் [லகிஷ்ட! இதம் ஷஷ்டாக்ஷரபரவிலோபாத் பட புந:] அடா அற்பனே! இப்போது நீ சொன்ன மூன்று வார்த்தைகளில் ஒவ்வொன்றிலும் ஏழாவது எழுத்தை நீக்கிவிட்டுப்பார்; அப்போது என்னபொருள் தேறுகிறதோ, அதுதான் நடக்கப்போகிறதென்பது திண்ணம் என்றாள். இனி இதன் விவரணம். முதல் வார்த்தையில் ஏழாவது எழுத்து "த்ரி" என்பது. அதை நீக்கிவிட்டு வாசித்தால் 'தசவதநக்லாநி: அதுநா பவித்ரீ' என்றதாகும். 'இராவணனாகிய உனக்கு இப்போது வாட்ட முண்டாகப் போகிறது பார்' என்றதாம். இரண்டாவது வார்த்தையில் ஏழாவது எழுத்து "ந" என்பது! அதை நீக்கிவிட்டு வாசித்தால் ராமலக்ஷ்மணர்கள் போர்க்களத்தில் முன் னிற்கப் போகிறார்களென்றதாம். மூன்றாவது வார்த்தையில் ஏழாவது எழுத்து "வி" என்பது, அதை நீக்கிவிட்டு வாசித்தால் 'இயம் வாநரசமூ: உச்சை: பதம் யாஸ்யதி' என்றதாகத் தேறும். இந்த வானர சேனை வெற்றி பெற்று உயர்பதவியையடையப் போகின்றதென்றதாம். பிறகு இப்படியேயாயிற்று

## 264. நம்முடைய வயது கழியும் விதம்

பாலஸ் தாவத் க்ரீடாஸக்தஸ் தருணஸ் தாவத் தருணீஸக்த:,
வ்ருத்தஸ் தாவத் சிந்தாஸக்த: பரே ப்ரஹ்மணி கோபி ந ஸக்த:.

நாம் நம்முடைய வாழ்க்கையைப் பரமாத்ம சிந்தையேயில்லாமல் பாழே கழிக்கிறோமென்பதை ஒரு மஹாத்மா மிகுந்த நிர்வேதத்துடன் தெரிவிக்கிறார். இளமைப் பருவம் விளையாடல்களினால் கழிகிறது. யௌவநபருவம் விஷயப்ராவண்யத்தினால் கழிகிறது. கிழத்தனத்திலோவென்னில் பலவகையான சிந்தைகள். இங்ஙனம் கழிகிற ஆயுளில் பரமாத்ம சிந்தனைக்கு அவகாசம் பெறுவது அரிதாகவேயுள்ளது. விவேகிகள் விஷயப்ராவண்யத்தையும் வீண் சிந்தனைகளையும் விட்டுத்தொலைத்துப் பரமாத்ம சிந்தனையில் ஊக்கம் செலுத்த வழிதேட வேணுமென்று குறிப்பித்தவாறு.

## 265. நிந்திப்பவர்களின் இழிவு

மாத்ஸர்யம் விநிவார்ய தூஷணக்ருதோ மாதுச் ச மீமாம்ஸிதே
வாத்ஸல்யே, ஜநநீஜநாத் ததகிம் ஸம்த்ருச்யதே தூஷகே,
மத்யேக்ருத்ய த்ருணம் மலாநி ஹரதே மாதா ஸசங்கம் சிசோ:
நிச்சங்கம் நிஜஜிஹ்வயைவ ஹரதே நாநாமலம் தூஷக:.

பரநிந்தைகளினாலேயே போதைப் போக்குகிறவன் உண்பது சோறு அல்ல என்று தெரிவிக்கலாகிறது. மாதாவானவள் தன் சிசுவின் மலத்தை வைக்கோல் முதலியவற்றினால் மனதில் அருவருப் போடு எடுத்தெறிகிறாள்; பரதூஷணமே போதுபோக்காக இருப்பவனோவென்னில் அருவருப்பில்லாமலும் ஸத்வாரகமாகவல்லாமலும் தனது நாவினாலேயே நாநாவித ஜனங்களின் மலங்களைக் கொள்ளுகின்றான். (இந்த உக்தி க்ராம்யமாயினும் பரநிந்தையே போதுபோக்கா யிருப்பவர்களுக்கு இங்ஙனே தெரிவிப்பது மிகையன்று.)



## 266. சீரிய பொருள்களின் சீர்மைகெடாது

கலகண்டகணாஸ்வாத்யே காமஸ்யாஸ்த்ரே நிஜாங்குரே
நிம்பவ்ருத்திபிருத்கீர்ணே ந சூத: பரிதப்யதே

ஒட்டகமானது வேப்பிலையையே பரமபோக்யமாகக்கொண்டு மேயும்; மேயுமிடத்து, தப்பித்தவறி மாந்தளிர் உள்ளே புகுந்தால் அதை உடனே கக்கிவிடும். இதனால் மாமரம் வருந்துமோ? நம்முடைய தளிரைக் குயில்கள் உட்கொள்ளுமென்றும், பஞ்சபாணனான மன்மதன் அஸ்த்ரமாகக் கொள்வானென்றும் மகிழ்ந்தேயிருக்கும்.

## 267. குற்றங்கள் கழியும் வழி

அநுதாபாத் உபரமாத் ப்ராயச்சித்தோந்முகத்வத:,
தத்பூரணாச் சாபராதாஸ் ஸர்வே நச்யந்தி பாதச:.

ஒவ்வொருவனும் தான் செய்த பாபங்களை நான்கு காரியங்களினால் போக்கிக்கொள்ளவேணும்; ஐயோ! பாபம் செய்தோமேயென்று அநுதாபங்கொண்டானாகில் செய்த பாபத்தில் கால்பங்கு தொலையும். இனிமேல் செய்வதில்லையென்று ஸங்கல்பித்துக் கொண்டானாகில் பாதிபங்கு பாபம் தொலையும். செய்த பாபத்திற்கு என்ன ப்ராயச்சித்தமென்று விசாரித்துத் தெரிந்துகொண்டு அதையனுட்டிக்க விரும்புவானாயின் முக்கால்பங்கு பாபம் தொலையும். அந்த ப்ராயச்சித்தத்தை யனுட்டித்துத் தலைக்கட்டினானாகில் முழுப்பாபமும் தொலைந்திடும்.

## 268. தீயார்க்கு நல்லசெயல் ருசிக்காது

பாபபூரிததேஹாநாம் புண்யகார்யமரோசகம்
சர்மகண்டநபக்ஷ்யாணாம் சுநாம் க்ருதமரோசகம்

பாபிஷ்டர்களுக்கு நல்ல காரியம் ருசிக்காது. செருப்புகளைக் கடித்துத் தின்பதே தொழிலான நாய்களுக்கு நெய் ருசிக்காது. நெய் கலந்த பண்டம் வாயினுள்ளே புகுந்தால் நாய் அதைக் கக்கித் தள்ளிவிடும். "நாய்க்குடலுக்கு நறு நெய் தொங்காதாப்போலே" என்பது ஆசார்ய ஸ்ரீஸூக்தி.

## 269. ஆசார்ய கடாக்ஷத்தின் பெருமை

ஏகயைவ குரோர் த்ருஷ்ட்யா த்வாப்யாம் வாபி லபேத யத்
ந தத் திஸ்ருபிரஷ்டாபிஸ் ஸஹஸ்ரேணாபி கஸ்யசித்.

ஆசாரியனுடைய ஒரு கண்ணினால் அல்லது இரண்டு கண்களினால் நாம் பெறக்கூடிய பேற்றை மூன்று கண்களினாலும் பெற முடியாது; எட்டுக் கண்களினாலும் பெறமுடியாது; ஆயிரம் கண்களினாலும் பெறமுடியாது. ஆசாரியனுடைய ஒரு கண்ணாவது திருவுள்ளமாகிற உட்கண். இரண்டு கண்கள் தெரிந்தவையே; வெளிக் கண்கள். சிஷ்யர்களிடத்தில் பேரன்பு பூண்ட ஆசாரியர் "சுபேந மநஸா த்யாதம்" என்றாப்போல் திருவுள்ளத்தினால் கடாக்ஷித்தால் போதும். அங்கணிரண்டுங்கொண்டு கடாக்ஷித்தாலும் போதும். இவற்றால் விளையக்கூடிய நன்மை ஸர்வஜ்ஞனென்று பேர் பெற்ற முக்கட்பிரானாலும் விளைவிக்க முடியாது; நான்கு முகங்களினாலும் நான்கு வேதங்களையு மோதித்திரிகிற எண் கண்ணனாலும் பெறுவிக்க முடியாது. *ஸ்ஹஸ்ரசீர்ஷா புருஷஸ் "ஸஹஸ்ராக்ஷ:"* என்றும், *தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் "துணைமலர்க் கண்களாயிரத்தாய்"* என்றும் ஆயிரங்கண்ணனாக வோதப்படுகிற ஸ்ரீமந்நாராயண மூர்த்தியாலும் அடைவிக்கமுடியாது.

## 270. பெயரினால் ஒன்றும் வந்துவிடாது

ததேவ க்ருஹ்யதாம் நாம ச்சாகமண்டுகராஸபை:
தாவதா திஸ்ருணாம் ஹந்த மூர்த்தீநாம் கிமிஹக்ஷதம்.

"அஜ:" என்கிற பெயர் பிரமனுக்குமுள்ளது, ஆட்டுக் கடாவுக்குமுள்ளது. "ஹரி:" என்னும் பெயர் திருமாலுக்கு முள்ளது, தவளைக்குமுள்ளது. "ஹர:" என்னும் பெயர் சிவபெருமானுக்குமுள்ளது, கழுதைக்குமுள்ளது. இவற்றால் த்ரிமூர்த்திகளுக்கு என்ன கெடுதல் வந்திட்டது? ஆடு தவளை கழுதைகளுக்கு என்ன ஏற்றம் வந்திட்டது?

## 271. பிரமன் படைப்பு விசித்திரம்

மத்குணாந் மசகாந் மந்தாந் மக்ஷிகாச்ச ஸ்ருஜந்நஜ:,
ந ஜாநீமோ நிஜே சித்தே கிம்நாம த்ருதவாநிதி.

மூட்டைப் பூச்சிகள், கொசுக்கள், மூர்க்கர்கள், ஈக்கள் ஆகிய இந்த ஜந்துக்களைப் படைத்த பிரமன் எவ்விதமான பரோபகாரத்தைக் கருதி ஸ்ருஷ்டி செய்தானோ அறியோம். பரஹிம்ஸைக்காகவே யன்றோ இவற்றைப் படைத்ததென்றவாறு.



## 272. பெண்களின் பழிப்பு

ந விஷேண ந சஸ்த்ரேண நாக்நிநா ந ச ம்ருத்யுநா
அப்ரதீகாரபாருஷ்யாஸ் ஸ்த்ரீபிரேவ ஸ்த்ரிய: க்ருதா:.

ஸ்த்ரீகளின் கொடுமையை அபரிமிதமாக அநுபவித்தவொருவன் சொல்லுவது இது. ஸ்த்ரீகளை ஸ்ருஷ்டித்தவன் விஷத்தைக் கொண்டு ஸ்ருஷ்டித்திருப்பனோ? அல்ல; சஸ்த்ரத்தைக் கொண்டு ஸ்ருஷ்டித்திருப்பனோ? அல்ல; நெருப்பைக்கொண்டு ஸ்ருஷ்டித்திருப்பனோ? அல்ல. ம்ருத்யுவைக்கொண்டு ஸ்ருஷ்டித்திருப்பனோ? அல்ல. ஏனென்னில், இவற்றின் கொடுமைகளுக்குப் பரிஹாரமுண்டு; விஷசஸ்த்ர அக்நி பாதைகளுக்கு மந்த்ரௌஷதாதிகளினால் ப்ரதீகாரமுண்டே. ம்ருத்யுவுக்கும் ம்ருத்யுஞ்ஜயஸ்தோத்ர பாராயணாதிகளினால் பரிஹாரமுண்டே. ஸ்த்ரீகளினால் விளைகிற ஹிம்ஸைகளுக்கு ஒரு படியாலும் பரிஹாரமில்லையே. பின்னை எதுகொண்டு ஸ்த்ரீகளை ஸ்ருஷ்டித் திருக்கவேண்டுமென்றால், ஸ்த்ரீகளைக்கொண்டே ஸ்த்ரீகளை ஸ்ருஷ்டித்திருக்க வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது.

## 273. பொறுமையின் பெருமை

மயி தத்தாவதாநாயாம் விச்வதோஷாபஹாரிணா
ந சக்ய மீச்வரேணாபி நிரவத்யேந வர்த்திதும்.

ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் அஸூயா தேவியின் வார்த்தையிது. நான் உஷாராயிருந்தேனாகில் ஸர்வ தோஷாபஹர்த்தாவான ஸர்வேச்வரனுங்கூட தோஷமற்றவனாக இருக்கமுடியாது என்றாள் அஸூயாதேவி. இதன் கருத்து: உலகில் அஸூயையுள்ளவர்கள் ஸர்வேச்வரன் பக்கலிலுங்கூட தோஷாரோபணஞ் செய்யத் துணிவர்களென்பதாம்.

## 274. பொறுமையினின்று பிழைக்கவல்லவரார்?

நிரவதிகுணக்ராமே ராமே நிராகஸி வாகஸி
ஸ்புரண முஷிதாலோகா லோகா வதந்தி ஸதந்திகே.
வரதநுஹதிம் வாலித்ரோஹம் மநாகபஸர்ப்பணம்
பரிமிதகுணே ஸ்பஷ்டாவத்யே முதா கி முதாஸதே.

முந்தின சுலோகத்திற் சொன்னதற்கு இது விவரணம். ஸ்ரீராமபிரான் தோஷலேசமுமற்று குணக்கடலாயிருப்பவனென்று ப்ரஸித்தன். அன்னவனையுங்கூட நாக்கில் கொடுமை படைத்த அவிவேகிகள் ஸத்துக்களிடத்திலே தூஷிக்கத் தலைப்படுகிறார்கள். என்னவென்று தூஷணமென்னில், ஸ்த்ரீவதம் பெரும்பாதகமென்றுண

ராமல் தாடகாவதம் பண்ணினுன்: நிரபராதியான வாலியைக் கொன்ருன்; கரதூஷணவதத்தில் சிறிது பின் வாங்கினுன்— என்றிங்ஙனே தூஷணம் செய்கிருர்கள். உண்மையில் மஹா குண சாலியான இராமனேயே இங்ஙனம் பழிப்பவர்கள் குண சூந்யர்களும் தோஷ ப்ரசுரர்களுமான அஸ்மதாதிகளை தூஷியாமல் விட்டிடுவர் களோ ?

## 275. பழிப்புக்கு ஆளாகாமலிருக்க முடியாது

ஸர்வதா வ்யவஹர்த்தவ்யம் கு தோ ஹ்யவசநீயதா
யதா ஸ்த்ரீணும் ததா வாசாம் ஸாதுத்வே துர்ஜநோஜந:.

பண்டிதர்களாயிருப்பவர்களுங்கூட 'வாயைத் திறந்தால் எங்கே தப்பு வந்துவிடுகிறதோ' வென்றஞ்சி வாய் திறவாமலிருப்பதுண்டு. அன்னவர்களுக்குச் சொல்லுகிறதிது. அச்சத்தினுல் வாய்திறவாம லிருப்பது ஸரியன்று. வாயைத் திறந்து பேசியேயாகவேண்டும். குற்றமற்ற வாக்காயிருந்தாலுங்கூட, தூஷிப்பதற்கென்றே பிறந்த வர்கள் தூஷித்துக்கொண்டு தானிருப்பர்கள். ஸ்த்ரீகள் எவ்வளவு பதிவ்ரதைகளாயிருந்தாலுங்கூட துர்ஜனங்களின் வாயில் அறை படாமலிருக்க முடியாது.

## 276. உண்மைப்பண்டிதரொருவரின் பேச்சு

அநாராத்ய காளீம் அநாஸ்வாத்ய கௌளீம்
விநா மந்த்ரதந்த்ரை: ருதே சப்தசௌர்யாத்.
ப்ரபஞ்சப்ரஸித்த ப்ரபந்தப்ரவக்தா
விரிஞ்சப்ரபஞ்சே மதந்ய: கவி: க:.

காளியின் அநுக்ரஹம் பெற்றுச் சிலர் கவிகளாய் விடுவதுண்டு. கௌளியென்கிற பச்சிலையைத்தின்று சிலர் கவிகளாய்விடுவதுண்டு. மந்த்ரதந்த்ரங்களாலும் சிலர் கவியியற்றுவதுண்டு. இவையொன்று மின்றிக்கே "காவ்யார்த்த சோரா: ப்ரகுணீபவந்தி" என்ற கணக் கிலே பிறருடைய கவித்வத்தைக் களவாடித் தம்மதாக்கிக் கவிக ளென்று பேர் சுமப்பதுமுண்டு. இவ்வழிகளாலல்லாமல் கசடறக் கற்று லோக ப்ரஸித்தமான நூல்களையியற்றவல்லவன் நான்முகனுர் பெற்ற நாட்டினுள் நானெருவனேயென்று, கடிகாசதம் அம்மா ளென்னுமாசிரியர் ஒருகால் சொல்லிக்கொள்ள நேர்ந்தது.

## 277. உண்மையறிவாளிகளின் அருமை

தேவீம் வாசமுபாஸதே ஹி பஹவஸ் ஸாரம் து ஸாரஸ்வதம்
ஜாநீதே நிதராமஸௌ குருகுலக்லிஷ்டோ முராரி: கவி:.
அப்திர் லங்கித ஏவ வாநரபடை: கிந்த்வஸ்ய கம்பீரதாம்
ஆபாதாலநிமக்நபீவரதநுர் ஜாநாதி மந்தாசல:.



உபாஸநாபலத்தினுல் விளைகின்ற ஞானம் பயனற்றது; குருமுக மாகக் கற்பதனுல் விளையும் ஞானமே மிகச் சிறந்ததென்பது பற்றி முராரிகவி பணித்த பத்யமிது. பலர் வாக்தேவதையை உபாஸித்துப் பண்டிதர்களாகிருர்கள். அன்னவர்களைப் பண்டிதர்களென்று சொல்லலாமாயினும் ஸாரஸ்வத ஸாரத்தை அவர்கள் அறிந்தவர் களாகார்கள்; ஆசார்ய குலத்தில் குட்டுபட்டுக் கல்விபயின்ற முராரியே [நானே] ஸாரஸ்வத ஸாரஜ்ஞனுவன். வானரவீரர்களெல் லாரும் [இலங்கை செல்வதற்குக்] கடலைக் கடந்துவிட்டார்களெனி னும் கடலின் ஆழத்தை ஒரு வானரமுமறியாது. திருவடியைக் கேட்டால் 'ஆகாச வழியாய் சென்ற நான் கடலாழத்தை என்னறி வேன்' என்பர். மற்ற வானரவீரர்களைக் கேட்டாலோ 'அணை கட்டிச் சென்ற வெமக்குக் கடலாழமென்ன தெரியும்' என்பார்கள். ஆகவே ஒரு வானரவீரனும் கடலாழமறியான்; *மந்தரம் நாட்டியன்று மதுரக் கொழுஞ்சாறு கொண்ட* என்கிறபடியே கடல் கடையும்போது மத்தாக நாட்டப்பட்ட மந்தரமலை பாதாளலோக மளவும் மூழ்கி யிருந்ததாதலால் அஃதொன்றையே கேட்டுக் கடலாழ முணரலாகும். இவ்வாருக உபாஸநபலத்தினுல் பண்டிதரானவர்கள் ஸரஸ்வதியின் உள்மருமமறியவல்லரல்லர். குருகுலத்திலிருந்து நெடுநாள் சிரமப் பட்டவர்களே அஃதறியவல்லார்களென்றதாயிற்று.

## 278. புதுமை பழமைகளைப் பாரார் பெரியார்

புராணமித்யேவ ந ஸாது ஸர்வம் ந சாபி காவ்யம்
நவமித்யவத்யம்,
ஸந்த: பரீக்ஷ்யாந்யதரத் பஜந்தே மூட: பரப்ரத்யயநேயபுத்தி:

புராதனமான காவியமே சிறந்ததென்றும் இதாநீந்தநமான காவியத்திற்கு அவ்வளவு சிறப்பு கிடையாதென்றும் சிலர் கொண் டிருப்பார்கள். இது தவருன கொள்கை. புராதனமாயிருந்ததனு லேயே ஒன்று சிறப்புருது; நவீநமாயிருந்ததனுலேயே மற்ருென்று தாழ்வுருது. குணமுள்ளது சிறந்தது, குணமற்றது தாழ்ந்தது என்றிவ்வளவே கொள்ளத்தகும். நவீனமாயிருந்தாலும் குணுட்ய மானது கொள்ளத்தக்கதே. புராதனமாயிருந்தாலும் குணஹீந மானது தள்ளத்தக்கதே. குணதோஷ பரீக்ஷை பண்ணவறியாத மூடன் பிறர்வாக்கில் நம்பிக்கை கொள்வான்.

## 279. வாழையின் புகழ்ச்சி

மஹாந்தோ ஜநாஸ் ஸர்வகாத்ரைரபி ஸ்வை:
பரோபக்ரியாயாம் ஸதா பத்ததீக்ஷா:.
கதள்யல்பகாத்ராபி ஸர்வைர் நிஜாம்சை:
பரோபக்ரியாமேவ கல்வாதநோதி.

மஹான்கள் தங்களது ஸகலாவயவங்களினுலும் பிறர்க்கு உதவி செய்வதிலேயே ஊக்கங்கொண்டிருப்பர்கள். மஹான்களென்பது குணத்தினுல் மிக்கவர்களேயன்றி ஊன்மல்கி மோடுபருத்தவர்களையன்று. வாழையானது ஆலமரம் அரசமரம் முதலானவற்றைப்போல் மிகப் பெரியவுடலுடையதன்று. வாழைச் செடியென்றே சொல்லலாம்படியிருக்கும். அப்படியிருந்தும் அது தனது ஸகலவுறுப்புகளாலும் பரோபகாரமே செய்து போருகின்றது. வாழையிலை, வாழைத்தண்டு, வாழைப்பூ, வாழைப் பிஞ்சு, வாழைக்காய், வாழைப்பழம், வாழைக்கிழங்கு, வாழைப்பட்டை என்னுமிவற்றில் உதவாதது ஒன்றுண்டோவென்று பார்க்கலாம். வாழைநாரும் பூத்தொடுக்கவுதவுகின்றதன்றே.

## 280. அவரவர்கள் தகுந்தஸ்தானத்திலிருக்கவேணும்

விதிரேவ விசேஷகர்ஹணீய: கரட ! த்வம் ரட கஸ் தவாபராத:?
ஸஹகாரதரௌ சகார யஸ் தே ஸஹவாஸம் ஸரளேந கோகிலேந

ஒரு தேன்மாமரத்தில் குயிலுட்கார்ந்திருக்கிறவொரு கிளையிலேயே காக்கையுமிருந்து கொண்டு கர் கர் என்று கர்ணகடுவாகக் கத்துகின்றது. அதைக் கண்டு ஒரு ரஸிகன் சொல்லுகிருன்; காக்கையே! நன்ருகக் கத்து; உன்மேல் ஒரு குற்றமுமில்லை. குயிலுட்காருமிடத்திலேயே உன்னையு முட்காரும்படி செய்த பாழுந்தெய்வத்தையன்றே சபிக்க வேண்டுமென்ருன். கர்ணுமிருதமாகச் சிலர் பேசுமிடத்திலேயே கர்ண கடோரமாக வம்படிக்கிறவர்களுமுளரன்ரே; அதைத் தாளாது ஒரு ரஸிகன் சொன்ன வார்த்தையிது.

## 281 மானைப்புகழ்வதனுல் ஒருவிசேஷம் காட்டுதல்

யத் வக்த்ரம் முஹுரீக்ஷஸே ந தநிநாம் ப்ருஷே ந சாடுந் ம்ருஷா
நைஷாம் கர்வவசச் ச்ருணோஷி ந ச தாந் ப்ரத்யாசயா தாவஸி.
காலே பாலத்ருணுநி காதஸி பரம் நித்ராஸி நித்ராகமே
தந்மே ப்ருஹி குரங்க! குத்ர பவதா கிம் நாம தப்தம் தப:?

ஒரு மான்குட்டியை நோக்கிச் சொல்லுகிற வார்த்தையிது. “மானே! யாசகம் பண்ணி திரிகிற சில மானிடரைப்போலே நீ தனிகர்களின் முகத்தைப் பார்ப்பதில்லை. அவர்களைக் குறித்து அஸத்தான ஸ்துதி வசனங்களைச் சொல்லுவதுமில்லை. அவர்கள் செருக்குற்றுக்கூறும் அற்ப மொழிகளைக் காதாற்கேட்கும் தௌர்ப்பாக்யமு முடையையல்லை. அவர்கள் அநாதரிக்கச்செய்தேயும் அவர்கள் பின்னுல் ஓடியோடியிரப்பதுமில்லை. பசியுள்ள காலத்தில் இளம் புற்களை மேய்கிருய்; தூக்கம் வருகிறபோது தூங்குகிருய். நீ அரிய பெரிய தவம்புரிந்து அதன் பயனுக இப்பிறவி பெற்றிருக்க



வேண்டும். எங்கேயிருந்து என்ன தவஞ்செய்தாய்? அதை யெனக்குச் சொல்லலாகாதோ? என்கிருன். அல்பஸந்துஷ்டர்களாய் நரஸ்துதி செய்யாமலும் க்ஷுத்ரர்களை யாசியாமலும் நிரபேக்ஷர்களாய்த் திரியுமவர்கள் மஹா தபஸ்விகள் என்றவாறு.

## 282. ஒற்றுமையும் வேற்றுமையும்

காக: க்ருஷ்ண: பிக: க்ருஷ்ண: கோ பேத: பிககாகயோ:?
வஸந்தகாலே ஸம்ப்ராப்தே காக: காக: பிக: பிக:.

காக்கையும் கறுப்பு, குயிலும் கறுப்பு, குட்டியாயிருக்கும்போது இரண்டுக்கும் வாசி தெரியாது. பின்னை எங்ஙனே வாசி தெரிந்துகொள்வதென்ருல், வஸந்தகாலம் பிறந்தால் எளிதாகத் தெரிந்துகொள்ளலாம்; “பிக: கூஜதி பஞ்சமம்” என்றபடி குயில் பஞ்சமராகம் கூவும், காக்கை கர்ண கடோரமாகக் கத்தும். இதனுல் வாசி தெரிய வெளிதன்ரே. பண்டிதர்கட்கும் பாமரர்கட்கும் நிறமொத்திருந்தாலும் பேச்சைக் கொண்டு வாசியறியலாமென்றவாறு.

## 283. வெகுசமத்காரமான பேச்சு

ரத்நாகரஸ் தவ க்ருஹம் க்ருஹிணீ ச லக்ஷ்மீ:
கிம் தேயமஸ்தி பவதே புருஷோத்தமாய.
ஆபீரவாமநயநாஹ்ருதமாநஸாய
துப்யம் ப்ரதத்தமிதமஸ்து மநோ மதீயம்.

பெருமாள் வாசலிலெழுந்தருளும்போது நியமேந உபஹாரம் ஸமர்ப்பிக்கும் விரதமுடையவரொருவர். ஒருநாள் திடீரென்று வாசலில் பெருமாளெழுந்தருளியாயிற்று. முன்னுடி உபஹாரம் ஸித்தப்படுத்தி வைக்கவில்லை. இன்னது செய்வதென்று தோன்ருமல் அவர் பெருமாளருகே வந்துநின்று ஆசுகவிதையாக இந்த ச்லோகத்தைக் கூறினர். “எம்பெருமானே! *‘மாகடல் நீருள்ளான்’ என்கிறபடியே உனக்கு வாஸஸ்தானமோ ரத்நாகரம்; மனைவியோ ஸ்ரீமஹாலக்ஷ்மி; ஸ்வயம் புருஷோத்தமனென்று பேர்பெற்றிருக்கின்றனை. இப்படிப்பட்டவுனக்கு நீசனேன் நிறையொன்றுமிலேன் என்ன ஸமர்ப்பிக்க வல்லேன். எதுவுமில்லை. ஏதாவது அடியேன் கொடுப்பதானுல் உனக்கு இல்லாத வஸ்து இன்னதென்று தெரிந்துகொண்டு அதை ஸமர்ப்பிக்கவேணும். நீ அவாப்த ஸமஸ்தகாமனுயிருந்தாலும் உனக்கு இல்லாதது ஒன்றுண்டு; அது ஏதென்னில்; உன்னுடைய நெஞ்சைத் திருவாய்ப்பாடியாயர் மங்கைகள் கொள்ளை கொண்டு போய்விட்டதனுல் உனக்கு நெஞ்சு இல்லாமலிருக்கிறது. இதோ எனது நெஞ்சை ஸமர்ப்பிக்கிறேன்; இதனைப் பெற்றுக்கொண்டு மநஸ்வியாவாய்.” இங்கு உக்தி சமத்காரமும் பொருட் சுவையும் ரஸிக்கத்தக்கது.

## 284. பெண்டிற்குச் சுதந்திரமில்லாமை

பிதா ரக்ஷதி கௌமாரே பர்த்தா ரக்ஷதி யௌவநே,
புத்ரஸ் து ஸ்தாவிரே பாவே ந ஸ்த்ரீ ஸ்வாதந்த்ர்ய மர்ஹதி.

ஸ்த்ரீகள் எப்போதும் பிறர்கை பார்த்திருக்கவேண்டிய பரதந்திரர்களேயல்லது ஒருகாலும் ஸ்வாதந்திரியமில்லாதவர்கள். இளமையில் தந்தையின் ரக்ஷணம். யௌவனபருவத்தில் பர்த்தாவின் ரக்ஷணம். முதுமையில் புதல்வர் காப்பர். ஆகவே மாதர்களுக்கு ஸ்வாதந்திரிய ப்ரஸக்தியில்லை யென்றதாயிற்று.

## 285. அந்திச்செல்வம் அதிகநாள் நில்லாது

அந்யாயோபார்ஜிதம் வித்தம் தச வர்ஷாணி திஷ்டதி,
ப்ராப்தே சைகாதசே வர்ஷே ஸமூலஞ்ச விநச்யதி.

அநீதியினல் பொருளீட்ட நெஞ்சினுலும் நினைக்கலாகாது. வழி தவறி ஈட்டப்படும் பொருள் பத்து ஆண்டுகட்குமேல் நிற்காது. பதினேராமாண்டில் ஸமூலநாசம் விளையும். முன்னிருந்த பொருளும் தொலையுமென்றபடி.

## 286. காரணமில்லாத அன்பு

வ்யதிஷஜதி பதார்த்தாந் ஆந்தர: கோபி ஹேது:
ந கலு பஹிருபாதீந் ப்ரீதய ஸ்ஸம்ச்ரயந்தே.
விகஸதி ஹி பதங்கஸ்யோதயே புண்டரீகம்
த்ரவதி ச ஹிமரச்மாவுத்கதே சந்த்ரகாந்த:.

உலகில் ஒருவர்மே லொருவர்க்கு அன்பு உண்டாமிடத்து இதற்கு இருவர் மனமுமறிந்த ஹேது ஏதேனுமிருக்க வேண்டுமே யொழிய, வெளியில் காணக்கூடிய ஹேது எதுவுமிராது. ஸூர்யனுக்குக் "கமலபாந்தவ:" என்று பெயர்; தாமரையோ "செங்கமலம் அந்தரஞ் சேர் வெங்கதிரோற் கல்லாலலராவால்" என்கிறபடியே கதிரவனைக்கண்டே மலர்கின்றது. இதற்கு என்ன ஹேது சொல்ல முடியும்? அன்றியும், மலைகளில் ஒரு கல்லுக்கு சந்திரகாந்தக் கல் லென்று பெயரிட்டிருக்கிருர்கள். அக்கல் சந்திரன் உதித்தவாறே உருகா நின்றது. இதற்குத் தான் என்ன ஹேது சொல்ல முடியும்? ப்ரேமபந்தம் நிர்ஹேதுக மென்னுமத்தனை.

## 287. உண்மைப்பக்தர்களின் உறுதி

வரம் ஹுதவஹஜ்வாலாபஞ்ஜராந்தர் வ்யவஸ்திதி:,
ந சௌரிசிந்தாவிமுக ஜநஸம்வாஸ வைசஸம்.



எம்பெருமானை இறைப்பொழுது மெண்ணுத மானிடத்தினிடையே இருப்பதைவிட, பற்றி யெரிகிற நெருப்பினிடையேயிருந்து ஸுகிக்கலா மென்றவாறு.

## 288. இராவணனுக்கும் அங்கதனுக்கும் ஸம்வாதம்

கஸ் த்வம் வாநர! ராமராஜபவநே லேகார்த்தஸம்வாஹக:
யாத: குத்ர புராகதஸ் ஸ ஹநுமாந் நிர்தக்தலங்காபுர:,
பத்தோ ராக்ஷஸஸூநுநேதி கபிபிஸ் ஸந்தாடிதஸ் தர்ஜித:
ஸ வ்ரீடாத்தபராபவோ வநம்ருக: குத்ரேதி ந ஜ்ஞாயதே.

இராவணனிடம் அங்கதன் தூது சென்ருன்; அங்கு இருவர்க்கும் ஸம்பாஷணை. இராவணன் கேட்கிருன் [கஸ் த்வம் வாநர] 'குரங்கே நீ யார்?' அங்கதன் [ராமராஜபவநே லேகார்த்தஸம்வாஹக:] 'இராமபிரான் திருமாளிகையில் நான் குற்றேவல் செய்பவனெருவன்'. இராவணன் [யாத: குத்ர புராகதஸ்ஸ:?] 'இங்கு முன்னே ஒரு குரங்கு வந்ததே, அது எங்கே போயிற்று?' இராவணன் ஹனுமானைப்பற்றிக கேட்கிருனென்பது அங்கதனுக்குத் தெரிந்தும் ஹனுமானென்று அவன் வாயில் வரவேணுமென்பதற்காகவும் அனுமன் இங்குச்செய்த செயலை இவன் தன் வாயினுல் சொல்ல வேணுமென்பதற்காகவும், 'அப்படியா? முன்னே இங்கு ஒரு குரங்கு வந்ததா என்ன? எனக்குத் தெரியாதே; அதன் பெயரைச் சொன்னுல் ஆலோசிக்கிறேன்,' என்ருன் அங்கதன். அதன் பிறகு இராவணன் [ஹநுமாந்] என்ருன். அதற்கு அங்கதன் 'எங்கள் கோஷ்டியில் ஹநுமானென்று யாரையுங் காணேமே; அவன் இங்கு வந்து செய்தசெயலைச் சொன்னுல் ஆலோசிக்கிறேனென்ருன் அங்கதன். அதன்மேல் இராவணன் [நிர்தக்த லங்காபுர:] என்ருன். இங்கு வந்து லங்காபுரியை முழுவதும் கொளுத்திவிட்டுப்போன குரங்கைப்பற்றிக் கேட்கிறேனென்ருன். அதன்மேல் அங்கதன் சிறிது ஆலோசிப்பதுபோல் பாவனை காட்டி [பத்தோ ராக்ஷஸ ஸூநுநேதி...] ஓஹோ! அந்தக் குரங்கைப்பற்றிக் கேட்கிருயோ? அது இங்கே வந்து ராக்ஷஸப் பையலால் கட்டுண்டு நலிவுபட்டதென்று எங்களுக்குத் தெரியவந்ததனுல் அதை அடித்துப் புடைத்து வெருட்டியோட்டிவிட்டோம்; அது வெட்கத்தினுல் தலைகுனிந்து ஓடிப்போயிற்று; அந்த வநம்ருகம் எங்கே புக்கொளித்ததோ அறியேன் என்ருன். இதனுல் அனுமானுக்கும் மேற்பட்ட குரங்குகள் நாங்கள் வந்திருக்கிருேங்காண் என்று தெரிவித்தவாறு.

## 289. கைப்பற்றுதலும் கைவிடுதலும்

வ்ருக்ஷம் க்ஷீணபலம் த்யஜந்தி விஹகா: சுஷ்கம் ஸரஸ் ஸாரஸா:
நிர்த்ரவ்யம் புருஷம் த்யஜந்தி கணிகா: ப்ரஷ்டம் ந்ருபம் மந்த்ரிணா

புஷ்பம் பர்யுஷிதம் த்யஜந்தி மதுபா தக்தம் வநாந்தம் ம்ருகா:
ஸர்வம் கார்யவசாத் ஜநோபிரமதே தத் கஸ்ய கோ வல்லப :?

ஒன்றுமில்லாதாரை ஒருவரும் அணுகமாட்டாரென்பதை விவரித்துக் கூறுகின்றதிந்த சுலோகம். மரத்தில் பழங்கள் பழுத்திருக்கும்போது பறவைகள் அங்கு நாடுகின்றன; பழமொன்றுமில்லாத மரத்தைவிட்டுத் தொலைகின்றன. நீர் வற்றிப்போன குளத்தை நீர்ப் பறவைகள் விட்டொழிகின்றன. வேசிகள் தங்களுக்கே கொடுத்துக் கொடுத்து தரித்திரரானவர்களை விட்டு நீங்குகின்றனர். தோல்வியடைந்து பதவியினின்று நழுவின அரசனை மந்த்ரிகள் மதியார்கள். வாடிப்போன புஷ்பத்தை வண்டுகள் நாடமாட்டா. தீப்பற்றியெறிந்த காட்டைவிட்டு விலங்குகள் விலகும். ஆகவே அவரவர்கள் ஆங்காங்கு நாடுவது காரியார்த்தமாக. இயற்கையாக யார்க்கு யார் அன்பர்? எவருமிலர். ‘‘பொருள்கையுண்டாய்ச் செல்லக்காணில் போற்றியென்றேற்றெழுவர், இருள்கொள் துன்பத்தின்மை காணில் என்னேயென்பாருமில்லை’’ என்ற திருவாய்மொழிப் பாசுரம் இங்கு நினைக்கத்தக்கது.

## 290, எட்டுக் குறைகள் கூறுதல்

கா வித்யா கவிதாம் விநா? அர்த்திநி ஜநே த்யாகம்
விநா ஸ்ரீச் ச கா?
கோ தர்ம: க்ருபயா விநா க்ஷிதிபதி: கோ நாம நீதிம் விநா ?
கஸ் ஸூநுர் விநயம் விநா குலவதூ: கா பர்த்ரு பக்திம் விநா
போக்யம் கிம் ரமணீம் விநா க்ஷிதிதலே கிம் ஜந்ம கீர்த்திம் விநா.

ஒரு சுலோகமியற்றத் தெரியாத வித்வான் வித்வானல்லன்; யாசகர்களுக்கு ஒன்றும் கொடாத தனிகன் தனிகனல்லன். ஈர நெஞ்சு இளநெஞ்சு இல்லாதவன் தார்மிகனென்று பெயர் சுமப்பது வீண். நீதிநெறி நழுவின மன்னவன் மன்னவனல்லன். தகப்பனுக்கு அடங்காத மகன் மகனல்லன்; *கண்டாரிகழ்வனவே காதலன் தான் செய்திடினும் கொண்டானையல்லாலறியாக் குலமகள்போல்’ என்று உவமை கூறத் தகுதியற்ற மனைவி மனைவியல்லள். போக்ய வஸ்துக்கள் எத்தனையிருந்தாலும் இல்லாளில்லாவிடில் எதுவும் போக்யமாகாது. ‘‘தோன்றில் புகழொடு தோன்றுக, அஃதிலார் தோன்றலில் தோன்றாமை நன்று’’ என்ற குறளின்படி புகழ்படைக்காத பிறப்பு பிறப்பன்று.

## 291. அரசனிடம் அருமையான பேச்சொன்று

ராஜந்! த்வத்கீர்த்திசந்த்ரேண திதய : பூர்ணிமா : க்ருதா:,
மத்கேஹாத் ந பஹிர் யாதி திதிரேகாதசீ பயாத்.



சதுரனானவொரு கவி அரசனுடைய அபரிமிதமான ஔதார்யத்தையும் தன்னுடைய ஏழைமையையும் விநோதமாகத் தெரிவிக்கிறான். மஹாப்ரபுவே! உன்னுடைய நன்கொடைப் புகழாகிற சந்திரன் எப்போதும் பரிபூரணனாக ப்ரகாசிப்பதனால் எல்லாத் திதிகளும் பௌர்ணமீ திதிகளாகவே ஆக்கப்பட்டு விளங்குகின்றன. ஆனால் ஏகாதசீ திதியானது என்னுடைய வீட்டிலேவந்து ஒளிந்து கொண்டது; ஏனென்றால், நாமும் பௌர்ணமீ திதியாக ஆய்விடுவோமோ! என்கிற அச்சத்தினால். இதில் பூருவார்த்தத்தினால் அரசனுடைய அப்ரமேயமான வள்ளல்தனம் வருணிக்கப்பட்டது. உத்தரார்த்தத்தினால் தானொருவன் மட்டுமே அவ்வூரில் தரித்ரனாயிருப்பது காட்டப்பட்டது. தானும் தன் வீட்டிலுள்ளாரும் நித்யோபவாஸமாக இருப்பதாய்த் தெரிவிக்கப்பட்டதாயிற்று. (இது கேட்ட அரசன் கனகவர்ஷம் செய்தான்.)

## 292. கவிகளின் பச்சைப் பசும்பொய்

மஹாராஜ! ஸ்ரீமந்! ஜகதி யசஸா தே தவளிதே
பய: பாராவாரம் பரமபுருஷோயம் ம்ருகயதே.
கபர்தீ கைலாஸம் ஸுரபதிரபி ஸ்வம் கரிவரம்
கலாநாதம் ராஹு: கமலநிலயோ ஹம்ஸமஹஹ.

மஹா கவிகளுக்குப் பொய் தவிர வேறு தெரியாதென்று ப்ரஸித்தி. அந்தப் பொய்யுரையை அதிசயோக்தியென்கிற பெயரால் சொல்லுவர்கள். அதற்கு எல்லைநிலமான சுலோகமிது. ஒரு மஹா ப்ரபுவை எல்லை கடந்து புகழ்கிறான் கவி. மஹாப்ரபுவே! உனது கீர்த்தி பரவாத லோகமே கிடையாததலால் அது பரவின விடமெங்கும் ஒரே வெளுப்பாக ஆய்விட்டது. [கவிகள் கீர்த்தியை வெண்ணிறமாக வருணிப்பது மரபு.] உலகமெல்லாம் உனது கீர்த்தியினால் வெண்ணிறமாக்கப்பட்டபடியினாலே திருமால் தன்னிடமான திருப்பாற்கடலைத் தேடவேண்டியதாயிற்று. பரமசிவன் தனது கைலாஸ கிரியையும், தேவேந்திரன் தனது ஐராவத யானையையும் ராஹுவானவன் தனக்கு உணவான சந்திரனையும், நான்முகன் தன் ஊர்தியான அன்னப்பறவையையும் தேடவேண்டியதாயிற்று.

## 293. அன்பின் உண்மை நிலையை கூறுதல்

யதி ப்ரியாவியோகேபி ருத்யதே தீநதீநகம்.
ததிதம் தக்தமரணம் உபயோகம் க்வ யாஸ்யதி ?

ஒருவன் தன் காதலியினிடம் வைத்த காதலின் மிகுதியினால் ‘‘பிரியேன், பிரியில் தரியேன்’’ என்று பல்காலும் சொல்லிக்கொண்டிருந்தான். ‘உன்னை விட்டுப்பிரியவே மாட்டேன்; ஒருகால் பிரிய

நேர்ந்தால் உயிர் தரித்திருக்கவேமாட்டேன், உடனே இறந்துவிடுவேன்' என்பது பொருள். இப்படியிருக்கையில் ஒருநாள் அவள் இறந்தாள். அப்போது இக்காதலன் விக்கி விக்கியழுகிருன். "'சோகக்ஷோபே ச ஹ்ருதயம் ப்ரலாபைரேவ தார்யதே" என்று உத்தர ராமசரிதத்தில் கூறியபடி, அழுவதானது உடல் அழியாதபடி தரித்திருப்பதற்குறுப்பாகச் செய்வதேயல்லது வேறன்று. அழாமலிருந்தால் மரணம் நேர்ந்துவிடும். இவன் அழவே, அதைப்பார்த்துப் பரமாப்தனுன நண்பன் சொல்லுகிருன்—'அப்பா! பிரியில் தரியேனென்று சொல்லிக்கொண்டிருந்த நீ அழுவதானது தரித்திருப்பதற்கன்ருே ஹேதுவாகிறது; இத்தகைய ஆபத்திலும் நீ அழுது ஆத்மாவைத் தரித்துக்கொள்ளப் பார்த்தாயாகில் அந்தப் பாழும் மரணமென்பதை வேறு எந்த ஆபத்திற்குத்தான் உபயோகப்படுத்தப்போகிருயென்ருன். தக்தமரணமென்றது—பாழும் மரணமென்றபடி. இவன் அதைக் கொள்ளாமையினுலுண்டான வெறுப்புத் தோற்றச் சொல்லுகிறபடி. ப்ரேமபாத்ர பூதர்கள் இறந்தால் உடனே இறந்தொழிவதுதான் உண்மையான பரேமலக்ஷணமென்றும், அழுவது பயனற்றதென்றும் காட்டினபடி.

## 294. ஒவ்வொருவனும் தன்னை நாடோறும் பார்க்கவேணும்

ப்ரத்யஹம் ப்ரத்யவேக்ஷேத நரச் சரித மாத்மந:,
கிம் நு மே பசுபிஸ் துல்யம்? கிம் நு ஸத்புருஷைரிதி.

விவேகியான மனிதன் நாடோறும் தன்னுடைய சரிதையைப் பற்றிப் பரீக்ஷை செய்துகொள்ளவேணும். என்னவென்று? நம்முடைய சரிதை பசுக்களோடொத்திருக்கிறதா? ஸத்புருஷர்களோடொத்திருக்கிறதாவென்று. ஆஹார நித்ராதிகளாலேயே போது போக்கிக்கொண்டிருந்தோமாகில் பசுக்களோடொத்திருக்கிருேமென்று நிச்சயித்து வேறுபாடுண்டாக முயலவேண்டும். *உண்டியே உடையே உகந்தோடுமிம் மண்டலத்தொடுங் கூடுவதில்லையான்* என்றிருக்கும் ஸத்புருஷர்களோடொத்திருக்கிருேமென்று தோற்றுமாயின் அந்நிலையை அபிவிருத்தி செய்துகொள்ள முயலவேண்டுமென்று சேஷபூரணம் செய்துகொள்வது.

## 295. நாம் பழகவேண்டிய விதம்

ந த்விஷந்தி ந யாசந்தே பரநிந்தாம் ந குர்வதே.
அநாஹூதா ந சாயாந்தி தேநாச்மாநோபி தேவதா:.



இந்த சுலோகத்தினுல் சிக்ஷிக்கப்படுவதாவது, ஒருவரோடும் த்வேஷிக்கலாகாது, யாசிக்கலாகாது, பரநிந்தை செய்யலாகாது. இவ்வுறுதிகள் கொண்டிருந்தால் நம்மை தெய்வமாகக் கொண்டாடுவார்கள். கற்களாயிருந்தும் இத்தகைய நலங்கள் பெற்றிருப்பதனுலன்ருே அவை தேவதைகளாயின. ஆகவே நாமும் அப்படி பழகவேண்டும் என்பதாம்.

## 296. இருவரின் சிறப்பு

த்வாவிமௌ புருஷௌ லோகே ந பூதௌ ந பவிஷ்யத:.
ப்ரார்த்திதம் யச் ச குருதே யோ ந ப்ரார்த்தயதே பராந்.

நாம் கோருகிறபடியே கொடுப்பவனும், பிறரிடம் யாசகம் செய்யாதவனுமாகிய இவ்விருவகுப்பினர் இதுகாறும் தோன்றினதுமில்லை, இனித் தோன்றப்போகிறதுமில்லை.

## 297. ம்ருத்யுவோடு ஸஹவாஸம் நான்கு

துஷ்டா பார்யா சடம் மித்ரம் ப்ருத்யச் சோத்தரதாயக:.
ஸஸர்ப்பே ச க்ருஹே வாஸோ ம்ருத்யுரேவ ந ஸம்சய:.

கெட்ட குணமுடைய மனைவியோடு வாழ்வதும், ப்ரத்யக்ஷத்தில் தோழமை கொண்டாடிப் பரோக்ஷத்தில் அநிஷ்டம் செய்து போருகிற மித்திரனேடு ஸஹவாஸம் செய்வதும், எதிரெதிரே மறுப்புரைக்கின்ற வேலைக்காரனை வைத்துக்கொண்டிருப்பதும், பாம்போடொரு கூரையிலே பயில்வதுமாகிய இவை ம்ருத்யுஸஹவாஸமென்பதில் ஸந்தேகமில்லை.

## 298. காற்றின் நன்மை தீமைகள்

வநாநி தஹதோ வஹ்நேஸ் ஸகா பவதி மாருத:.
ஸ ஏவ தீபநாசாய, க்ருசே கஸ்யாஸ்தி ஸௌஹ்ருதம்.

நம்மிடத்தில் ஸம்ருத்தியிருக்குங் காலத்தில்தான் நேசர்கள் உதவி புரிவார்கள்; நாம் இளைத்திருந்தால் நம்மைத் தலையெடுக்கவொட்டாதபடி செய்வதே அவர்களது தொழிலாகும் என்பது த்ருஷ்டாந்த பூர்வமாகக் காட்டப்படுகிறது. அக்நிபகவானுக்கு வாயுபகவான் நேசனென்று ப்ரஸித்தி. ஆனுல் அக்நி பகவான் புஷ்டியாயிருக்குங் காலத்தில்தான் வாயுபகவான் அவனை இன்னமும் அபிவிருத்தி செய்வான். காட்டுத் தீ படர்ந்தால் அப்போது வீசுகின்ற காற்று அதற்குத் துணை செய்யக் காணுநின்ருேம். அந்தத் தீயே ஒருசிறு விளக்காக எரியுமாயின்

காற்று வீசி அதனை அழித்துவிடவுங் காணுகின்றோம். இளைத் தவனுக்கு உதவி செய்யுமியல்பு யார்க்குமில்லை. "இளையவர்கட் கருளுடையாயிராகவனே!" என்று போற்றப்படுகிற பகவானொருவ னுக்கே தீநபந்துத்வமும் தீநதயாளுத்வமுமுள்ளது.

## 299. உயிரோடிருக்கும் பிணங்கள் ஐந்து

ஜீவந்தோபி ம்ருதா: பஞ்ச வ்யாஸேந பரிகீர்த்திதா:.
தரித்ரோ வ்யாதிதோ மூர்க்க: ப்ரவாஸீ நித்யஸேவக:.

ஐந்து பேர்களை ஜீவச்சவங்களாக வியாஸ முனிவர் கூறியுள் ளார். தரித்ரன், நோயாளி, பரோபதேசத்தை மதியாத மூர்க்கன், எப்போதும் தெசாந்தரங்களில் சுற்றித் திரிபவன், உயிருள்ளவளை வும் பிறர்க்கே உழைப்பவன் ஆகிய இவ்வைவர் வீணான பிறப் புடையவர்.

## 300. அருந்தவப் பயனானவை மூன்று

போஜ்யம் போஜநசக்த்திச் சரதிசக்திர் வராங்கநா.
விபவோ தாநஸம்பத்திர் நால்பஸ்ய தபஸ: பலம்.

சேராச் சேர்த்திகளான மூன்று விஷயங்கள் காட்டப்படுகின் றன; உணவுப் பொருள்களுக்குக் குறையில்லாதபடி ஒருவன் மஹா தனிகனாயிருப்பன்; அவன் அன்னத்வேஷ முடையனாய் சிரமப்படு வன். தரித்ரன் எவ்வளவும் உண்ணவல்லவனாயிருப்பன்; அவன் உணவுப் பொருள் பெறாமல் சிரமப்படுவன். விஷய போக சக்தி யுள்ளவனுக்கு நல்ல மாதர் கிடைப்பது அரிது. நல்ல மாதரைப் பெற்றவனுக்கு ரதிசக்தி யிராது. ஐச்வரியம் மிகுந்தவனுக்கு ஔதார்யமிராது. ஔதார்யத்தில் ருசியுள்ளவனுக்கு ஐச்வர்ய மிராது. இவையெல்லாம் ஒழுங்காக அமைந்திருக்க வேணுமானால் முற்பிறவியில் கோரமாதவம் செய்திருக்கவேண்டும்.

ஸமயோசித பத்யமாலிகா சதகம்
யஸ்ய முகே விராஜ தே, ரஸிகஸ் ஸ
வசோபிரத்புதை: ஸகலாந் ஹர்ஷ
வசாந் கரிஷ்யதி.

ஸமயத்திற்குத் தக்கபடி சொல்லத்தக்க இந்த நூறு சுலோகங் களையும் கண்ட பாடம் செய்து வைத்துக்கொள்ளவல்ல ரஸிகர் யாவரையும் மகிழ்விக்கவல்லவராவர். ★

### அண்ணுஸ்வாமியின் அமுத மொழியாயிரத்தில் மூன்றாவது நூறு முற்றிற்று

# அண்ணுஸ்வாமியின் அமுதமொழியாயிரத்தில் நான்காவது நூறு

### ஸ்வாமிக்குப் பரிசிதர்களான பெரியார்களின் (பரமபதித்தவர்கள்) பெருமையுரை

## 301. பிரதிவாதிபயங்கர அண்ணாரங்காசாரியர்

முதன்முதலாக அடியேனுடைய திருத்தகப்பனார் பெருமையை விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீரங்கநாத சர்மங்கொண்டவர். அண்ணா ரங்காசாரியரென்றே வழங்கும் திருநாமம். நாற்பத்து மூன்று ஸம் வத்ஸரமே இவ்விபூதியை அலங்கரித்தெழுந்தருளியிருந்தார். குரோதி ஸம்வத்ஸரம் பங்குனித் திங்களில் திருநாடலங்கரித்தமை யால் இற்றைக்கு அறுபத்தேழாண்டு நிரம்பி விட்டது. அடியே னுடைய பதினொன்காவது பிராயம் முடிந்த ஏழாம் நாளில் பரம பதித்த படி. அவரோடு நெருங்கிப் பழகினவர்களும் அவரிடத்தில் கல்வி பயின்றவர்களும் பத்தெட்டு ஸம்வத்ஸரங்களுக்கு முன்புவரையில் இருந்தார்கள். அப்படிப்பட்டவர்கள் இப்போது வாழ்வதாக ஒரு வரும் நினைவுக்கு வரவில்லை. அவருடைய திருவுருவப்படமும் சேகரிக்கப்படவில்லை. அக்காலத்தில் தேவப்பெருமாள் ஸன்னிதி வீதியிலுள்ள வானமாமலை மடத்தில் ஸம்ஸ்க்ருத பாடசாலையொன்று பிரபலமாக நடந்து கொண்டிருந்தது. அதில் (திருத்தகப்பனார்) ஸாஹித்யத்திற்கும் திவ்யப்ரபந்தத்திற்கும் உபாத்யாயராக எழுந் தருளியிருந்தார். அப்பாடசாலையில் நூற்றைம்பது வித்யார்த்தி கள் ஸம்ஸ்க்ருத பாடங்கள் பயின்று வந்தார்கள். காலை 10 மணிக்கும் மாலை 5 மணிக்கும் பாடசாலை விடும்போது மாடவீதிக்குத் திரும்பும் வித்யார்த்திகள் 75 பேர்களும் மேற்கே திரும்பும் வித் யார்த்திகள் 75 பேர்களும் காணப்படுவர்கள். ஸ்கூல் என்று சொல்லக்கூடிய பள்ளிக்கூடம் அப்போது சின்னக் காஞ்சியிலோ பெரிய காஞ்சியிலோ ஒன்றுகூட ஏற்பட்டிருக்கவில்லை. அதனால் தான் அப்போது ஸம்ஸ்க்ருத வித்யாபாட ப்ரவசனங்கள் குறையற நடந்து வந்தன.

## 302. ஸ்ரீ அழகிய மணவாள ராமாநுஜ (ஷஷ்டி) ஜீயர்

தேவப்பெருமாளது கீழண்டை கோபுர வாசலில் விளங்கும் அழ கிய மணவாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி மடத்தில் 1916–ஆம் வருடத் திற்குமுன்பு நாற்பது ஸம்வத்ஸரகாலம் ஆஸ்தான மலங்கரித்து விளங்கின ஜகத்ப்ரஸித்த மடாதிபதி ஜீயர்ஸ்வாமி ஷஷ்டி ஜீயர் ஸ்வாமியென்று வழங்கப்பட்டு வந்தார். சதுஷ்ஷஷ்டி கலாவல்லப பரவஸ்து திருவம்சத்தில் அவதரித்ததனால் ஷஷ்டியார் என்று குடும்

தறிந்து திருவுள்ளமுவந்து அபிநந்தன பத்ரிகையும் ஸாதித்தது ஜகத்ப்ரஸித்தம். அதன்பிறகே அந்த விவாதம் சாந்தமாயிற்று.

## 353. திருப்பதி கிடாம்பி. அண்ணங்கராசாரியர்ஸ்வாமி

இந்த ஸ்வாமி திருப்பதி கிடாம்பி அப்பாஸ்வாமி யென்றே ப்ரஸித்தர். வியாகரண வேதாந்தங்களில் வல்லவராய் மஹா சிஷ்டாக்ரேஸரராய் விளங்கினவர். ஸ்ரீமத் புரிசை ஸ்வாமிக்கு 'தக்ஷிணோ பாஹு:" என்னும்படி விளங்கினவர். ப்ரதிவாதிபயங்கர வம்ச்யர்களினுடைய தௌஹித்ரஸந்ததியாகையாலே அண்ணங்கரா சாரியரென்று திருநாமம் பூண்டவர். நெடுங்காலம் திருப்பதிக்குத் திலகமாக விளங்கின மஹான். இவர் திருநாட்டுக்கெழுந்தருளி நாற்பத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்கு மேலாயிற்று.

## 354. யோகி. பார்த்தஸாரதி ஐயங்கார்ஸ்வாமி

பலகாலம் திருவல்லிக்கேணியிலெழுந்தருளியிருந்த இந்த ஸ்வாமி வித்வானுயிருந்ததோடுகூட பிரபல தனிகராயுமிருந்தார். அதனுல் இந்த ஸ்வாமி செய்தருளின லோகோபகாரங்கள் அளவுகடந்தவை. உபயவேதாந்த க்ரந்தங்கள் பலவற்றை அச்சிட்டு வெளியிட்டிருக்கிருர். அவற்றுள் இரண்டு மஹா க்ரந்தங்களை மட்டும் இங்குக் குறிப்பிடுகிறேன். (1) ஸ்ரீவசனபூஷண வியாக்கியானம் இரண்டு அரும்பதவுரைகளோடும் ஸ்ரீவசனபூஷண மீமாம்ஸா பாஷ்யத்தோடும் [ஆயிரம் பக்கங்களுக்குமேல் கொண்ட மிகப் பெரிய ஸ்ரீகோசம்] இம்மஹான் தெலுங்கு லிபியில் அச்சிட்டு வெளியிட்டது. (2) ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம் நிர்வசனுதிகளோடுங்கூட மிகப் பெரிய ஸ்ரீகோசமாகத் தெலுங்கு லிபியிலேயே அச்சிட்டார். மற்றும் பலபலவுண்டு. இந்த ஸ்வாமிக்கு சக்ரவர்த்தி திருமகன் கனவிலே ஸேவை ஸாதித்துத் திருவயோத்தியில் ஸன்னிதி ப்ரதிஷ்டை செய்யும்படி நியமிக்க, அந்த நியமனத்தை சிரஸாவஹித்து அயோத்யையில் கோலாகாட் என்று ப்ரஸித்தமான ஸரயூதீரத்தில் தாக்ஷிணுத்ய ப்ரக்ரியையிலே திவ்யஸன்னிதி நிர்மாணம் செய்வித்து ப்ரதிஷ்டை பண்ணியிருப்பது ப்ரஸித்தமான விஷயம்.

## 355. தேவசிகாமணி. ராமாநுஜாசார்யஸ்வாமி

மண்டயம் தேவசிகாமணி ஸ்வாமியென்று ப்ரஸித்தராயிருந்த இந்த வித்வான் பரமபதித்து இருபத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்கு மேலாகிறது. இவர் மைஸூரில் வாசித்து விசேஷத: மீமாம்ஸா சாஸ்த்



ரத்திலும் உபயவேதாந்தங்களிலும் அத்விதீய வித்வன்மணியாக விளங்கினர். அயோத்யையிலும் ப்ருந்தாவனத்திலும் பல ஸம்வத்ஸரங்கள் வாழ்ந்து சாஸ்த்ர ப்ரவசனம் செய்தவர். மிகச் சிறந்த க்ராந்திகர். அடையாறில் அச்சாகி வெளிவந்த அஹிர்ப்புத்நிய ஸம்ஹிதை வெகு ஆச்சரியமான பதிப்பு. அதற்கு இந்த ராமாநுஜா சார்யஸ்வாமியே பரிஷ்காரகராயிருந்தவர். அந்த ஸம்ஹிதைக்கு இந்த ஸ்வாமியெழுதி வெளியிட்டுள்ள மிக விரிவான பூமிகையை வாசித்துப் பார்ப்பவர்களுக்கு இவருடைய வித்யாபரிச்ரமம் அத்விதீயமென்பது புலப்படும். இவருடைய லேகனங்களும் பாஷணங்களும் மிகச் சிறந்து விளங்கின.

## 356. 357. 358. குன்றபாக்கம் வித்வான்கள் மூவர்

(1) திருமலை. விஞ்சிமூர். ஸ்ரீ ரங்காசாரியர்ஸ்வாமி.

(2) திருமலை. அனந்தாண்பிள்ளை. ராமாநுஜாசார்ய ஸ்வாமி.

(3) திருமலை. அனந்தாண்பிள்ளை. (அப்பா) பாஷ்யகார ஸ்வாமி.

மேலே குறித்த மூன்று திருநாமங்களும் (மலையடி) குன்றபாக்கத்து வித்வன்மணிகள். அடிக்கடி அடியேன் ப்ரஸ்தாவிக்கிற ஸ்ரீ குன்றபாக்கம் சீமாச்சார்ஸ்வாமியின் ஸமகாலத்தவர்களும், அவர் தம்மாலும் கொண்டாடப்பட்டவர்களுமான வித்வான்கள். இவர்களுள் முன்னே குறித்த தி. வி. ஸ்ரீரங்காசார்யஸ்வாமியின் திருத்தகப்பனுர் அய்யாஸாமி ஐயங்காரென்று ஸுப்ரஸித்தராம். ராகவாசார்யஸ்வாமியென்று திருநாமமாம். அந்த ஸ்வாமியை அடியேன் அறியேன். அவரை ப்ரசண்ட பண்டிதோத்தமரென்பர்கள். அவரிடம் சாஸ்த்ரங்கள் பயின்று தேறினவர்களே குன்றபாக்கத்து வித்வான்களெல்லாரும். மேலே குறித்த ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமியின் திருக்குமாரர்கள் மூவர் விளங்கிவருகிருர்கள். ஸ்ரீராமாநுஜாசார்ய ஸ்வாமியின் பௌத்ரரான ஸ்ரீசைல கிருஷ்ணமாசாரியரென்பவர் ப்ரவசன ப்ரவீண பண்டிதராய் விளங்கி சென்ற ஸம்வத்ஸரத்தில் திருநாட்டுக்கெழுந்தருளினுர். (அப்பா) பாஷ்யகாரஸ்வாமி யென்பவர் திருவல்லிக்கேணியில் பலர்க்கு ப்ரவக்தாவாக வாழ்ந்திருந்தவர். இப்பெரியார்கள் வாழ்ந்த காலம் மிகவும் வ்யவஹிதமானுலும் இவர்கள் வித்வத் கணையில் ப்ரஸித்தர்களாக விளங்கிவருபவர்கள். இவர்களோடு அடியேன் நெருங்கிப் பழகின பாக்கியமுடையேன்.

## 359. உத்தரமேரூர் கனபாடி ராகவாசார்யர்

காவ்ய நாடகாலங்காரங்களில் ஆழ்ந்த வ்யுத்பத்தி பெற்று வேத லக்ஷணங்களையெல்லாம் முகஸ்தமாகக் கொண்டு பதக்ரமஜடாகனங்களோடு நில்லாமல் வர்ணக்ரமாந்தமாகவும் பரிச்ரமப்பட்டு 'ஸாங்க வேதாத்யாயீ' என்று புகழ் பெற்றிருந்தவர் உத்தரமேரூர் ராகவாசார்ய ஸ்வாமி. காஞ்சீ ப்ராந்தத்தில் கனபாடிகள் இல்லையென்கிற அபப்ரதை இந்த ஸ்வாமியொருவரால்தான் நீங்கிற்று. இந்த ஸ்வாமி இன்னமும் ஜீவித்திருக்கத் தக்கவர். ஆயினும் இவர் பரமபதித்து 28 ஸம்வத்ஸரமாய் விட்டது. இவர் அடிக்கடி காஞ்சிக்கு எழுந்தருள்வர். அடியேனோடு ஸம்பாஷிக்க வேணுமென்றே பலகால் எழுந்தருளி நாலு நாள் எட்டு நாள் பத்து நாள்கூட அடியேனுடைய க்ருஹத்திலேயே யெழுந்தருளியிருந்ததுண்டு. அக்காலத்தில் வேதலக்ஷண விஷயமாக அடியேனெழுதி வெளியிட்ட வேதாத்யயந ஸர்வஸ்வாதி க்ரந்தங்களை ஓரக்ஷரம் விடாமல் ஆழ்ந்து ஆராய்ந்து அபிநந்தித்த இந்த ஸ்வாமியின் அபிநந்தன பத்ரிகைகள் பல வெளிவந்திருக்கின்றன. வேதமோதினவர்களில் ஸம்ஸ்க்ருத வைதுஷ்யம் பெற்றவர்களில் இந்த ஸ்வாமியைப் போன்றவர்கள் மிகச்சிலரேயென்று மீண்டும் விஜ்ஞாபயே.

## 360. திருமலை ஈச்சம்பாடி. ராமாநுஜாசார்ய ஸ்வாமி

ஸ்ரீ காஞ்சீபுரியில் தென்னுசார்ய ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகர்களில் தலைவராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. திருமலை. ஈச்சம்பாடி. நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி திருநாடலங்கரித்து எண்பத்தைந்து வருடமிருக்கும். ஸ்ரீபாஷ்யபகவத்விஷயங்களும் அஷ்டாதசரஹஸ்யங்களும் வியாக்கியானங்களும் அந்த ஸ்வாமிக்கு வாசோவிதேயங்களென்று அஸ்மதாசார்யரான ஸ்ரீமத் பரமஹம்ஸ, அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி (ஷஷ்டி ஜீயர் ஸ்வாமி) அடிக்கடி ஸாதிக்கக் கேட்டிருந்தேன். அந்த ஸ்வாமியை அடியேன் ஸேவிக்க ப்ரஸக்தியில்லையாயிற்று. அந்த ஸ்வாமியின் பெரும்புகழ் அபாரமானது. ஸ்ரீமத் திருப்புட்குழி அப்பா ஸ்வாமியென்று ப்ரஸித்தராக எழுந்தருளியிருந்த ஸ்ரீக்ருஷ்ண தாதாசார்ய ஸ்வாமியும் இவரும் ஸமகாலஸ்தர்களாம். பரஸ்பரம் வெகு கௌரவத்தோடு வாழ்ந்தவர்களாம். இந்த ஸ்வாமியின் திருக்குமாரர் ஈச்சம்பாடி. ராமாநுஜாசார்ய ஸ்வாமியென்பவர் மஹாதேஜஸ்வியாகவும் மஹாஜ்ஞாநுதிகராகவும் விளங்கினவர். இந்த ஸ்வாமி ஸன்னிதியில் அடியேன் இளமையில் குரு பரம்பராப்ரபாவம் (ஆறுயிரப்படி) ஸேவித்தேன். அந்த ஸ்வாமி பரமசாந்தர். மஹாஸாத்விகப்ரக்ருதி. திருமாளிகையை விட்டுக் கீழே யிறங்காமல் ஏகாந்த சீலராக எழுந்தருளியிருந்தவர்.



## 361. காளி. ரங்காசாரியர் ஸ்வாமி

மாயவரம் தாலுக்காவில் காளி யென்பது ஒரு அக்ரஹாரம். அவ்விடத்தில் உதித்துத் தேரழுந்தூரில் வாழ்ந்து கொண்டிருந்த இந்த ஸ்வாமி புதுக்கோட்டை ஸமஸ்தானத்தில் நெடுங்காலம் தானுதிகாரி பதவியை அலங்கரித்திருந்தார். பிறகு விச்ராந்தராய் தமது திருக்குமாரரோடுகூட வஸிக்கவேண்டி கரக்பூரிலும் கல்கத்தாவிலு மெழுந்தருளியிருந்து கடைசியாக புது டில்லியில் இருக்கும்போது திருநாடலங்கரிக்க நேர்ந்துவிட்டது. அது பதினைந்து ஸம்வத்ஸரங்களுக்குமேல் ஆய்விட்டது. இந்த ஸ்வாமியின் பரிசயம் எமக்கு விசேஷமாக இருந்தது. இவர்க்கு மதத்ரய நிரூபகரென்று ஒரு ப்ரஸித்தியுண்டு. அந்த ப்ரஸித்திக்கு ஏற்பச் சில க்ரந்தங்களுமியற்றி பிரசுரம் செய்திருக்கிருர். ஒருவருடைய தாக்ஷிண்யத்திற்கும் கட்டுப்படாமலும் ஸங்கேதபீதியில்லாமலும் அந்தரங்க ஸாக்ஷ்யத்தை வஞ்சியாமலும் தமது திருவுள்ளத்தில் பட்டதை வெளியிடும் பான்மை இந்த ஸ்வாமியிடத்தில் அடியேன் வெகு நாள் அநுபவித்த மஹாகுணம். அடியேனுடைய க்ரந்தங்களைப் பெரும்பாலும் கடாக்ஷித்தருளி அபிநந்தன பத்ரிகைகள் வெளியிட்டவர் இந்த ஸ்வாமி. *ரூபமேவாஸ்யைதந்மஹிமாநம் வ்யாசஷ்டே யென்னும்படி ஸேவை ஸாதித்துக்கொண்டிருந்தவர். இந்த ஸ்வாமி ஸன்னிதியில் ஸ்வரூப க்ரந்த காலக்ஷேபம் செய்தவர்கள் பலர். அன்னவர்களில் ஒருவரான ஸ்ரீமதுபயவே. கோமல். சேஷாத்ரியாசார்ய ஸ்வாமி * ராமாயண பூஷணுதி பிருதாலங்க்ருதராய் சில ஸம்வத்ஸரங்களாக சென்னை மாநகரில் ப்ரவசன துரந்தரராய் விளங்கி வருவது ஸுப்ரஸித்தம்.

## 362 ஸ்ரீவில்லிபுத்தூர் மேலைவாத்யார் திருமலை ஐயங்கார் ஸ்வாமி

இப்போது திருமலை திருப்பதியில் ஸ்ரீமத்பரமஹம்ஸ. பெரிய ஜீயர் ஸ்வாமியாஸ்தானத்தை அலங்கரித்தருளாநின்ற ஸ்ரீ மஹா ஸ்வாமிக்கு பூர்வாச்ரமத்தில் மாதுலரான இந்த ஸ்வாமி ஸ்ரீவில்லிபுத்தூரில் மேலைவாத்யாரென்றே வ்யபதிஷ்டரா யெழுந்தருளியிருந்த சிஷ்டாக்ரேஸரர். இந்த ஸ்வாமியினுடைய பரிசயம் அடியேனுக்கு இளமையிலேயே கிடைத்தது. இருவோமுக்கும் தேச வ்யவதானம் மிகவுமிருந்தாலும் மதுரை கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலானவிடங்களில் பலகால் ஸந்திக்க நேர்ந்ததுண்டு. ஸ்ரீவில்லிபுத்தூரிலும் பலமுறை ஸேவித்தேன். இவர் சிறந்த வித்வானுயிருந்ததோடு ஆசுகவி, சித்ரகவி இத்யாதி பிருதாவளிகளையும் பெற்றிருந்தார். சிஷ்டாக்ரேஸரர் என்பதை முந்துற முன்னமே விஜ்ஞாபித்தேன். இவரிடத்தில் அடியேன் அதிகமாகக் கண்ட குணம்

ராஸிக்யம். அது ஸாமான்யமன்று. பரமரஸிகர், மஹாரஸிகர் என்று எவ்வளவெழுதினாலும் போதாது. இவரிடத்தில் ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் அதிகரித்தவர்கள் பலருளர். இவருடைய ஸ்வீக்ருத குமாரரான ராமாநுஜய்யங்கார் வாக்மியாக விளங்கி வருகிறார்.

## 363. வேதவாத்யார் கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி

ஸ்ரீபெரும்பூதூரில் முப்பத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்குமுன்பு வாழ்ந்த வித்வான்களில் சிறந்து விளங்கினவர் இந்தஸ்வாமி. வேதவாத்யார் என்றே வ்யபதிஷ்டராயிருந்துவந்தார். வேதமும் வியாகரண சாஸ்த்ரமும் இந்தஸ்வாமிக்கு ஸ்வாதீனமாயிருந்ததுபோல் கடல்சூழ்ந்த மண்ணுலகில் வேறு யார்க்கும் வசப்பட்டிருக்கவில்லையென்று அக்காலத்திலுள்ள ஸகல வைதிகர்களும் ஏகமுகமாகச் சொல்லுவார்கள். இவருடைய பரம்பரையே மிகச்சிறந்த வைதிக பரம்பரை. இவருடைய திருத்தகப்பனாரிடத்தில் வேதமோதித் தேறினவர்கள் உபயகலையாரிலும் அடியேனுக்குத் தெரிந்து ஐம்பதறுபது ச்ரோத்ரியர்களிருந்தார்கள். அடியேனுடைய வேதோபாத்யாயரான ஸ்ரீமதுபயவே. மாம்பள்ளம் ஸுதர்சநாசார்யரும் அந்த மஹாஸ்வாமியிடத்திலேயே வேதமதிகரித்தவராதலால் அவரைப்பற்றி நாடோறும் கால்மணியாவது ப்ரஸ்தாவம் செய்யாமலிருக்கமாட்டார். அப்போது அவருடைய திருக்குமாரரான (ப்ரக்ருத) க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் வல்லமையையும் பேசிக்கொண்டிருப்பர். இவரிடத்தில் வேதமோதினவர்களும் வியாகரண சாஸ்த்ரமதிகரித்தவர்களும் பலருண்டு. தற்காலம் ஸ்ரீபெரும்பூதூர் ஸம்ஸ்க்ருத கலாசாலையில் உபாத்யாயராக விளங்கும் ஸ்ரீ உ. வே. காந்தூர் ஸ்ரீசேஷாத்ரியாசாரியரும் இவருடைய அந்தேவாஸியே. இந்த க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர் காலேஜில் பலவாண்டுகள் வியாகரணப்ரவசன நிரதராக எழுந்தருளியிருந்தார். தமது திருமாளிகையில் வேதாத்யாபனம் தவறாதவர்.

## 364. திருமழிசை தாதப்பங்கார்ஸ்வாமி

இந்த ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர் ஸம்ஸ்க்ருத கலாசாலையில் பலவாண்டுகள் ஸாஹித்யவ்யாகரண ப்ரவசன நிஷ்ணாதராக எழுந்தருளியிருந்தவர். அடியேனுடைய இளமையில் இந்த ஸ்வாமியின் பரிசயம் மிகவுமிருந்தது. இவர் திருநாட்டுக்கெழுந்தருளி கிட்டத்தட்ட அறுபது ஸம்வத்ஸரங்களாயிருக்கும். இந்த ஸ்வாமி பண்டிதர்களுக்குக் கடிதமெழுதினால் ஆலோசனையில்லாமல் சுலோகமாகவே யெழுதிக்கொண்டுபோவர். முற்காலத்தில் திருமழிசையில் ஸாமாந்ய சாஸ்த்ர ப்ரவீணர்களும் உபயவேதாந்த ப்ரவர்த்தகர்களுமல்லாதவர்



கள் இருந்ததில்லையென்று ப்ரஸித்தி. முப்பது நாற்பது ஸம்வத்ஸரங்களுக்கு முந்தினகாலம்வரையில் அந்த ப்ரஸித்தி அநபாயமாயிருந்துவந்ததை அறிவேன். உத்தரராமசரிதத்தில் “புரா யத்ர ஸ்ரோத: புலிநமதுநா தத்ர ஸரிதாம் விபர்யாஸம் யாதோ கனவிரலபாவ: க்ஷிதிருஹாம்” என்றச்லோகமே இப்போது நினைவுக்கு வருகின்றது. இது திருமழிசையின் ஸ்திதிக்கு மட்டுமன்று.

## 365. விசாகப்பட்டணம். பரவஸ்து பட்டநாதஸ்வாமி

விசாகபட்டணத்தில் பரவஸ்து குடும்பத்தார் இன்றைக்குமுளர். மஹாமஹோபாத்யாய. பரவஸ்து. ரங்காசார்ய ஸ்வாமியென்பவர் மிகப்ரஸித்தர். அவரை அடியேன் ஸேவித்ததில்லை. அவருடைய திருவுருவப்படம் ஸம்பாதித்து வெளியிட்டிருக்கிறேன். இவருடைய பரம்பரையை வித்வத் பரம்பரையென்று வழங்குவர்கள். இவர்கள் பகவத் ராமாநுஜ தர்சனஸ்தர்களாயிருந்தும் ‘ஸ்ரீமதே ராமாநுஜாய நம:’ என்று எழுதார்கள்; “நம: பரமர்ஷிப்ய:’ என்றே எழுதுவர்களாம். மேலே ப்ரஸ்தாவித்த ரங்காசார்ய ஸ்வாமியின் பௌத்ரர்களில் ஒருவர் பட்டநாதஸ்வாமி யென்பவர் கும்பகோணம் காலேஜில் ப்ரொபஸராயிருந்தவர். மற்றொருவர் திருப்பதி காலேஜில் பலவாண்டுகள் வாழ்ந்து விச்ராந்தரானவர். அவருடைய பரிசயம் அடியேனுக்கு மிகக் குறைவு. பட்டநாதஸ்வாமி யென்பவர் சிறந்த சாஸ்த்ரஜ்ஞர், மஹாமேதாவி. அடியேன் மஞ்ஜுபாஷிணீ பத்ரிகை நடத்திக் கொண்டிருந்த காலத்தில் கும்பகோணத்தில் வாழ்ந்து வந்த அவர் பத்ரிகா மூலமாகவே மிகவும் பரிசிதராயிருந்தார். இவர் தென்கலை ஸம்பிரதாயஸ்தராயிருந்தும் உபயஸம்ப்ரதாயக்கொள்கைகளிலும் வைமத்யம் காட்டிக் கொண்டிருந்தார். முமுக்ஷுப்படியில் “உய்யக்கொண்டார் விஷயமாக உடையவர் அருளிச் செய்த வார்த்தையை ஸ்மரிப்பது” என்றொரு ஸ்ரீஸூக்தியுண்டே: அதனை நினைவூட்டுமவரா யிருந்தாரிவர். மஞ்ஜுபாஷிணீ பத்ரிகையில் இவர்க்கும் எமக்கும் நிகழ்ந்த லேகப்ரதிலேகங்கள் அபரிமிதம். கடைசியில் மிக்க அநுதாபங்கொண்டு திருத்தமுற்றார். திருநாடுமலங்கரித்தார்.

## 366. சிறுபுலியூர் தொட்டயாசார்யஸ்வாமி

ஸ்ரீவில்லிபுத்தூரில் மஹாவைபவசாலியாகவும் ப்ரக்க்யாதராகவுமெழுந்தருளியிருந்த சிறுபுலியூர் ஸ்வாமியை ஸ்ரீவைஷ்ணவவுலகமெல்லாமறியும். சிறந்த சிஷ்யஸம்பத்து வாய்ந்தவர். “ஞானமனுட்டானமிவை நன்றாகவே யுடையனான குரு” என்ற பாசுரத்திற்கு ப்ரதம லக்ஷ்யமாக எழுந்தருளியிருந்தவர். அந்த மஹாஸ்வாமிக்குத் திருக்குமாரர்கள் இருவர். மூத்த திருக்குமாரர் மஹா

பண்டிதோத்தமராய் திருத்தகப்பனாரோடு கூடவே வாழ்ந்தவர். இளைய திருக்குமாரர் தொட்டயாசாரியரென்பவர் காஞ்சியில் விவாஹ ஸம்பந்தம் பெற்றவர். பெரும்பாலும் ஸ்ரீபெரும்பூதூரில் வஸித்துவந்தவர். பண்டிதோத்தமராக விளங்கி வந்தார். (செவிடு தொட்டயாசாரியர் என்று இவர்க்கு ப்ரஸித்தி.) இவர் பாணன் பவபூதி முதலான கவிகளைப்போன்று கவிதையில் நிகரற்றவராய் விளங்கினர். கத்யபத்யங்கள் அத்யாச்சர்யமாக எழுதுவர். அவரைப்போன்ற எழுத்தாளர் அவரே யென்னலாம். அவர் "விசக்ஷண" என்றொரு ஸம்ஸ்க்ருத பத்ரிகை நடத்த ஆரம்பித்துச் சில மாதங்களே நடத்தினர். அப்போது அவருடைய நட்பு அடியேனுக்கு அதிகமாக விளைந்தது. அவர் இன்னமும் ஜீவித்திருக்கவேண்டியவர். [இனிமேல் அத்யந்த சோசநீயம்.] அவருக்கு ச்வசுரக்ருஹம் காஞ்சீ ஸன்னிதி வீதியிலாகையால் அடிக்கடி அங்குவரநேரும். ஸந்திக்கிறபோதெல்லாம் சொல்லுவர்—'நான் ஏதோ லௌகிகனாயிருந்துவருகிறேன்; என்னுடைய திருத்தமையனார் மஹாசிஷ்டர். மஹாபண்டிதர்; அவரை ஸந்திக்கவேணும்' என்று. அவருடைய பரிசயமும் பத்ரிகை மூலமாக அடியேனுக்கு ஏற்பட்டிருந்தது. அவர் எங்கும் எழுந்தருளுகிறவரல்லாமையால் நேரில் விடை கொண்டு ஸேவிக்கவேணுமென்று பாரித்துக்கொண்டிருந்தேன். இப்படியிருக்கையில் இந்த தொட்டயாசாரியார் ஒருநாள் காஞ்சீபுரம் வந்து "ஜ்வரத்துடன் இங்கு வந்திருக்கிறேன், நீ வந்துபார்க்கவேணும்" என்று ஸந்தேச மனுப்பினர். அன்று நாதமுனிகள் சாத்துமுறை. ஸாயங்காலம் அவரிடம் சென்று ஒரு நாழிகை வார்த்தையாடிவிட்டு ஸன்னிதிக்குச் சென்று சாத்துமுறை யநுபவித்துக்கொண்டிருக்கையில் 'தொட்டயாசார்யர் பரமபதித்துவிட்டார்' என்று ஒருவர் வந்து சொன்னர். இந்த பரிதாப கதையை இவ்வளவில் நிறுத்துகிறேன்.

### 367. ஸாரநாதாசாரியர்ஸ்வாமி

கீழே ஸ்ரீமதுபயவே, ஆடூர். ரங்கஸாமி ஐயங்கார் ஸ்வாமியின் பிரபாவ மெழுதுகையில் "இந்த ஸ்வாமியின் ஜ்யேஷ்டதுஹிதாவின் குமாரர் ஸாரநாதாசார்யரென்று ப்ரஸித்தராய் இளமையிலேயே மிகச் சிறந்த வித்வானென்று புகழ்பெற்றார்; மாதாமஹர்க்குமேல் சிறந்துவிளங்குவரென்று பலரும் கொண்டாடவிருக்கையில் முப்பது பிராயத்திற்குள்ளேயே ஆசார்யன் திருவடி சேர்ந்துவிட்டார்" என்று ஸம்க்ஷேபமாக எழுதியிருக்கிறேன். ஸ்ரீமத் குண்டலம் ஸ்வாமியின் அந்தேவாஸிகளில் ஸ்ரீ ஸாரநாதாசாரியர் பரிகணநீயராய் விளங்கினவர். நியாய வேதாந்தங்களைக் கசடறக் கற்றவர். ச்ருதப்ரகாசிகையோடுகூட ஸ்ரீபாஷ்யத்தை திருவல்லிக்



கேணி வேதவேதாந்தவர்த்திநீ ஸபையில் பரீக்ஷை கொடுத்து உத்தம ஸன்மானம் பெற்றுவந்த சிலநாட்களில் ஆசாரியன் திருவடி சார்ந்துவிட்டார். ஸ்ரீபெரும்பூதூர் ஸன்னிதியில் ப்ரதிபக்ஷிகளின் அதர்க்கணச் செயல்கள் அதிகப்பட்டிருந்த காலத்தில் நீதிமன்றங்களிற் சென்று சிரமப்பட்டு வெற்றிபெற்றவர்களில் இவர் தலைவராய் விளங்கினவரென்று அக்காலத்தில் ப்ரஸித்தி யிருந்தது.

### 368. மோட்டூர் ராகவாசாரியர் ஸ்வாமி

ஸ்ரீமத் குண்டலம் ஸ்வாமி காலத்தில் ஆந்திர தேசங்களிலிருந்தும் பலர் ஸ்ரீபெரும்பூதூர்வந்து வாசித்து சாஸ்த்ர ப்ரவீணர்களாய் உபய வேதாந்த விசாரதர்களாய் விளங்கினதை அடியேன் இளமை தொடங்கி அனுபவித்தவன். அன்னவர்களில் மோட்டூர் ராகவாசாரியர் ஸ்வாமி யென்பவர் (கோதாவரீ ப்ராந்தஸ்தரென்று ஞாபகம்) ஸ்ரீபெரும்பூதூரில் வந்திருந்து கலைகற்று மஹாமேதாவியாய் விளங்கினவர்; நம்முடைய ஸம்பிரதாயங்களை ஆந்திர பாஷையில் வெகுசதுரமாக உபந்யஸிக்க வல்லவர். பிறகு கோதாவரீ ப்ராந்தமே சென்று சேர்ந்து பலர்க்கு உபய வேதாந்த ப்ரவசனம் செய்து கீர்த்தி சேஷராயினர்.

### 369. பின்னப்பாக்கம் திருவேங்கடாசாரியர் ஸ்வாமி

ஸ்ரீபெரும்பூதூர் ஸம்ஸ்க்ருத வித்யா சாலையில் நியாய சாஸ்த்ர ப்ரவசன துரீணர்களாய் விளங்கின பண்டிதோத்தமர்களில் பரிகணிதராய்த் திகழ்ந்தவர் இந்த மஹாஸ்வாமி. இவருடன் பிறந்தவர்களான ஸ்ரீஉவே. பின்னப்பாக்கம் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி ராகவாசார்ய ஸ்வாமி என்னுமிருவரும் உபயவேத ஸாகர பாரதர்சிகளாய் விளங்கி நெடுங்காலம் ஸ்ரீபெரும்பூதூரில் வாசிக கைங்கர்ய துரந்தரர்களாய் நன்குவாழ்ந்தவர்கள். திருவேங்கடாசார்யஸ்வாமி யென்னுமிவர் நியாய சாஸ்த்ரத்தில் கூலங்கஷஜ்ஞான புஷ்கலராய்ப் பலரை சாஸ்த்ரப்ரவீணர்களாய்ச் செய்தருளினர். முதிர்ந்த பிறகு அருளிச்செயல்களையும் அதிகரித்து ஸம்ப்ரதாய ப்ரவசன ப்ரவீணராயு மெழுந்தருளியிருந்தவர்.

### 370. ஸ்ரீமதுபயவே. புதுப்பேர். வேங்கடாசார்யஸ்வாமி

உத்தமாச்ரமியாய். ஸ்ரீகாஞ்சீ அழகியமணவாள ராமாநுஜ ஜீயர் ஆஸ்தானத்தை யலங்கரித்திருந்த இந்த ஸ்வாமி முதல் ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் ஸாஹித்ய வியாகரணங்கள் வாசித்துத் தேறி காஞ்சீபுரிக்கு வந்து சேர்ந்து (அடியேனுடைய திருத்தகப்பனார் திருமேனி பாங்கில்லாதிருந்த காலத்தில்) அண்ண ஸன்னிதியில்

நடந்து கொண்டிருந்த வேதாந்த வைஜயந்தீ பாடசாலையில் (அஸ்மத் தாதபாத ஸ்தானத்தில்) உபாத்யாயராக அமர்ந்திருந்து அஸ்மதாதிகளுக்கு ஸாஹித்யவ்யாகரண ப்ரவசனம் செய்து போந்தவர். பிறகு ஸ்ரீபெரும்பூதூர்க்கே சென்றுசேர்ந்து அவ்விடத்துப் பாடசாலையிலும் உபாத்யாயராகப் பத்தெட்டு ஸம்வத்ஸரங்கள் வாழ்ந்திருந்து மீண்டும் காஞ்சிக்கு வந்து சேர்ந்து ஆச்ரமஸ்வீகாரம் செய்தருளி மடாதிபதியாக விளங்கித் திருநாராயணபுரத்தில் திருநாடலங்கரித்தார்.

## 371. ஸ்ரீ பிரதிவாதிபயங்கரம் கிருஷ்ணமாசாரியர்

இந்த ஸ்வாமி காஞ்சீபுரியைச் சேர்ந்தவர். ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் நியாய வேதாந்தங்களதிகரித்து அந்த கலாசாலையிலேயே சிலபல வருஷங்கள் சாஸ்த்ரோபாத்யாயராயிருந்தவர். சோளஸிம்ஹபுரத்தில் ஸம்ஸ்க்ருத காலேஜ் ஸ்தாபித்து நடத்தி வந்தவர். இவருடைய திருக்குமாரர் ஸ்ரீ.உ.வே. ப்ர. அனந்தாசாரியரென்பவர் நியாய வேதாந்த சிரோமணியாய் இப்போது விளங்கி வருகிறார்.

## 372. ஸ்ரீ சிங்கம்பூண்டி. தி. அ. வரதாசாரியார்

இவர் காஞ்சீபுரியைச் சேர்ந்தவர். ஸாஹித்யவியாகரண ப்ரவீணர். திருமலை அனந்தாண் பிள்ளை வம்சஸ்தர். திருப்பதி காலேஜில் பல வருஷங்கள் வியாகரணோபாத்யாயராயிருந்து விச்ராந்திபெற்றுக் காஞ்சியில் 15 வருஷங்களுக்குமுன் பரமபதித்தவர்.

## 373. ஸ்ரீ கிடாம்பி நரஸிம்ஹாசாரியர்

இந்த ஸ்வாமி ஸாஹித்யவியாகரண நிஷ்ணாதராய் ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் பல வருஷங்கள் உபாத்யாய பதவியை அலங்கரித்துப் பல வித்யார்த்திகளை ப்ரவீணர்களாக்கினவர்.

## 374. ஸ்ரீ.உ.வே. கோவை ஸ்ரீசைலசக்ரவர்த்யாசாரியஸ்வாமி

கோயம்புத்தூரில் பிரபல அட்வகேட்டாக வாழ்ந்து வந்த ஸ்ரீமதுபயவே. ஸ்ரீசைல சக்ரவர்த்யாசார்ய ஸ்வாமியோடு எனக்கு மிக நெருங்கிய பழக்கமிருந்தது. அவர் அட்வகேட்டாகையால் ஆங்கிலத்தில் மிக நிபுணராயிருக்கலாம். நானறிந்த மட்டில் அவர் ஸம்ஸ்க்ருத பாஷையில் சிறந்த பண்டிதோத்தமர். அவர் நமது ஸம்ப்ரதாய விஷயமாக அருமையான பல நூல்கள் எழுதியவர். அவருடைய திருக்குமாரராய் டில்லியில் பலகாலம் வாழ்ந்தவரும் இப்போது சென்னையில் வாழ்பவருமான V.S.R. சக்ரவர்த்தி ஸ்வாமியால் அவை அச்சிடப்பட்டுமிருக்கின்றன. அதனால் அவருடைய பாண்டித்யப்பெருமை புலனாகும்.



## 375, 376. ஸ்ரீ வானமாமலை அழகப்பய்யங்கார் ஸ்வாமியும் அழகராசார்யஸ்வாமியும்

இவ்விரண்டு ஸ்வாமிகளும் வானமாமலையில் மடத்தில் ஆஸ்தான வித்வான்களாக விளங்கினவர்கள். அழகப்பங்கார் ஸ்வாமி மிக ப்ரசண்ட பண்டிதர். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி, சின்ன கலியன்ஸ்வாமிக்கு நெருங்கின தேஹாநுபந்தியென்றும், ஸ்வாமி ஆச்ரமஸ்வீகாரம் செய்தருளின பின்பு இவரிடத்தில் சாஸ்த்ரங்கள் பயின்று தேர்ச்சி பெற்றாரென்றும் கேள்வி.

## 377. ஸ்ரீ கோ. க. அண்ணன் ராமாநுஜாசாரியர்

இவர் காஞ்சீபுரத்தைச் சேர்ந்தவர். ஜடப்ரோல்ஸம்ஸ்தான ராஜகுரு குடும்பத்தைச் சேர்ந்தவர். கோயில் கந்தாடை அண்ணன் திருவம்சத்தவர். "தாடி ராமாநுஜாசாரியர்" என்று வழங்கப்பட்டு வந்தார். இவருடைய திருத்தகப்பனார் சப்தகுணோத்தீபம். ரங்காசாரியர்ஸ்வாமியென்று மஹாபாஷ்யாந்த மஹாவித்வானாய் ப்ரக்யாதி பெற்றிருந்தார். திருப்புட்குழி ஸ்ரீக்ருஷ்ணதாதாசார்யஸ்வாமியென்று ப்ரக்யாதராயிருந்த திருப்புட்குழியப்பாஸ்வாமியென்பவர் இவரிடம் வியாகரணமதிகரித்தாரென்று ப்ரஸித்தம். இந்த ரங்காசார்யஸ்வாமியின் திருக்குமாரரான ராமாநுஜாசாரியரும் வியாகரண வித்வானாய் மஹாகவியாய் பகவத்விஷயாதிகாரியாய் விளங்கி வந்தார்.

## 378. கோயில் கந்தாடைஅண்ணன் வாதிகேஸரிஸ்வாமி

மேலே ப்ரஸ்தாவித்த ஸ்ரீராமாநுஜாசார்ய ஸ்வாமியின் திருக்குமாரர்கள் மூவருள் கநிஷ்டரான இவர் இளமையிலேயே சிறந்த வித்வானென்று பெயர் பெற்றார். உபய வேதங்களையும் அதிகரித்து முக்கியமாக வியாகரணத்தில் நிஷ்ணாதராய் பகவத்விஷயாதிகாரியாயுமிருந்தார். ஒரு ஸமயம் ஸ்ரீபெரும்பூதூரெம்பெருமானாரை ஸேவிக்கச் சென்று அன்றே அவ்விடத்தில் அநாயாஸமாக ஆசாரியன் திருவடி சேர்ந்தார்.

## 379. வாதிகேஸரி ராமாநுஜாசாரியர்

மேலே ப்ரஸ்தாவித்த வாதிகேஸரிஸ்வாமியின் மூத்த திருக்குமாரரானவிவர் மிக்க இளமையிலேயே அபரிமிதமான கல்விகளைக் கற்றார் உபயவேதங்களையும் தட்டுத் தடங்கலின்றி அவலீலையாகப் பரீக்ஷை கொடுக்கவல்லவராயிருந்தார். ஆசாரத்தில் வஸிஷ்டரையும் வென்றிருந்தார். முப்பத்தைந்து பிராயத்திற்குள் மறைந்து விட்டார்.

## 380. ஸ்ரீ தேரடி வேங்கடாசாரியர்

ஸ்ரீபெரும்பூதூரில், அஷ்டகோத்ரம் தேரடி வேங்கடாசாரிய ரென்று முப்பதாண்டுகட்கு முன்பு விளங்கி வந்தார். நியாய வேதாந்தங்களையதிகரித்து ஸ்ரீபாஷ்யபகவத்விஷயாதிகாரியாக விளங்கினவர்.

## 381. அஷ்டகோத்ரம் (சிவகிரி) ஸ்ரீநிவாஸாசாரியர்

ஸ்ரீவில்லிபுத்தூர்ப் பிராந்தத்தில் பிறந்து ஸ்ரீபெரும்பூதூர் வந்து சேர்ந்து நியாயவியாகரண வேதாந்தங்களை அதிகரித்து ஸ்ரீவில்லி புத்தூரில் வாழ்ந்து அங்குப் பலரை வித்வான்களாக்கினவர். இருபது வருடங்களுக்கு முன்பு திருநாடலங்கரித்தவர்.

## 382. ஸ்ரீ புத்தூர் ஸ்ரீநிவாஸய்யங்கார்ஸ்வாமி

இப்போது உலகப்பிரசித்தமாய் நடைபெற்றுவருகின்ற ஸ்ரீவைஷ்ணவஸுதர்சன பத்ரிகையைத் தொடங்கின மஹான் இவர். இப்போதைய ஆசிரியரான ஸ்ரீ.உ.வே. S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் M.A.B.L. அட்வகேட் ஸ்வாமியின் திருத்தகப்பனுர். நமது பூர்வா சார்ய ஸ்ரீஸூக்திகளையெல்லாம் அச்சிடுவதற்கு ஸங்கல்பித்துப் பல ஸ்ரீகோசங்களையச்சிட்டு, மேன்மேலும் சாச்வதமாக அச்சிட்டுவர மூலதனநிதியை ஸ்தாபித்துவைத்திருப்பவர் இப்பெரியார்.

## 383. ஸ்ரீ காரப்பங்காடு வேங்கடாசார்யஸ்வாமி

சென்ற விரோதிகிருத்ஷு ஆடிமாதத்தில் திருநாடலங்கரித்த இந்த மஹாஸ்வாமியை உலகமெல்லாமறியும். ஜகத்விக்க்யாதரா யெழுந்தருளியிருந்த காரப்பங்காடு சிங்கப்பெருமாள்ஸ்வாமியின் தௌஹித்ரரும் ஸ்வீக்ருத புத்திரருமான இப்பெரியார் விளக்கில் கொளுத்தின தீவட்டிபோல விளங்கினவர். உபயவேதாந்தங்களையும் பலர்க்குப் பலகால் பிரவசனஞ்செய்தருளினவர். சிதம்பரம் கலாசாலை யிலும் ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையிலும் சிலபல வருஷங்கள் சாஸ்த்ர ப்ரவசன நிஷ்ணுதராயெழுந்தருளியிருந்து 25 வருஷங்களுக்கு மேலாக சென்னை மாநகரில் சாரிடிகளிலும் திருமாளிகையிலும் அனேகக்ரந்தப்ரவசனம் செய்து போந்தவர்.

## 384. ஸ்ரீ நல்லார் கிருஷ்ணமாசாரியர்

ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்து ஸ்ரீபெரும்பூதூர் காலேஜில் வியாகரணவேதாந்தங்களை யதிகரித்து ஸ்ரீவில்லிபுத்தூரில் பலர்க்கு உபயவேதாந்தங்களையும் இதிஹாஸபுராணங்களையும் பிரவசனம் செய்தவர் இவர். மேன்மேலும் மிக அபிவிருத்திக்குவர வேண்டியவர் இரண்டாண்டுகட்குமுன்பு அசிந்திதமாகத் திருநாடலங்கரித்தார்.



## 384. தெய்வசிகாமணிஸ்வாமி

ஸ்ரீவில்லிபுத்தூரிலேயே வாழ்ந்த இத்திருநாமம் பூண்ட ஸ்வாமி திருக்கண்ணபுரம் பட்டப்பாஸ்வாமி ஸன்னிதியில் பகவத்விஷய ரஹஸ்யாதிகளை நன்கு அதிகரித்து ப்ரவசனம் செய்துகொண்டிருந்த பரமஸாத்விகர். பல வருஷங்களுக்கு முன்பு திருநாடலங்கரித்தவர்.

## 385. குன்றபாக்கம் தி. அ. அண்ணங்கராசார்யஸ்வாமி

ஸ்ரீ காஞ்சியில் ஜகத்விக்க்யத வித்வானுக எழுந்தருளியிருந்த குன்றபாக்கம் சீமாச்சார்ஸ்வாமியின் திருத்தம்பியரான இந்த அண்ணங்கராசாரியர் ஸ்வாமியும் நியாயவேதாந்த வித்வானுகக் கீழண்டைமாடவீதியில் எழுந்தருளியிருந்தார். இவரும் நியாய பாட ப்ரவசனம் செய்து கொண்டிருந்தவரே. கடைசியில் திருவல்லிக்கேணி சென்று சேர்ந்து ஸ்ரீபார்த்தஸாரதிஸ்வாமி ஸன்னிதியில் உபய கோஷ்டீ நிர்வாஹகராயிருந்து அவ்விடத்திலேயே ஐம்பதாண்டுகட்கு முன்பு திருநாட்டுக்கெழுந்தருளினுர்.

## 386. பெங்களூர் கல்கி. நரசிம்ஹாசாரியர்

தொண்டனூர் பிரதிவாதிபயங்கரவம்சஸ்தர் என்று வ்யபதிஷ்டராயிருந்த இப்பெரியவர் வேதாந்தவாதாவளீகாரராக ப்ரஸித்தராயிருந்த மஹாவித்வத்ஸார்வபௌமரான மண்டயம் அனந்தாழ்வார்ஸ்வாமியின் பாகிநேயரென்று ப்ரஸித்தரான வித் வான். அனேகக்ரந்தங்களெழுதின மஹாகவி. திருவாய் மொழியா யிரத்தையும் அதிஸரளச்லோகபந்தமாக்கி அச்சிட்டு வெளியிட்டிருந் தவர். அதற்கு ஸஹஸ்ரகாதாரத்னுவளியென்று பெயர். அதற்குக் கன்னட பாஷையில் வியாக்குயானமுமிட்டிருந்தாரென்று கேள்வி. இடையில் இவர்க்கு சித்தவிப்ரமம் விளைந்து தம்மைக் கல்கியவதார மாகச் சொல்லிக்கொண்டிருந்தனுலோ வேறு காரணத்தினுலோ இவர்க்குக் கல்கிஸ்வாமியென்றே ப்ரஸித்தி விளைந்தது.

## 387. ஸ்ரீமத் அக்காரக்கனி. ராமாநுஜாசார்யஸ்வாமி

திருமலை அனந்தாழ்வான் வம்சஸ்தராய் திருநாராயணபுரத்தில் திருவவதரித்தவரான அக்காரக்கனி ராமாநுஜாசார்யஸ்வாமியென் பவர் உபயவேதாந்த ப்ரவீணராயெழுந்தருளியிருந்து வடநாட்டில் மாலவதேசத்திலும் குர்ஜர ப்ராந்தங்களிலும் பகவத்ராமாநுஜ

தர்சனத்தைப் ரசாரம் செய்ய எழுந்தருளிப் பல நூற்றுக்கணக்கானவர்களை ஸ்ரீவைஷ்ணவர்களாகத் திருத்திப்பணிகொண்டு விக்யாதராக எழுந்தருளியிருந்தவர். இந்த ஸ்வாமியின் திருக்குமாரரே நமது ஜ்யேஷ்ட ஜாமாதாவான அக்காரக்கனி ஸம்பத்குமாராசாரியர்.

## 388. திருநாராயணபுரம் ஜக்குவெங்கடாசார்யஸ்வாமி

திருநாராயணபுரம் அநாதிகாலமாகவே வித்வான்களைப் பயிர் செய்யும் மஹாக்ஷேத்ரமென்று ப்ரஸித்தம். இதற்கு எம்பெருமானுருடைய திவ்யகடாக்ஷமே காரணமென்பர். அவ்விடத்தில் ஸ்ரீ. ஜக்கு வேங்கடாசார்யஸ்வாமியென்பவர் சிறந்த வித்வானுகவும் மஹாகவியாகவும் விளங்கி வந்தார். இந்த மஹாக்ஷேத்திரத்தில் இருபது வித்வான்களுக்குமேல் அடியேனறிவேன். ஒவ்வொருவரும் பரிகணிதரான வித்வன்மணியாக விளங்கினவர். இன்றைக்கும் வித்வான்களுக்கு ஸுபிக்ஷமே.

## 389. தாமல் திருவேங்கடாசாரியர்

தாமல் குட்டிஸ்வாமியென்று வழங்கப்பட்டுவந்தவிவர் திருமலை திருப்பதி அனந்தாண் பிள்ளை புரிசை (வித்வத்ஸார்வபௌம) ஸ்வாமி யெழுந்தருளியிருந்தவரையில் அந்த ஸ்வாமியின் திருவடி வாரத்திலேயே வாழ்ந்திருந்து நியாயவேதாந்த ஸம்பிரதாய க்ரதங்களையெல்லாம் அதிகரிதது, பிறகு இருபது வருஷ காலம் காஞ்சியில் வாழ்ந்து திருநாடலங்கரித்தார்.

## 390. உளுந்தை ரங்காசாரியர்ஸ்வாமி

ஸ்ரீகாஞ்சியில் ஸ்ரீயதோக்தகாரியெம்பெருமான் ஸன்னிதிவீதியில் எழுந்தருளியிருந்த மஹாஸ்வாமி 'உளுந்தை ரங்காசாரியர்ஸ்வாமி' என்று ப்ரஸித்தரானவர். வந்தவாசியருகில் உளுந்தையென்னும் அக்ரஹாரத்தில் சிஷ்யர்களையுடையராய் அடிக்கடி அங்கும் வாஸமாக இருந்தபடியால் உளுந்தை ரங்காசார்யரென்று வ்யபதிஷ்டராயிருந்தார். இந்த ஸ்வாமி ஜ்ஞாநுநுஷ்டான ஸம்பன்னராயிருந்ததோடு ஸர்வபூதஸுஹ்ருத்தென்று பேர்படைத்திருந்தார். திருநாடலங்கரித்து ஐம்பது வருஷமாகிறது.

## 391. அத்தங்கி தெட்டுதாதாசாரியர்ஸ்வாமி

ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் நியாய வேதாந்தங்களையதிகரித்து உபயவேதாந்த ப்ரவீணராகி காஞ்சியில் ஸ்ரீயதோக்தகாரியெம்பெருமான் ஸன்னிதி வீதியில் வாழ்ந்து வந்த இப்பெரியார் திருநாடலங்கரித்து இருபது வருஷமாகிறது. ரஸிகவித்வான் என்று அடியேன் மதிக்க இருந்தவர்.



## 392. ஸ்ரீஸூக்தி ரத்னுகரஸ்வாமி

ஆழ்வார் திருநகரி. இளையவல்லி. சடகோபாசாரியர் ஸ்வாமியை அறியாதாரில்லை. உபயவேதாந்தங்களிலும் கனிந்த ஞானம் படைத்து மஹாவாக்மியாய் விளங்கினவர். ஸ்ரீஸூக்தி ரத்னுகரமென்கிற மிகப்பொருத்தமான விருதுபடைத்தவர். இருபது வருஷ காலம் திருவரங்கம் பெரிய கோயிலில் நித்யவாஸமாக எழுந்தருளியிருந்து உபயவேதாந்த ப்ரவசனம் செய்து கொண்டிருந்து தமது அறுபத்தோராவது திருநக்ஷத்திரத்தில் திருநாடலங்கரித்தவர்.

## 393. திருமழிசையிலெழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. வரதாசார்யஸ்வாமி, புத்தூர் வேங்கடாசார்யஸ்வாமி, திருவாழி ஸ்வாமி, அய்யன் ராமாநுஜாசார்யஸ்வாமி, ராய்ஜீ ஸ்ரீநிவாஸாச்சார்யஸ்வாமி

மேலே குறிப்பிட்ட ஐந்து திருநாமங்கள் திருமழிசையில் பரிகணிதர்களான வித்தான்களா யெழுந்தருளியிருந்தவர்கள். இவர்களுள் ஸ்ரீவரதாசார்யஸ்வாமி ப்ரசண்டபண்டிதோத்தமராக விளங்கி வந்தார். திருவல்லிக்கேணி வேதவேதாந்த வர்த்திநீஸபையில் ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமியோடுகூட சாஸ்த்ரபரீக்ஷகராக எழுந்தருளியிருந்தவர் : ஸ்ரீபாஷ்யபகவத்விஷயங்களை நித்யப்ரவசனம் செய்து கொண்டிருந்தவர். புத்தூர் வேங்கடாசார்யஸ்வாமி நியாய வேதாந்தங்களில் மிகவும் பரிக்ராந்தராய் அநுஷ்டான சீலராயிருந்து வந்தார். திருவாழிஸ்வாமி ஸ்ரீபாஷ்யப்ரவசனத்தில் நிரதராக எழுந்தருளியிருந்தவர். அய்யன் ராமாநுஜாசார்யஸ்வாமி உபயவேதாந்த ப்ரவசன நிஷ்ணுதராயிருந்ததோடன்றி இதிஹாஸ புராணங்களிலும் ப்ரவக்தாவாக இருந்துவந்தார். ராய்ஜீ. ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி பத்தெட்டு வருஷகாலம் சென்னை சாரிடிகளில் காலக்ஷேபப்ரவர்த்தகராக எழுந்தருளியிருந்து பிறகு நம்பெருமாள் ஸன்னிதியில் ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீரங்க நாராயணஜீயர் ஆஸ்தானத்தை அலங்கரித்திருந்து திருமேனியின் அபாடவத்தினுல் திருமழிசைக்கேயெழுந்தருளித் திருநாடலங்கரித்தவர்.

## 399 ஆஸூரி. (சின்ன) ராமாநுஜாசாரியர்ஸ்வாமி

அடுத்தபடியாக ஸ்ரீமதுபயவே. பெரிய ராமாநுஜாசார்ய ஸ்வாமியோடு தலைக்கட்டலாகிறது. அந்த மஹாஸ்வாமியின் பரமக்ருபையினால் அபிவிருத்தியடைந்து சின்ன ஸ்வாமி யென்றே பேர் பெற்றிருந்த இந்த ஸ்வாமி இற்றைக்கும் எழுந்தருளியிருக்கத்தக்கவர். திருநாடலங்கரித்து ஏறக்குறைய முப்பது ஸம்வத்ஸரமாய் விட்டது. நியாய வேதாந்தங்களில் ஆழ்ந்த அவகாஹனமுடையராய்ச் சிறந்த வாக்மியாக விளங்கினவர். ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் பல வாண்டுகள் நியாயோபாத்யாயராக விளங்கினவர்.

## 400. ஸ்ரீமதுபயவே. ஆஸூரி. மஹாஸ்வாமி

எழுபத்தேழு பெரியார்களின் பெருமையென்னுமிக்கட்டுரை தொடங்கும்போதே முதல் ஸ்தானத்தில் வீற்றிருக்க வேண்டிய மஹாஸ்வாமி இப்போது நிகமனஸ்தானத்தை அலங்கரித்தருளுகிறார். *அதீத மத்யாபித மார்ஜிதம் யச:* என்றதற்கு ப்ரதம லக்ஷ்யமாக எழுந்தருளியிருந்த இந்த மஹாஸ்வாமியின் பெருமைகளை ஸ்ரீராமாநுஜன் பலபர்யாயங்களில் பேசியிருக்கின்றது. *செலக் காண்கிற்பார் காணுமளவும் செல்லுங்கீர்த்தியாய்* என்னும்படி விளங்கின இந்த மஹாஸ்வாமியின் ஸ்மரணத்தோடு இந்த ஸப்தஸ்ப்ததி மஹாநுபாவ ப்ரபாவாநுபவத்தைப் பேரின்ப வெள்ளம் பெருகத் தலைக்கட்டியாயிற்று.

—O—

சிறு குறிப்பு :— அடியேனுடைய வாழ்நாளில் வாழ்ந்த பெரியார்கள் மற்றும் பலருளர். தற்காலம் ஒரு நூறு கணக்கில் முடித்தபடி. அடியேன் மஞ்ஜுபாஷிணீ பத்ரிகை நடத்திக் கொண்டிருந்த காலத்தில் வடநாட்டிலும் மலை நாட்டிலும் பல நூற்றுக் கணக்கான பிரபல பண்டிதர்கள் பரிசிதர்களாயினர் அன்னவர்களின் பரிசயமும் நேசமும் மேன்மேலும் ஓங்கி வளர்ந்து வருகின்றது. அவர்களைப் பற்றியுங்கூட எழுதமிக ஆசையுண்டு. ஆனால் அதைத் தமிழில் வெளியிட்டுப் பயனில்லை. எனது தெலுங்கு பத்ரிகையிலும், வைதிக மநோஹராவிலும் வெளியிடுவேன். அவரவர்களிடத்தில் நன்றி பாராட்டுதற்கு இதுவொரு வழியென நினைத்துச் செய்வதாமிது.

**அண்ணஸ்வாமியின் அமுதமொழியாயிரத்தில்**
**நான்காவது நூறு முற்றிற்று.**

# அண்ணஸ்வாமியின் அமுதமொழியாயிரத்தில் ஐந்தாவது நூறு

ஸ்ரீவைஷ்ணவ சம்ப்ரதாயத்தில் நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழி ஆயிரத்திற்கு ஒப்புயர்வற்ற பெருமை உலகமறிந்தது. அது நூறு பதிகங்கள் கொண்டது. ஒவ்வொரு பதிகத்திலும் ஆழ்வாருடைய அனுபவம் எத்தகைத்து என்பதைத் தெரிந்துகொள்ள மணவாளமாமுனிகள் அருளிச் செய்த திருவாய்மொழி நூற்றந்தாதி என்ற பிரபந்தம் அவதரித்துள்ளது. ஆனால் அது வெண்பாவாக இருப்பதாலும், மிகச் சுருக்கமாக இருப்பதனாலும் ஒவ்வொரு பதிகத்தின் தாத்பர்யத்தை விளக்கமாகத் தெரிந்து கொள்வதற்கு நம் அண்ணஸ்வாமி இயற்றிய திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையில் ஒவ்வொரு பதிகத்திற்கும் முன்னுரையாகவுள்ள "அவதாரிகை" என்கிற பகுதி மிக இனியதும் மிக எளியதும் ஆதலால் அந்த அவதாரிகைகள் மட்டும் இதில் ஐந்தாவது நூறாகக் கொடுக்கப்படுகின்றன.

## 401. முதற்பத்தில் முதற்பதிகம்—உயர்வறவுயர்நலம்

இதில், மஹோபகாரங்களைத் தமக்குச் செய்தருளின எம்பெருமானுடைய திருவடிகளைத் தொழுது மேன்மை பெறும்படியாக ஆழ்வார் தமது திருவுள்ளத்திற்கு உபதேசிக்கிறார்.

புறமதத்தவருடைய கொள்கைப்படி எம்பெருமான் நிர்க்குணனல்லன், ஸமஸ்த கல்யாண குணாத்மகன் என்கிற வேதாந்த ஸித்தாந்தத்தை முதலடியிலே வெளியிட்டருளுகிறார். இதனால், எம்பெருமான் தனது திருக்கல்யாண குணங்களைக் காட்டி இவ்வாழ்வாரை ஈடுபடுத்திக் கொண்டமை விளங்கும்.

குணங்களுக்குத் தோற்று அடிமைப்படுதல் என்றும் ஸ்வரூபமாகவே அடிமைப்பட்டிருத்தல் என்றும் இருவகைப்பட்டுள்ளதான அடிமையில் குணப்ரயுக்தமான அடிமையிற்காட்டிலும் ஸ்வரூபப்ரயுக்தமான அடிமையே சிறக்குமென்பது ஸம்ப்ரதாய ஸாரார்த்தமாயினும், ஆழ்வார் தம்மை எம்பெருமான் அகப்படுத்திக் கொண்டது திருக்குணங்களைக் கொண்டாதலால் தாம் இழிந்த துறையை முதலிலே பேசுகிறாரென்க. ஸ்வரூப ப்ரயுக்தமான அடிமையும் ஆழ்வார்க்குக் குறைவற்றதென்னுமிடம் "ஆகிலுங் கொடியவென்னெஞ்ச மவனென்றே கிடக்கு மெல்லே" என்ற பாசுரத்தால் வெளியிடப்படுகின்றமை காண்க. மற்றும் எம்பெருமானுடைய பரத்துவத்துக்கேற்ற பல தன்மைகளையும், சரிதைகளையும் அருளிச் செய்து தலைக்கட்டுகிறார் இப்பதிகத்தை. ஆகவே இப்பதிகம் எம்பெருமானுடைய பரத்துவத்தை வெளியிடுவதாகும்.

## 402. முதற்பத்தில் இரண்டாம் பதிகம்—வீடுமின் முற்றவும்

ஆழ்வார் தாம் அநுபவிக்கும் பகவத்விஷயம் தனியே அநுபவிக்கக்கூடிய தல்லாமையாலே *மச்சித்தா மத்கதப்ராணு: போதயந்த: பரஸ்பரம்* என்று கீதாசார்யன் பணித்தபடியே பிறரோடு உசாவியே போதுபோக்கித் தரிக்க வேண்டியவரான தாம் அப்படிப்பட்ட அதிகாரிகளைப் பெறுதற்காக நாற்புறமும் கண்வைத்துப் பார்த்தார்; எல்லாரும் ஸம்ஸாரிகளாயிருந்தனர்; தாம் பகவத் விஷயத்திலே ஊன்றியிருக்கிருப்போலே அவர்கள் விஷயாந்தரங்களிலே ஊன்றியிருக்கக் கண்டார் ஆழ்வார். அன்னவர்களுடைய அநர்த்தத்தைத் தவிர்க்காமல் நிற்கமாட்டிற்றிலர். அவர்களை எப்படி மீட்கலாமென்று பார்த்தார். "இவர்களோ சேதநராயிருந்தார்கள்; விஷயாந்தரங்களிலே வாசியறிந்து தீயவற்றைக் கழித்து நல்லவற்றைக் கைக்கொள்பவராயிரா நின்ருர்கள்; காய்கறி முதலானவற்றிலும் நன்மை தீமைகளை ஆராய்ந்து நல்லவற்றைப் பரிக்ரஹிக்கவும் தீயவற்றைப் பரிஹரிக்கவும் வல்லவரான இவர்கள் இன்னமும் சிறிது ஆராய்ச்சியைச் செலுத்த மாட்டாதே யிராநின்ருர்கள்; பகவத் விஷயத்தின் நன்மையையும் விஷயாந்தரங்களின் தீமையையும் நாம் எடுத்துக் காட்டினுல் உண்மையை ஆராய்ந்து பார்த்து ஹேயவிஷயங்களை விட்டு உபாதேய விஷயத்தைப் பற்றக் கூடுமே; ஆதலால் அதை உபதேசித்துப் பார்ப்போம்" என்று திருவுள்ளம் பற்றி, எம்பெருமானுடைய நன்மையையும், ஸம்ஸாரிகள் பற்றிக் கிடக்கிற விஷயாந்தரங்களின் அற்பத்தன்மை, அநித்யத்தன்மை முதலியவற்றையும் அருளிச் செய்யாநின்று கொண்டு விஷயாந்தரங்களில் நசையற்று பகவத் பக்தியைப் பண்ணுங்கோளென்று உபதேசிக்க இழிகிருர்.

## 403. முதற்பத்தில் மூன்ரும் பதிகம்—பத்துடையடியவர்

முதற்றிருவாய் மொழியில் எம்பெருமானுடைய பரத்துவத்தைப் பேசினுர். அங்ஙனம் பரனுன அப்பெருமானைப் பஜியுங்கோளென்று இரண்டாந் திருவாய் மொழியில் உபதேசரூபமாக அருளிச் செய்தார். அங்ஙனம் உபதேசித்த ஆழ்வாரை நோக்கி ஸம்ஸாரிகள் "ஸ்வாமிந்! பஜியுங்கோள், பஜியுங்கோள் என்று பலகாலும் அருளிச் செய்கின்றீர்; இருகை முடவனை நோக்கி 'ஆனையேறு, ஆனையேறு. என்ருல் அவனுல் ஏறப்போமோ? அப்படியே, ஸர்வேச்வரனுய் "நாகணை மிசை நம்பரர் செல்வர் பெரியர்" என்னும்படி மிகப் பெரியனுயிருக்கின்ற அவனை நீசரான ஸம்ஸாரிகளாலே பற்றப் போமோ?" என்ன, அவ்வானைதானே அவ்விருகை முடவனுக்கும் ஏறலாம்படி படிந்து கொடுக்குங்கால் ஏறத் தட்டில்லையன்ரே; அப்படியே ஸம்ஸாரிகளுக்குப் பஜிக்கலாம்படி அவன் தன்னைத் தாழவிட்டு எளியனுமாகில் பஜிக்கத் தட்டில்லையே," யென்கிருர். எம்பெருமானுடைய பரத்வத்தை எவ்வளவும் பேசலாம்; எளிமையைப் பேசுவதென்பது அரிது; அப்படிப்பட்ட பெரியவன் இப்படித் தாழநின்ருனே!' என்று *உள்ளெலா முருகிக் குரல் தழுத்தொழிந்து உடம்பெலாங் கண்ண நீர் சோரப் பேசவேண்டிய விஷயமாகையாலே தெளிந்திருந்து பேசப்போகாதே! ஆழ்வாரை ஆறுமாதம் மோஹிக்கப் பண்ணின விஷயமாயிற்று இது.



## 404. முதற்பத்தில் நான்காம் பதிகம்—அஞ்சிறைய

எம்பெருமானை அநுபவித்தல் பலவகைப்பட்டிருக்கும்; அவனுடைய திருநாமங்களைச் சொல்லியநுபவித்தல், திருக்கல்யாண குணங்களைச் சொல்லி யநுபவித்தல், வடிவழகை வருணித்து அநுபவித்தல், அவனுகக்தருளின திவ்யதேசங்களின் வளங்களைப் பேசியநுபவித்தல், அங்கே அபிமானமுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களின் பெருமையைப் பேசியநுபவித்தல், — என்றிப்படி பலவகைப்பட்டிருக்கும் பகவதநுபவம். இவ்வகைகளில் பரம விலக்ஷணமான மற்ருெரு வகையுமுண்டு; அதாவது — ஆழ்வார் தாமான தன்மையைவிட்டுப் பிராட்டிமாருடைய தன்மையை ஏறிட்டுக் கொண்டு வேற்றுவாயாலே பேசியநுபவித்தல். இப்படி அநுபவிக்குந்திறத்தில், தாய்பாசுரம், தோழி பாசுரம், மகள் பாசுரம் என்று மூன்று வகுப்புகளுண்டு. அப்போது ஆழ்வாருக்குப் 'பராங்குசர்' என்ற ஆண்மைப் பெயர் நீங்கி 'பராங்குசநாயகி' என்று பெண்மைப் பெயர் வழங்கப்பட்டுவரும். தாய்சொல்வது போலவும், தலைமகள் சொல்வதுபோலவும், தோழி சொல்வதுபோலவும் பாசுரங்கள் வெளிவந்தாலும் பாசுரம் பேசுகிறவர் ஆழ்வாரேயாவர். ஒரு ஆருனது பல வாய்க்கால்களாகப் பெருகினுலும் அவற்றுக்குப் பிரதானமான பெயர் ஒன்றே யாயிருக்குமாபோலே, இம்மூன்று நிலைமைகளாகச் சொல்மாலை வழிந்து புறப்பட்டாலும் "அமர் பொழில் வளங்குருகூர்ச் சடகோபன் குற்றேவல்கள்" என்று ஆழ்வார் பாசுரமாகவே தலைக்கட்டும்.

ஆழ்வார் தாமான தன்மையை விட்டிட்டு ஸ்த்ரீபாவனையை ஏறிட்டுக் கொள்ளுதல் ஏதுக்காகவென்னில்; ஆழ்வார் தாமாக ஏறிட்டுக் கொள்கிருரல்லர்; அந்த அவஸ்தைதானே பரவசமாக வந்துசேருகின்றது. புருஷோத்தமனுகிய எம்பெருமானது பேராண்

மைக்கு முன் உலகமடங்கப் பெண்தன்மையதாயிருக்கையாலும், ஜீவாத்மாவுக்கு ஸ்வாதந்திரிய நாற்றமேயின்றிப் பாரதந்திரியமே வடிவாயிருக்கையாலும் இவ்வகைகளுக்கேற்ப ஸ்த்ரீ பாவனை வந்தேறியன்று என்றே கொள்ளலாம்.

நாயகி பாசுரமாகச் செல்லுகிற இத்திருவாய் மொழியில் சில பறவைகள் தூது விடப்படுகின்றன. அப்பறவைகள் ஞானமும் அனுட்டானமும் நிரம்பிய ஆசாரியர்கள் என்பதை வியாக்கியானங்களில் விளங்கக் காண்க.

## 405; முதற்பத்தில் ஐந்தாம் பதிகம்—வளவேழுலகு

ஆழ்வார் ஒவ்வொரு திருவாய் மொழியிலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு குணத்தை வெளியிட்டுக் கொண்டு வருகின்றாரன்றே. முதல் திருவாய்மொழியில் பரத்துவத்தைப் பேசினார். இரண்டாந் திருவாய்மொழியில் பஜநீயத்வத்தையருளிச் செய்தார். மூன்றாந் திருவாய்மொழியில் ஸௌலப்யத்தை வெளியிட்டார். கீழ்த்திருவாய்மொழியில் அபராதஸஹத்வத்தை ஆவிஷ்கரித்தார். இத்திருவாய்மொழியில் சீலகுணத்தை விளக்கியருளுகிறார்.

எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களெல்லாவற்றினுள்ளும் சீலகுணமென்பது மிகச் சிறக்கும். பராத்பரனான தான் நம்போல்வாருடைய அற்பத்தனத்தைச் சிறிதுங் கணிசியாது தன்னைத் தாழவிட்டுக்கொண்டு நம்மோடு புரையறக் கலந்து பழகுந்தன்மையே சீலமெனப்படும். இது ஸௌசீல்யமென்றும் வழங்கப்பெறும். ''மஹதோ மந்தைஸ்ஸஹ நீரந்த்ரேண ஸம்ச்லேஷ: ஸௌசீல்யம்'' என வடமொழியாளர் இக்குணத்திற்கு லக்ஷணங் கூறுவர். மஹானாயிருப்பவன் மந்தர்களோடு நெருங்கிப் பழகுவதே சீலம் என்றவாறு. அத்திருக்குணம் இப்பதிகத்தில் தம்முடைய அனுபவமுகத்தாலே விவரிக்கப்படுகிறது.

## 406; முதற்பத்தில் ஆறாம் பதிகம்—பரிவதிலீசனை

ஒவ்வொரு திருவாய்மொழியிலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு திருக்குணத்தை அநுபவித்து வெளியிட்டுவருகிற முறைமையில், இத்திருவாய் மொழியில் 'ஆராதனைக்கெளியன்' என்கிற ஒரு திருக்குணத்தை வெளியிட்டருள்கிறார். இக்குணம் வடமொழியில் 'ஸ்வாராதத்வம்' எனப்படும். சிரமமின்றி எளிதாகவே ஆராதிக்க உரியனாயிருக்குந்தன்மை என்றவாறு. இதர தெய்வங்களிற் காட்டில் எம்பெருமான் எத்தனையோவிதங்களால் நெடுவாசி பெற்றிருப்பதுபோலே இவ்வகையாலும் நெடுவாசிபெற்றிருப்பன்



'ஆடு பலிகொடு, கோழி பலிகொடு' என்று அருந்தேவைகளை யிட்டு மஹா பரிச்ரம ஸாத்யங்களான ஆராதனைகளை அபேக்ஷித்திருக்கும் தேவதாந்தரங்கள்; எம்பெருமான்படியோ அப்படியன்று; நாம் இட்டதுகொண்டு த்ருப்தியடைவதே அவனது ஸ்வரூபம், என்பது சாஸ்த்ரங்களில் தேர்ந்த விஷயம். அதுவே இத்திருவாய்மொழிக்கு ப்ரமேயம்.

## 407. முதற்பத்தில் ஏழாம் பதிகம்—பிறவித்துயரற

கீழ்த் திருவாய்மொழியில் எம்பெருமான் ஆராதனைக்கு அரியனல்லன், மிகவும் எளியன் என்பதை அருளிச் செய்தார். ஆராதனம் எளிதாயிருந்தாலும் ஆச்ரயணம் இனிதாயிருந்தாலன்றோ நெஞ்சு பொருந்தும்; உலகில் பலபேர்கள் நாம் இட்டதுகொண்டு பரம திருப்தியடையுமவர்களாய் ஆராதனைக்கு எளியராயிருக்கக்கூடும்; இருந்தாலும் அவர்களுடைய ஆச்ரயணம் நமக்கு இனிமை மிக்கதாயிருந்தாலன்றிப் பயனில்லையன்றே: அப்படியே எம்பெருமானும் ஆராதிக்க எளியனானாலும் ஆச்ரயணத்தில் ஸாரஸ்யமுடையனாயிருக்கவேண்டுவதொன்று உண்டாதலால் அஃது அப்படியே உண்டென்பதை இத்திருவாய்மொழியிலருளிச் செய்கிறார். ''பகவத் ஸமாச்ரயணமாகிறதுதான் இதுக்கு இட்டுப் பிறவாத ஸர்வேச்வரனும் ஆசைப்படும்படி போகரூபமாயிருப்பதொன்றிறே'' என்பது நம்பிள்ளை யருளிச்செயல். தன்னுடைய வைலக்ஷண்யத்தை எம்பெருமான் தானும் பார்த்துத் தனக்குத்தானே அடிமைசெய்துகொள்ள விரும்பும்படியாயிருக்குமென்று ஒரு அதிசயோக்தியாக இது அருளிச் செய்தபடி. 'இப்படியும் இருக்குமா? எம்பெருமான் அவ்வளவு உன்மத்தனோ?' என்று சிலர் நினைத்துவிடக்கூடும்; 'எம்பெருமானுடைய இனிமை ஒப்புயர் வற்றது' என்று காட்டுவதில் மட்டுமே இந்த ஸ்ரீஸூக்தி நோக்குடையதென்று கொள்க.

## 408. முதற்பத்தில் எட்டாம் பதிகம்—ஓடும்புள்ளேறி

ஒவ்வொரு திருவாய்மொழியிலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு குணத்தை அநுபவித்துப் பேசிவருகின்ற ஆழ்வார், கீழ்த் திருவாய்மொழியில் அவனது இனிமைக்குணமென்கிற பரம போக்யதையை அநுபவித்துப் பேசினார்; இத்திருவாய்மொழியில் அவனது ஆர்ஜவ குணத்தை அநுபவித்துப் பேசுகிறார். ஆர்ஜவமாவது—ருஜுவாயிருக்குந்தன்மை. மனத்திலுள்ளது ஒன்றும், வாயாற்சொல்லுவது வேறொன்றும், காரியத்தில் நடத்துவது பிறிதொன்றுமாயிருக்கை யன்றியே மன

மொழி மெய்கள் மூன்றும் ஒருபடிப்பட்டிருத்தல் ஆர்ஜவமெனப் படும். இதற்குத் தமிழில் செம்மை என்று பெயர். இக்குணம் இத்திருவாய்மொழியில் அநுபவிக்கப்படுகிறது. ஸம்ஸாரிகள், நினைவும் சொல்லும் செயலும் ஒருபடிப்பட்டிராமல் பல வகைப் பட்டிருத்தலால், அன்னவர்களோடு எம்பெருமான் தான் பரிமாறுமிடத்தில் அவர்கள் போனவழியே தனக்கு வழியாம்படித் தான் அவர்கட்குச் செவ்வியனாய்ப் பரிமாறுகை இங்குச் செம்மை எனப் படுகின்றது.

## 409. முதற்பத்தில் ஒன்பதாம் பதிகம்-இவையுமவையும்

எம்பெருமானிடத்தில் [ஸாத்ம்யபோக ப்ரதத்வம்] என்றொரு குணமுண்டு; அதாவது, அடியார்களுக்குத் தன்னை அநுபவிப்பிக்குமிடத்தில் ஏககாலத்திலேயே பூர்ணாநுபவங் கொடுத்துவிடுகையன்றியே, பொறுக்கப் பொறுக்கச் சிறிது சிறியதாகக் கொடுத்தலாம். அங்ஙனங் கொடாமல் ஒரடியிலேயே பூர்ணாநுபவத்தைத் தந்தருளினால் அது தாங்கமுடியாதே போகும். சிறு குழந்தைகட்கு முதல்தன்னிலேயே சோறும் சாறும் கறியுமிடுவாரில்லையே; பால், கஞ்சி, சோறு என்று வரிசைக்கிரமமாக ஊட்டுகையன்றோ வுள்ளது: அதுபோலவே மாணாக்கர்களுக்கும் சிறு சிறு பாடங்களாகக் கற்பித்துக் கொண்டுபோய்ப் பெரும் பாடங்கள் கற்பிக்கும் முறை காணாநின்றோம். இங்ஙனமே எம்பெருமானும் பொறுக்கப் பொறுக்கப் பரிமாறும்வகை யொன்றுண்டு: அஃது இத்திருவாய்மொழியில் விளங்கும். அதாவது, ஆழ்வாருடைய திருமுடியிலே வந்து வீற்றிருக்கவேணுமென நினைத்த எம்பெருமான் முதலடியிலே அது செய்தால், நிதிகண்ட ஜன்மதரித்ரன் போலே ஸந்தோஷாதிசயம் தாங்கமாட்டாமே தளர்ந்திடுவர்; ஆதலால், சுற்றுப் பக்கத்திலே நின்று, அருகே நின்று, கூட நின்று, ஒக்கலையிலே வந்திருந்து, ஹ்ருதயப்ரதேசத்திலே வந்திருந்து, தோளிலே வந்திருந்து, நாவிலே வந்து புகுந்து, கண்ணுள்ளே நின்று, நெற்றியிலே நின்று பிறகு உச்சியிலே நின்றான்; ஆக விங்ஙனே பொறுக்கப் பொறுக்கச் செய்த செயலையநுபவித்து ஈடுபடுகிறாராழ்வார் இத்திருவாய்மொழியில்.

## 410. முதற்பத்தில் பத்தாம் பதிகம்—பொருமாநீள்படை

எம்பெருமானுடைய அநுக்ரஹம் நிர்ஹேதுகம் என்பது இத்திருவாய்மொழியில் அநுபவித்தருளிச் செய்யப்படுகிறது. கீழ்த் திருவாய்மொழியில் எம்பெருமான் தம்மோடே அவயவங்கள் தோறுங் கலந்த கலவியை அருளிச் செய்த ஆழ்வார் அந்தக் கலவியால் தமக்குப் பிறந்த அளவிலாத ஆனந்தத்தை இத்திருவாய்மொழிமுகத்தால் வெளியிடுகிறார் என்று இங்ஙனே சில ஆசார்யர்கள் நிர்வஹிப்பதுண்டு. பட்டர் விசேஷித்து நிர்வஹிப்பராம்—எங்ஙனேயென்னில்; கீழ்த் திருவாய் மொழியில் "வந்தெனதுச்சியுளானே" என்றும் "உச்சியுள்ளேநிற்குந் தேவதேவற்கு" என்றும் தலைக்கொண்ட அநுபவம் தமக்குக் கிடைத்ததாக ஆழ்வாரருளிச் செய்தார். இனி அவ்வநுபவத்திற்காட்டிலும் ஏற்றமாகச் செய்து கொடுக்கக்கூடிய வேறு அநுபவம் என்ன இருக்கிறது? ஒன்றுமில்லை. அவ்வநுபவம் இடையறாது தொடர்ந்து செல்லுமாறு செய்து கொடுக்கவேண்டுமத்தனையே யுள்ளது. அது எம்பெருமான் திருவுள்ளத்தைப் பொறுத்த விஷயம். அது நிற்க. ஆழ்வார் கீழ்த்திருவாய்மொழியில் தமக்குப் பிறந்த பேற்றை ஆராய்ந்து பார்த்து இப்போது நமக்குக் கிடைத்தபேறோ மிகவுங் கனத்திருக்கின்றது; இதிற்காட்டிலும் உத்தமமான பேறு வேறொன்றில்லை: இத்தகைய பேறு நமக்கு வந்த வழி என்ன? என்று விமர்சிக்கத் தொடங்கினார். இப் பேற்றிற்குத் தகுதியாயிருப்பதொரு நன்மை, அதாவது *இதற்குத் தக்க [ஸாதநாநுஷ்டாநம்] தம்மிடத்தில் ஒன்றுமில்லை யென்பதைத் தெரிந்து கொண்டார்; தம் தலையில் ஏதேனுமிருந்தாலும், அத்வேஷமோ ஆபிமுக்யமோ இருக்குமேயன்றி வேறொன்றிருப்பதாகக் காணவிடமில்லை. அவை ஸாதனமாக நினைக்கவொண்ணாதவை; இத்தலையிலே பரமபக்தியளவும் பிறந்தாலும் நம்மிடத்திலே ஸாதனமாக மதிக்கலாவதொன்றில்லையே. ஆகவே இவ்வநுக்ரஹம் நிர்ஹேதுகம் என்று தலைக்கட்டுகிறார்.

## 411. இரண்டாம்பத்தில் முதல் பதிகம்—வாயுந்திரையுகளும்

ஸம்ஸாரிகள் உலகத்திலுள்ளாரெல்லாரையும் தங்களைப் போலவே உண்டியே உடையே உகந்தோடுபவர்களாக நினைத்தல் போலே ஆழ்வாரும் உலகிலுள்ள ஸகல பதார்த்தங்களும் தம்மைப் போலவே எம்பெருமானைப் பிரிந்த வருத்தத்தினால் நோவுபடுகின்றனவாகக் கொண்டு,—நாரை, அன்றில், கடல், காற்று, சந்திரன் முதலிய பதார்த்தங்களை நோக்கி அவற்றுக்குண்டான சில தன்மைகளை இயற்கையாகக் கருதாது பகவத் விச்லேஷவ்யஸநத்தினாலுண்டானவையாகக் கொண்டு அவற்றுக்குமாகத் தாம் அநுசோகிக்கிறார். நாரை முதலியவற்றையும் தம்மியல்வினவாக வெண்ணி ஒவ்வொன்றையும் நோக்கி 'நீயும் என்னைப்போலே பகவத் விஷயத்தில் ஆசை வைத்து விருப்பத்தின்படி கிடைக்கப் பெறாமையினாலே நோவுபட்டாயோ?' என்று பேசுகிறபடியாய்ச் செல்லுகின்றது இத்திருவாய்மொழி. அடியவர்களை இங்ஙனம்

பிச்சேறப் பண்ணுமவன் எம்பெருமானென்று இதனால் அவனுடைய உன்மாதாவஹத்வமென்கிற குணம் (பித்தேற்றுகை) சொல்லப்பட்டதாகும்.

## 412. இரண்டாம்பத்தில் இரண்டாம் பதிகம்—திண்ணன்வீடு

கீழ்த் திருவாய்மொழியில் ஆழ்வார்க்கு உண்டான நிலைமை லோக விலக்ஷணமாக விருந்தது. பேச்சுக்கு நிலமல்லாத ஆற்றாமையிலே இருந்தார்; ஆற்றாமை கரைபுரண்டதாகுங் காலத்திலே எம்பெருமான் வந்து முகங்காட்டி ஆச்வஸிப்பித்தல் முறைமையாதலால் அவன் அங்ஙனமே வந்து முகங்காட்டினான்; உடனே அந்த ஆற்றாமை போனவிடந் தெரியாமே போயிற்று. உடனே தேறுதலடைந்த ஆழ்வார், எம்பெருமானுடைய பரத்வம் ஸௌலப்யம் என்கிற இரண்டு குணங்களிலே ஸௌலப்யமானது பேசப்பேச உருகப்பண்ணுமாதலால், 'இப்போதுதான் சிறிது தேறுதலடைந்த நாம் அந்த ஸௌலப்ய குணத்தைப் பேசி நெஞ்சழியவொண்ணாது; *நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னுமீனச்சொல்லே *என்கிறபடியல்லாமல் தரித்து நின்று பேசலாம்படியான பரத்வத்தைப் பற்றிப் பேசுவோம்' என்றெண்ணி அதனைப் பேசுகிறார் இத்திருவாய்மொழியில். *உயர்வறவுயர்நலம் என்கிற முதல் திருவாய்மொழியிலும் பரத்வம் பேசப்பட்டிருந்தாலும் இங்குப் பேசுகிறபடியில் வைலக்ஷண்யமுண்டு. அங்கு ஸ்வாநுபவரூபமாகவே சென்றது; இங்கு உபதேசரூபமாகவுமுள்ளது. அங்கு அந்வயமுகத்தால் அருளிச் செய்யப்பட்டது; இங்கு அந்வய வ்யதிரேகங்களிரண்டினாலும் அருளிச் செய்யப்படுகிறது. [எம்பெருமானே பரத்வமுடையவன் என்று சொல்லுதல் அந்வய முகத்தாலே சொல்லுதல். எம்பெருமானைத் தவிர்த்து மற்றையோர்க்குப் பரத்வம் அஸம்பாவிதமென்று நிரூபித்தல் வ்யதிரேக முகத்தாலே சொல்லுதல்.] அங்குப் பெரும்பாலும் உபநிஷத்துக்களை அடியொற்றி அருளிச் செய்தார்; இங்கு இதிஹாஸ புராண ப்ரக்ரியையாலே அருளிச் செய்கிறார். அங்குப் பரத்வத்திலே பரத்வமருளிச் செய்தார்; இங்கு அவதாரத்தில் பரத்வமருளிச் செய்கிறார்—என்று இங்ஙனபல வாசிகள் காண்க.

## 413. இரண்டாம்பத்தில் மூன்றாம் பதிகம்—ஊனில்வாழுயிரே

இந்த மூன்றாந் திருவாய்மொழியானது இரண்டாந்திருவாய்மொழியாக இருந்திருக்கவேண்டும். முதல் திருவாய்மொழியில் [வாயுந்திரையுகளில்] பட்ட ஆர்த்திதீர எம்பெருமான் வந்து



ஸேவைஸாதித்து ஸம்ச்லேஷ ரஸாநுபவத்தையும் கொடுத்தருள, அந்த ஆனந்தத்தைத் தெரிவிப்பதான இந்தத் திருவாய்மொழி முன்னமே அமைந்திருக்க வேண்டியதாயினும், எம்பெருமானுடைய பரத்வாநுபவம் இடையில் ப்ராஸங்கிகமாக ப்ராப்தமாயிற்று. இப்படிப்பட்ட பராத்பரனன்றோ நம்மோடு இங்ஙனே கலந்தருளினானென்று முந்துறப் பரத்வம் அநுஸந்தான விஷயமானபடியாலே அது சொல்லிற்றாயிற்று கீழ்த்திருவாய்மொழியில். அது பேசியானவாறே *வாயுந்திரையுகளில் ஆர்த்திதீரவந்து ஸம்ச்லேஷித்ததனாலுண்டான இன்பம் இத்திருவாய்மொழியில் அருளிச் செய்யப்படுகிறது. இந்தப் பேரின்பத்தை யநுபவிப்பதற்கு உசாத்துணை யாவார் இந்நிலத்தில் ஆரேனுமுளரோ? என்று பார்க்கையில் *உண்டியே உடையே உகந்தோடுமிம் மண்டலத்திலே அப்படிப்பட்டாரொருவருங் கிடையாமையாலே எம்பெருமானை நித்யாநுபவம் பண்ணுகிற நித்யஸூரிகளின் திரளிலே போய்ப்புகுந்து அவர்களோடு ஒரு கோவையாக அநுபவிக்கப்பெறுவது என்றைக்கோ என்கிற குறையோடே இத்திருவாய்மொழி தலைகட்டுகின்றது.

## 414; இரண்டாம்பத்தில் நான்காம் பதிகம்—ஆடியாடி

கீழ்த்திருவாய்மொழியில் "பரமன் பவித்திரன் சீர் அடியேன் வாய்மடுத்துப் பருகிக்களித்தேனே" என்று ஆழ்வார்தாம் பரமானந்தமடைந்ததாக அருளிச் செய்து, அந்த குணாநுபவம் பாகவதர்களோடேகூடிப் பெரிய கோஷ்டியாக இருந்து செய்யவேண்டியதாகையாலே அப்படிப்பட்ட அதிகாரிகள் இந்நிலத்தில் விசேஷமாகக் கிடையாமையாலே திருநாட்டிலே நித்யஸூரிகளின் திரளிலே சென்று புகுந்து அநுபவிக்க வேணுமென்று பாரித்து அந்தப் பாரிப்பைக்* களிப்புங் கவர்வுமற்று* என்ற பாசுரத்திலே காட்டினார். நினைத்தபோதே அந்த நித்யஸூரிகளின் திரளிலே போய்ச் சேர்ந்து அநுபவிக்கப் பெறாமையினாலே மிகவும் வருத்தமடைந்தார். அந்த வருத்தத்தைத் தம்முடையவர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் எம்பெருமானுக்கு அறிவிக்கிற வகையாக இத்திருவாய்மொழியை அருளிச் செய்கிறார். ஆழ்வார் இப்போது தாமான தன்மையையிழந்து நாயகீஸமாதியிலே நிற்கிறார். பராங்குச நாயகியான இவளுடைய நிலைமையைத் தாய்மார் முதலான அன்பர்கள் பேசுகிற பேச்சாக இத்திருவாய்மொழி அமைந்திருக்கின்றது. நாயகீஸமாதியாலே அருளிச்செய்த திருவாய்மொழிகள் கீழே இரண்டு சென்றன -- *அஞ்சிறையமடநாராய் என்பதும் *வாயுந்திரையுகளும் என்பதும். அவையிரண்டும் நாயகிதானே பேசினபேச்சாக இருக்கின்றன. அஞ்சிறைய மடநாராயில் தானே தூதுவிட்டாள்; வாயுந்திரையுகளில்—கண்ணாற்கண்ட பொருள்

களெல்லாம் எம்பெருமானைப் பெருமையினாலே நோவுபடுகின்றனவாகக்கொண்டு அவற்றுக்குமாகத் தான் நோவுபட்டாள். இத்திருவாய்மொழியிலோவென்னில் அங்ஙனம் தன் வாயினால் பேச மாட்டாதபடி வேற்றுவாயாலே பேசக்காண்கையாலே ஆற்றாமை கரைபுரண்டமை விளங்குகின்றது. 'ஸ்ரீராம க்ருஷ்ணாதி அவதாரங்களைப்பண்ணி எல்லாருடைய ஆர்த்தியையும் போக்குவதையே இயல்வாகவுடையீராயிருந்த நீர் உம்மிடத்திலே பெரும்பித்துக் கொண்டிருக்கின்ற இப்பெண்பிள்ளை இப்படி நோவுபடுமாறு பார்த்திருத்தல் தகுதியோ? இவள் திறத்திலே நீர் செய்ய நினைத்திருப்பது என்ன?' என்று எம்பெருமானை நோக்கித் தாய் கேட்கிற பாசுரமாக இத்திருவாய்மொழியுள்ளது. தாய்ப் பேச்சாக இருந்தாலும் பேசுகிறவர் ஆழ்வாரேயன்றோ; அவர் ஏன் இப்படிப்பேச வேண்டும்? என்று கேட்கலாகாது. வேணுமென்று ஆழ்வார் இங்ஙனே பேசுகின்றாரல்லர்; அவருடைய அளவுகடந்த ஆற்றாமை உள்ளிருந்து வெளியே பொசியும்போது இவ்வகையான பாசுரங்களாக வடிவு கொண்டதத்தனை. காவிரியாறு பெருவெள்ளமாகப் பெருகி வரும்போது வெள்ளத்தின் மிகுதியினால் இடையிடையே உடைந்து வேறு சில வாய்க்கால் வழியாகவும் பெருகுவதுண்டு: அவையும் திருக்காவேரித் தீர்த்தமாகவே யிருக்கச் செய்தேயும் முடிகொண்டான் முதலான வேறு சில பெயர்களைப் பெற்று வழங்காநிற்கக் காண்கிறோம். அதுபோலவே எல்லாம் ஆழ்வார் பாசுரமாகவே யிருக்கச் செய்தேயும் தாய்பாசுரம், தோழிபாசுரம் என்னும் வேற்றுமைகள் விளைகின்றன.

## 415. இரண்டாம்பத்தில் ஐந்தாம் பதிகம்—அந்தாமத் தன்பு

கீழ்த திருவாய்மொழியில் ஆழ்வார்க்குண்டான துயரம் முதலையின் வாயிலே யகப்பட்டுத் துடித்த கஜேந்திராழ்வானுடைய துயரத்தோடு ஒப்பிடலாயிருந்தது. அந்த கஜேந்திராழ்வான் 'ஆதிமூலமே!' என்று கதறினபோது அக் கூக்குரல் கேட்டவளவிலே "அதந்த்ரித சமூபதிப்ரஹிதஹஸ்தம் அஸ்வீக்ருதப்ரணீத மணிபாதுகம் கிமிதி சாகுலாந்த:புரம் அவாஹநபரிஷ்க்ரியம் பதகராஜ மாரோஹத: கரிப்ரவரப்ர்ம்ஹிதே பகவதஸ்த்வராயை நம:" [ஸ்ரீரங்ராஜஸ்தவம்.] என்னும்படியாகக் கனவேகத்தோடே மடுவின் கரையிலே அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து காட்சிதந்து தானும் மகிழ்ந்து அவனையும் மகிழ்வித்தவாறுபோல, ஆழ்வாருடையவும் "வலங்கொள் புள்ளுயர்த்தாய்" என்ற கூக்குரலைக் கேட்டவுடனே 'அந்தோ! நாம் ஜகத்தை நிர்வஹித்தபடி வெகு அழகியதாச்சுது! நாம் ஆரானோம்!' என்று நொந்து, தன்னுடைய ஸ்வரூப



ரூபகுணங்கள் அலங்காரம் திவ்யாயுதங்கள் சேர்ந்த சேர்த்தி இவை யெல்லாவற்றோடும் வந்து கலவிதந்து அதனாலே அவன் பரமஸந்துஷ்டனாய் க்ருதக்ருத்யனா யிருக்கிற இருப்பை ஆழ்வார் அநுபவித்து அவ்வநுபவத்தினாலுண்டான மகிழ்ச்சியின் மிகுதியினால் இத்திருவாய்மொழியில், தாம்பெற்ற பேற்றைப் பேசி யநுபவிக்கிறார்.

## 416: இரண்டாம்பத்தில் ஆறாம் பதிகம்—வைகுந்தா

ஆடியாடி யென்னுந் திருவாய்மொழியில் ஆழ்வார்பட்ட ஆர்த்தியெல்லாம் தீர எம்பெருமான்வந்து ஸம்ச்லேஷித்தமை, கீழ்த்திருவாய்மொழியில் சொல்லிற்று. அந்த ஸம்ச்லேஷத்தினால் எம்பெருமான் அளவுகடந்த த்ருப்தியை யடைந்தவனாய் 'இவ்வாழ்வார்க்கு என்னவுதவி செய்வேன் நான்!, இவர்க்கு என்ன கொடுப்பேன்' என்று தடுமாறி நிற்பவனாய், இவ்வாழ்வார் நைச்சியாநுஸந்தானம் பண்ணி 'இப் பரமபுருஷனையா நாம் அணுகுவது? நம்மால் இவனுக்கு நிறக்கேடு உண்டாகுமே! அஃது உண்டாகலாமோ? நாம் இவனைவிட்டு ஒதுங்கி நிற்பதே நன்று' என்று நினைத்து, ஒருகால் அகன்றுபோய்விடுவாராயின், அலப்யலாபமான இதனை நாம் இழந்துவிடுவோமே! இவ்வாழ்வார்க்கும் நமக்கு முண்டான இக்கலவி நித்யமாயிருக்க வேணுமே' என்று அதிசங்கை கொண்டிருக்கையில், அதைத் தெரிந்து கொண்ட ஆழ்வார் 'பிரானே! நீ இங்ஙனம் அதிசங்கை கொள்ளவேண்டா; உன்னை நான் பிடித்தபிடி ஸாமாந்யமன்று; இனி ஒரு நாளும் உன்னை நான் விடமாட்டேனாம்படி திடமாகப் பற்றிக் கொண்டேன் காண்' என்று கூறி எம்பெருமானைத் தேற்றுகிறார் இத்திருவாய்மொழியில்.

## 417. இரண்டாம்பத்தில் ஏழாம் பதிகம்—கேசவன்தமர்

கீழ்த் திருவாய்மொழியில், "எமர் கீழ்மேலெழுபிறப்பும் விடியா வெந்நரகத்து என்றுஞ் சேர்தல் மாறினர்" என்று--எம்பெருமான் தம்மிடதது வைத்த காதல் முன்னும் பின்னும் வெள்ளங்கோத்த படியைச் சிறிதளவாக ப்ரஸ்தாபித்தார்; அந்த மஹோபகாரத்தைப் பெருக்கப் பேசவேணுமென்று ஆழ்வார்க்கு அபிநிவேச முண்டாயிற்று. அஃது இத்திருவாய்மொழிக்கு முக்கியமான ப்ரமேயமாக எடுத்துக் கொள்ளப்படுகிறது. எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களில், இது வொரு மிகச் சிறந்த குணம்: அதாவது-- ஒருவனை விஷயீகரிக்கத் திருவுள்ளம் பற்றினால், அந்த விஷயீகாரம் அவ்வொருதனளவிலே நில்லாமல், அவனோடு ஸம்பந்த ஸம்பந்தம் பெற்றாரளவிலும் கொந்தளிக்குமது. இவ்விஷயத்திற்குச் சார்பாக

நம்பிள்ளை ‘‘மரணாந்தாநி வைராணி நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜநம், க்ரியதாம் அஸ்ய ஸம்ஸ்காரோ மமாப்யேஷ யதா தவ’’ என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்தை யெடுத்துப் பரம ரஸமாக வியாக்யானித் தருளியுள்ளார். அதன் சாரமாவது: விபீஷணாழ்வானிடத்தில் பெருமாளுக்கு உண்டான அன்பு ராவணனிடத்திலும் பெருகிச் சென்று, ‘இவனுக்கு நீ ஈமக் கடன் செய்தே யாகவேண்டும்’ என்று வற்புறுத்தியது. இத்திருவாய்மொழியில் இவ்விஷயம் முக்கிய மாகப் பேசப்படுகிறது. அன்றியும் இத்திருவாய்மொழியில் மற்றொரு விசேஷமுண்டு: அதாவது—கேசவன் முதலாகத் தாமோதரனளவாகவுள்ள துவாதச நாமங்களும் பாட்டுத்தோறும் வரிசைக்கிரமமாகத் தொடுக்கப்பட்டிருக்கின்றன வென்பதாம். ஆனது பற்றியே, இப்பதிகம் மாத்திரம், மற்றைப் பதிகங்கள்போல் பதினொரு பாசுரங்கள் கொண்டதன்றியே பதின்மூன்று பாசுரங்கள் கொண்டதாயிருக்கின்றது.

## 418. இரண்டாம்பத்தில் எட்டாம் பதிகம்—அணைவத ரவணைமேல்

எம்பெருமானுக்குத் தம்பக்கலில் உண்டான வ்யாமோஹம் தம்முடைய ஸம்பந்த ஸம்பந்திகளளவிலும் ஏறிப்பாய்ந்து அனைவரையும் விஷயீகரித்த படியைக் கீழ்த்திருவாய்மொழியில் அருளிச் செய்தார். அவ்வளவிலும் எம்பெருமான் பர்யாப்தி பெறுமல், நித்ய முக்தர்களுடையதான ஐச்வர்யத்தையும் தமக்கும் தம்மைச் சேர்ந்தவர்கட்கும் தருவதாக அவன் முயற்சி கொண்டிருக்கு மிருப்பை ஆழ்வார் கண்டு மிகவுமுகந்து, ‘நம்மோடுண்டான ஸம்பந்தமே ஹேதுவாக எம்பெருமான் இப்படி விஷயீகரிப்பவனு யிருக்கும்போது ஸம்ஸாரிகள் இழக்கலாமோ? அவர்களுக்கும் நம்மோடே ஒரு ஸம்பந்தத்தையுண்டாக்கி, அவனுடைய விஷயீகாரதத்திற்கு இலக்காக்குவோம்’ என்று பார்த்து, அந்த ஸம்ஸாரிகளுக்கு உபதேசம் செய்தருள இழிகிறார், இத்திருவாய்மொழியில். எம்பெருமானுடைய ஸர்வேச்வரத்வத்தை இதில் உபதேசிக்கிறதாகச் சில ஆசார்யர்கள் நிர்வஹிப்பர்கள். அவனுடைய மோக்ஷப்ரதத்வத்தை உபதேசிக்கிறதாக பட்டர் அருளிச் செய்யும் படி. இந்த நிர்வாஹ பேதத்தில் விசேஷமான வ்யத்யாஸம் யாதொன்றுமில்லை; ஸர்வேச்வரனுயிருந்தால்தான் மோக்ஷப்ரதனுக முடியும்; மோக்ஷப்ரதனுக்கே ஸர்வேச்வரத்வம் கூடும், ஆதலால் இவை யிரண்டும் ஒன்றையொன்று விட்டிராவாகையால், எங்ஙனே நிர்வஹித்தாலும் குறையில்லை. ஆனாலும் *திண்ணன் வீடு* என்கிற திருவாய்மொழியில் ஸர்வேச்வரத்வம் பிரதிபாதிக் கப்பட்டபடியால், இத்திருவாய்மொழியில் பிரதிபாதிக்கப்படுவது,



மோக்ஷ ப்ரதத்வமா யிருக்கவடுக்கும்—என்று போலும் பட்டர் திருவுள்ளம். *‘‘புணைவன் பிறவிக்கடல் நீந்துவார்க்கே’’ என்றும் *‘ வீடுமுதலாம்’’ என்றும் *‘‘நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர்’’ என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகளில் அதிக நோக்காக பட்டர் நிர்வஹிக் கும்படி யென்று கொள்க.

## 419. இரண்டாம்பத்தில் ஒன்பதாம் பதிகம்—எம்மாவிட்டு

புருஷார்த்த நிஷ்கர்ஷம் பண்ணுகிற திருவாய்மொழியாமிது. அதாவது, கீழ்த் திருவாய்மொழியில் ‘‘நலமந்தமில்லதோர் நாடு புகுவீர்’’ இத்யாதிகளாலே ஆழ்வார் திருநாட்டைப்பற்றி ப்ரஸ்தாவஞ் செய்தது கண்ட எம்பெருமான், ‘இவர்க்கு மோக்ஷத்திலே ருசியாகில் அதை இவர்க்குக் கொடுத்து விடுவோமே’ என்று திருவுள்ளம்பற்றி, ‘ஆழ்வீர்! நீர் அபேக்ஷிக்கிற மோக்ஷத்தைக் கொள்ளும்’ என்று அருளிச் செய்ய, அதுகண்ட ஆழ்வார், ‘எம்பெருமான் இங்ஙனே சொல்லிக் கொடுக்கிற மோக்ஷம் நமக்கு ஏதுக்கு? நம்முடைய அபேக்ஷிதத்தை நிறைவேற்ற வேணுமென்கிற திருவுள்ளத்தோடே அவன் தந்தருளும் மோக்ஷம் நமக்குப் புருஷார்த்தமாகுமோ? அவன்றன்னுடைய ருசிக்கீடாகக் கொடுத்தருளினுல் அது பாங்கேயல்லது நம்முடைய ருசிக்காகக் கொடுக்குமது நமக்கு நரகத்தோடொக்குமத்தனை’ என்று திருவுள்ளம் பற்றி, ‘பிரானே! நான் முக்தனுகி எல்லையிலின்பம் அநுபவிக்கவுமாம்; கைவல்யாநுபவத்தைப் பெறவுமாம்; ஆத்ம விநாசமே யாகவுமாம்; நரகாநுபவம் பண்ணவுமாம்; இவற்றில் எனக்கு ஒரு நிர்ப்பந்தமில்லை; உன்னுடைய ருசிக்கீடாக வருமதாகில் இவை யித்தனையும் வரவுமாம்; எனக்காக வருமதாகில் மோக்ஷமும் வேண்டா; ஆனபின்பு, தேவரீருடைய ருசிக்கு ஏற்றது எதுவோ, அதுவே எனக்கு ப்ராப்யமாம்படி பண்ணியருளவேணும்,’ என்கிருராயிற்று. ‘‘எம்பார் இத்திருவாய்மொழி அருளிச் செய்யப்புக்கால், இருந்தவர்களை யார் என்று கேட்டுக் கதவுகளையும் அடைப்பித்து, குஹ்யமாகவாம் அருளிச் செய்வது’’ என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தி யறிக. இத்திருவாய்மொழியின் ப்ரமேயத்திற்கு அதிகாரிகள் துர்லபர் என்று காட்டினபடி.

## 420. இரண்டாம் பத்தில் பத்தாம் பதிகம்—கிளரொளி

கீழ்த்திருவாய்மொழியில் நிஷ்கர்ஷிக்கப்பட்ட பேற்றைப் பெறுதற்குத் திருமாலிருஞ் சோலைமலையை ஆச்ரயிக்கிறுர் என்று எம்பெருமானார்க்கு முன்புள்ள முதலிகள் அருளிச் செய்யும்படி.

எம்பெருமானுர் அதை இன்னமும் இனிமைப்படுத்தியருளிச்செய்வர். அதாவது—கீழ்த்திருவாய்மொழியில் 'ஒல்லை, ஒல்லை' என்றும் 'காலக்கழிவு செய்யேல்' என்றும், பகவத் கைங்கரியத்திலே தமக்குண்டான பதற்றத்தை ஆழ்வார் வெளியிட, அதுகண்ட எம்பெருமான், ஆழ்வார் இப்படிப் பதறுவது இந்த சரீரத்தோடேயே கைங்கரியம் செய்யவேணுமென்கிற விருப்பத்தாலே போலும்' என்றெண்ணி, இவர்க்கு நாம் நினைத்தபடி பரிமாறுகைக்கு ஏகாந்தமான ஸ்தலம் ஏதோவென்று இந்நிலவுலகத்தில் கடாக்ஷித்து வருகையில், *வளரிளம்பொழில் சூழ்மாலிருஞ்சோலையைக் கண்டு, இது சாலவும் பாங்கான இடமாயிராநின்றது என்று திருவுள்ளம் பற்றி, அங்கே ஸந்நிதி பண்ணியருளி, 'ஆழ்வீர்! நாம் உமக்கு முகந்தருகைக்காக வந்து நின்றோம்; நீர் இங்கேவந்து நினைத்தபடியெல்லாம் பரிமாறி யநுபவிக்கலாம்' என்று தெற்குத் திருமலையிலே தானிருக்கிறபடியைக் கொடுக்க, ஆழ்வாரும் அதை அநுஸந்தித்து 'எம்பெருமான் நமக்கு உபேயனுனல் அவன் எழுந்தருளியிருக்குமிடமும் நமக்கு உபேயந்தானே; ஆகவே, திருமலையோடு அதனோடு சேர்ந்ததொரு மலையோடு, திருப்பதியோடு, போம்வழியோடு, போவோமென்கிற அத்யவஸாயத்தோடு வாசியற, எல்லாம் நமக்கு ப்ராப்யமே' என்று கொண்டு அநுபவித்து இனியராகிருர்—என்பதாக.

## 421. மூன்ரும்பத்தில் முதல் பதிகம்—முடிச்சோதியாய்

கீழ்த் திருவாய்மொழியைத் தலைக்கட்டுமிடத்தில் ஆழ்வார் "பொருளென்றிவ்வுலகம் படைத்தவன் புகழ்மேல் மருளில் வண் குருகூர் வண்சடகோபன்" என்று தம்மைப்பற்றிச் சொல்லிக் கொண்டார்; அஃதாவது எம்பெருமான் விஷயத்தில் தமக்கு அஜ்ஞானம் ஒன்றுமில்லை யென்பதாகச் சொல்லிக் கொண்டார். இப்போது பாசுரம் தொடங்கும்போதே தமக்கு ஒரு அஜ்ஞானம் உள்ளதென்று காட்டுகிருர். அஜ்ஞானம் நான்கு வகைப்படும்;—ஒரு வஸ்துவைப்பற்றி அடியோடு தெரிந்து கொள்ளாமையும், நிச்சயமாகத் தெரிந்துகொள்ளாமல் ஸந்தேஹமாகத் தெரிந்து கொள்ளுதலும், விபரீதமாகவே நிச்சயித்துத் தெரிந்துகொள்ளுதலும், உள்ளபடி தெரிந்து கொண்டதை மறந்துபோதலும்—ஆக நால்வகைப்பட்ட அஜ்ஞானங்களுள் ஸந்தேஹரூபமான அஜ்ஞானம் தமக்குளதென்பதை இங்குக் காட்டிக் கொள்கிருராழ்வார். கீழே தமக்கு மருள் இல்லையென்று சொல்லிவிட்டு இப்போது மருள் உள்ளதாகச் சொல்லுவது பொருந்துமோ எனின்; நம்போல்வார்க்குக் கருமம் காரணமாக வுண்டாகின்ற மருள் ஆழ்வார் தமக்கு இல்லை என்றதத்தனையொழிய, விஷய வைலக்ஷண்யத்தால் வருகிற



அஜ்ஞானமும் இல்லையென்றதன்று. எம்பெருமானுடைய வடிவழகிலே யீடுபட்டு "பிரானே! உனது முகச்சோதியே முடிச்சோதியாய் மலர்ந்ததுவோ? திருவடியின் சோதியே நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ?' என்று கேட்பதற்குறுப்பான ஸந்தேஹம் ஆழ்வார்க்கு விளைந்ததென்ருல் இந்த அஜ்ஞானம் புருஷார்த்த கோடியில் சேருவதாகுமன்றோ. "ஜ்ஞான விபாக கார்யமான அஜ்ஞானத்தாலே வருமவை யெல்லாம் அடிக்கழஞ்சு பெறும்" என்கிற ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தியுங் காண்க. நம்முடைய அஜ்ஞானம்போலன்றிக்கே இப்படி மிகவும் விலக்ஷணமான அஜ்ஞானம் ஆழ்வார்களுக்கு உண்டாவதே அவர்களுடைய சிறப்புக்குக் காரணமாக நிற்கும். விலக்ஷண விஷயத்திலே கலக்கங்கொள்ளாதே தெளிந்தே நிற்பர்களாகில் அவர்களுக்கொரு ஏற்றமில்லை யாகுமே. கீழ்த்திருவாய்மொழியில் திருமாலிருஞ்சோலைமலையை அனுபவித்த ஆழ்வார் அந்தத் திருமலையில் ஏகதேசமென்னலாம்படியாய், கருபகத்தரு கப்புங்கிளையுமாகப் பணைத்துப் பூத்தாற்போலே நிற்பவரான அழகருடைய வடிவழகை யனுபவித்து, வேதங்களும் வைதிகர்களும் ப்ரஹ்மருத்ராதி தேவர்களுங்கூட நிலையிடமாட்டாதபடி யிருக்கிற விருப்பை அநுஸந்தித்து இனியராகிருர் இத்திருவாய்மொழியில்.

## 422. மூன்ரும்பத்தில் இரண்டாம்பதிகம்— முந்நீர் ஞாலம்படைத்த

மிக்க தாஹங்கொண்டவன், நல்ல தீர்த்தம் ஸமீபித்திருக்கச் செய்தே வாய்மூடிக்கிடந்தால் துடிக்குமாபோலே, ஆழ்வாரும், தமக்குப் பரமபோக்யமான விஷயம் ஸமீபித்ததாய்த் தமக்கு ஆசையும் மிக்கிருக்கச்செய்தே, விஷயத்தின் பெருமையாலே அது தம்மால் அநுபவிக்க அஸாத்யமாகவே, 'ப்ரக்ருதி ஸம்பந்தம் காரணமாக நம்முடைய கரணங்கள் ஸங்குசிதங்களாயிருக்கையாலன்றோ பகவத் விஷயத்தை நாம் பரிபூர்ணமாக அநுபவிக்க முடியாமல் துவள்கிறோம்' என்று கொண்டு வருத்தமுற்றவராய், 'எம்பெருமான் விசாலமான திருவுள்ளங் கொண்டு செய்தருளின கரணகளேபர ப்ரதானமும், ஜகத்தில் அப்பெருமான் பண்ணின பலபல திருவவதாரங்களும் என்னளவில் பயன்படவில்லையே! நான் ப்ரக்ருதி ஸம்பந்தம் கழிந்து எம்பெருமானைப் பெற்று முற்றூட்டாக அநுபவித்து ஆனந்திக்க அவகாசமில்லை யாகிறதே!' என்று நினைந்து நைந்து உள் கரைந்துருகி யிருக்க, அவ்வளவிலே எம்பெருமான், அவதாரங்களுக்குப் பிற்பட்டவர்களும் இழக்க வேண்டாதபடி நான் திருவேங்கட மலையில் நின்றருளினபடியைக் காட்டி ஆழ்வாரை ஒருவாறு ஸமாதானப்படுத்தத் திருவுள்ளங்

கொண்டு, 'ஆழ்வீர்! நீர் ஏன் துவள்கின்றீர்? நம்மைப் பூர்ணமாக அநுபவிக்க முடியாமைக்குக் காரணம் கரணஸங்கோசமென்று நீர் நினைக்கின்றீர்போலும்; அங்ஙனம் நினைக்கவேண்டா; கரண ஸங்கோசமில்லாதவர்களான அமரர்களும் நம்மை அநுபவிக்கு மிடத்து, அவர்களும் உம்மைப் போலவேயன்றோ துவள்வது; விஷயம் அளவிடமுடியாததாகையாலே பரிபூர்ணாநுபவம் செய்ய முடியவில்லையே யென்கிற தளர்ச்சி உம்மோடு அமரர்களோடு வாசியற அனைவர்க்கும் பொதுவானதே காணும்; அது பற்றி நீர் தளரவேண்டா; நீர் நினைத்தபடியெல்லாம் நம்மோடு பரிமாறலாம்படி நாம் வடக்குத் திருமலையிலே நின்ற நிலையில் கிட்டி யநுபவித்து மகிழ்வீர் என்ன; ஆழ்வாரும் ஒருவாறு ஸமாதான மடைந்தவராய் இனிமையோடே தலைக்கட்டுகிறார். (பத்தாம் பாட்டில் இனிமை காணத்தக்கது.)

## 423. மூன்றாம்பத்தில் மூன்றாம் பதிகம்—ஒழிவில்காலம்

'எம்பெருமானே! உன்னையநுபவிப்பதற்கு இடையூறான பிரகிருதியைப் போக்கித்தரவேணும்' என்று கீழ்த்திருவாய்மொழியில் பிரார்த்தித்த ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் 'ஆழ்வீர்' நம்மோடு பரிமாறுவதற்கு அந்தப் பிரகிருதி உமக்கு இடையூறன்று காணும்; அநுகூலமேயாகும். இந்தப் பிரகிருதியோடே கூட உம்மை அடிமைகொள்ள வேணுமென்று விரும்பியன்றோ நாம் திருமலையிலே நிற்கிறது; நீர் இங்கேறப் போந்து அடிமைசெய்து வாழலாமே' என்று தான் திருவேங்கடமலையில் நின்றருளுகிற படியைக் காட்டியருளக்கண்டு ஸமாதானமடைந்தவராய் அத்திரு மலையப்பன் திருவடிகளிலே எப்பேர்ப்பட்ட வடிமைகளுஞ் செய்ய வேணுமென்று பாரிக்கிறார் இத்திருவாய்மொழியில்.

## 424. மூன்றாம்பத்தில் நான்காம் பதிகம்—புகழுநல்

கீழ்த்திருவாய்மொழியில் "ஒழிவில் காலமெல்லாமுடனாய்மன்னி வழுவிலா வடிமை செய்யவேண்டு நாம்" என்று எம்பெருமானுக்கு ஸர்வதேச ஸர்வ கால ஸர்வாவஸ்தைகளிலும் ஸகலவிதமான கைங்கர்யங்களையும் செய்யப்பெற வேணுமென்று மநோரதங் கொண்ட ஆழ்வாருடைய பாரிப்பைக்கண்ட எம்பெருமான் ஆழ்வார்க்குத் தான் அவர் விருப்பத்தின்படியே செய்வதற்கு அநுகூலமாக எல்லாப் பொருள்களிலும் பிரவேசித்து எங்கும் நிற்கிற நிலையைக் காட்டிக் கொடுத்தான். அதுகண்ட ஆழ்வார், பெருங்காற்றில் வீழ்ந்த பழங்களைப் பொறுக்கி யெடுத்துக் கொள்ளக் கருதுமவர்கள் 'அந்தப் பழத்தை எடுப்போமா? இந்தப்



பழத்தை யெடுப்போமா?' என்று அலமந்து கிடப்பதுபோல், அத்தைச் சொல்லுவேனோ? இத்தைச் சொல்லுவேனோ? என்று அலமந்து, எங்கும் எல்லாவகைப் பொருளாயும் தோன்றுகின்ற அப்பெருமானுக்கு வாசிகமான கைங்கர்யத்தைச் செய்ய நினைத்து 'ஸகல கல்யாண குணங்களுக்கும் கடலான அவ்வெம்பெருமானுடைய தன்மையை யான் என்னவென்று சொல்லுவேன்?' என்று நிர்வேதத்துடனே அவனது ஸர்வாத்மத்வத்தைப் பேசுகிறார் இத்திருவாய்மொழியில்.

## 425. மூன்றாம்பத்தில் ஐந்தாம் பதிகம்—பொய்ம்மாம் பூம்பொழில்

ஆழ்வார் கீழ்த்திருவாய்மொழியில் எம்பெருமானை மிகவும் அற்புதமாக அநுபவித்தார். அந்த அநுபவத்தினால் அபரிமிதமான ஆனந்தத்தை யடைந்தார். திருவுள்ளத்திலுண்டான ஆனந்தம் வடிவிலே தொடை கொண்டது; அதனால் ஆடுவதும் பாடுவது மாகத்தாம் ஆயினர்; இந்நிலவுலகத்திலே இங்ஙனே பகவத் குணங்களில் ஈடுபட்டுக் களித்துப் பரவச சரீரர்களாக இருப்பவர்கள் எத்தனை பேருண்டு? என்று ஆராயத் தொடங்கினர்; அன்னவர் மிகச் சிறுபான்மையராய், பகவத் குணங்களில் ஈடுபடாத பாவிகளே பெரும்பான்மையராய் இருப்பதைக் கண்டு திருவுள்ளம் மிக நொந்து, ஈடுபாடுடையாரைக் கொண்டாடியும் அஃது இல்லாதாரை நிந்தித்தும் செல்லுகிறார் இத்திருவாய்மொழியில். எம்பெருமானுடைய குணாநுபவம் விஞ்சினால், நின்றவிடத்தில் நிற்க முடியாமல் ஆடுவதும் பாடுவதுமான நிலைமை பரவசமாக உண்டாகியே தீரும். முக்தர்களும் திருநாட்டில் களித்துப்பாடுவர்களென்றது. நாரதமுனிவர் முதலானோரும் பகவத் ஸந்நிதியிலே வந்தவாறே ஆடுவது பாடுவதாக நிற்பர்களென்று சொல்லப்பட்டுளது. இதுவன்றோ நம்முடைய கரசரணாதி அவயவங்களுக்குப் பயன். இப்பயன்பெறாத பாவிகளைப் பழிப்பதும் இது பெற்ற பெரியாரைப் புகழ்வதும் பகவதநுபவத்திலே ஒருவகையாதலால் அவை இத்திருவாய்மொழியிற் செல்லுகின்றன.

## 426. மூன்றாம்பத்தில் ஆறாம் பதிகம்—செய்யதாமரை

கீழ்த்திருவாய்மொழியில், எம்பெருமானுடைய குணசேஷ்டிதங்களை நினைந்து கரைந்துருகி, நின்றவிடத்தில் நிற்கமாட்டாமே நர்த்தனம் முதலியன செய்து இதுவே போதுபோக்காக இருக்கும் மஹான்களைக் கொண்டாடியும், இந்நிலைக்கு மாறாக இருக்கின்றவர்களை நிந்தித்தும் பேசினார். அங்ஙனம் தம்மால் நிந்திக்கப்பட்ட பாபிகளையும் கைவிடமாட்டாத மிக்க கருணை வாய்ந்தவரன்றோ

ஆழ்வார். அக்கருணையினாலே அந்தப் பாபிகளையும் வழிப்படுத்துக் கொள்ளவேணுமென்று திருவுள்ளம்பற்றி, அன்னவர்களுடைய கல்நெஞ்சிலும் நன்கு பதியுமாறு எம்பெருமானுடைய சிறந்த திருக்குணங்களை எடுத்துக்கூற விரும்பிய ஆழ்வார் இத்திருவாய் மொழியில் அப்பெருமானது ஸௌலப்பிய குணத்தை யெடுத் துரைக்கின்றார். முதற்பத்தில் *பத்துடையடியவர்க்கெளியவன் என்ற திருவாய்மொழியிலும் எம்பெருமானுடைய ஸௌலப்யகுணம் பேசப்பட்டிருந்தாலும் இப்போது இங்குப் பேசும் ஸௌலப்ய குணம் அதனிலும் விலக்ஷணமானது. அங்குச் சொன்னது விபவாவதார ஸௌலப்யம்; இங்குச் சொல்வது அர்ச்சாவதார ஸௌலப்யம்; இந்த வாசியை மணவாளமாமுனிகளும் நூற்றந்தாதியில் விளக்கி யுள்ளார்; "பத்துடையோர்க்கென்றும் பரனெளியனும் பிறப்பால்" என்றதையும், "செய்ய பரத்துவமாய்...இந்நிலத்தில் அர்ச்சாவதார மெளிதென்றான்" என்றதையும் நோக்குக. இப்பதிகத்திற்கு உயிரான பாசுரம் "தஞ்சமாகிய தந்தைதாயொடு" என்பதாம். அர்ச்சாவதார வெளிமையை நிரூபிக்கும் பாசுரம் அதுவேயாம்.

## 427. மூன்றும் பத்தில் ஏழாம் பதிகம்—பயிலுஞ்சுடரொளி

கீழ்த்திருவாய்மொழியில் அர்ச்சாவதார ஸௌலப்யத்தை அருளிச் செய்தவிடத்திலும் நெஞ்சில் நிகழ்ச்சியின்றியே விஷயப் ரவணராயிருக்கின்ற ஸம்ஸாரிகளின் இயல்வைக்கண்டு வெறுத்து அவ் வெறுப்புக்குப் பரிஹாரமாகத் தாம் ஒரு மஹாநந்தத்தை அநுபவிக்க விரும்பி ஸ்வஸ்வரூப காஷ்டையான பாகவத சேஷத் வத்தை அநுஸந்தித்து அம்முகத்தாலே தாம் இனியராகிறார். ஒருவன் ஒரு வஸ்துவினிடத்தில் அன்பு வைத்தால் அவ்வன்பு அளவற்றதுமாயிருந்தால் அஃது அவ்வஸ்துவோடே நின்று விடாமல் அதனோடு ஸம்பந்த ஸம்பந்தம்பெற்ற வஸ்துக்களிலும் பெருகிச் செல்லுமென்பதை அனைவரும் தம்தம் அநுபவத் தாலறிவர். அப்படியே பகவத் பக்தியென்பது பகவத் பக்தியின் எல்லை நிலமாக உண்டாமது. பகவத் பக்தியின் உறைப்பையே பாகவத பக்தி வெளிப்படுத்தும். ஸ்வாமியினுடைய பாதுகை களிலே நாம் ஆதரம் வைத்து அவற்றைக் கண்களில் ஒற்றிக் கொள்வதும் தலைமீது அணிந்து கொள்வதும் அலம்பித் தீர்த்தம் பருகுவதும் செய்கிறோம்; இதனால் நமக்கு ஸ்வாமியிடத்திலுள்ள பக்தி அபாரமானது என்பதன்றோ வெளியாகின்றது. அதுபோலவே இங்கும் "அடியாரடியார் தம்மடியாரடியார் தமக்கடியாரடியார்தம் அடியாரடியோங்களே" இத்யாதிகளால் பாகவத சேஷத்வாதி சயத்தைப் பேசுவதெல்லாம் பகவச்சேஷத்வத்தின் உறைப்பையே பேசினபடியாகும்.



## 428. மூன்றும்பத்தில் எட்டாம் பதிகம்—முடியானே.

கீழ் ஆறுந்திருவாய்மொழியான *செய்யதாமரைக் கண்ணனில் "அன்று தேர்கடவிய பெருமான் கனைகழல் காண்பதென்றுகொல் கண்களே" என்று பகவத் விஷயத்திலே தமக்கு உண்டான விடாயை வெளியிட்ட ஆழ்வார்க்கு எம்பெருமான் ஸ்ரீவைஷ்ண வர்களைக் காட்டிக் கொடுத்து ஒருவாறு ஸமாதானம் பண்ணினபடி கீழ்த்திருவாய்மொழியில் சொல்லிற்று. அதில் ஸ்ரீவைஷ்ணவர்களை அநுபவித்துப் போந்த ஆழ்வார் அவர்களுகந்த விஷயமான பகவத் விஷயத்தின் சீர்மையையும் பாசுரந்தோறும் முன்னடிகளால் அநுபவித்து வந்தாராகையாலே அவ்வநுபவம் பழைய விடாயை அதிகரிக்கச் செய்தது. "என்று கொல் கண்கள் காண்பதுவே" என்னும்படி கண்களுக்கு மாத்திரம் உண்டாகியிருந்த விடாய் மற்றையிந்திரியங்க ளெல்லாவற்றுக்குமாயிற்று. அதுதானும் ஒரு விலக்ஷணமான படியிலே யாயிற்று. அதாவது என் னென்னில்; ஒரு இந்திரியத்தினுடைய வ்ருத்தியை மற்றோரிந் திரியம் ஆசைப்படும்படியாயும் நேர்ந்து, தம்மிலும் விடாய்த்த கரணங்களும் கரணங்களில் காட்டிலும் விடாய்த்த தாமுமாய் இப்படியொரு விலக்ஷணமான நிலைமையைப் பெறும்படியாயிற்று. பஹுகுடும்பியான வொருவன் க்ஷாமகாலத்திலே தன்பசிக்கு ஆற்றமாட்டாதே மக்கள் பசிக்கு ஆற்றமாட்டாதே அவற்றின் வாயில் சோற்றைத்தான் பறித்து உண்பது, தன் வாயில் சோற்றை அவை பறித்துண்பதாய் 'என் பசிக்கு என் செய்வேன்? என் மக்கள் பசிக்கு என் செய்வேன்' என்னுமாபோலே தாமும் தம்முடைய கரணக்ராமமுமாக நோவுபட்டுக் கூப்பிடுகிறபடியை இத்திருவாய்மொழி பேசுகின்றது. இப்பதிகத்தினால் ஆழ்வாருடைய பக்தி பரமவிலக்ஷணம் என்பது பெறப்படும்.

## 429. மூன்றும்பத்தில் ஒன்பதாம் பதிகம்—சொன்னால் விரோதம்

ஆழ்வார் சில ஸமயங்களில் தம்முடைய இழவுக்கு வருந்துவர்; சில ஸமயங்களில் ஸம்ஸாரிகளின் இழவுக்கு வருந்துவர். கீழ்த் திருவாய்மொழியில் தம்முடைய கிலேசங்களுக்குக் கதறினார்; இத்திருவாய்மொழியில் ஸம்ஸாரிகளின் கிலேசங்களுக்குக் கதறு கிறார். கவி பாடும்படியான திறமையைப் பெற்று வைத்து அந்தத் திறமையைப் பகவத் விஷயத்திலே செலுத்தாமல் க்ஷுத்ர பலன்களை விரும்பி அற்ப மனிதர் விஷயத்திலே செலுத்தி 'நரஸ்துதி செய்ப வர்கள்' என்று இழிவான பெயரைப்பெற்று உலாவுவாரைக்கண்டு வருந்தி, அவர்களையும் உபதேசத்தாலே திருத்தி பகவத்

விஷயத்தில் கவி பாடுகின்றவர்களாக ஆக்கி உய்விப்பான் வேண்டி அவர்களை விளித்து 'இப்படி நீங்கள் உங்களது வாக்கை நிஹீந விஷயங்களில் உபயோகித்து அதோகதியடைவது தகுதியன்று; உயர்வற வுயர்நல முடையவனான எம்பெருமான் விஷயத்திலே உங்கள் கவன சாதுரியத்தைச் செலுத்துவதே நன்று'—என்று உபதேசித்தருளுகிறார் இத்திருவாய்மொழியில். உலகத்தில் ஜ்ஞாதாக்களாக இருப்பது அரிது; அது வாய்த்தாலும் கவிபாடும்படியான ஸாமர்த்தியம் பெறுவது மிகவும் அரிது. அந்த ஸாமர்த்தியம் பெற்றவர்கள் வகுத்த விஷயத்தில் தங்கள் வாக்கை விநியோகப்படுத்தாமல் க்ஷுத்ர நரஸ்துதிகளிலே விநியோகிப்பது மிகவும் அருவருக்கத்தக்கதாகும். வடமொழியில் ப்ரதாப ருத்ரீயம் என்கிற ஒரு க்ரந்தம் மிகவும் ப்ரஸித்தமானது. இதை இயற்றிய கவியின் பாண்டித்யமும் கவித்திறமும் மிக வியக்கத்தக்கதே. ஆயினும் இந்த க்ரந்தம் எம்பெருமானுடைய குண கீர்த்தனத்தில் அமைந்திருந்தால் அழகிதாயிருக்கும். அங்ஙனன்றியே, அல்ப ப்ரயோஜனத்தைக் கணிசித்து ஒரு க்ஷுத்ர ப்ரபுவை விஷயீகரித்து இந்த நூல் பிறந்ததாதலால் பகவத் பக்தர்கள் ஜுகுப்ஸைப்படும்படியாகவுள்ளது. இப்படிப்பட்ட வெறுக்கத்தக்க க்ரந்தங்கள் உலகிற் பலபலவுள்ளன. இத்தகைய நூல்களை இயற்றும் கவிகள் பக்கலில் ஆழ்வாருக்குண்டாகும் சீற்றம் அபாரம். ஆழ்வார், தம்முடைய திருவாக்கு பகவத் விஷயத்திலே உபயோகப்படுகின்றவளவுக்கு உகந்து, மற்றையோர் எக்கேடு கெட்டாலும் அதைப் பற்றிச் சிந்தியாமல் "ஆரானுமாதானுஞ் செய்ய, அகலிடத்தை ஆராய்ந்து அது திருத்தலாவதே!" என்று பெரிய திருவந்தாதியில் தாமே அருளிச்செய்தபடி ஸம்ஸாரிகளைப் பற்றிக் கவலை கொள்ளாமல் இருக்கலாம்; அப்படியிருக்கும் ப்ரக்ருதியன்று ஆழ்வாரது. ஆகவே நரஸ்துதி செய்து கவி பாடும் கவிகளை நோக்கி உபதேசிக்கிறார் இப்பதிகத்தில்.

## 430. மூன்றாம்பத்தில் பத்தாம் பதிகம்—சன்மம் பலபல

கீழ்த் திருவாய்மொழியில்—துதிப்பதற்கு வாய்த்த ஸ்வரூப ரூபகுண விபூதி சேஷ்டிதங்களையுடையனான எம்பெருமானைத் துதிப்பது தவிர்ந்து க்ஷுத்ரநரஸ்துதிகளிலே வாய்செலுத்தித் திரியுமவர்களை உபதேசத்தாலே திருத்தப் பார்த்தும் அவர்கள் திருந்தக்காணாமையாலே, இவர்களைப்போலே நாமும் நர ஸ்துதியிலே யிழிந்து அநர்த்தப்படாதிருக்கப் பெற்றோமே! என்று தம் உகப்போடே தலைக்கட்டினார். அந்தவுகப்பே விசேஷித்துப் பெருகுகிறது இத்திருவாய்மொழியில். நரஸ்துதிகளிலே செல்லப்பெறாத



மாத்திரமே யன்றியே எம்பெருமான் விஷயத்திலே பரிபூர்ணமாக அவகாஹித்துத் தாம் அநுபவிக்கப்பெற்ற பரிசைப் பரக்கப்பேசி, குறை முட்டு பரிவு இடர் துயர் துன்பம் அல்லல் துக்கம் தளர்வு கேடு ஒன்றும் தமக்கில்லாமையை உள்குழைந்து பேசுகிறார்.

## 431. நான்காம்பத்தில் முதல் பதிகம்—ஒருநாயகம்

கீழ் மூன்றாம்பத்தின் முடிந்த திருவாய்மொழி ஆழ்வார்க்கு அளவு கடந்த ஆனந்தமயமாய்ச் சென்றது. தமக்கு யாதொரு குறையுமில்லை யென்பதைப் பன்னிப் பன்னிப் பகர்ந்தருளினார். மற்றுமுள்ள ஸம்ஸாரிகளையும் தம்மைப் போலவே குறையற்றவர்களாக ஆக்குவதில் மிக்க குதூஹலமுடையரான ஆழ்வார் அவர்களையும் திருத்திப் பணிகொள்ள விரும்பி உபதேசம் செய்யப் புகுகிறார் இத்திருவாய்மொழியில். ஒவ்வொரு பத்திலும் பரோபதேச ரூபமாக ஒவ்வொரு திருவாய்மொழி அவதரிக்கும். முதற் பத்திலே *வீடுமின் முற்றவும்* என்கிற திருவாய்மொழியும், இரண்டாம் பத்தில் *அணைவதரவணைமேல்* என்கிற திருவாய்மொழியும், மூன்றாம்பத்தில் *செய்யதாமரைக் கண்ணன், *சொன்னால் விரோதமிது* என்கிற திருவாய்மொழிகளும் போலே இந்த நான்காம்பத்தில் இத்திருவாய்மொழி உபதேசபரமாய்ச் செல்லாநின்றது. *சொன்னால் விரோதத்தில் அற்பர்களான மனிதர்களைத் துதிப்பது பெருங்கேடு என்று உபதேசித்தார். உலகில் பலர் நரஸ்துதி செய்யப்புகுவது சில பிரயோஜனங்களுக்காகவாதலால் அந்த ப்ரயோஜனங்கள் அற்பமாயும் அஸ்திரமாயுமிருக்கும்படியை நன்கு எடுத்துக்காட்டவே அவிவேகிகளும் உணர்ந்து திருந்தக்கூடும் என்று பார்த்து, பகவத் ப்ராப்தி தவிர மற்ற ப்ரயோஜனங்கள் யாவும் அல்பத்வம் அஸ்திரத்வம் முதலிய தோஷங்களினால் துஷ்டங்களாயிருக்குமாற்றை விரித்துரைக்கின்றார் இத்திருவாய்மொழியில்.

## 432. நான்காம்பத்தில் இரண்டாம் பதிகம்—பாலனாய்

கீழ் மூன்றாம்பத்தில் *முடியானே யென்னும் திருவாய்மொழியில் ஆழ்வார்க்கு உண்டான அவஸ்தை ப்ராஸங்கிகமான மூன்று திருவாய்மொழிகளாலே ஒருவாறு தலை மடிந்து கிடந்தது. இப்போது அது தலையெடுத்து நிற்கின்றது. ஸ்ரீவிபீஷணாழ்வான் ராவணனுக்குச் சொன்னஹிதம் அவனுக்கு உபயோகப்படாமல் தனக்குப் பெருமாளைப் பற்றுகைக்கு உறுப்பானாற்போலவும்,

ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் இரணியனுக்குச் சொன்னஹிதம் அவனது நெஞ்சிற்படாதே தனக்கு பகவத் பக்தி மிகுதற்கு உறுப்பானுப் போலவும் ஆழ்வார் செய்தருளும் பரோபதேசங்கள் பிறர்க்கு உறுப்பன்றிக்கே தமக்கு எம்பெருமான் பக்கலிலே அபிநிவேசம் மீதூர்ந்து செல்வதற்கே ஹேதுவாயிற்று. ஆகவே என்றைக்கோ கழிந்துபோன எம்பெருமான்படிகளை அக்காலத்திற்போலவே இன்று அனுபவிக்கப்பெறவேணும் என்கிற விடாய் பிறந்தது; ஆசைப்பட்டபடியே கிடையாமையாலே, எம்பெருமானேடு கலந்து பிரிந்தாளொரு பிராட்டியின் நிலைமையை யடைந்து தான் மோஹித்துக் கிடக்க, அவள்படியை அநுஸந்தித்த திருத்தாயார் பெண்பிள்ளையின் நிலைமையைப் பேசுகிற முகத்தாலே தமது தசையை வெளியிடுவதாய்ச் செல்லுகிறது இத்திருவாய்மொழி.

## 433. நான்காம்பத்தில் மூன்ரும் பதகம்—கோவைவாயாள்

கீழ்த்திருவாய்மொழியில் ஆழ்வார் ஆசைப்பட்டபடியே எல்லாம் பெறும்படி எம்பெருமான் இவரோடே கலந்து, தன்னுடைய பரம ப்ரணயித்வத்தை வெளியிட்டுக் கொண்டான்; அது கண்டு மிகவும் உவந்த ஆழ்வார் அந்த பிரணயித்வ குணத்தை இத்திருவாய் மொழியிலே பேசுகிருர். இத்திருவாய்மொழியை நம் பூருவாசாரி யர்கள் மூன்றுபடியாக நிர்வஹிப்பர்கள். 1. சந்திரனைப் பிடித்துத் தரவேணுமென்று அழுகின்ற குழந்தைக்குத் தேங்காயைக் கொடுத்து அழுகையை மாற்றுவதுண்டே; அதுபோல, கீழ்த் திருவாய்மொழியில் தேசகால விப்ரக்ருஷ்டங்களைப் பெறவேணு மென்று ஆசைப்பட்ட ஆழ்வார்க்கு எம்பெருமான் ஒரு குணநுப வத்தைப் பண்ணிவைக்க அத்தாலே, கீழ்ப் பிறந்த இழவை யெல்லாம் மறந்து அந்த குணத்தையே அனுபவிக்கிருர் என்று எம்பார் அருளிச் செய்யும்படி. 2. காலத்தால் தேசத்தால் கை கழிந்தவற்றை யநுபவிக்க ஆசைப்பட்ட ஆழ்வாருடைய திருமுக மண்டலத்தை நோக்கி எம்பெருமான் 'ஆழ்வீர்! நீர் அபேக்ஷித்த படியே செய்யக்கடவோம்'' என்று ஒரு வார்த்தை சொல்ல, அது கேட்டுக் களித்துக் கீழிழவை மறந்து க்ருதார்த்தராகிருர்—என்று திருமலைநம்பி அருளிச் செய்யும்படி. 3. எம்பெருமான், ஆழ்வார் அபேக்ஷித்தபடியே செய்து தலைக்கட்ட வல்லவனுகையாலே, (அதாவது) தானிட்ட வழக்காம்படி காலநிர்வாஹகனுகையாலே, காலோபாதியைக் கழித்து, அதீதகாலத்திற் போகங்களையும் நிகழ் காலத்திற்போலே ஒரு போகியாக்கிக் கொடுக்க அவற்றை யநுபவித்து மகிழ்கிருர்—என்று பட்டர் அருளிச் செய்யும்படி. அபேக்ஷித்த போகங்களைத் தாராமல் ஏதோவொரு குணத்தை



யநுபவிப்பிக்க அதனுலே களித்துப் பேசுகிருரென்பது, எம்பா ருடைய நிர்வாஹம். அபேக்ஷித்த போகங்களைத் தாராவிட்டாலும் தருவதாக முகம் நோக்கி வாயினுற் சொல்லி மாகிழ்வித்தானெம் பெருமான் என்பது, திருமலை நம்பியின் நிர்வாஹம். அபேக்ஷித்த படியே அநுபவிப்பித்தருளினுனென்பது, பட்டருடைய நிர்வாஹம். இங்ஙனே மூன்றுபடியாகவும் நிர்வஹிக்க ஔசித்யமுண்டு என்று தெரிவித்தவாறு.

## 434. நான்காம்பத்தில் நான்காம் பதிகம்—மண்ணையிருந்துதுழாவி

ஆழ்வாருடைய பரம வைஷ்ணவத்வத்தை வெளியிடுவதாயிற்று இத்திருவாய்மொழி. எம்பெருமானுடைய ஸம்பந்தம் பெற்ற பொருள்களையும் எம்பெருமானுக்குப் போலியான பொருள்களையுங் கண்டு அப்பெருமான்றன்னையே கண்டதாகக் கொண்டு களிக் கையே பரம வைஷ்ணவத்வமாகும். அந்த நிலைமையே ஆழ்வார்க்கு இத்திருவாய்மொழியில் உண்டாயது. கீழ்த்திருவாய்மொழியில் எம்பெருமானுடைய ப்ரணயித்வகுணத்தைப் பேசிப் பரமானந்தம் பொலிய நின்ருராழ்வார்; அந்த நிலைமையைக் கண்ட எம்பெருமான் அந்த ரஸத்தை அரையாறுபடுத்தி ஸாத்மிப்பிக்கைக்காக அந்த ஸம்ச்லேஷத்தைச் சிறிது குறைத்து நின்ருன்; அதனுல் ஆழ்வார்க்கு ஆற்ருமை மீதூர்ந்தது. பணமுடிப்பைப் போக்கடித் தாளுெருவன் அத்தோடு போலியான முடிப்புகளெல்லாவற்றையும் அவிழ்த்தவிழ்த்துப் பார்க்குமாபோலே அவனேடொத்த பதார்த் தங்களையும் அவனேடு ஸம்பந்தமுள்ள பதார்த்தங்களையுமெல்லாம் அவனாகக் கொண்டு ப்ரமித்துக் கிட்டிப் பார்த்துப் பிச்சேறுகிற படியாய்ச் செல்லுகிறது இத்திருவாய்மொழி. இது தாய் பாசுர மாகச் செல்லும் பதிகம்.

## 435. நான்காம்பத்தில் ஐந்தாம் பதிகம்—வீற்றிருந்தேழுலகும்

கீழ்த்திருவாய்மொழி பெருவிடாயோடே சென்றது. இங்ஙனே ஆழ்வார் விடாய்க்க வேணுமென்பதுதானே எம்பெருமானுடைய திருவுள்ளம்! சோறு உண்பதற்குப் பசி உபகரணமாப்போலே எம்பெருமானை யநுபவிப்பதற்கு அளவுகடந்த ஆசையன்ரே உப கரணமாவது. அந்த ஆசை யுண்டாலுலன்றித் தன்னுடைய பரிபூர்ணநுபவத்தைத் தந்தருள எம்பெருமான் திருவுள்ளம் பற்று வதில்லை. அத்தகைய ஆசை *முனியே நான்முகனில் உண்டா கின்றது. "முடிந்த அவா'' என்பது அங்குத்தான். அதற்குக்

கீழுள்ளதெல்லாம் அந்த அளவுக்குப் பண்ணுகிற க்ருஷியா யிருக்கும். எம்பெருமான் இடையிடையே வந்து காட்சிதாரா தொழியில் ஆழ்வாரை இழக்க நேருமே. "தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்னும்படி பகவத் குணரஸிகர் களுக்குத் தண்ணீர் பந்தல் வைக்கைக்காகவன்றோ ஆழ்வாரை இங்கு வைத்திருப்பது. ஸம்ச்லேஷ விச்லேஷங்கள் மாறிமாறி நடந்தாலல்லது எம்பெருமானுடைய திருவுள்ளம் நிறைவேற வழி யில்லை; நம் போலியர்களின் பாக்கியமும் பரிபக்குவமாக வழி யில்லை. இத்திருவாய்மொழியில் ஆழ்வார்க்குச் செல்லுகிற ஆனந்தம் பேச்சுக்கு நிலமன்று. "இனி யென்னகுறை யெழுமையுமே?" என்றும் "இனியாவர் நிகரகல் வானத்தே" என்றும் மார்புதட்டிப் பேசலாம்படி யாக்கியருளினன் எம்பெருமான். இத்திருவாய் மொழியின் அமைப்பை நோக்குமிடத்து இதற்கு மேற்பட்ட பரிபூர்ணநுபவம் வேறில்லையென்றே சொல்லலாம்படியிராநின்றது. ஆனதுபற்றியே இத்திருவாய்மொழி *சூழ்விசும்பணி முகிலுக்கு அடுத்த திருவாய்மொழியாக இருந்திருக்கலாம் என்று நஞ்சீயர் ரஸோக்தியாக அருளிச்செய்வராம். கீழ்த்திருவாய்மொழியில் போலி கண்டு ப்ரமித்து மயங்கி ஆற்றாமை மீதூர்ந்த ஆழ்வாருக்கு எம்பெருமான் உபயவிபூதி நாதனாயிருக்கிற தன் படிகளில் ஒன்றுங் குறையாதபடி முற்றூட்டாகக் காட்டிக்கொடுத்து "ஆழ்வீர்! நம்முடைய படிகளெல்லாங் கண்டீரே; நமது இந்த ஐச்வர்ய மெல்லாம் நிறம்பெற்றதாவது உம்முடைய திருவாக்காலே ஒழுங்கு படப் பாடினாலாயிற்று. ஆகவே பாடிக் காணீர்" என்று சொல்லி ஆழ்வார் திருக்கையிலே தாளத்தைக் கொடுக்க, அவ்விருப்புக்குப் பல்லாண்டு பாடி மகிழ்கிறாராய்ச் செல்லுகிறது இத்திருவாய்மொழி.

## 436. நான்காம்பத்தில் ஆறும் பதிகம்— தீர்ப்பாரையாமினி

கீழில் சென்ற திருவாய்மொழிக்கு அடுத்தபடியாக இந்தத் திருவாய்மொழி இருக்கத் தகுதியில்லை யென்று நம்முதலிகள் கூறுவர்களாம். கீழ்த்திருவாய்மொழி எல்லை கடந்த ப்ரீதியோடே சென்றது; அதற்கு எதிர்த்தட்டாய்ச் செல்லுகிறது இத்திருவாய் மொழி. கீழ்ப்பதிகத்திற்கும் இப் பதிகத்திற்கும் ஸங்கதி அருளிச் செய்யவேணுமென்று எம்பாரைச் சிலர் கேட்டார்களாம்; அதற்கு எம்பார் "இதற்கு நான் என்ன சொல்லுவேன்? அஸங்கதிரேவ ஸங்கதி: என்று கொள்ளுங்கோள்" என்றாராம்; இது இன் சுவையே வடிவெடுத்த வார்த்தையாகும். ஸங்கதி சொல்ல முடியா தென்று ஆபாத ப்ரதீதியிலே பொருளாம்; அஸங்கதி: என்றது



அஸம்ச்லேஷ மென்றபடியாய் விச்லேஷத்தைச் சொல்லிற்றாய், விச்லேஷந்தான் இதற்கு ஸங்கதி என்கை பரமார்த்தம். *மண்ணை யிருந்து துழாவியில் ஆழ்வார்க்கு உண்டான வியாமோஹத்தைத் தணிப்பதற்காக வந்து கிட்டின வைகுந்தநாதன் மறைய நிற்க, அந்தப் பிரிவை ஆற்றமாட்டாமல் இத்திருவாய்மொழி விஷாதத் திலேயாய்ச் செல்லுகின்றது. வெறி விலக்குத் துறையிலே அவதரித்ததாம் இத்திருவாய்மொழி. ஆழ்வார் தாமான தன்மையை யிழந்து ஒரு தலைமகளாம் நிலைமையை எய்தி, அது தன்னிலும் தம் வாயாலே சொல்லமாட்டாமல் வேற்றுவாயாலே சொல்லவேண்டித் தோழியின் பேச்சாகச் செல்லுகின்றது. பிரிவாற்றாது மிகவருந்திய தலைமகளது வடிவுவேறுபாட்டினைக் கண்ட தாய்மார் 'இவள் இங்ஙனம் மெலிதற்குக் காரணம் என்னோ?' என்று கவலைப்பட்டுக் கட்டுவிச்சியைக் குறிகேட்க, அவளும் தன் மரபின்படி ஆராய்ந்து 'இவளுக்கு முருகக் கடவுள் ஆவேசித்ததொழியப் பிறிதொன்று மில்லை' என்று கூற, அது கேட்ட தாயர் உடனே வெறியாட் டாளனை அழைப்பித்து அவனைக் கொண்டு ஆவேசமாடுவிப்பதும் க்ஷுத்ர தெய்வங்களுக்கு உரிய ஸந்தர்ப்பணைகளை யிடுவிப்பதும் செய்ய, அதற்குத் தலைமகள் மிகவருந்தாநிற்க அச்சமயத்தில் அவளது துன்பத்தின் உண்மையான காரணமுணர்ந்த தோழி அந்த ப்ரவ்ருத்திகளைக் கண்டித்துக் கூறுகிற பாசுரமாய்ச் செல்லுகிறது.

## 437. நான்காம்பத்தில் ஏழாம் பதிகம்— சீலமில்லாச்சிறியன்

உலர்ந்து தரைப்பட்டுக்கிடந்த கொடியானது மழைத்துளி பட்டவாறே செழிப்புறுமாபோலே, கீழே மோஹித்துத் தரைப் பட்டிருந்த ஆழ்வார், தோழிமார் வாக்கில் நின்றும் வெளிவந்த சில திருநாமங்களைக் கேட்கப்பெற்ற ப்ரஸக்தியாலே உணர்த்திபெற்றார். அத்தனையே யல்லது விரும்பினபடி எம்பெருமானோடே ஸம்ச்லே ஷிக்கப்பெற்றிலர். மோஹித்திருந்த நிலைமைதானே நன்றாயிருந்தது. ஏனென்னில், அப்போது உணர்த்தியில்லாமையாலே துயரம் தெரி யாது. உறக்கத்தில் பசிபொறுக்கலாம்; விழித்துக்கொண்டால் உண்டாலல்லது தரிக்கப் போகாதே. அப்படியே ஆழ்வாரும் மோஹித்திருந்த நிலைமையிலே ஒருவாறு ஆறியிருந்து உணர்த்தி யுண்டான விப்போது துடிக்கவேண்டியவராயினர். துடித்துக் கூப்பிடுகிறார் இத்திருவாய்மொழியில். உலகத்திலே நோயாளிகள் மயக்கமுற்றிருக்கும் போதுகளிலே பாதை தெரியாதேயிருந்து, மயக்கம் தெளிந்தவாறே பாடாற்றவொண்ணாமல் துடிப்பர்களே,

அந்த நிலைமையேயாயிற்று ஆழ்வார்க்கு இப்போது. அவனே ஆபத்துக்கு உதவுமியல்வினன்; ஆபத்துக்கு நிதானமறிந்து பரிஹரிக்கவும் வல்லன்; பிரிந்தால் பொறுத்திருக்க வொண்ணுத படியான அழகு படைத்தவன்; ஆபத்துக்களிலே விரோதியைப் போக்கி உதவுகைக்குப் போதுமான சக்திபடைத்தவன்; இப்படியிருந்தும் நம் ஆற்ருமைக்கு உதவவில்லையே, என்று கனத்த ஆர்த்தியோடே, கேட்டாரெல்லாரும் நீராய்க்கரையும்படி கூப்பிடுகிருர்.

## 438. நான்காம்பத்தில் எட்டாம் பதிகம்— ஏருளுமிறையோனும்

கேட்டாரெல்லாரும் நீராம்படியாகக் கீழ்த்திருவாய்மொழியிலே ஆழ்வார் கூப்பிடச் செய்தேயும் எம்பெருமான் வந்து முகங் காட்டிற்றிலன். அதனுல் எம்பெருமான் தம்மை வேண்டாவென்று வெறுத்திருப்பதாக நிச்சயித்தார். அவனுடைய வெறுப்புக்கு இலக்கான இந்த ஆத்மாவும் ஆத்மீயங்களும் நமக்கு ஏதுக்கு? அவனுக்குவேண்டாதவை நமக்குத்தான் வேணுமோவென்று ஆத்மாத்மீயங்களையெல்லாம் உபேக்ஷிக்கிருர் இத்திருவாய்மொழியில். ஆழ்வார் ஜநககுலஸுந்தரியோடே யொத்திருப்பர் என்ருயிற்று நம்முதலிகள் அறுதியிட்டிருக்கும்படி. அப்பிராட்டி அசோக வனத்திலிருந்தபோது *ந ஹி மே ஜீவிதேநார்த்த: நைவார்த்தைர் ந ச பூஷணை: வஸந்த்யா ரக்ஷஸீமத்யே விநாராமம் மஹாரதம்*. என்று ஆத்மாத்மீயங்களை யெல்லாம் வெறுத்தாள். பெருமாள் விரும்பாதே ராக்ஷஸிகள் நடுவே சிறையிருக்கின்ற வெனக்கு உயிர் உடைமை முதலியவற்ருல் என்ன பலன்? என்ருள். அந்த நிலைமைதானே இப்போது ஆழ்வார்க்கு முண்டாயது. இந்தத் திருவாய்மொழி ஆழ்வார் தாமான தன்மையிலே நின்று அருளிச் செய்வதன்று; நாயகீ ஸமாதியாலே அருளிச்செய்த தென்னுமிடம் "மணிமாமை குறைவிலமே" "மேகலையால் குறைவிலமே" "வரி வளையால் குறைவிலமே" என்பவற்ருல் விளங்கும். திருமங்கையாழ்வாரும் பெரிய திருமடலில் "கன்னவிலுங் காட்டகத்தோர் வல்லிக்கடிமலரின் நன்னறு வாசம் மற்ருரானு மெய்தாமே மன்னும் வறுநிலத்து வாளாங்குகுத்ததுபோல், என்னுடைய பெண்மையும் என்னலனு மென்முலையும், மன்னு மலர் மங்கைமைந்தன், கண புரத்துப் பொன்மலைபோல் நின்றவன்றன் பொன்னகலம் தோயா வேல், என்னிவைதான் வாளாவெனக்கே பொறையாகி, முன்னி ருந்து மூக்கின்று மூவாமைக் காப்பதோர் மன்னுமருந்தறி வீரில்லையே" என்றருளிச் செய்தது காண்க.



## 439. நான்காம்பத்தில் ஒன்பதாம் பதிகம்— நண்ணுதார்முறுவலிப்ப

கீழ்த்திருவாய்மொழியில், உடம்பு வேண்டா, உயிர் வேண்டா, அது வேண்டா, இது வேண்டா என்று ஆத்மாத்மீயங்களை யெல்லாம் வெறுத்து உதறித் தள்ளப்பார்த்தார். தள்ளினுல் தள்ளுண்டு போமவையோ அவை? பேறு பெறுவதற்கு எப்படி அவன் கை பார்த்திருக்கவேணுமோ, அப்படியே முடிகைக்கும் அவன் கை பார்த்திருக்க வேண்டுகையாலே 'எம்பிரானே! என்னை நீதானே முடித்திடாய்' என்கிருர். ஆழ்வாருடைய ஆர்த்தி பேச்சுக்கு நிலமல்லாதபடி பெருகினமை இத்திருவாய்மொழியிலே விளங்கா நின்றது. ஆழ்வாருடைய ஆர்த்திக்கு மூன்று ஹேதுக்களுண்டு; எம்பெருமானேடு கலவி பெருமல் பிரிந்து படும் ஆர்த்தி ஒன்று; ஸம்ஸாரிகளோடு ஸஹவாஸம் பொறுக்க வொண்ணுதாய் அத்தாலே வரும் ஆர்த்தி ஒன்று; இந்திரியங்கள் விஷயங்களிலே கொண்டுபோய் மூட்டி அனர்த்தங்களை விளைக்கையாலே அத்தாலே வரும் ஆர்த்தி ஒன்று. இவற்றுள் எம்பெருமானுடைய பிரிவினுல் வந்த ஆர்த்தி கீழ்த்திருவாய் மொழியிலே கண்டது. இந்திரியங்களால் வரும் ஆர்த்தி மேலே *உண்ணிலாவிய வைவரால்* என்கிற திருவாய்மொழியிலே காணலாகும். ஸம்ஸாரிகளினிடையே ஸஹவாஸம் பொறுக்கவொண்ணுமையாலாகும் ஆர்த்தி இத்திருவாய்மொழியில் காண்பதாகும்.

## 440. நான்காம்பத்தில் பத்தாம் பதிகம்— ஒன்றுந்தேவுமுலகும்

கீழ்த்திருவாய்மொழியிலே ஆழ்வார் தமக்கு ஸம்ஸாரிகளினிடையே ஸஹவாஸம் பொறுக்கமுடியாமல் பலவாருகக் கதற, ஒருவிதமாக அவருடைய ஆர்த்தியை மாற்றவேணுமென்று திருவுள்ளம் பற்றின எம்பெருமான், திருநாட்டிலே திருமகளும் தானுமாக இருக்கிற இருப்பை இங்கே இவர்க்குக் காட்டிக் கொடுத்தருள, இவரும் கண்டு ஒருவாறு களிக்கப்பெற்ருர். *கண்ணுளா கடல் கடைந்தாய் உனகழற்கே வரும் பரிசு, தண்ணுவா தடியேனைப் பணிகண்டாய் சாமாறே* என்றும் *ஆமாறென் றறியேன் நான் அரவணையாயம்மானே!, கூமாறே விரைகண்டாய் அடியேனைக் குறிக்கொண்டே* என்றும் கல்லும் கரையும்படி ஆழ்வார் கூப்பிடா நிற்கச் செய்தேயும் எம்பெருமான் இவரை இந்நிலத்திலேயே வைத்திருப்பதற்குப் பலஹேதுக்கள் உண்டு ஆழ்வாரைக் கொண்டு உபதேசங்கள் பண்ணுவித்து நாட்டைத்.

திருத்தவேணுமென்பது ஒரு ஹேதுவாகையாலே, அதனை எம்பெருமான் ஆழ்வார்க்கு ஒருவாறு நினைப்பூட்டினன் போலும்; ஆழ்வாரும் எம்பெருமானுடைய நியமனத்தை நிறைவேற்றக் கருதி, பிரகிருதத்தில் எவ்விதமான உபதேசத்தைப் பண்ணலாமென்று பார்த்தார். உலகர் பெரும்பாலும் எம்பெருமானுடைய பரத்வத்தை அறியப் பெறுதவர்களாயும் தேவதாந்தரங்கள் பக்கலிலே வியாமோஹம் கொண்டவர்களாயும் காணப்படுகையாலே இவர்களுக்கு எம்பெருமானுடைய பரத்வத்தையும் இதர தெய்வங்களின் நிஹீநத்வத்தையும் நன்கு உணர்த்திேனுமாகில் இவர்கள் திருந்தி ஸம்ஸாரம் அடியறக் கூடும் என்று திருவுள்ளம் பற்றி அங்ஙனே உபதேசித்தருளுகிறுர் இத்திருவாய்மொழியாலே. கீழே *உயர்வற வுயர்நலம் *திண்ணன்வீடு* முதலான திருவாய்மொழிகளிலும் எம்பெருமானுடைய பரத்வத்தை அருளிச்செய்திருந்தாலும், இத்திருவாய்மொழி அர்ச்சாவதாரத்திலே பரத்வத்தை முதலிக்கிறதாகையாலே வீறுபெற்றிருக்கும். திருக்குருகூர் என்கிற ஆழ்வார் திருநகரியில் கோயில் கொண்டிருக்கும் எம்பெருமானுக்கு ஆதிநாத பெருமாள் என்று திருநாமமாகையாலே, ஸகலஜகத்காரணபூதன் என்கிற அத்திருநாமத்தை வஹித்திருக்கின்ற இப்பெருமான் பக்கலிலே பரத்வத்தை எடுத்துரைக்கப் பாங்காயிருக்குமென்று திருவுள்ளம் பற்றினுராயிற்று.

## 441. ஐந்தாம்பத்தில் முதல்பதிகம்—கையார் சக்கரத்து

கீழ் நாலாம்பத்தில் *நண்ணுதார் முறுவலிப்பவென்னும் பதிகத்திலே ஸம்ஸாரிகள் படுகிற வருத்தங்களை நினைத்து, அவ்வருத்தங்கள் அவர்களுக்குத் தொலையும்படி எம்பெருமானுடைய பெருமையை உணர்த்துவோ மென்று பார்த்து அதனையுணர்த்தினுர் கீழே *ஒன்றுந்தேவுமென்கிற திருவாய் மொழியிலே. அவ்வுபதேசம் கேட்டுத்திருந்தினவர்கள் இந்நிலத்திலே நிரம்பியிருக்கிறபடியைக் கண்டவாழ்வார் ''பொலிக பொலிக'' வென்று அவர்கட்கு மங்களாசாஸநம் பண்ணுவதாக இருக்குமளவிலே தம்மைப் பற்றிச் சிறிது நினைத்துக் கொண்டார்: 'நாமும் இவர்களைப்போலே ஸம்ஸாரத்திலே தோள் மாறிக்கிடவாதே இவர்களுக்கு உபதேசம் பண்ணும்படியாகவும், இவர்களைத் திருந்தும்படியாகவும் எம்பெருமான் நமக்கு அருள்புரிந்திருக்கின்றுனே. இவ்வருளுக்கு நிதானம் ஏதேனுமுண்டோ?' என்று ஆராய்ந்து பார்த்தார்; அவ்வருள் நிர்ஹேதுக மென்பதை நன்கறிந்தார்; உள்குழைந்து அதனைப் பேசியநுபவிக்கிறுர் இத்திருவாய்மொழியில். சப்தாதி விஷயங்களிலேயே நான் மண்டிக்கிடக்க, பகவத் விஷயத்தையும் வாயாலே



சொல்லுபவன் போல் பாவனை செய்தவனே யல்லது உள் கனிந்த ப்ரேமம் சிறிதுமுடையேனல்லேன்; அப்படியிருந்தும் க்ருத்ரிமமான அந்த உக்திதன்னையே பற்றுசாகக் கொண்டு எம்பெருமான் என்னை விஷயீகரித்தவாறு என்னே! என்று ஆச்சரியப்படுகிறுராயிற்று.

## 442. ஐந்தாம்பத்தில் இரண்டாம்பதிகம்—பொலிக பொலிக பொலிக

இவ்விபூதியிலுண்டான ஸ்ரீவைஷ்ணவ ஸம்ருத்திக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறது இத்திருவாய்மொழி. இப்போது இந்த மங்களாசாஸனத்திற்கு ப்ரஸக்தி ஏதென்னில்; கீழே நாலாம் பத்தில் *நண்ணுதார் முறுவலிப்ப வென்னும் பதிகத்திலே ஆழ்வார் ஸம்ஸாரிகளின் கிலேசங்களை அநுஸந்தித்து, அதற்குப் பரிஹாரமாக *ஒன்றுந்தேவு மென்கிற பதிகத்திலே எம்பெருமானுடைய பரத்துவத்தைப் பரக்கப்பேசித்திருத்த, அத்தாலே திருந்தி, ஸம்ஸாரம் பரமபதம் என்கிற வேற்றுமையற்று அங்குள்ளாரும் இங்கே வரலாம்படி யிருக்குமிருப்பைக் கண்டு மங்களாசாஸனம் பண்ணுகிறுராயிற்று. ஆழ்வாருடைய ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயைக் காண்பதற்காக நித்யஸூரிகள் நித்ய விபூதியில் நின்றும் இந்நிலத்திலே யெழுந்தருள அவர்களுக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறுர் என்றும் சில ஆசார்யர்கள் நிர்வஹிப்பர்களாம். ஆழ்வாருடைய ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயாவது ஆழ்வாருடைய உபதேசம் கேட்டுத் திருந்தின ஸ்ரீவைஷ்ணவர்களின் ஸம்ருத்தியாகிற ஸ்ரீயாம். இந்த ஸ்ரீவைஷ்ணவர்களுக்கே ஸாக்ஷாத்தாக இத்திருவாய்மொழியால் மங்களாசாஸநம் செய்வதாக ஒரு நிர்வாஹம். இந்த ஸ்ரீவைஷ்ணவர்களைக் காண்கைக்காக லோகாந்தரத்தில் நின்றும் வந்தவர்கட்கு மங்களாசாஸநம் செய்வதாக மற்றொரு நிர்வாஹம். ஆசார்ய ஹ்ருதயத்தில் ''அடிமை புக்காரையும் ஆட்செய்வாரையுங் காண லோகத்வீபாந்தரங்களில் நின்றும் போந்த தேவர் குழாங்களைக் கண்டு காப்பிட்டு'' என்றருளிச் செய்ததும் இங்கு அநுஸந்தேயம்.

## 443. ஐந்தாம்பத்தில் மூன்றும் பதிகம்—மாசறுசோதி

இத்திருவாய்மொழி மடலூரவொருப்படுவதாயிருக்கும். கீழ் நாலாம்பத்திலே *ஏறாளுமிறையோனு மென்கிற திருவாய்மொழியில் உண்டாயிருந்த காதலே மீண்டும் கிளர்ந்து எம்பெருமானேடு ஸம்ச்லேஷிக்க விரும்பி அந்த விருப்பம் நிறைவேறப் பெருமையினுலே மடலூர்வேனென்று அச்சமுறுத்திக் காரியம் கொள்ளப் பார்க்கிறுர். சக்ரவர்த்தி திருமகன் ஸமுத்ரராஜனைச் சரணம்

புகுந்து வழிவிடவேண்டின விடத்தும் அக்கடலரையன் இறுமாப்பையே பாராட்டி முகங்காட்டாமல் அலக்ஷியஞ் செய்துகிடக்க, பெருமாள் சீறிச் சிவந்த கண்ணினராய்—*ஸாகரம் ஸோஷயிஷ்யாமி, சாபமாநய ஸௌமித்ரே! பத்ப்யாம் யாந்து ப்லவங்கமா: *'இதோ இக்கடலை வற்றச் செய்துவிடப்போகிறேன்; லக்ஷ்மணா! சார்ங்க வில்லைக் கொண்டு வா; வானர முதலிகள் காலாலே நடந்து செல்லட்டும்; ஒரு க்ஷணத்திலே இக்கடல் படுகிறபாடுபாராய்' என்றருளிச்செய்து ஸமுத்ர ராஜனை அழிக்க முயன்றாப் போலே இவ்வாழ்வாரும் 'நமது அபேக்ஷிதத்தை நிறைவேற்றாத எம்பெருமான் ஏதுக்கு?' என்று பகவத் தத்துவத்தை இல்லை செய்துவிடப் பார்க்கிறார். மடலெடுக்கையென்று தமிழிலே ஒரு முறைமையுண்டு. நாயகன் வேட்டைக்குப் புறப்பட்டானாய், நாயகியும் தோழியும் பூக்கொய்து விளையாடவென்று புறப்பட்டவளவிலே ஒரு வியாஜத்தாலே தோழியும் பிரிந்த ஸமயத்திலே நாயகனும் தெய்வவசமாக அங்கே வந்து சேர, அங்கே அவனோடு கண்கலவியே கூட்டக்கூடி ஊழ்வினை பிரித்தலால் உடனே பிரியவும் நேர்ந்திட, அந்தப் பிரிவைப் பொறுக்கமாட்டாத நாயகி அவனோடு கூடுதற்காகச் செய்யும் ஸாஹஸ ப்ரவ்ருத்திதான் மடலூர்தல் எனப்படுவது. நாயகனை ஒரு படத்திலேயெழுதி வைத்தகண்வாங்காமல் அதனைப் பார்த்துக்கொண்டு, புஷ்பம் சந்தனம் முதலிய போக்ய வஸ்துக்களையும் விஷமாக உதறித் தள்ளி, ஊணும் உறக்கமும் உடம்பு குளிப்பதுமின்றியே, பனைமடலைக் கையிலே ஏந்திக்கொண்டு அதனால் உடம்பை மோதிக்கொண்டு, தலைமயிரை விரித்துக்கொண்டு 'இன்னபடுபாவி என்னைக் காக்கமாட்டாதே கைவிட்டான்; அவன் கண்ணாற்றவன்; அவனிலும் விஞ்சிய கொடியன் இல்லை' என்று தெருவேறக் கதறிக்கொண்டே கேட்டாரெல்லாரும் நடுங்கும்படியும் இரங்கும்படியும் திரிந்துழல்வதுதான் மடலூருகையாவது. இங்ஙனம் கதறிக்கொண்டு தெருவிலே புறப்படுவதற்கு ப்ரயோஜனம் யாதெனில்; இந்த ஸாஹஸ ப்ரவ்ருத்தியைக் கண்டு ராஜாக்களாயுள்ளவர்கள் இவ்வார்த்தியைப் பொறுக்க மாட்டாத கருணையினாலே இருவரையும் கூட்டிவைப்பர்கள்; உறவு முறையாராவது கூட்டி வைப்பர்கள்; தோழிமாராவது கூட்டி வைப்பர்கள்; பழிக்கு அஞ்சி நாயகனேயாவது வந்து கூடுவன்; இவையொன்றுமில்லையாகில் நாயகிதான் முடிந்து பிழைத்துப்போவள்; இவையாயிற்று மடலூர்தற்குப் பிரயோஜனங்கள். ஆழ்வார் இப்படி எம்பெருமானைப் பழித்துக்கொண்டு ஸாஹஸம் தோற்றத் தெருவிலே கிளம்பினாரோ? எனில், இல்லை; மடலூர்வன் என்று சொல்லி அச்சமுறுத்தின மாத்திரமேயன்றி அதை முடிய நடத்தினபாடில்லை. "தோழீ! உலகு தோறலர் தூற்றி ஆம் கோணைகள் செய்து குதிரியாய்



மடலூர்துமே" என்றும், "யாம்மடமின்றித் தெருவுதோறயல் தையலார் நாமடங்காப் பழிதூற்றி நாடுமிரைக்கவேயாம் மடலூர்ந்தும் எம்மாழியங்கைப் பிரானுடைத் தூமடல் தண்ணந் துழாய் மலர்கொண்டு சூடுவோம்" என்றுமுள்ள பாசுரங்கள் காண்க.

## 444. ஐந்தாம்பத்தில் நான்காம் பதிகம்—ஊரெல்லாந்துஞ்சி

கீழ்த்திருவாய்மொழியிலே மடலூரும் முயற்சி வலிதாய்ச் சென்றது. மடலூரவேண்டுமானால் நாயகனை ஒரு படத்திலே எழுதவேணுமே; அப்படி எழுதுவதற்கு அவகாசமில்லாதபடி கங்குலிருள் வந்து புகுந்தது. *ஆழியாலன்றங்காழியை மறைத்தான்* என்றும் *ஆழிகொண்டன்று இரவிமறைப்ப* என்றும் சொல்லுகிறபடியே பண்டு பாரதப் போரிலே ஜயத்ரதனுடைய வதத்திற்காக ஸூரியனை அஸ்தமிக்கச் செய்ததுபோல இப்போதும் அப்பெருமான் தானே ஸூர்யனை அஸ்தமிக்கும்படி பண்ணினான் போலும். இவள் மடலெடுத்தால் அது தனக்கு அவத்யமாகுமென்று நினைத்து அதற்கு இடையூறு செய்யவொருப்படுவனே யெம்பெருமான். அல்லது தைவயோகத்தாலே அஸ்தமித்ததாகவும் இருக்கலாம். இரவு வந்து புகுந்தது. அதுதான் அந்தியம்போதன்றிக்கே சராசரங்களெல்லாம் ஒடுங்கும்படி நடுநிசியாயிருந்தது. பழிசொல்லுவாரோடு ஹிதஞ்சொல்லுவாரோடு வாசியற எல்லாரும் உறங்கிப்போய் உசாத்துணையற்றிருந்தது. இவ்வளவிலே ஸர்வரக்ஷகனான எம்பெருமானுடைய திருக்குணங்களை யநுஸந்தித்தாராழ்வார். இவ்வநுஸந்தானம் ஸம்ச்லேஷ தசையிலன்றிக்கே விச்லேஷதசையிலே யாகையாலே மிகவும் ஆற்றாமைக்கு உறுப்பாயிற்று. அசோக வனத்திலே முடியத்தேடின பிராட்டியைப்போலே இவர்க்கும் முடியவேண்டியவளவாயிற்று. அந்த அவஸாதமெல்லாம் இத்திருவாய்மொழியாய் வெளிவருகின்றது. கீழ்த்திருவாய்மொழிபோலே இத்திருவாய்மொழியும் நாயகிஸமாதியாலே அருளிச்செய்கிறபடி.

## 445. ஐந்தாம்பத்தில் ஐந்தாம் பதிகம்—எங்ஙனேயோ

கீழ்த்திருவாய்மொழியில் ஆழ்வார் இருளுக்கும் பனிக்கும் வருந்தினபடி சொல்லிற்று. இதுதான் இருள்தருமா ஞாலமாகையாலே தமோகுணம் மேலிட்டு நலிந்தபடியைச் சொன்னதாக ஸ்வாபதேசப் பொருள் கொள்ளலாம். ஆளவந்தார் ஸ்தோத்ரரத்நத்தில் *அவிவேககநாந்ததிங்முகே பஹுதா ஸந்ததது: க்கவர்

ஷிணி, பகவங் பவதுர்தினே* என்றருளிச் செய்ததும் கீழ்த்திருவாய்மொழியின் ஸ்வாபதேசார்த்தரூபம் என்றும் கொள்ளலாம். இருட்போது கழிந்து பகற்போது காண்கிருப்போலே தமோ குணத்தின் மேலீடுகழிந்து ஸத்வகுணத்தின் தலையெடுப்பு காணத் தொடங்கிற்று. அதனுல் நெஞ்சு தரிப்புற்றுத் திருக்குறுங்குடியெம்பெருமானுடைய வடிவழகையும் திவ்யாயுத திவ்யாபரணச் சேர்த்தியழகையும் வாய்வெருவும்படியாயிற்று. உருவெளிப்பாடு என்பதொன்றுண்டு ; அதாவது மாநஸ ஸாக்ஷாத்காரம். கண்ணுக்கு ப்ரத்யக்ஷமாகத் தோற்றுமே நெஞ்சுக்கு ஸாக்ஷாத்கார விஷயமாகை. அது இத் திருவாய்மொழியில் செல்லாநின்றது. இது பிராட்டி நிலைமையிலே நின்று பேசுங் திருவாய்மொழி. தாய்மார் தலைமகட்கு அடைவுசொல்லி மீட்கப் பார்க்க, தலைமகள் ‘எனக்கோ நீங்கள் அடைவு சொல்லுவது? திருக்குறுங்குடி நம்பியின் வடிவழகிலே நெஞ்சு பறியுண்டு கிடக்குமென்னை நீங்கள் அடக்கப் பார்ப்பது முறையல்ல’ என்று சொல்லுகிறபடியைச் சொல்லுகிறது.

## 446. ஐந்தாம்பத்தில் ஆரும் பதிகம்—கடல்ஞாலம்

பிரிந்து வருந்துங்காலத்திலே ‘அநுகரித்துத் தரித்தல்’ என்று ஒரு முறையுண்டு. அதாவது, எம்பெருமான் தாஞகவே தன்னையநுகரித்துப் பேசி இங்ஙனேயொரு போது போக்காலே தரித்திருக்கையாம். திருவாய்ப்பாடியில் திருக்குரவை கோத்தவன்று ப்ரீதிரஸம் தலைமண்டை கொண்டு செல்ல, அது ஸாத்மிக்கைக்காகக் கண்ணபிரான் பிரிந்து தன்னைமறைத்திட, அப்போது திருவாய்ப்பாடியிற் பெண்களெல்லாரும் அநுகரித்துத் தரித்தார்களென்னுமிடம் ஸ்ரீவிஷ்ணுபுராண ப்ரஸித்தம். அதில் (5—13—23)

> ‘‘க்ருஷ்ணே நிபத்தஹ்ருதயா இதமூசு : பரஸ்பரம்
> க்ருஷ்ணோஹமேஷ லலிதம் வ்ரஜாம்யாலோக்யதாம் கதி :
> அங்யாப்ரவீதி க்ருஷ்ணஸ்ய மம கீதிர் நிசம்யதாம்
> துஷ்ட காளிய திஷ்டாத்ர க்ருஷ்ணோ ஹமிதி சாபரா’’

> ‘‘பாஹுமாஸ்போட்ய க்ருஷ்ணஸ்ய லீலாஸர்வஸ்வமாததே
> அங்யா ப்ரவீதி ஹே கோபா : நிச்சங்கை : ஸ்தீயதாமிஹ
> அலம் வ்ருஷ்டிபயேநாத்ர த்ருதோ கோவர்த்தநோ மயா
> தேநுகோயம் மயா க்ஷிப்தோ விசரந்து யதேச்சயா’’

என்றிவை முதலான சுலோகங்கள் காண்க. (இந்த சுலோகங்களின் கருத்தாவது—) கண்ணபிரான் பிரிந்து சென்ற காலத்தில் கோபிகள் விருந்தாவனத்தில் திரள்திரளாகக் கூடி ஒருவர்க்



கொருவர் இங்ஙனே பேசிக்கொண்டார்கள் ; ‘நான் கண்ணன், இதோ அழகாக நடை நடக்கிறேன் பார்’ என்ருள் ஒருத்தி ; ‘நான் கண்ணன், செவிக்கினிதாகக் குழலூதுகின்றேன் கேள்’ என்ருள் மற்ருெருத்தி; ‘நான் கண்ணன், கொடிய காளியநாகமே! நில்’ என்ருள் இன்ஞெருத்தி. தோளைத் தட்டிக்கொண்டு கண்ணபிரான் செய்யும் லீலைகளையெல்லாஞ் செய்தாள் வேருெருத்தி. ‘கோபாலர்களே! நீங்கள் மழைக்கு அஞ்சாதே நில்லுங்கள், இதோ நான் கோவர்த்தனமென்னுங் கொற்றக்குடையைத் தூக்கிவிட்டேன் பாருங்கள்’ என்ருள் ஒருத்தி. ‘தேனுகாசுரனை இதோ நான் மாய்த்துவிட்டேனுகையால் இனி மாடுகளெல்லாம் நிர்ப்பயமாக உலாவலாம்’ என்ருள் ஒருத்தி என்கை. அங்ஙனே அநுகரித்துத் தரிக்கும் விதம் ஆண்டாள் பக்கலிலுங் கண்டதொன்ருகும். நோன்பு நோற்பதாகக் கொண்டு திருப்பாவை பாடியது ஆய்ச்சியர்களின் அனுட்டானத்தை அநுகரித்த படியத்தனையிறே. இத்தகைய அநுகார ப்ரகாரங்கள் உபநிஷத்துக்களிலும் காண்பனவாகும். ஆழ்வார்க்கு அந்த அநுகார ப்ரகாரமே இத்திருவாய்மொழியில் செல்லா நின்றது. அதுதானும் தாய்பாசுரத்தாலே வெளிவருகின்றது. மகளின் அநுகாரத்தைத் தாய் முறையிடுகின்ருளென்க. பராங்குச நாயகியானவள் ஜ்ஞான முத்திரையுங் தானுமாய் கீதாசார்யனைப் போலே யிருந்துகொண்டு ‘‘கடல்ஞாலஞ் செய்தேனும் யானே, கடல்ஞாலமா வேனும் யானே, மலையெடுத்தேனும் யானே, இனத்தேவர் தலைவனும் யானே’’ என்ருற்போலே பாசுரங்களைச் சொல்லியிருக்கக் கண்ட திருத்தாயார் ‘இது என்ன நிலைமை!’ என்று ஆராயத் தொடங்கிஞள் : ‘எம்பெருமானைப் பிரிகையாலுண்டான ஆற்ருமையினுலே அநுகரித்துத் தரிக்கிருள்’ என்று அறியமாட்டாதவளாய்க் கலங்கிக் கிடந்தாள் ; அப்போது சில பந்து வர்க்கங்கள் அங்கே வந்து சேர்ந்து, இது என்னென்று வினவ, ‘ஸர்வேச்வரன் இவள் பக்கலிலே ஆவேசித்தான்போலேயிருக்கிறது’ என்று விடை கூறுகிறபடியாய் இத்திருவாய்மொழி செல்லுகின்றது.

## 447. ஐந்தாம்பத்தில் ஏழாம் பதிகம்—நோற்றநோன்பு

கீழ்த்திருவாய்மொழியில் ஆழ்வார் எம்பெருமானுகவே தம்மை அநுகரித்துப் பேசினது ஒருவாறு தரிக்கைக்காகவன்ருே. அவ்வளவிலும் எம்பெருமான் வந்து முகங் காட்டாமையாலே பழைய ஆர்த்தியே தலையெடுத்தது. ‘சிறிது ஆர்த்தியுண்டானலும் கடுக வந்து முகங்காட்டி அருள்செய்வதையே இயற்கையாகவுடைய எம்பெருமான் நம்மளவிலே இப்படி உபேக்ஷையாயிருக்க யாது காரணமோ?’ என்று பார்த்தார் ஆழ்வார் ; கருமயோகம், ஞான

யோகம் முதலானவற்றிலே நமக்கு அந்வயம் வேணுமென்று இருந்தானே? அல்லது, அந்த உபாயாந்தரங்களில் நாம் அந்வயித்திருக்கிறோமென்று திருவுள்ளம்பற்றிக் கைவிடப் பார்த்தானோ? அவனது திருவுள்ளம் இன்னதென்று தெரியவில்லையே? என்று தடுமாறின ஆழ்வார் தம்முடைய உண்மையான நிலைமையை எம்பெருமான் திருவடிகளிலே விண்ணப்பஞ்செய்யவேணுமென்று கருதி வானமாமலைப் பெருமாள் திருவடிகளிலே தம்முடைய அங்கயோபாயத்வம் முதலானவற்றை விண்ணப்பஞ்செய்து வேரற்ற மரம் போலே விழுந்து சரணம் புகுகிறாராயிற்று இத்திருவாய்மொழியில். சிரீவர மங்கை என்றும், சிரீவர மங்கலம் என்றும் வானமாமலை க்ஷேத்திரத்தின் திருநாமம். இது பாண்டி நாட்டுத் திருப்பதிகள் பதினெட்டினுள் ஒன்று. இத்திருவாய்மொழியில் ஆறும்பாட்டில் ''வானமாமலையே! அடியேன் தொழவந்தருளே'' என்கிற ஸ்ரீஸூக்தியை நோக்குமிடத்தில் 'வானமாமலை' என்கிற திருநாமம் எம்பெருமானுக்கே உள்ளதென்றும், அந்தத் திருநாமத்தையிட்டு திவ்யதேசம் வழங்கப்பட்டு வருகிறதென்றும் சொல்லும்படி யிராநின்றது.

## 448. ஐந்தாம்பத்தில் எட்டாம் பதிகம்—ஆராவமுதே

கீழ்த் திருவாய்மொழியிலே வானமாமலை யெம்பெருமான் திருவடிகளிலே வேரற்ற மரம்போலே விழுந்து மிகப் பெரிய ஆர்த்தியோடே சரணம் புகச் செய்தேயும் அப்பெருமான் முகங்காட்டிற்றிலன்; இன்னார்க்கு இன்னவிடத்திலே முகங்காட்டுவது என்றொரு நினைப்பு உண்டே எம்பெருமானுக்கு; அதனாலே இவர்க்குத் திருக்குடந்தையிலே முகங்காட்டுவதாக அவன் நினைப்பிட்டிருக்கவுங் கூடுமே. ஆழ்வார் அப்படியே கருதினார். நமக்குத் திருக்குடந்தையிலே காட்சி தந்தருள்வதாக எம்பெருமான் ஸங்கல்பித்திருக்கக் கூடுமென்று எண்ணினார். எண்ணி 'அங்குச் சென்று புகவே நம் அபேக்ஷிதம் தலைக்கட்டும்; குறைகளெல்லாம் தீரும்' என்று கனக்கப் பாரித்துக் கொண்டு திருக்குடந்தையிலே சென்று புகுந்தார். சித்திரகூட மலைச்சாரலிலே வந்து சேர்ந்த பரதாழ்வான் தான் நினைத்தபடியான பரிமாற்றம் ஒன்றும் பெறுதாப்போலே, ஆழ்வாரும் புக்கவிடத்தில் திருக்கண்களை அலர விழித்துக் குளிர நோக்கி யருளுதல், திருப்பவளத்தைத் திறந்து ஒரு வார்த்தை யருளிச் செய்தல், அணைத்தல் முதலானவற்றிலே ஒன்றுஞ் செய்யக் கண்டிலர். அக்ரூரன் கண்ணபிரானிடத்து வரச்செய்தே *மாம் அக்ரூரேதி வக்ஷ்யதி* என்று கனக்கப் பாரித்துக் கொண்டு வந்து மனோரதித்தபடியே பெற்றானென்று கேட்டிருந்தோம்; அங்ஙனே ஒன்றும் தாம் பெறுமையாலே மிக வருந்தி, ஸ்தநந்தய ப்ரஜை



யானது தாய் பக்கலிலே கிட்டி முகம் பெறுவிட்டால் அலமந்து நோவுபடுமாபோலே அவன் ஸந்நிதியிலே தளர்ந்து கிடந்து கூப்பிட்டு இன்னும் எத்தனை திருவாசல் தட்டித்திரியக் கடவேன்! என்னு மார்த்தியோடே தலைக்கட்டுகிறார்.

## 449. ஐந்தாம்பத்தில் ஒன்பதாம் பதிகம்—மானேய்நோக்குநல்லீர்

கீழ்த்திருவாய்மொழியில் திருக்குடந்தையிலே தளர்ந்தார். அங்கு நின்றும் திருவல்லவாழென்கிற மலைநாட்டுத் திருப்பதி யேறப் போக வொருப்பட்டு, அங்குப் போகவும் முடியாமே அவ்வூர்க்கு அருகிலிருந்த ஊரில் சோலைகளும், அங்குள்ள பரிமளத்தைக் கொய்து கொண்டு புறப்படுகிற தென்றலும், வண்டுகளின் இனிதான மிடற்றோசைகளும், வைதிகாநுஷ்டான கோலாஹலங்களும், மற்றுமுண்டான ஸம்ப்ரமங்களுமெல்லாம் தம்மை மிகவும் நலிய, அவற்றாலுண்டான நோவு பா' டைத் தோழிமாரைக் குறித்துத் தலைவி சொல்லும் பாசுரமாகப் பேசுகிறது இத்திருவாய்மொழி.

## 450. ஐந்தாம்பத்தில் பத்தாம் பதிகம்—பிறந்தவாறும்

கீழ்த் திருவாய்மொழியில்—திருவல்லவாழிலேசென்று சேர்ந்து அங்குறையும் பெருமானோடே பரிமாறவேணுமென்று மநோரதித்துக் கொண்டு சென்று கால்நடை தாராமல் நடுவழியிலே விழுந்து கிடந்து கூப்பிட்டார். *கோவிந்தன் குணம்பாடி...ஆவி காத்திருப்பேனே*என்கிறபடியே குணாநுபவம் பண்ணித் தரிப்பதென்று ஒன்றுண்டே; அப்படியாகிலும் தரிப்போமென்று பார்க்கையில் அது தானும் அரிதாய் சைதில்யத்தை விளைப்பிக்க, ''பிரானே! உன்னைப் பிரிந்து நோவுபட்டாலும் தரித்துநின்று குணாநுபவம் பண்ணவல்லேனாம்படி பண்ணியருள வேணும்'' என்று அவன் திருவடிகளிலே சரணம் புகுகிறார் இத்திருவாய்மொழியில். அர்ச்சாவதாரங்களிலே தம் அபேக்ஷிதம் பெற ஆசைப்பட்டவர் அவ்வாசை நிறைவேறப் பெறுமையாலே விபவாவதாரங்களிலே செல்லுகிறார். இது பொருந்துமோ? விபவாவதாரங்களை யிழந்தார்க்கும் இழவு தீரவன்றோ அர்ச்சாவதாரம் அமைந்திராநின்றது; இங்கே யிழந்துவைத்து அங்கே செல்லுகையாகிறவிது என்னே! என்னில்; கேண்மின்; அர்ச்சாவதாரத்தில் குளிர நோக்குதல், வினவுதல், அணைத்தல் செய்யலாகாதென்று ஸங்கல்பித்திருக்கையாலே 'ஸத்யஸங்கல்பனுடைய ஸங்கல்பம் குலையும்படி அதிக நிர்ப்பந்தம் பண்ணக்கடவோமல்லோம்' என்று அர்ச்சாவதாரத்திலே

கையொழிந்தார். விபவாவதாரத்தில் அப்படியொரு நிர்ப்பந்தமில்லாமையாலும் *ஸம்ஸ்ப்ருச்ய ஆக்ருஷ்யச ப்ரீத்யா ஸுகாடம் பரிஷ்ஸ்வஜே* என்னும்படி அக்ரூரன் முதலானோர்க்கு ஸர்வஸ்வ தானம் பண்ணினபடியை அநுஸந்திக்கையாலும் அது காலவிப்ரக்ருஷ்ட மென்பதிலே புத்தி செலுத்தாமல் அங்கே போருகிறார்.

## 451. ஆறும்பத்தில் முதல் பதிகம்—வைகல் பூங்கழிவாய்

கீழ் ஐந்தாம்பத்தில் *நோற்ற நோன்பு என்கிற திருவாய்மொழி தொடங்கி நான்கு திருவாய் மொழிகளிலே ஆழ்வார் அடுத்தடுத்து எம்பெருமான் திருவடிகளிலே சரணாகதி செய்தார். பலன் கொடுத்தே தீரக்கடவதான அந்த சரணாகதியும் பலிக்கவில்லை. அதற்குக் காரணம் என்னவென்றால் நம்முடைய பாக்கியமேயாகும். ஆழ்வாருடைய திருவாக்கில் நின்றும் இன்னமும் பாசுரங்களை வெளியிடுவித்து உலகத்தை வாழ்விக்கத் திருவுள்ளம் பற்றின எம்பெருமான், நமக்காகவே ஆழ்வாருடைய சரணாகதியையும் நிஷ்ப்பல மாக்கினான். கீழே *பிறந்தவாறும் என்கிற திருவாய் மொழியிலே *என்னையென்று கொல் சேர்வதுவே* என்றும் *உன்னையென்று தலைப்பெய்வனே* என்றும் *உன்னை யென்று கொல்கூடுவதே* என்றும் இங்ஙனே பலவாறு கதறி எம்பெருமான் பக்கலிலே கடுகச் சேரவேணுமென்று பாரித்த ஆழ்வார், அவ்வெம்பெருமான் திருவண்வண்டூர் என்கிற மலைநாட்டுத் திருப்பதியிலே ஸந்நிதி பண்ணியிருக்கும் படியை நோக்கி அங்கே தாம் சென்று சேரமாட்டாதே தம்முடைய தசையை அப்பெருமானுக்குத் தெரிவிக்கும்படி தூதுவிடுகிறார் இத்திருவாய்மொழியில். அதாவது—ஆழ்வார் தாமான தன்மையை யிழந்து பெண் பாவனை பெற்றுச் சில பக்ஷிகளை எம்பெருமான் பக்கலிலே போகவிடுகிறார். பகவத் விஷயத்தில் அந்வயிப்பிக்குமவர்களைப் பக்ஷிகளாக ப்ரதிபத்தி பண்ணுகிறதென்று ஸ்வாபதேசார்த்த மறிவது. பறவையானது இரண்டு சிறகுகளாலே எப்படி உயர் கதியை அடைகின்றதோ அப்படியே ஞான அனுட்டானங்களினால் உயர்கதியை அடைகின்றவர்களான மஹான்களே பக்ஷிகளாக மறைத்துப் பேசப்படுகின்றார்கள்.

## 452. ஆறும்பத்தில் இரண்டாம் பதிகம்—மின்னிடை மடவார்கள்

ஆழ்வாருடையபடி பலவகைப்பட்டிருக்கும். இத்திருவாய்மொழியின்படி விலக்ஷணமாயிருக்கும். *என்று மொருநாளொழியாமை யானிரந்தால், ஒன்று மிரங்கார் உருக்காட்டார்* என்றும் *ஒரு நாள் காணவாராயே* என்றும் இங்ஙனே பலகாலும் கூப்பிடாநின்ற ஆழ்வார்க்கு இப்போது உண்டான நிலைமை மிக வேறுபட்டிராநின்றது. எம்பெருமான் வந்து நிற்க, "இங்கே ஏதுக்கு வந்தாய்? உனது அந்தரங்க விருப்பத்திற்கு இலக்கானவர்கள் பக்கலிலே எழுந்தருளலாம்; இங்கே என்ன காரியமிருக்கிறது? கடுகச் செல்வாயாக" என்று சொல்லிக் கதவடைத்துத் தள்ளுகிற படியாயிருக்கிறது இத்திருவாய்மொழி. வடமொழியில் ப்ரணய கலஹமென்றும், தென்மொழியில் ஊட லென்றும் சொல்லப்படுவது இது. தம்பதிகள் பரிமாறுநின்றால் இங்ஙனே ப்ரணயகலஹம் நிகழ்ந்தே தீரும். எம்பெருமானோடு நமக்குள்ள ஸம்பந்தங்கள் ஒன்பதுவகையென்று சொல்லப்படும். *பிதா ச ரக்ஷகச் சேஷீ பர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி. ஸ்வாம்யாதாரோ மமாத்மா ச போக்தாச ஆத்யம நூதித:* என்கிற ச்லோகத்தில் அந்த நவவித ஸம்பந்தங்களும் காணத்தக்கன. அந்த ஸம்பந்தங்களுள் பர்த்ரு பார்யா ஸம்பந்தமும் ஒன்றாகையாலே, எம்பெருமான் பர்த்தாவாகவும் ஆழ்வார் பார்யையாகவும் பரிமாறுகிற முறை ஸ்வரூபாநுரூபமே யாதலால் இந்த ப்ரணய கலஹமும் அவர்ஜநீயமாயிற்று. கீழ்த்திருவாய்மொழியில், ஆழ்வார் எம்பெருமானுடைய பிரிவுக்கு ஆற்றமாட்டாது தூதுவிட்டார். அந்த வ்யஸநத்தை யறிந்த எம்பெருமான் ஆனைக்கு உதவவந்தாப்போல அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து ஆழ்வார்க்குக் காட்சிதரப் பார்த்தான்; அவ்வளவிலே ஆழ்வார் ப்ரணயரோஷம் தலையெடுக்கப்பெற்று "ஸ்வாமிந்! இங்கே உமக்குப் பணியில்லை; பணி போரு மிடத்தேற எழுந்தருளீர்" என்று கதவடைத்துத் தள்ளுகிறார் இத்திருவாய்மொழியில். க்ருஷ்ணாவதாரத்திலே கண்ணபிரானோடு பரிமாறின கோபஸ்த்ரீகள் இங்ஙனே ப்ரணய ரோஷத்தாலே ஊடல் செய்தமையுண்டு. அவர்களுடைய பாவபந்தமே இப்போது ஆழ்வார்க்கும் ஆகி அவ்வநுகாரமே முற்றியிருக்கிறதாயிற்று. பெருமாள் திருமொழியிலே *ஏர்மலர்ப் பூங்குழல்* என்கிற திருமொழியும், பெரிய திருமொழியிலே *காதில் கடிப்பிட்டு* என்கிற திருமொழியும் இந்த நடையிலே அவதரித்தவை யென்றுணர்க.

## 453. ஆறும்பத்தில் மூன்றும் பதிகம் - நல்குரவுஞ்செல்வும்

*வைகல் பூங்கழிவாயில் தூதுவிட்டும் தாமதித்துவந்த எம்பெருமான் பக்கலிலே பராங்குசநாயகிக்கு ப்ரணயரோஷம் தலையெடுத்து 'எங்கள் கோஷ்டியிலே நீ வந்து புகவேண்டா' என்று தள்ளிக் கதவடைப்பதாய்ச் சென்றது கீழ்; அதுதான் ஊடல் என்பது. ஊடலுக்கு அடுத்தபடியாகக் கூடல் நேர்ந்தே தீருமாதலால், அந்தக் கூடல் நேர்ந்தபடியும் ஒருவாறு கீழ்த்திருவாய்

மொழியிலே *நின்றிலங்கு முடியினாய்* என்கிற பாசுரத்தினால் ஸூசிப்பிக்கப்பட்டதாயிற்று. ‘எவ்விதத்திலும் இவனோடு கூடலாகாது’ என்று மிக்க வுறுதியுடனிருந்த நம்மைக் கூடும்படியாக்கிக் கொண்ட இவனுடைய வலிமை என்னே! என்று விஸ்மயப்பட்ட ஆழ்வார்க்கு எம்பெருமான் தன்னுடைய அகடித கடநாஸாமர்த்தியத்தை நன்கு காட்டிக்கொடுத்து அத்தன்மையனான தான் திருவிண்ணகரிலே நித்யஸந்நிதிபண்ணி யிருக்கிறபடியையும் காட்டிக்கொடுக்க, ஆழ்வார் அது தன்னைப் பேசி இனியராகிறார் இத்திருவாய்மொழியில்.

## 454. ஆறாம்பத்தில் நான்காம் பதிகம்— குரவையாய்ச்சியரோடு

கீழ் ஐந்தாம்பத்தில் *பிறந்தவாறும் என்கிற திருவாய்மொழியில் எம்பெருமானுடைய சேஷ்டித விசேஷங்களைச் சிந்தித்து உருகி உள்குழைந்து அந்தோ! அநுபவிக்க முடியவில்லையேயென்று தளர்ந்து பேசினார்; அக்குறை தீர்கின்றது இத்திருவாய்மொழியில். எம்பெருமானுடைய பலபல சேஷ்டித விசேஷங்களை வாயாரச் சொல்லி நன்றாக அநுபவித்து அதனால் தமக்குண்டான பூரிப்பைப் பெருமிடறு செய்து வெளியிடுகின்றாராழ்வார் இத்திருவாய்மொழியில். இதில் ஒவ்வொரு பாசுரங்களிலும் முன்னடிகள் பகவானுடைய சேஷ்டித விசேஷங்களைப் பேசுவனவாகவும் பின்னடிகள் அந்த சேஷ்டிதாநுபவத்தில் தமக்குண்டான களிப்பைக் கனக்கக் கூறுவனவாகவும் அமைந்திருக்கின்றன. *நீசனேன் நிறையொன்றுமிலேன்* என்று நைச்சியாநுஸந்தானத்தின் பரம காஷ்டையிலே நிற்கின்ற ஆழ்வார் இங்கு “எனக்கினியார் நிகர் நீணிலத்தே” என்றும், “எனக்கார் பிறர்நாயகரே” என்றும் “மாறுளதோவிம் மண்ணின் மிசையே” என்றும் இங்ஙனே ஆவலிப்புடைமை தோற்றக் கூறுவது பரமஸாத்விகத்வத்திற்குக் குறையன்றோ என்று சங்கிக்கவேண்டா, குணாநுபவத்தாலுண்டான ஆனந்தம் தலைமண்டை கொண்டு அதன் பரீவாஹரூபமாக இங்ஙனே பேசுவது ஸ்வப்ரயத்ந பூர்வகமன்று. குணாநுபவம் பரவசமாக்கிப் பேசுவிக்கிறபடி. *நாவலிட்டுழிதருகின்றோம் நமன் தமர் தலைகள்மீதே மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வ! நின்னாமங்கற்ற ஆவலிப்புடைமை கண்டாய் அரங்கமாநகருளானே” என்பன போன்ற பாசுரங்கள் ஸாத்விகாஹங்கார ரீதியிலே அவதரித்தனவென்று கொள்க. உலகில் மதுபானம் பண்ணினார் தம்மையறியாமல் சொல்லுகிறபடியும் காணா நின்றோம், *எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே* என்ற பரம விலக்ஷண மதுவைப் பானம் பண்ணினார்க்குச் சொல்லவேணுமோ?



## 455. ஆறாம்பத்தில் ஐந்தாம் பதிகம்— துவளில்மாமணிமாடம்

ஆழ்வார்க்கு எம்பெருமானுடைய தன்மைகளை வருணிப்பதில் எவ்வளவு குதூஹலமோ அவ்வளவு குதூஹலம் தம்முடைய தன்மைகளை வருணிப்பதிலுமுண்டு. எம்பெருமானுக்கே மங்களாசாஸநம் பண்ணப்புகுந்த பெரியாழ்வார் *அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு* என்று தமக்கும் தாமே மங்களாசாஸநம் செய்துகொண்டார்; எம்பெருமானுடைய பெருமையைப் பாங்காக அநுபவிக்கவல்ல அடியார்கள் இல்லையாயின் எம்பெருமானிருந்து யாது பயன்? நிலா தென்றல் முதலானவை பரம போக்யமேயானாலும் அவை அநுபோக்தாக்களுக்கு உபயோகப்படாதவளவில் ‘காட்டிலெறித்த நிலாப்போலே’ என்னும்படி அவத்யம் பெறுகின்றனவன்றோ. அப்படியே, எம்பெருமானுடைய பெருமையும் அவனை நன்றாக அநுபவிக்கவல்லவர்களுடைய பெருமையிலே சொருகிநிற்கும். பாகவதர்களின் பெருமையைப் பேசுவதும் பகவானுடைய பெருமையைப் பேசுவதேயாகும். ஆனதுபற்றியே *திருமாலவன்கவி* என்று பகவத் கீர்த்தனமாகக்கொண்ட இத்திவ்யப் பிரபந்தத்திலே *பயிலுஞ்சுடரொளி *நெடுமாற்கடிமை* முதலான பதிகங்கள் பாகவத ப்ரபாவ கீர்த்தந பரங்களாகவும் அமைந்தன. பாகவதர்களுள் ஆழ்வார் சிறந்தவரன்றோ. ஆத்ம ப்ரசம்ஸை [அதாவது தற்புகழ்ச்சி அவத்யமானாலும் பகவத் விஷயத்திலுண்டான தமது ஈடுபாட்டைத் தாமே பேசிக்கொள்வது தகுதியேயாகும். இது அவத்யமன்று. ஆனால் ‘எம்பெருமான் விஷயத்தில் நான் இப்படியிப்படி யீடுபட்டிருக்கிறேன்’ என்று வ்யக்தமாகச் சொல்லிக்கொள்வதில் ஆழ்வார்க்குச் சிறிது ஸங்கோசமுண்டாயிற்றுப் போலும். எம்பெருமானும் தன்னுடைய பெருமையைத் தானே ஒரு பெரிய பிரபந்தமாக வெளியிட்டுக்கொள்ள வேணுமென்று ஆசைப்பட்டு, அப்படி நாமே நம்பெருமையைப் பேசிக்கொண்டால் அது சுவைமிக்கதாகாது என்று பார்த்து நம்மாழ்வார்மீது ஆவேசித்து அவர் வாக்காலே தானே தன் பெருமைகளைப் பேசிவிட்டுக் “குருகூர்ச்சடகோபன் சொன்ன” என்று ஆழ்வார்மேலே ஆரோபணம் செய்தான் என்று சொல்லுவதொன்றுண்டு; இவ்விஷயத்தை ஆழ்வார் தாமே மேலே ஏழாம்பத்தில் *என்றைக்குமென்னை* என்கிற திருவாய்மொழியிலே நன்கு வெளியிடக் காண்கிறோம். அதுவேபோல இப்போது ஆழ்வார் தாமும் தம் பெருமையைத் தாமே வெளியிட்டுக்கொள்ளவேணுமென்று ஆசைப்பட்டு அது சுவையுடைத்தாவதற்காக அதை வேறொருவர் தலையில் ஏற்றப்

பார்த்துத் தோழிமார் பாசுரமாக வைத்து இத்திருவாய்மொழியை அமைத்தருளுகின்றார்; ஆழ்வார் பகவத் விஷயத்திலீடுபட்டிருக்கும் பெருமையை வேறு சில பாகவதர்கள் எடுத்துக் கூறுவதாக உள்ளுறை பொருள் காண்க.

## 456. ஆறும்பத்தில் ஆறும்பதிகம்-மாலுக்குவையமளந்த

கீழ்த் திருவாய்மொழி தோழிபாசுரமாகச் சென்றது; இத்திருவாய்மொழி தாய்பாசுரமாகச் செல்லாநின்றது. இதில் பாசுரந்தோறும் 'இழந்தது' என்று வாராநின்றது. சங்கை யிழந்தாள், மாமைநிறமிழந்தாள், சாயையிழந்தாள், மாண்பிழந்தாள், கற்பிழந்தாள், கட்டிழந்தாள் என்றிப்படிப்பலவும் இழந்ததாகச் சொல்லப்படுகிறது. இதனால், பகவத் விஷயத்தில் ப்ராவண்யம் அதிகரித்தமையும், அபேக்ஷிதமானபடி ஸம்ச்லேஷம் கிடையாமையாலே மேனிமெலிந்தமையும், கட்டுக்கு அடங்காமையுமாகிறவிவை சொல்லப்படுகின்றன வென்றுணர்க. கீழ் நாலாம்பத்தில் *ஏறாளுமிறையோனும்* என்கிற திருவாய்மொழியில் "மாறாளன்கவராத மணிமாமைகுறைவிலமே" "மணிமாயன்கவராத மடநெஞ்சால் குறைவிலமே" என்றிப்படித் தாமே வேண்டாவென்று உபேக்ஷித்த ஆத்மாத்மீயங்களெல்லாம் இப்போது தன்னடையே கழிந்து செல்லுகிறபடி சொல்லுகிறது. எம்பெருமானுடைய ஒரோ அவதார சேஷ்டிதங்களையும் ஒரோ திவ்யகுணங்களையும் நினைக்க நினைக்க, தாம் பரவசராய் மேனிமெலிந்து ஆவி நீராயுருகுகின்றமையை ஆழ்வார் அந்யாபதேசத்தாலே அருளிச்செய்கிறாராயிற்று.

## 457. ஆறும்பத்தில் ஏழாம்பதிகம்—உண்ணுஞ்சோறு

கீழ்த்திருவாய்மொழி போலே இத்திருவாய்மொழியும் தாய்பாசுரமாகவே செல்லுகிறது. படுக்கைத் தலையிலே பராங்குச நாயகியாகிய மகளுடன் கூடவே படுத்துக் கொண்டிருந்து மகளின் விரஹதாபத்துக்கு உபசாரங்கள் பண்ணிக்கொண்டிருந்த திருத்தாயார் படுக்கையைத் தடவிப்பார்த்தாள்; எங்கும் தேடிப்பார்த்தாள்; மகளைக் கண்டிலள் 'பேய் கொண்டதோ? பிசாசு கொண்டதோ?' என்று சங்கிக்கலாமாயினும் இவளுக்குத் திருக்கோளூரெம்பெருமானிடத்திலிருந்த ஆவலின் மிகுதியை நன்கு அறிந்தவளாகையாலே அத்திருப்பதிக்கே சென்றிருக்கவேணுமென்று அறுதியிட்டு அதை வெளியிட்டுரைக்கும் பாசுரமாகச் செல்லுகிறது இத்திருவாய்மொழி. திருக்கோளூர் சென்று அவ்விடத்து எம்பெருமானோடே நித்யஸம்ச்லேஷம் பண்ணவேணுமென்றிருந்த ஆழ்வாருடைய விருப்பம் இத்திருவாய்மொழியாகப் பரிணமித்து விட்டதுபோலும்.



## 458. ஆறாம்பத்தில் எட்டாம் பதிகம்—பொன்னுலகாளீரோ

தூதுவிடும்பதிகம் இது. இதில் *வானவர்கோனைக் கண்டு யாமிதுவோ தக்கவாறென்ன வேண்டும்* என்ற பாசுரத்தையும் *எங்குச் சென்றாகிலுங் கண்டு இதுவோ தக்கவாறென்மின்* என்கிற பாசுரத்தையும் உயிராகக் கொண்டு இத்திருவாய்மொழி—பரத்வத்திலும் அந்தர்யாமித்வத்திலும் தூது விட்டபடியாமென்பர்.

## 459. ஆறும்பத்து ஒன்பதாம் பதிகம்—நீராய் நிலனாய்

இப்படி தூதப்ரேஷணம் பண்ணியும் எம்பெருமான் வரக்காணாமையாலே அவனைத் தம்முடைய பெரிய ஆர்த்தியோடே கூடத் திருநாட்டிலே கேட்கும்படி கூப்பிட்டழைக்கிறார். தூது விடுவதிற்காட்டிலும் தமது ஆர்த்தநாதமே கார்யகரமாமென்று கொண்டார். இப்பதிகத்தின் ஸாரத்தை கூறுகின்ற மணவாள மாமுனிகள் நூற்றந்தாதியில்,

> "நீராகிக் கேட்டவர்கள் நெஞ்சழிய
> மாலுக்கும் ஏறார் விசும்பில் இருப்பு அறிதாம்"

என்று அருளிச் செய்கையாலே இப்பதிகத்தில் ஆழ்வாருடைய ஆர்த்தியின் கனம் மிக மிக்கதென்பது விளங்கும்.

## 460. ஆறும்பத்தில் பத்தாம் பதிகம்—உலகமுண்ட பெருவாயா

கீழ்த் திருவாய்மொழியில் அபரிமிதமான ஆர்த்தியோடே பரமபதத்தளவும் கேட்கும்படி கூப்பிட்டார். அங்ஙனே கூப்பிடச் செய்தேயும் எம்பெருமான் வந்து முகங் காட்டாமையாலே மிகவும் தளர்ந்து நோவுபட்ட ஆழ்வார், அப்பெருமான் ஸ்ரீவைகுண்டத்திலிருந்து நிலவுலகத்தே வந்து ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள் பண்ணி அக்காலத்திலே யிழந்தார்க்கும் இழக்கவேண்டாமல் திருவேங்கட மலையிலே நித்ய ஸூரிகளோடு நித்ய ஸம்ஸாரிகளோடு திர்யக்குக்களோடு வாசியற எல்லாரும் வந்து ஒருமிடறாக ஆச்ரயிக்கலாம்படி நித்ய ஸந்நிதி பண்ணியிருக்கிறபடியை யநுஸந்தித்து அத்திருவேங்கடமுடையான் திருவடிகளிலே பெரிய பிராட்டியார் முன்னிலையாகத் தம்முடைய அநந்யகதித்வத்தை விண்ணப்பஞ் செய்து சரணம் புகுகிறார் இத்திருவாய்மொழியில்.

## 461. ஏழாம்பத்தில் முதல் பதிகம்—உண்ணிலாவிய

எம்பெருமான் கீதையிலே *தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா* என்று சொல்லிவைத்து, உடனே *மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாம் ஏதாம் தரந்தி தே* என்றும் சொல்லி வைத்தான். அதாவது—ஒரு குருவி பிணைத்த பிணை ஒருவராலவிழ்க்க வொண்ணாதாப்போலே தான் பிணைத்த மாயப் பிறவிப் பிணையானது ஒருவராலும் கழற்ற வொண்ணாதது என்று முன்னம் சொல்லிவைத்து, என் திருவடிகளையே தஞ்சமாகப் பற்றுவார் யாவரோ, அவர்கள் அந்தப் பிணையை எளிதாகக் கழற்றிக் கொள்ள வல்லார்கள் என்று பின்னைச் சொன்னான். அந்தத் திருமுகப் பாசுரத்தில் நம்பிக்கையாலே ஆழ்வார் கீழ்த்திருவாய்மொழியில் பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டுத் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ஆர்த்தராய்ச் சரணம் புகுந்தார் மாயப் பிறவி மயர்வறுத்து நித்யகைங்கர்ய ஸாம்ராஜ்யம் பெறவேணுமென்று. அந்த சரணாகதி பலித்ததில்லை. பரதாழ்வானுடைய சரணாகதிக்கு முன்னே தேவதைகளின் சரணாகதி கிடந்ததாய் அதற்குப் பலன் அளித்த பின்னரே பரத சரணாகதிக்குப் பலன்தர வேண்டினாப்போலே — இங்கும் ஆழ்வாருடைய சரணாகதிக்கு முன்னே இவ்வுலகில் சில ஸம்ஸாரிகள் சரணாகதி செய்திருப்பர்கள் போலும்; நாங்கள் வாழலாம்படி ஸர்வோத்துங்கமானதொரு பிரபந்தத்தை உபகரித்தருள வேணுமென்று சிலர் சரணாகதி செய்திருந்தார்களாகவேணும்; அதுதான் முந்தின சரணாகதியாகையாலே அதற்குப் பலனளித்த பின்னரே ஆழ்வாருடைய சரணாகதிக்குப் பலனளிக்கவேண்டி எம்பெருமான் தாழ்த்தான். எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குணவிபூதி சேஷ்டிதங்களைக் குறையறப் பேசவல்லதொரு பிரபந்தம் திருவவதரிக்கவேணுமென்று ஏற்கெனவே சிலர் சரணாகதி செய்திருக்க வேண்டுகையாலே முந்துற முன்னம் அதற்குப் பலனளிக்க வேண்டி எம்பெருமான் ஆழ்வாருடைய சரணாகதியைப் பழுதாக்கினானென்னலாம். இவருடைய சரணாகதிக்கு இப்போதே பலன்தந்தால் திருவாய்மொழி அரைகுறையாயன்றோ போயிருக்கும். முந்தின சரணாகதிக்குப் பலன் முற்றிற்றாகாதே. திருவாய்மொழி தலைக்கட்ட வேண்டி ஆழ்வாரை இன்னமும் இவ்விபூதியிலே வைத்தானாயிற்று. முன்னமே இவர் "பாவியேனைப் பல நீ காட்டிப் படுப்பாயோ" என்று வயிறெறிந்திருக்கிறாரே; அந்த வயிற்றெரிச்சல்தானே மேலும் தலையெடுத்து *அந்தோ வடியேனுன பாத மகலகில்லேனிறையுமே யென்று சொன்னவடியேனை, அகற்றுமவற்றின் நடுவே யிருத்தித் துடிக்கவைப்பது தருமமோவென்று கூப்பிடுகிறார் இத்திருவாய்மொழியில்.



## 462. ஏழாம்பத்தில் இரண்டாம் பதிகம்— கங்குலும் பகலும்

கீழே ஆறாம்பத்தின் ஈற்றுத் திருவாய்மொழியில் — பெரிய பிராட்டியார் முன்னிலையாகத் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே விழுந்து சரணம் புகுந்தவிடத்திலும் ஆழ்வார் தாம் எம்பெருமானுடைய திருவடிவாரத்திலே சென்று நிற்கக் கண்டிலர். இன்னமும் இந்த ப்ரக்ருதி மண்டலத்திலேயே தம்மைக் கண்டார். சப்தாதி விஷயங்களும் இந்திரியங்களும் நடையாடுகிற ஸம்ஸாரத்திலே வைத்தபோதே தன் பக்கலில் நின்றும் நம்மை அகற்றப் பார்த்தானன்றோவென்று கருதிப் புலியின் வாயிலே அகப்பட்டாற்போலே கூப்பிட்டார் கீழ்த் திருவாய்மொழியிலே. இந்த ஆர்த்தியை எம்பெருமான் அறியாதவனல்லன்; "எப்படியும் இவர்க்கு நாம் பேறு பெறுவிப்பது திண்ணம்; இவர் அங்கே போந்து செய்யும் காரியத்தை இங்கே யிருந்துதான் செய்யட்டுமே" என்றிருந்தானவன். மக்களைப் பட்டினியிட்டு வைத்தும் வந்த விருந்தினரைப் பேணுவாரைப்போலே 'இவ்வாழ்வார் தாம் நாலுநாள் நோவுபட்டாராகில் படுகிறார்; இவருடைய திவ்வியப் பிரபந்தத்தைக் கொண்டு நாட்டை வாழ்விப்போம்' என்றிருந்தான். இவர் ஒரு நொடிப்பொழுது இங்கிருந்தாலும் எம்பெருமான்றன்னாலும் திருத்த வொண்ணாத ஸம்ஸாரம் எவ்வளவோ திருந்தி வாழும்படியாயன்றோ விருப்பது. அதற்காகவே இவரை இங்கு வைத்தான் அவன். "அந்தோ! இக்கொடுவுலகத்தில் இருப்புப் பொருந்தாத நம்மைக் கொண்டோ இவன் காரியம் நிர்வஹிக்கப் பார்ப்பது! இந்நிலத்தில் இருப்புப் பொருந்துவார் பலருண்டே; அன்னவர்களில் ஆரேனுமொருவரைக்கொண்டு காரியம் பார்க்கலாகாதோ!" என்று துடிக்கிறார் ஆழ்வார். இங்கு இருப்புப் பொருந்தாதாரைக்கொண்டே காரியம் பார்க்கவேணும் என்பதே எம்பெருமானுடைய பிடிவாதமாயிற்று. இப்படி எம்பெருமானைப் பிரிந்து துடிக்கவேண்டியதாயிற்றேயென்று நிலைகலங்கின ஆழ்வார் தாமான தன்மையை யிழந்து தமது பரிதாபத்தைத் தம் வாயாலே சொல்லகில்லாதாராய் தாய் சொல்லவேண்டும்படியான தளர்த்தியுண்டாக, திருத்தாயார் பாசுரமாகச் செல்லுகிறது இத்திருவாய்மொழி. திருத்தாயார் இப்பராங்குச நாயகியைப் பெரிய பெருமாள் [ஸ்ரீரங்கநாதர்] திருவடிகளிலே யிட்டு வைத்துக்கொண்டிருந்து இவள் அழுவது தொழுவது மோஹிப்பது பிரலாபிப்பது அடைவுகெடப் பேசுவது நெடுமூச்செறிவது அதுவும் மாட்டாதொழிவது ஸ்தப்தையாயிருப்பது முதலியவற்றை ஒவ்வொன்றாக எடுத்துச் சொல்லி 'இவள் திறத்திலே நீர் என் செய்வதாகத் திருவுள்ளம் பற்றியிருக்கிறீர்?' என்று கேட்கிறபடியாய்ச் செல்லுகிறதாயிற்று.

### 463. ஏழாம்பத்தில் மூன்றாம் பதிகம்— வெள்ளைச்சுரிசங்கு

கீழ்த் திருவாய்மொழியிலே ஆழ்வாருடைய துயர் பேச்சுக்கு நிலமல்லாமேயிருந்தது. பெரிய பெருமாளுடைய திருக்குணங்களையும் வடிவழகு முதலானவற்றையும் பராங்குசநாயகியான தான் வாய் வெருவியும் திருத்தாயார் சொல்லக்கேட்டும் சிறிது தரிக்கும்படியாயிற்று. மோஹமும் தெளிந்தது. பின்பு அவனைச் சென்று கிட்டியே தீர்வேன் என்னுமாற்றாமை பிறந்து, *தென்திருப்பேரெயில் வீற்றிருந்த மகரநெடுங்குழைக் காதனிடம் போகவேணுமென்று புறப்பட, பழையபடியே தோழிமாரும் தாய்மாரும் சூழ்ந்துகொண்டு 'உனக்கு இத்தனை ப்ராவண்யமாகாது: நமக்கு இது பழியாய் விளையும்' என்ன, 'நீங்கள் தடை சொல்லுகிறவற்றால் ஒரு பயனுமுண்டாகமாட்டாது. நான் மகர நெடுங்குழைக்காதனாலே நெஞ்சு பறியுண்டேன்; ஆனபின்பு நானே போனதாகாமே நீங்கள் என்னோடு உடன்பட்டு அங்கே கொண்டுபோய்ச் சேர்க்கப்பாருங்கள்' என்று, பராங்குச நாயகி தனக்குப் பிறந்த துணிவை அவர்களுக்குச் சொல்லுகிறதாகச் செல்லுகிறது இத்திருவாய்மொழி.

### 464. ஏழாம்பத்தில் நான்காம் பதிகம்—ஆழியெழ

கீழ்த்திருவாய்மொழியிலே ஆழ்வாருடைய பதற்றம் அளவு கடந்திருந்தது. *மண்திணி ஞாலமுமேழ்கடலும் நீள் விசும்புங் கழியப் பெரிதாகத் தாங்கொண்ட காதலை வெளியிட்டு, இப்படி கரைபுரண்ட காதலையுடைய நான் இங்கே யிருக்ககில்லேன், தென்திருப்பேரையில் சென்று சேர்வேனத்தனையென்று சொல்ல, தோழிமார் தாய்மார் முதலானோர் இது ஸ்வரூபஹானியென்று சொல்லித் தடுத்தவளவிலும் கேட்கமாட்டாதவராய்ப் பதறியே நின்ற ஆழ்வார் புறப்பட்டுச் செல்லப்பார்த்தார். *காலாழும் நெஞ்சழியுங் கண் சுழலும்* என்னும்படியான நிலைமையிலே நின்றிருந்தாராகையாலே புறப்பட்டுச் செல்ல வலிமையற்றிருந்தார். வாய்கொண்டு பேசவும் முடியாதபடி பலமழிந்து கிடந்தவிவர்க்கு ஒரு வழியாலே பலமுண்டாக்க வேணுமென்றுபார்த்தான் எம்பெருமான். தன்னுடைய விஜயாபதான பரம்பரைகளைக் காட்டிக் கொடுத்தால் அவற்றைக் கண்டு பலம் மிக்குத் தரித்திருப்பர் என்று கருதி, உலகளந்தது, கடல் கடைந்தது, நிலமிடந்தது, பிரளயத்திலே உலகமுண்டது முதலான அபதானங்களைக் காட்டிக்கொடுத்து, 'ஆழ்வீர்! இவற்றை யநுஸந்தித்துத் தரித்து வாழும்' என்ன, ஆழ்வாரும் அவ்வபதானங்களை ஸமகாலத்திற்போலே கண்டு பாசுரந்தோறும் ஒவ்வொரு அபதானமாகப் பேசித்தரிக்கிறார் இத்திருவாய்மொழியில்.



### 465. ஏழாம்பத்தில் ஐந்தாம் பதிகம்— கற்பாரிராமபிரானை

கீழ்த்திருவாய்மொழியில் எம்பெருமானுடைய சில விஜய சேஷ்டிதங்களைக் காணப்பெற்று அநுபவித்தவாழ்வார் அப்படிப்பட்ட மற்றுஞ் சில சரிதைகளையும் வாயாரப்பேசி, 'அந்தோ! இப்படிப்பட்ட பகவத் குணங்களை யநுபவிக்க இட்டுப் பிறந்தும் ஸம்ஸாரிகள் அந்யபரராயிருப்பது என்னோ வென்று வியந்தும் திருவுள்ளம் நொந்தும் பேசுகிறதாய்த்து இத்திருவாய்மொழி.

### 466. ஏழாம்பத்தில் ஆறாம்பதிகம்—பாமருமூவுலகும்

கீழ்த்திருவாய்மொழியில் பரோபதேசம் ஸ்பஷ்டமாக இல்லையாயினும் பரோபதேசத்திலேயே முழுநோக்காயிருக்கும். *கற்பாரி ராமபிரானையல்லால் மற்றுங் கற்பரோ *நாரணற்காளன்றியாவரோ *கண்ணற்காளன்றியாவரோ* என்று இங்ஙனே பாட்டுத்தோறும் படர்க்கையாகவே அருளிச் செய்திருந்தாலும் முன்னிலையாக அருளிச்செய்வதிலேயே ஆழ்வாருடைய திருவுள்ளம் ஊன்றியிருக்கும். 'பாவிகாள்! இழந்து போகிறீர்களே!' என்று ஸம்ஸாரிகளை நோக்கிப் பரிதபித்துக் கூறுதலும், 'அப்படி இழவாதே கொள்ளுங்கள்' என்று உபதேசித்ததுமே கீழ்த்திருவாய்மொழிக்கு ப்ரமேயமாயிருக்கும். அங்ஙனே பிறருடைய இழவுக்கு நொந்து பேசின ஆழ்வார் தம்மை நிரூபித்துப் பார்த்தார். பிறர் இழந்திருப்பது நாஸ்திக்யத்தாலே; அப்படிப்பட்ட இழவு தமக்கு இல்லையானாலும், எம்பெருமானைப் பரிபூர்ணமாக அநுபவிக்கவேணுமென்கிற விருப்பம் தமக்குக் குறையற உண்டாயிருக்கச் செய்தேயும் அவ்வநுபவம் பெறாமையினாலேயான இழவு பொறுக்கவொண்ணாதிருந்ததனால், தம்முடைய ஆர்த்தியெல்லாம் தோற்றப் பரமபதநாதனுடைய திருச்செவியளவும் படும்படியாகப் பெருமிடறுசெய்து கூப்பிடுகிறார் இத்திருவாய்மொழியில். அம்மங்கியம்மாள் என்னுமாசிரியர் "இத்திருவாய்மொழியின் சப்தராசிகளை நாம் வாயாற் சொல்லவும் காதாற் கேட்கவும் அதிகாரிகளே தவிர, இதில் ஆழ்வார்க்குச் செல்லுகின்ற ஆர்த்தி இப்படிப்பட்டதென்று எடுத்துரைக்க நாம் அதிகாரிகளல்லோம்" என்பராம்.

### 467. ஏழாம்பத்தில் ஏழாம் பதிகம்—ஏழையராவி

கீழ்த் திருவாய்மொழியிலே ஆழ்வார் கூப்பிட்ட கூப்பீடு பரமபதத்தளவுஞ் சென்று பரவாஸுதேவனுடைய திருச்செவியில் விழுந்திருக்குமே. அது கேட்ட அப்பெருமான் ஆழ்வாரை ஒருவாறு

தேற்றுவிக்க உருவெளிப்பாடு தோன்றச் செய்தருளினன். அதாவது அவனுடைய திவ்யாவயங்களை மாநஸஸாக்ஷாத்கார விஷயமாகப் பெற்றுராழ்வார். கண்ணுக்கு ப்ரத்யக்ஷமாகத் தோற்றுமே நெஞ்சுக்கு மாத்திரம் ஸாக்ஷாத்கார விஷயமாகை உருவெளிப்பாடாம். அது இத்திருவாய்மொழியில் செல்லா நின்றது. இது பிராட்டி நிலைமையிலே நின்று பேசுந் திருவாய்மொழி. தாய்மார்களையும் தோழிமார்களையும் நோக்கி "எம்பெருமானுடைய வடிவழகு எனக்கு ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமாய்த் தோற்றித் தனித் தனியும் திரளவும் ஒருமுகஞ்செய்து நலியா நின்றதே! இந்த நலிவுக்கு ஆற்றுவேனு? உங்கள் பேச்சுக்கு அஞ்சுவேனு?" என்று அலமந்து பேசுகிறுளாயிற்று பராங்குச நாயகி. கீழ் ஐந்தாம்பத்தில் *எங்ஙனேயோ வன்னைமீர்காள்* என்கிற திருக்குறுங்குடிப் பதிகமும் உருவெளிப்பாடாய்ச் சென்றது; அதிற்காட்டில் இத்திருவாய்மொழிக்கு வாசி யென்னென்னில்; அங்கு ப்ரீதியும் அப்ரீதியும் ஒரு நிகராயிருக்கும்; இங்கு அப்ரீதி தலையெடுத்திருக்கும். தொடங்கும்போதே "இணைக்கூற்றங் கொலோ!" என்கையாலே பாதகத்வத்தினுறைப்பு தெரியவரும்.

## 468. ஏழாம்பத்தில் எட்டாம் பதிகம்—மாயாவாமனனே

கீழ்த்திருவாய்மொழியிலே ஆழ்வார் உருவெளிப்பாட்டாலே நோவுபட்டார். அந்த நோவைப் பரிஹரிக்க எம்பெருமானுல் ஆகாததன்றே. ஆனாலும் சில காரணங்களாலே அவன் திருவுள்ளம் ஒரு ஸமய விசேஷத்தை எதிர்பார்த்திருந்தபடியாலே தாமதிக்கலாயிற்று. அந்தத் திருவுள்ளத்தை ஆழ்வார் தாம் அறியாதவரல்லரே. அறிந்து வைத்தும் ஆறியிருக்குமியல்வின ரல்லரே. உயிர் துறந்து முடியவேண்டும்படியான நிலைமை நேர்ந்திருக்கச் செய்தேயும் எம்பெருமான் தம்மை முடியவொட்டாதே நடத்துகிறபடியைக் கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டார். 'இப்படியொரு ஆச்சரியமிருந்தபடியென்!' என்று எம்பெருமானையே நோக்கிக்கூற, 'ஆழ்வீர்! இந்தவொரு ஆச்சரியந்தானே என்னிடத்தில் நீர் அறிந்தது? என் விசித்திரங்களையெல்லாம் காட்டுகிறேன் பாரும்' என்று சொல்லி எம்பெருமான் தன்னுடைய விருத்த விபூதித்வத்தைக் காட்டியருள, அது கண்டு ஆழ்வார் விஸ்மிதராய்ப் பேசுகிறுர் இத்திருவாய்மொழியில்.

## 469. ஏழாம்பத்தில் ஒன்பதாம் பதிகம்—என்றைக்கும்.

கீழ்த்திருவாய்மொழி சென்றது எம்பெருமானுடைய ஒரு ஆச்சர்ய சாதுரியத்தாலேயாயிற்று. ஆழ்வார் ஒன்று கேட்க, எம்பெருமான் ஒன்றைச் சொல்லி அவர் கேட்டதை மறப்பிக்குமியல்



வினுகையாலே ஒவ்வொரு ஸமயத்திலே ஒவ்வொரு குணவிஷ்காரத்தைப் பண்ணுவதும் அதை ஆழ்வார் அனுபவிக்குமாறு செய்வதும் அத்தாலே சிறிது போது கழியும்படியாகச் செய்வதும் ஆக இப்படியே நடந்து வாராநின்றது. இப்படிப்பட்ட எம்பெருமானை இன்று மடிபிடித்துக் கேட்டு உத்தரம் பெற்றேயாக வேணுமென்கிற தீவிரமான ருசி ஆழ்வார்க்கு உண்டாயிற்று. அதனுல் எம்பெருமானை வலியப் பிடித்துக்கொண்டு 'பிரானே! என்னுடைய ஆற்றுமையில் குறை கண்டாயோ? உன்னுடைய சக்தியில் குறை கண்டாயோ? ஏதுக்கு இப்படி யென்னை நலியுமவற்றின் நடுவே வைத்து நலியா நின்றுய்? *பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்புமாய் இந்நின்ற நீர்மையிலே மிக்க அருவருப்புக் கொண்ட வென்னை இக்கொடிய நிலத்திலே வைத்துக் குமைப்பது பரமகாருணிகனுன உனக்குப் பொருந்துமோ? என்ன திருவுள்ளங்கொண்டு என்னையிங்கு இட்டு வைத்திராநின்றுய்? இது தன்னை இன்று நீ சொல்லியேயாகவேணும்' என்றுராழ்வார். அதுகேட்ட எம்பெருமான் 'ஆழ்வீர்! என் கருத்தை நீர் தாம் அறியீரோ? அறிந்து வைத்தும் அறியாதவர் போலக் கேட்கின்றீரே; நமக்கும் நம்முடையவர்கட்கும் போதுபோக்குக்கு உரித்தான செவிக்கினிய செஞ்சொற்களைப் பாடித்தருகைக்காகவன்றே நாம் உம்மை இந்நிலத்திலே வைத்திருப்பது; அப்படியிருக்க ஏன் பதறுகிறீர்?' என்ன, அதுகேட்ட ஆழ்வார் 'பிரானே; இதுவோ உன் கருத்து? ஸர்வேச்வரனுய் அவாப்தஸமஸ்தகாமனுயிருந்துள்ள உனக்கும் ஒரு குறை யுண்டாகி அக்குறையை என்னுலே தீர்த்துக்கொள்ளப் பார்ப்பதாகிறவிது நன்றுயிருந்தது! உனக்குச் சில ப்ரபந்தங்கள் வேண்டினுல் அவையியற்றுவதற்குரிய அறிவு ஆற்றல் முதலியவை நிரம்பிய வ்யாஸபராசர வால்மீகி முதலானுரைக் கொண்டும் *இன்கவிபாடும் பரமகவிகளான முதலாழ்வாரைக் கொண்டும் பாடுவித்துக் கொள்ளலாகாதா? நீசனேன் நிறையொன்றுமிலேனைக் கொண்டு பாடுவித்துக் கொள்ளத் திருவுள்ளம் கொண்டபடி என்னே! இது என்ன நீர்மை! இது என்ன வாத்ஸல்யம்!' என்று பெருநன்றி பாராட்டி, 'இதற்கீடாக நான் செய்வதொரு கைம்மாறு கண்டிலேனே!' என்று தடுமாறுவதாய்ச் செல்லுகிறது இத்திருவாய்மொழி.

## 470. ஏழாம்பத்தில் பத்தாம் பதிகம்—இன்பம் பயக்க.

எம்பெருமான் தம்மைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக் கொண்ட பேருதவிக்குக் கைம்மாறு ஒன்றுங் காணுமே தடுமாறினுர் கீழ்த்திருவாய்மொழியில். இப்படிப்பட்ட இவருடைய தடுமாற்றத்தை யாற்றுதற்காக எம்பெருமான், 'ஆழ்வீர்! நீர் ஏன் தடுமாறு

கின்றீர்? நீரும் ஒன்று செய்து நெஞ்சாறல் தீர்ந்தவராம்படி பண்ண நாம் கருதியிருக்கின்றோம்; பண்டு திருவயோத்யையிலே நாம் குசலவர்கள் வாயாலே ஸ்ரீராமாயணம் செவிசாத்தினோமென்று கேள்விப்பட்டிருப்பீரே; அப்படியே திருவாறன்விளையிலே திருவாய்மொழி கேட்பதாகப் பாரித்திருக்கின்றோம். ஆனால் ஸ்ரீராமாயணம் கேட்டபோது நாம் பிராட்டியைப் பிரிந்திருந்தோமாதலால் தனியேயிருந்து கேட்டோமென்று ஒரு குறையுண்டு. இப்போது அப்படியன்றிக்கே நாமும் நம் பெண்டுகளுமாயிருந்து கேட்க அறுதியிட்டிருக்கின்றோம்; நீர் அங்கே வந்து திருவாய்மொழி கேட்பித்து ஒருவாறு நெஞ்சாறல் தீரப்பெறலாமே' யென்று பணிக்க, அது கேட்ட ஆழ்வார், 'என்னைக் கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக் கொண்ட உபகாரத்தளவோடு நில்லாமல் அதுகேட்கவும் பாரியா நின்றானே! இது என்ன மஹோபகாரம்!' என்று உவகை தலைமண்டை கொண்டு அந்தத் திருவாறன்விளைத் திருப்பதியிற் சென்று திருவாய்மொழி கேட்பித்தலாகிற கைங்கர்யத்தைச் செய்யப் பாரிக்கிறார் இத்திருவாய்மொழியினாலே.

## 471. எட்டாம்பத்தில் முதல்பதிகம் — தேவிமாராவார்

கீழ்ச்சென்ற பதிகத்தில், திருவாறன்விளையென்னும் திருப்பதியிலே சென்று அங்கு எம்பெருமான் பெரியபிராட்டியாரும் தானுமாகத் திருவாய்மொழி கேட்கைக்கு விருப்பத்தோடிருக்கிற விருப்பிலே நாம் திருவாய்மொழி கேட்பித்து மற்றுஞ் சில கைங்கரியங்களையும் பண்ணி யநுபவிப்போமென்று பாரித்தார்: அது பாரிப்பளவிலே நின்றதத்தனையொழிய நினைத்தபடி நிறைவேறப் பெற்றதில்லை. அதனால் ஆழ்வார்க்கு எம்பெருமானுடைய சில திருக்குணங்களில் அதிசங்கை தோன்ற, அதனை வெளியிடுவது இத்திருவாய்மொழி. பிராட்டிமார் அருகே யெழுந்தருளியிருக்க, நித்யஸூரிகளுமுண்டாயிருக்க, நினைத்தபடி காரியஞ்செய்து தலைக்கட்டவல்ல சக்தியும் அவனுக்குண்டாயிருக்க, அடியார்கள் விரும்பினபடி திருமேனிகளைப் பரிக்ரஹித்துவந்து உதவுமியல்வினனாயுமிருக்க, தமக்கும் அபிநிவேசத்தில் குறையில்லாதிருக்க, நினைத்த பரிமாற்றம் பெறாதொழியவே ஆழ்வார்க்கு வெறுப்பு உண்டாயிற்று: அதனால், எம்பெருமானையே நோக்கி 'பிரானே! நான் நினைத்திருப்பது மருள்கொல்? அடியார்களுக்கு நீ வசப்பட்டவனென்றும் எல்லாப் பொருள்களும் நீ யிட்டவழக்கென்றும் இப்படிச் சில குணங்களை நான் உன்னிடத்தில் இருப்பனவாகக் கொண்டிருந்தேன்: அக்கொள்கை உண்மையன்றோவென்று இப்போது அதிசங்கிக்க நேர்கின்றது: நானொருவன் தோன்றி உனக்கு இவை பொய்யாய்ப் போகின்றன போலும்!' என்று விண்ணப்பஞ் செய்கிறார். அசோகவனத்தில்



பிராட்டி "க்யாத: ப்ராஜ்ஞ: க்ருதஜ்ஞச்ச ஸாநுக்ரோசச்ச ராகவ:, ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோச: சங்கே மத்பாக்ய ஸம்க்ஷயாத்" என்று பெருமாளுடைய குணங்களிலே அதிசங்கை பண்ணினாற்போலுமிது. "கோவிந்தன் குணம்பாடி — ஆவிகாத்திருப்பேனே" என்கிறபடியே எம்பெருமானுடைய திருக்குணங்களைச் சிந்தனைசெய்தே தரித்திருக்கவேண்டியவர்கள் அவற்றில் அதிசங்கை பண்ணினால் பிறகு ஜீவித்திருக்க வழியில்லாமையாலே 'இங்ஙனே அதிசங்கை கொண்ட ஆழ்வாரை இனி நாம் இழக்க நேருமோ?' என்று எம்பெருமான் அதிசங்கைபண்ணி 'ஆழ்வீர்! இப்படியும் நீர் அதிசங்கை கொள்ளத் தகுமோ? நாம் உமக்கு ஒன்றும் செய்யவில்லையா? எவ்வளவு செய்திருக்கிறோமென்பதை நீர் தாமே ஆலோசித்துப்பாரும்: இவ்வளவு செய்த நாம் மேற் செய்யவேண்டியதையும் அடைவே செய்வோங்காணும்: வீணாக அதிசங்கை கொள்ளவேண்டா' என்று சொல்லி ஸமாதானம் பண்ண, ஆழ்வாரும் தேறி நின்று அவற்றை யநுஸந்தித்து இனியராகிறார்.

## 472. எட்டாம்பத்தில் இரண்டாம்பதிகம்—நங்கள் வரிவளை

எம்பெருமான் ஆச்ரித பரதந்திரன், ஸர்வ நிர்வாஹகன் என்றிருந்தோம்; இவையும் நம்மைத்தோற்றிப் பொய்யாகிறதோவென்று அவன் குணத்திலும், ஸ்வரூபத்திலும் அதிசங்கைபண்ணின ஆழ்வாரை ஒருவாறு தேற்றித் தெளிவித்தானெம்பெருமான் கீழ்த்திருவாய்மொழியில். உண்டான அதிசங்கை தீர்ந்தவளவேயல்லது தமக்கு அபேக்ஷிதமான பாஹ்ய ஸம்ச்லேஷத்தைப் பெற்றாரல்லரே ஆழ்வார். அதனால் ஆழ்வார்க்கு மற்றோர் அதிசங்கையுண்டாயிற்று; அதாவது — ஸம்ஸாரத்திலே நமக்கு நசையில்லையென்று நாம் எண்ணியிருக்கின்றோமானாலும் *உள்ளுவாருள்ளிற்றெல்லா முடனிருந்தறியும் ஸர்வவேச்வரனுடைய திருவுள்ளமறிய நமக்கு ஸம்ஸாரருசியிருக்கின்றது போலும். இல்லையாகில் எம்பெருமான் நம்மை உபேக்ஷிக்க ப்ரஸக்தியிராதே; உபேக்ஷிக்கக் காண்கிறோமாதலால், நமக்கு ஸம்ஸாரருசி இன்னமும் அறவில்லையென்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றியிருக்கக்கூடும். ஸர்வஜ்ஞனான அவன் அங்ஙனே திருவுள்ளம் பற்றினால் அது பொய்யாக இருக்கமாட்டாதே. நம்மையுமறியாமல் நமக்கு ஸம்ஸாரருசி உள்ளத்தினுள்ளே உறைகின்றதோ என்னவோ? என்கிற சங்கை உண்டாயிற்று. அதனால் ஆத்மாத்மீயங்களில் தாம் நசையற்றபடியை எம்பெருமான் திருவுள்ளத்திலே படுத்த நினைத்தாராழ்வார்; அதை நேராக விண்ணப்பஞ் செய்யாதே தோழியோடு ஸம்வாதமாகிற அந்யாபதேச முகத்தாலே அறிவிக்கிறபடியாயிற்று இத்திருவாய்மொழி. *காலம் பல சென்றுங் காண்பதாணை உங்களோடெங்களிடையில்லையே* என்றும் *பாதமடை

வதன் பாசத்தாலே மற்ற வன்பாசங்கள் முற்றவிட்டு* என்றுமுள்ள பாசுரங்கள் இத்திருவாய் மொழிக்கு உயிரானவை. இத்திருவாய்மொழியில் அந்யாபதேச ப்ரகாரமிருக்கிறபடி யென்னென்னில்;— ஸர்வேச்வரனோடு கலந்து பிரிந்தாளொரு பிராட்டி. மறுபடியும் அவன்தானே வரக்கண்டிருக்கை தவிர்ந்து தானே புறப்படுவாளாய் அவனிருந்த தேசத்தேறப் போகமுயல, இது கண்ட தோழிமார் முதலானார் ‘உனக்குப் படி கடந்து புறப்படுகையாகிறவிது ஆகாது காண்’ என்று ஹிதஞ் சொல்லி மீட்கப்பார்க்க; அவளைக் குறித்து, ‘பகவத் விஷயமொன்று தவிர மற்ற எதிலும் தனக்கு நசையில்லாத படியைச் சொல்லி அவர்களது பேச்சுக்கு இணங்கமுடியாமை கூறுகிறது.

## 473. எட்டாம்பத்தில் மூன்றாம்பதிகம் – அங்குமிங்கும்

கீழ்த் திருவாய்மொழியில் பத்தாம் பாட்டில் *ஓர் கோலநீல நன்னெடுங்குன்றம் வருவதொப்பான்* என்று எம்பெருமானுடைய திவ்யமங்கள விக்ரஹவைலக்ஷண்யத்தை யநுஸந்தித்தாரே ; அவ்வநுஸந்தானம் திருவுள்ளத்திலே மிக ஊன்றியிருந்தது. இப்படிப்பட்ட ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களுக்குக் கொள்கலமான இவ்வடிவுடனே ப்ரயோஜநாந்தரபரரான ப்ரதிகூலர்வர்த்திக்கிற இந்த நிலத்திலே தனியே வந்து உலாவுகின்றானே?’ பரிவர் ஒருவருமில்லையே, என்ன தீங்கு நேரிடுமோ ! என்று ஆழ்வார் வயிறெரிந்து பயப்பட, அதற்கு எம்பெருமான் “ ஆழ்வீர் ! நமக்குப் பரிகைக்கு முமுக்ஷுக்களும் முக்தரும் நித்யரும் உண்டு ; ஒரு குறையுமில்லை; வீணாக ஏதுக்கு அஞ்சுகின்றீர் ? அஞ்சவேண்டா ” என்றருளிச்செய்ய, ஆழ்வார் தாம் ஒருவாறு அச்சம் தீர்ந்தவரான படியை இத்திருவாய்மொழியிலே அருளிச் செய்கிறார். இதில், முதலில் *ஆளுமாளாராழியுஞ் சங்குஞ் சுமப்பார்தாம், வாளும் வில்லுங்கொண்டு பின் செல்வார் மற்றில்லை* என்ற பாசுரத்தை நோக்குமிடத்து ஆழ்வார் பரிந்து அஞ்சினமை தெரியும் ; மேலே *கலக்கமில்லாநல்தவ முனிவர் கரைகண்டோர் துளக்கமில்லா வானவரெல்லாந் தொழுவார்கள்* என்ற பாசுரத்தை நோக்குமிடத்து ஒருவாறு மனம் தேறினமை தெரியவரும்.

## 474. எட்டாம்பத்தில் நான்காம்பதிகம் – வார்கடாவருவி

எம்பெருமானே ஸம்ஸார மண்டலத்திலேவந்து அவதரித்துத் தனியே உலாவாநின்றான் ; ஸம்ஸாரிகள் தங்கள் தங்கள் அபேக்ஷிதம் பெற்று அகன்று போமவர்களேயொழிய இவனுக்கு ரக்ஷை தேடிப் பரிகிறவர்களாக இல்லையே!, இவனுக்கு என் வருகிறதோ ! என்று அஞ்சின ஆழ்வாருடைய அச்சம் கீழ்த்திருவாய்மொழியில் ஒருவாறு தீர்ந்திருக்கச் செய்தேயும் இன்னமும் இவர்க்கு நம்பக்கல் பரிவின் கனத்தாலே அச்சம் மறுவலிடக்கூடுமென்றெண்ணின எம்பெருமான் ‘ ஆழ்வீர் ! பிரதிகூலர்க்குக் கணிசிக்கவொண்ணாதபடி அரணுடைத்தான திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாற்றிலே மஹா சக்திமான்களான மூவாயிரம் வேதியர்கள் பரிந்து நோக்க அவர்களுடன் நாம் சேர்ந்து வாழ்கிறபடி பாரீர் ; நமக்கு அஸாதாரணமான வீர்ய பராக்ரமாதி குணஸம்ருத்தியையும் பாரீர் ’ என்று அவற்றைக் காட்டிக்கொடுக்க, அதனால் அச்சம் நன்றாகக் கெட்டு அவனது வடிவழகிலே நெஞ்சை வைத்து அநுபவித்து உகந்தபடியைத் தெரிவிப்பதாம் இத்திருவாய்மொழி. ஸ்ரீ விபீஷணாழ்வான் பெருமாள் திருவடிகளிலே வந்து சரணம் புக, இவனைச் சேர்த்துக்கொண்டால் பெருமாளுக்கு என்ன அவத்யம் வருமோவென்று கலங்கின ஸுக்ரீவ மஹாராஜாதிகளுக்கு அச்சந்தீருமாறு பெருமாள் *பிசாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந், அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம் இச்சந் ஹரிகணேச்வர* என்று தம்முடைய மிடுக்கைக் காட்டினது போலாமிது. அப்படி மிடுக்கைக் காட்ட அச்சந்தீர்ந்து *கிமத்ர சித்ரம் தர்மஜ்ஞ லோகநாத ஸுகாவஹ* என்று மஹாராஜர் இனியரானாப்போலே ஆழ்வாருமினியராகிறாரிங்கு.



## 475. எட்டாம்பத்தில் ஐந்தாம்பதிகம் – மாயக்கூத்தா

கீழே *அங்குமிங்கும், *வார்கடாவருவி என்கிற இரண்டு திருவாய்மொழிகளாலும் எம்பெருமானுக்கு ரக்ஷைதேடி ஸமாஹிதராய் நின்றார். *வார்கடாவருவியில், “ திருச்செய்ய கமலக்கண்ணும் செவ்வாயும் செவ்வடியும் செய்யகையும் திருச்செய்ய கமலவுந்தியும் செய்ய கமலை மார்பும் செய்யவுடையும் திருச்செய்ய முடியுமாரமும் படையும் திகழ என் சிந்தையுளானே ” என்று உள்ளம் பூரித்து உடல் பூரித்து அநுஸந்தித்த வடிவழகு திருவுள்ளத்திலே வேரூன்றியிருந்தபடியாலே அவ்வடிவழகைக் கண்ணாரக் கண்டு பாஹ்யஸம்சலேஷம் பண்ணவேணுமென்று அபேக்ஷை பிறந்து, அது பெருமையாலே ‘ கீழ்ப் பல திருவாய்மொழிகளிலும் பட்ட க்லேசங்களும் இதற்கு ஈடல்ல ; ஆழ்வாருடைய க்லேசங்களிலே இது நிகரற்ற க்லேசம்’ என்னும்படியாக நொந்து காட்டுத்தீ காதுவினாரைப்போலே தப்தராய், தம்மிற்காட்டிலும் ஆகுலங்களான கரணங்களையுடையராய் ‘ என் விடாயெல்லாம் தீரும்படி திவ்யாவயவங்களோடே வரவேணும், அழகிய திருவபிஷேகத்தோடே வரவேணும், அகிழய வடிவோடே வரவேணும், மேகம் போலே வரவேணும், உதய காலத்து ஆதித்யனைப் போலே பெரிய புகரோடே வர வேணும் ’ என்றிப்படி கூப்பிட்டு, பின்னையும் அவன் வந்து

முகங்காட்டக் காணாமையாலே ‘நாம் இந்த க்லேசத்தோடே முடிந்து போமித்தனையன்றோ’ என்று இழவோடே தலைக்கட்டுகிறது இத்திருவாய்மொழி.

## 476. எட்டாம்பத்தில் ஆறாம்பதிகம் – எல்லியுங்காலையும்

கீழே *மாயக்கூத்தா வென்கிற பதிகத்திலே ஆழ்வார்க்குண்டான விடா பேச்சுக்குநிலமன்று என்று நினைப்போம் நாம்; உண்மையில், ஆழ்வார் விஷயத்தில் எம்பெருமானுக்குண்டான விடாய்தான் அபரிமிதமானது. ‘இப்படி கூப்பிடுகிற ஆழ்வார்க்கு உதவப் பெற்றிலோமே!’ என்று மிகவும் தபித்து ஆகுலனாய் லஜ்ஜையுமுடையனாய் இனிநாம் என்ன செய்வதென்று ஆலோசித்தான்; ‘உடனே சென்று நாம் கடுக முகங்காட்டினோமாகில் ஆழ்வார் ஸந்தோஷாதிசயத்தாலே உடலுமுயிருமுக்கி சிதிலராய்ப்போவர்; ஆகவே ஸந்தோஷத்தைப் பொறுப்பித்து உளராக்கிப் பரிமாறவேணும்’ என்று துணிந்து, பதினாலாண்டு பிரிவாலே நொந்த பரதாழ்வானைத் தரிப்பித்து முகங்காட்டுகைக்காகத் திருவடியை முன்னே செல்லவிட்டுத் தான் பரத்வாஜ மஹர்ஷியின் ஆச்ரமத்திலே யிருந்தாப் போலவும் பாண்டவர்களுக்காகத் தூதுபோகிறபோது ப்ரேமபரவசர்களான விதுரர் முதலானோருடைய ப்ரீதியை ஸாத்மிப்பிக்கைக்காக *குசஸ்தலே நிவஸதி ஸச ப்ராதரிஹேஷ்யதி* என்றபடியே குசஸ்தலத்திலே தங்கியிருந்து மறுநாள் ஹஸ்திநபுரத்திலே யெழுந்தருளினாப் போலவும், ஆழ்வார்தம்மோடே ஸம்ச்லேஷிக்க விரும்பிய ஸர்வேச்வரன் தம்முடைய ப்ரீதியை ஸாத்மிப்பித்துத் தம்மோடே கலக்கைக்காகத் திருக்கடித்தானமென்னும் மலைநாட்டுத் திருப்பதியிலே யெழுந்தருளியிருந்தான்; இதனையறிந்த ஆழ்வார் இப்படியாக எம்பெருமான் தம்பக்கலில் பண்ணுகிற வ்யாமோஹத்தை அநுசந்தித்து இனியரா அத்தைப் பேசியநுபவிக்கிறார் இத்திருவாய் மொழியில்.

## 477. எட்டாம்பத்தில் ஏழாம்பதிகம் – இருத்தும் வியந்து.

இத்திருவாய்மொழியில் ஆழ்வார் பேறுபெற்றுக் களிக்கும் விதம் பரம விலக்ஷணமாகவுள்ளது. இவ்விஷயத்தில் இப்பதிகத்தோடொத்த பதிகம் இத்திருவாய்மொழியாயிரத்தினுள் வேறில்லையென்று சொல்லலாம். எம்பெருமானைப் பெறுவதில் ஆழ்வாருடைய விருப்பம் அதிகமா? ஆழ்வாரைப் பெறுவதில் எம்பெருமானுடைய விருப்பம் அதிகமா? என்று ஆராய்ந்து பார்க்குங்கால், எம்பெருமானுடைய விருப்பமே அதிகமென்று தேறி நிற்கும். *ஜ்ஞாநீது ஆத்மைவ மேமதம்* என்றும் *வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்றும் சொல்லி வைத்திருக்கிற எம்பெருமான்படியைப் பார்த்தால், ஒரு சேதநனைப்பெறுகை எம்பெருமானுக்குப் பரமலாப



மாகக் காணாநின்றதன்றோ. ஆகவே ஆழ்வாரைப் பெறுகையே எம்பெருமானுக்குப் பரமலாபமாகையாலும், அதற்குரிய க்ருஷி பண்ணுவானும் அவனேயாகையாலும், அவன் தானும் ஆர்த்தியே சேப்பேடாக வந்து உதவுமவனாகையாலும் தானே அர்த்தியாய்த் தன்பேறாக வந்து கலந்தான். அதனைக்கண்ட ஆழ்வார் “அந்தோ! நம்மோடு கலப்பதற்கு எம்பெருமான் இரப்பாளனாயிருக்க, நாம் இரப்பாளராய்க் கூப்பிட்டோமே!” என்று வருந்தி “ஒரு ஸம்ஸாரி சேதநன்பக்கலிலே ஸர்வேச்வரன் தான் செய்தருளும் விஷயீகாரம் என்னே!” என்று ஈடுபடுகிறாராய்ச் செல்லுகிறது இத்திருவாய்மொழி.

## 478. எட்டாம்பத்தில் எட்டாம்பதிகம் – கண்கள் சிவந்து

*மாயக்கூத்தாவென்கிற திருவாய்மொழியில் ஆழ்வாருடைய விடாய் அபரிமிதமாகவன்றோ இருந்தது; அந்த விடாயெல்லாம் ஆறும்படி எம்பெருமான் வந்து கலந்து தன் விடாயுந் தீர்ந்து இவரைப்பெற்ற பேற்றாலே பரமப்ரீதனாயிருந்தான். கீழ்த்திருவாய்மொழியில் ஆழ்வார் தம்முடைய பரமானந்தத்தைப் பேசும்போது “சிறியேனுடைச் சிந்தையுள்” என்றாரே; அந்தச் சொல்லை எம்பெருமான் மிகவும் ஆராய்ந்தான். ‘அந்தோ! இவர் சிறியேனென்று தம்முடைய நைச்சியத்தை யநுஸந்திக்கத் தொடங்கி விட்டார். ஏற்கெனவே *வளவேழுலகு பதிகம் முதலானவற்றில் தலைகாட்டி ஒருவாறு மடிந்த நைச்யாநுஸந்தானம் மறுபடியும் தலைகாட்டத் தொடங்கிற்றுப்போலும்; இன்னமும் இது முற்றிவிட்டால் பிறகு பரிஹரிப்பது அரிதாகுமே; ஆதலால் இப்போதே அதனை வேரறக் களைந்திடுதல் நன்று’ என்றெண்ணி இவர் நைச்யத்திற்கு ஆஸ்பதமாக நினைத்திருக்கிற ஆத்மவஸ்துவினுடைய பெருமையை இவர் நெஞ்சிலே படுத்த வேணுமென்று பார்த்து அது செய்தருளுகிறான்; அது செய்யுமிடத்தில் ‘உம்முடைய ஆத்மஸ்வரூபமிருக்கும்படி காட்டுகிறேன் வாரீர்’ என்றால் ‘மின்மினி போலே யிருக்கிறவிதனை நீ காட்டிடவும் நான் காணவும் வேணுமோ?’ என்று சொல்லி இசையாதொழிவரிவர்; மேலும் *அவ்வாயன்றி யானறியேன் மற்றருளே* என்று இவர் நம் வடிவழகிலே துவக்குண்டிருக்கிறாராகையாலே நம்மை முன்னிட்டு அவ்வாத்மஸ்வரூபவைலக்ஷண்யத்தைக் காட்டிக் கொடுப்போம் என்று பார்த்து ‘வாரீர் ஆழ்வீர்! நம்முடைய வடிவழகிருக்கிறபடி கண்டீரே; நம்மைக்காணுங் காட்சியிலே உம்மையும் காணலாம் படியிருக்கின்றது காணும்’ என்று சொல்லித் தன்னுடைய வடிவழகை முந்துற முன்னம் அநுபவிப்பித்து, தனக்குத் திருவாபரணங்கள்போலே மிகவும் போக்யமுமாய் அத்யந்த சேஷமுமாயிருக்கிற ஆத்மஸ்வரூபத்தைக் காட்டிக்கொடுக்க, அதனை யநுபவித்துப் பேசுகிற தாயிற்று இத்திருவாய்மொழி.

## 479. எட்டாம்பத்தில் ஒன்பதாம்பதிகம்—கருமாணிக்கமலை

இத்திருவாய்மொழி தோழிபாசுரமாய்ச் செல்லுகிறது. திருவாய்மொழியாயிரத்தில் தோழிபாசுரமாக வரும் பதிகங்கள் மூன்று; *தீர்ப்பாரை யாமினியும் *துவளில் மாமணி மாடமும் *இக்கருமாணிக்க மலையும். இம்மூன்று பதிகங்களிலும் ப்ரணவத்தில் உகாரத்தின் பொருளான அநந்யார்ஹத்வம் வெளியிடப்படுகிறது. *தீர்ப்பாரை யாமினியில் வெறியாடலை விலக்கின முகத்தாலே அது வெளியிடப்பட்டது. *துவளில் மாமணிமாடத்தில் " இனியுமக்காசையில்லை விடுமினோ " என்று பலகாலும் தாய்மாரை நோக்கிச் சொல்லுகிற முகத்தாலே அது வெளியிடப்பட்டது; இப்போது இத்திருவாய்மொழியில் அதுதன்னை வெளியிடுகிறவிதம் கேண்மின்; பராங்குச நாயகியாகிற தலைமகள் பதிஸம்யோகத்திற்குரிய வயது முதிர்ந்து நின்றவளவிலே தாய் தந்தையர் ஸ்வயம்வரம் கோடித்து நகரத்திலே மணமுரசு அறைவிக்க, அஃதறிந்த தோழியானவள் " மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் " என்றும், " அன்றிப்பின் மற்றொருவர்க்கென்னைப் பேசலொட்டேன் மாலிருஞ்சோலையெம்மாயற்கல்லால் " என்றும் திண்ணிய அத்யவஸாயங்கொண்டிருக்கிற இப்பெண்பிள்ளை, இப்படி தாய் தந்தையர் கோடிக்கிறபடியை யறிந்தால் கிலேசப்படுவளேயென்று துடித்து, இப்பெண்பிள்ளைக்குக் குட்டநாட்டுத் திருப்புலியூர்ப் பெருமானோடே ஸம்ச்லேஷம் ப்ரவ்ருத்தமானபடியைத் தோழி தானறிந்திருந்தும் அதை வெட்டவெளிச்சமாகத் தாய்மார்க்குத் தெரிவித்தால் நம்மேல் சீற்றமுண்டாகும்; தெரியாதிருந்தால், தலைவியும் லஜ்ஜையாலே வாளாவிருப்பளாகையாலே விபரீதமான கோடிப்பு நிறைவேறி அனர்த்தமாகும்; ஆகவே இப்போதொரு ஸதுபாயம் செய்யவேண்டும்; நமக்கும் ஏற்கெனவே இது தெரியாதுபோலே காட்டிக்கொண்டு அப்போதுதான் நிரூபித்து அறிந்துகொள்வது போல் அபிநயித்து ஒருவாறு உண்மையை வெளியிட்டுவிடுவோம் என்று துணிந்து, 'அம்மனைமீர்! நம் பெண்பிள்ளையின் நிலைமைகளைக் காணுமிடத்து இவளுக்குத் திருப்புலியூர்ப்பெருமானோடே ஸம்ச்லேஷம் நேர்ந்துவிட்டதுபோல் தெரிகிறதே, உங்களுடைய கோடிப்புக்கு ப்ரஸக்தியில்லைபோல் காண்கிறதே,' என்று மத்யஸ்தோக்தியாகச் சொல்லிநிற்கிறாள்; இவ்வழியாலே ஆழ்வாருடைய அநந்யார்ஹத்வம் வெளியிடப்படுகிறதாயிற்று. கீழ்த் திருவாய்மொழியில் ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யம் சோதிக்கப்பட்டதாகையாலே அதை நன்கு வடிக்கட்டுகிறது இத்திருவாய்மொழியென்க.



## 480. எட்டாம்பத்தில் பத்தாம்பதிகம் – நெடுமாற்கடிமை

கீழ்த் திருவாய்மொழியில் அநந்யார்ஹசேஷத்வம் அறுதியிடப்பட்டதன்றோ; இந்த ப்ரஸங்கத்திலே பாகவத சேஷத்வம் வடிக்கட்டின வேஷமாகச் செல்லப்படவேண்டியதுண்டே; அது சொல்லுகிறது இத்திருவாய்மொழியில். கீழ்ப்பதிகத்தின் முடிவு பாட்டில் *தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்* என்றாரே; அது தன்னை விசதமாக்குகிறது இங்கு. ஒருவன் ஒரு வஸ்துவினிடத்தில் அன்பு வைத்தால் அவ்வன்பு அளவற்றதுமாயிருந்தால் அவ்வன்பு அவ்வஸ்துவோடே நின்றுவிடாமல் அதனோடு ஸம்பந்த ஸம்பந்தம் பெற்ற வஸ்துக்களிலும் பெருகிச் செல்லுமென்பதை அனைவரும் தம் தம் அநுபவத்தாலறிவர். அப்படியே பாகவதபக்தியென்பது பகவத்பக்தியின் எல்லை நிலமாகவுண்டாமது. பகவத்பக்தியின் உறைப்பையே பாகவதபக்தி வெளிப்படுத்தும். ஸ்வாமியினுடைய பாதுகைகளிலே நாம் ஆதரம் வைத்து அவற்றைக் கண்களில் ஒற்றிக்கொள்வதும், தலைமீது அணிந்து கொள்வதும், அலம்பித் தீர்த்தம் பருகுவதும் செய்கிறோம்; இதனால் நமக்கு ஸ்வாமியிடத்துள்ள பக்தி அபாரமானது என்பதன்றோ வெளியாகின்றது. அதுபோலவே இங்கும் " அவனடியாரடியே கூடுமிது வல்லால் " இத்யாதிகளாலே பாகவதசேஷத்வாதிசயத்தைப் பேசுவதெல்லாம் பகவச் சேஷத்வத்தின் உறைப்பையே பேசினபடியாகும். திருமந்திரத்தில், அஹங்காரமும் மமகாரமும் நீங்கப்பெற்று பகவச்சேஷத்வம் உள்ளபடி ப்ரகாசிக்கிற நமஸ்ஸிலே அந்த பகவச் சேஷத்வத்தின் எல்லை நிலமான பாகவத சேஷத்வம் அநுஸந்திக்கப்பட வேணுமென்பது சாஸ்த்ரார்த்தம். திருமந்திரத்திற்கு முக்யமான பொருள் பாகவத சேஷத்வமேயென்பதை *மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கங் கூற அவதரித்த மங்கையர்கோன் தமது திருமொழியில் *மற்றெல்லாம் பேசிலும் நின்திருவெட்டெழுத்துங்கற்று நான் — உற்றது முன்னடியார்க்கடிமை* என்ற பாசுரத்தில் தெளிய வைத்தார். கீழ் மூன்றாம்பத்தில் ஏழாவது பதிகமான *பயிலுஞ்சுடரொளி ஸ்வஸ்வரூப ப்ரதிபாதகபரமென்றும், *நெடுமாற்கடிமை புருஷார்த்த ஸ்வரூபப்ரதிபாதக பரமென்றும் வகையிட்டுக் காட்டப்பட்டது. அங்கு வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள்—"பகவச் சேஷத்வத்திலும் தத்காஷ்டையான பாகவத சேஷத்வமே ஆத்மாவுக்கு உத்தேச்யமென்று ப்ரதிபாதித்த *பயிலுஞ்சுடரொளியும்......பாகவத கைங்கர்ய பர்யந்தமாக வேணுமென்று மநோரதித்த *நெடுமாற்கடிமையும்" என்றருளிச்செய்திருப்பது காண்க. இதனால், பாகவத சேஷத்வம் ஆத்மஸ்வரூபம் என்பதிலே *பயிலுஞ்சுடரொளிக்கு

நோக்கு; பாகவத கைங்கர்யமே புருஷார்த்தம் என்பதிலே நோக்கு இத்திருவாய்மொழிக்கு என்றதாயிற்று. இத்திருவாய்மொழியின் ஈட்டவதாரிகையில் ஓர் ஐதிஹ்யமுள்ளது; அதாவது—“அம்முணியாழ்வான் போசளராஜ்யத்தில் நின்றும் வந்தநாளிலே பட்டர் கண்டருளி ‘நீ ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குப் போரவடிமைசெய்து போந்தாயென்று கேட்டோம்; உன்ப்ரக்ருதிக்குச் சேர *நெடுமாற்கடிமையைக் கேள்’ என்றருளிச் செய்தாராம்” என்று.

## 481. ஒன்பதாம் பத்தில் முதல்பதிகம்—கொண்ட பெண்டிர்

கீழே *நெடுமாற்கடிமை யென்கிற திருவாய்மொழியிலே எம்பெருமானடியார்களையே உபாயோபேயங்களான எல்லாமுமாகப் பற்றியிருக்கையாகிற தம்முடைய சிறந்த அத்யவஸாயத்தை வெளியிட்ட ஆழ்வார் அவ்வடியார்களின் திருவுள்ள முகக்கும்படியான அர்த்தத்தையே இத்திருவாய்மொழியில் அருளிச் செய்கிறார். பாகவதர்களே எல்லா வுறவுமென்றது–கீழ்த்திருவாய்மொழி; பகவானே எல்லாவுறவுமென்கிறது இத்திருவாய்மொழி; இவை ஒன்றோடொன்று முரண்பட்டவையென்று நினைக்கவேண்டா; பகவத் பக்தியின் எல்லைநிலமாக பாகவத பக்தியும், பாகவத பக்தியின் எல்லைநிலமாக பகவத் பக்தியும் கொள்ளத்தக்கது. உலகில் ஒரு வ்யக்தியினிடத்திலே நாம் வைக்கும் அன்பு அந்த ஒரு வ்யக்தியளவிலே முடிந்து நிற்காமல் தத்ஸம்பந்தி ஸம்பந்திகளிடத்தும் பெருகிச் செல்வது போல, பகவான் பக்கலிலே வைக்குமன்பு அவனளவிலே நில்லாது அவனுடைய ஸம்பந்த ஸம்பந்தம் பெற்ற பாகவதர்களிடத்தும் வளர்ந்து செல்லுமாயிற்று. அப்படியே பாகவதர்களிடத்தே வைக்குமன்பும் அவர்களோடு ஸம்பந்தம் பெற்றவனென்கிற காரணத்தினாலேயே பகவானிடத்திலும் பெருகும். பட்டர் ஸ்ரீகுணரத்ந கோசத்திலே *ஜாமாதா தயிதஸ் தவேதி பவதீஸம்பந்த த்ருஷ்ட்யா ஹரிம் பச்யேம* என்றருளிச் செய்தது இங்கே அநுஸந்தேயம். பெரிய பிராட்டியாருடைய மணவாளன் என்கிற காரணத்தையிட்டே எம்பெருமானை யுகப்பதாக இங்குச் சொல்லி நின்றது. *அஸ்யேசாநா ஜகதோ விஷ்ணுபத்நீ* என்று ஓதினபடியே தேவதேவ திவ்யமஹிஷியென்கிற காரணத்தையிட்டுப் பெரிய பிராட்டியாரை யுகப்பதாகச் சொல்லுவதுமுண்டே. இவை பரஸ்பரம் முரண்பட்ட பொருள்களல்ல; இரண்டும் பரமார்த்தமே. இது போலவே, பகவத் ஸம்பந்தத்தையிட்டுப் பாகவதர்களை யுகப்பதும், பாகவத ஸம்பந்தத்தையிட்டுப் பகவானை யுகப்பதும் பொருந்தியதேயாதலால் கீழ்த் திருவாய்மொழியிற் சொன்ன அர்த்தத்திற்கு அவிருத்தமாகவே இத்திருவாய்மொழி செல்லுகின்றதென்று கொள்க. உலகில் ப்ராக்ருதர்களான ஆபாஸ பந்துக்களையே நம்பியிருப்பாருடைய ப்ரமம் நீங்கு



மாறு உபபத்திகளுடன் அருளிச்செய்வது இத்திருவாய்மொழி. எந்த நிலைமையிலும் எம்பெருமானொருவனே நிருபாதிக ரக்ஷகனென்றும், நாம் பந்துக்களென்று நினைக்கும்படியுள்ளவர்கள் பக்ஷகர்களேயொழிய ரக்ஷகர்களல்லரென்றும் விரிவாக அருளிச்செய்கிறார். கீழ் ஐந்தாம்பத்தில் *சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன்மக்களும் மேலாத் தாய் தந்தையும் அவரேயினியாவாரே* என்கிற பாசுரத்திற்சொன்ன பொருளை விவரிக்கவந்ததாயிற்று இத்திருவாய்மொழி. “ஈச்வரனையொழிந்தவர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம்” என்று முமுக்ஷுப்படியில் அருளிச்செய்தபடியே ப்ரபந்ந பரித்ராணமென்னும் ரஹஸ்யத்திலே விரிவாகக் காணுகிற விஷயங்களுக்கு இத்திருவாய்மொழியே மூலமாகும். இத்திருவாய்மொழியில் பல பாசுரங்களில் “வடமதுரைப் பிறந்த” என்று வருவதால் வடதிசைமதுரையை மங்களாசாஸனம் செய்கிற பதிகமிது—என்றும் கொள்ளலாம். பரோபதேச ரூபமாகச் சொல்லுகிறது இது.

## 482. ஒன்பதாம்பத்தில் இரண்டாம்பதிகம்—பண்டைநாளாலே.

ஸர்வேச்வரனைத் தவிர்ந்தவர்களனைவரும் ஆபாஸ பந்துக்களென்றும் ஸர்வேச்வரனொருவனே நிருபாதிக பந்துவென்று மருளிச்செய்தார் கீழ்த்திருவாய்மொழியில். இவரருளிச்செய்தவளவேயன்றே; உண்மையில் அவன் தான் பரம பந்துவாயிற்றே. *மாதா பிதா ப்ராதா நிவாஸச் சரணம் ஸுஹ்ருத்கதிர் நாராயண* என்று சுருதி சொன்னது உண்மையல்லதில்லையே. அப்படி பரம பந்துவானவன் பந்துக்கள் செய்யவேண்டிய செயலைச் செய்யாதிருக்கமாட்டானே. அது செய்கைக் குறுப்பாகத் திருப்புளிங்குடியிலே திருக்கண் வளர்ந்தருளா நின்றான்: நாமும் அங்கே சென்று கிட்டினால் நமக்கு பந்துக்ருத்யமெல்லாம் பண்ணுவன் என்று அநுஸந்தித்து ஆழ்வார் அங்கே சென்று கிட்டினார். இப்படி பரம பந்துவானவன் ஸன்னிதி பண்ணியருளுகிற திருப்புளிங்குடியிலே எல்லாவகையான பரிமாற்றங்களையுமாசைப்பட்டுச் சென்று கிட்டினவிடத்தும், இவரை என்னென்று வினவுதல், குளிர நோக்குதல், ஒரு வார்த்தை சொல்லுதல் ஒன்றுஞ் செய்திலன். ஆனாலும், *இன்றாக நாளையேயாக இனிச் சிறிது நின்றாக நின்னருள் என்பாலதே* என்று திண்ணிய அத்யவஸாயம் கொண்டிருக்குமவர்களிலே ஒருவரான ஆழ்வார் ‘அவனுளனாயிருக்கும்பொழுது பந்துக்ருத்யம் செய்யத் தவறமாட்டான்; சிறிது தாமதித்தால் என்ன குறை?’ என்று ஒருவாறு தேறுதலடைந்து, வேறொன்றுக்காக மிகவும் ஆர்த்தியடைந்தார்; அதாவதென்னென்னில்; இங்கே என்றைக்குத் திருக்கண்வளர்ந்தருளப்

புகுந்தானே அன்றுமுதல் இன்றளவாக ஏகரீதியாய் ஆடாதே அசையாதே சயனித்திருக்கின்றானே ! இது என்ன சிரமமோ?' என்று இவ்வாற்றாமை திருவுள்ளத்திலே குடி புகுந்தது. கீழ் எட்டாம்பத்தில் *கொடியார்மாடக் கோளூரகத்தும் புளியங்குடியும் மடியாதின்னே நீ துயில்மேவி மகிழ்ந்ததுதான், அடியாரல்லல் தவிர்த்த வசவோ அன்றேலிப்படிதான் நீண்டு தாவிய வசவோ பணியாயே* என்ற பாசுரத்திலுண்டான வயிறுபிடியே மீண்டும் தலையெடுத்தது, அப்பெரிய வாற்றாமையோடே 'தேவரீரும் பிராட்டிமாருங்கூட எழுந்தருளியிருக்குமிருப்பை எனக்குக்காட்டியருளவேணும் ; என்னைக் கண்ட காட்சியிலே விகாரமடைந்து என்முன்னே நாலடியுலாவியருளவேணும்; புன்முறுவல் காட்டியருள வேணும்; ஒரு வார்த்தையருளிச்செய்யவேணும்' என்றிங்ஙனே தாமுமவனுமேயறிந்ததாகத் திருவாசலைத் திருக்காப்பிட்டுக்கொண்டு ஏகாந்தத்திலே தம்முடைய மனோரதங்களையெல்லாம் விண்ணப்பஞ் செய்கிறாரித்திருவாய்மொழியில். இப்பதிகத்தின் பொருட்சுவை ஒருபுறமிருக்க சொற்சுவை கல்நெஞ்சையும் கரையப்பண்ணும். ஸம்ஸாரத்தில் ஆர்த்தி விசேஷங்களுண்டாகி நெஞ்சு தடுமாறிக் கிடக்கும்போது இப்பதிகத்திற் பாசுரங்களை வாய்வெருவினால் நெஞ்சு குளிரும். நாற்பதாண்டுகளுக்குக் கீழே திருவரங்கம் பெரிய கோயிலில் பெரிய திருவத்யயனத் திருநாளில் இத்திருவாய்மொழியை அரையர் இசைபாடாநிற்க, அஸ்மதாசார்யரான அழகியமணவாளச் சீயர் கண்ணுங் கண்ணீருமாயிருந்த விருப்பு *நின்று தோன்றிக் கண்ணுள் நீங்கா நெஞ்சுள்ளும் நீங்காவே.

## 483. ஒன்பதாம்பத்தில் மூன்றாம்பதிகம் – ஓராயிரமாய்

கீழ்த்திருவாய்மொழியில் *தொண்டரோர்க்கருளிச் சோதி வாய் திறந்து உன் தாமரைக் கண்களால் நோக்காய்* என்றும் *இடங்கொள் மூவுலகுந் தொழ இருந்தருள்வாய்* என்றும் ; *மெல்லடியைக் கொடுவினையேன் பிடிக்க நீயொருநாள் கூவுதல் வருதல் செய்யாயே* என்றும் பலவாறு பிரார்த்தித்தார். இப்படிப் பிரார்த்திக்கக் கேட்ட எம்பெருமான் ஆழ்வாரை நோக்கி 'ஆழ்வீர் ! நமக்கு நாராயணனென்று திருநாமமிருப்பது அறியீரோ ? நாராயணனென்பதற்கு—நாரங்களுக்கு அயனமாயிருப்பவனென்கிற பொருள் தவிர, நாரங்களை அயனமாகவுடையவனென்கிற பொருளுமுண்டென்பதை அறிவீரன்றோ, அப்பொருளில் ஸகல சேதநா சேதநங்களும் சரீரமாய் நான் சரீரியாயிருக்கையாகிற அம்சம் தேறுகின்றதென்பதையும் அறிவீரே ; சரீரத்திற்கு ஆகும்பேறு சரீரிக்கேயாதலால் சரீர பூதரான உமக்கென்று ஒரு பேறு உண்டோ? சரீரியான என்னுடையதன்றோ பேறு என் பேற்றுக்கு நீர் பிரார்த்திப்பது பொருந்துமோ? எல்லாம்



நானே செய்து போரக்கடவேன் ; உமக்கும் நமக்குமுண்டான குடல்துடக்கையறிந்துவைத்து நீர் இப்படி ப்ரார்த்திப்பதும் கிலேசிப்பதும் தகுதியன்று' என்று ஸமாதானம்பண்ண, அது கேட்டு ஆழ்வார் ஒருவாறு தாம் ஸமாஹிதரானபடியை வெளியிட்டுக் கொண்டும் 'இது என்ன சீலகுணம்!' என்று ஈடுபட்டுக்கொண்டும் அருளிச் செய்வதாம் இத்திருவாய்மொழி. இப்பதிகத்திற்கு மற்றொருபடியாகவும் ஈட்டில் அவதாரிகை அருளிச் செய்யப்படுகிறது ; அது நடுவில் திருவீதிப்பிள்ளையின் நிர்வாஹமாகவுங்காண்கிறது. அதன் ஸாரமாவது, கீழ் எட்டாம்பத்தில் *கண்கள் சிவந்து* என்கிற பதிகம் தொடங்கி முறையே திருமந்திரார்த்தம் அருளிச் செய்யப்பட்டு வந்து, கீழ் *பண்டை நாளாலே* என்கிற பதிகத்தில் கைங்கர்ய ப்ரார்த்தனை பண்ணுகிற முகத்தால் வ்யக்த சதுர்த்தியளவாக அர்த்தம் அநுஸந்திக்கப்பட்டுத் தலைக்கட்டிற்று. இப்படி அர்த்தாநுஸந்தானம் பண்ணினவர், அந்த அர்த்தத்தைக் கொண்ட மந்த்ரம் திருவஷ்டாக்ஷர மஹா மந்த்ரமே யென்று வெளியிடவேண்டி இப்பதிகமருளிச் செய்கிறாரென்பதாம். இப்பதிகத்தின் முதற்பாட்டில் "நாராயணன் நங்கள் பிரானவனே" என்றதில் முழு நோக்காக இந்த நிர்வாஹம் தோன்றியதென்க.

## 484. ஒன்பதாம்பத்தில் நான்காம்பதிகம்— மையார்கருங்கண்ணி

எம்பெருமான், சாஸ்த்ரங்களில் ஒரு பக்கத்திலே ஸ்வதந்த்ரனென்று போற்றப்படுவதுபோல, மற்றொரு பக்கத்தில் சீலாதி குணகண பூஷிதனென்றும் கொண்டாடப்படுகிறான். ஸ்வாதந்திரியமென்பது அவனுக்கு ஸ்வரூபமாயிருக்கும். சீலாதி குணமுடைமையும் அவனுக்கு ஸ்வரூபமாயிருக்கச் செய்தேயும் ஸ்வாதந்திரியத்தின் கீழே அத்திருக்குணங்கள் தலையெடுக்கமாட்டாமல் அமுங்கிக் கிடக்கும். அவை எப்போது தலையெடுக்குமென்னில் ; பிராட்டி புருஷகாரம் செய்யும் போதுகளில் தலையெடுக்குமென்று நம் ஆசாரியர்கள் கண்டறிந்து கூறுகிறார்கள். முமுக்ஷுப்படியில் த்வயப்ரகரணத்தில்—"புருஷகார பலத்தாலே ஸ்வாதந்த்ர்யம் தலைசாய்ந்தால் தலையெடுக்கும் குணங்களைச் சொல்லுகிறது நாராயண பதம்" என்ற திவ்ய ஸூக்தியை இங்கு அநுஸந்திப்பது. ஆக, கீழ்த்திருவாய்மொழியில் அநுஸந்திக்கப்பட்ட சீலகுணத்திற்கு ஊற்றுவாயான பிராட்டியின் ஸம்பந்தத்தையும் அநுஸந்தித்தார் ஆழ்வார். *மாக வைகுந்தங் காண்பதற்கு என்மனமேகமெண்ணும் இராப்பகலின்றியே!* என்று கீழ்த்திருவாய்மொழியில் வெளியிட்ட ஆசையும் விஞ்சிப் பெருகிற்று. அவன் சீலாதிகனுமாய்த் திருமகள் கொழுநனுமாயிருந்து வைத்து இப்படி நம்மை துடிக்கவிட்டு உபேக்ஷையாயிருக்

கிறானேயென்று மிகவருந்தினாராழ்வார். கஜேந்திராழ்வானுக்கு அருள்செய்ய அரைகுலையத் தலைகுலைய மடுவின் கரையிலே ஓடி வந்தாப்போலவு மன்றிக்கே ப்ரஹ்லாதாழ்வானுக்கருள் செய்யத் தூணிலே வந்து சடக்கெனத் தோன்றினாப்போலே தோன்றி யருள் செய்ய வேண்டும்படியான நிலைமையாயிற்று ஆழ்வாரது. இப்படிப்பட்ட நிலைமையிலும் அவன் வந்து முகங்காட்டிற்றில னென்றால் அவனைக் குறித்துச் சொல்லும் குணங்கள் கடலோசை போலே நிரர்த்தகமாமத்தனையன்றோ. அப்படி தன் திருக்குணங் களைப் பழுதாக்கிக் கொள்ளமாட்டானே அவன் ஆழ்வாருடைய விடாயையறிந்து உதவவந்து முகங்காட்டினான். அதற்கு மிக மகிழ்ந்து 'நான் க்ருதக்ருத்யனானேன், அடிமை செய்யப்பெற்றேன், வாழ்ந்தேன், ஸ்ரீவைஷ்ணவர்களுக்கெல்லாம் சொல்லமுதளித்து உப காரம் செய்யப்பெற்றவனானேன் ; இப்பேறுகள் ஒருவன் பெறத் தகுமா ?' என்று சொல்லித் தம்முடைய மகிழ்ச்சியை வெளியிட்டுத் தலைக்கட்டுகிறார் இப்பதிகத்தை.

## 485. ஒன்பதாம்பத்தில் ஐந்தாம்பதிகம்— இன்னுயிர்ச் சேவலும்

கீழ் *பண்டை நாளாலே* என்கிற பதிகத்திலே ஆழ்வார்க்கு ஒரு கிலேசம் நிகழ்ந்தது. அதை ஒருவாறு ஸமாதானப்படுத்தப் புகுந்த ஸர்வேச்வரன் 'ஆழ்வீர்! நான் நாராயணனன்றோ; உமக்கு எல்லா வுறவின் காரியமும் குறையறச் செய்து தருவேன்' என்று சொல்ல, அவனுடைய சீலத்தில் கால் தாழ்ந்து ஒரு படியாய்ச் சென்றது மூன்றாம் பதிகம். *தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொல்லும்படி உம்மையாக்கினேனே, இது உமக்கு ஸமான்யமாகக் கிடைக்கக்கூடியபேறோ? என்று எம்பெருமான் இதனை நினைப்பூட்ட அதனால் ஒருவாறு களிப்படைந்து தரித்து நின்றார் கீழ்ப் பதிகத்தி லே. அங்கு "தேவர்கட்கெல்லாம் கருவாகிய கண்ணனைக் கண்டு கொண்டேனே" என்றருளிச் செய்தவர்க்கு பாஹ்யஸம்ச்லேஷத்தி லே அபேக்ஷை பிறந்தது. "இவர்க்கு இன்னமும் விடாயைப் பிறப் பித்து முகங் காட்டவேணும்" என்று எம்பெருமானிருக்கையாலே அவன் தாமதிக்கிறான். ஆழ்வார்க்கோ தளர்ச்சி மிகுகிறது. தளர்ந் தவர்கள் தரிப்பதற்குப் பல வழிகளுண்டே ; லௌகிக பதார்த்தங் களிலே நெஞ்சைச்செல்லவிட்டு அந்த அந்ய பரதையாலே ஒருவாறு தரிப்போம் என்றும், அவனோடு போலியான பொருள்களைக் கண்டா கிலும் தரிப்போமென்றும் நினைத்து லௌகித பதார்த்தங்களிலே கண்வைத்தார். ஒருவாறு தரிப்பதற்குச் செய்த அச்செயல் ஆச் வாஸ ஹேதுவாகாமல் ஸ்மாரகமாய் பாதிக்கத் தொடங்கிற்று. உல கில் எந்தப் பொருளைக் கண்டாலும், அவனாயிருக்கிற படியை நினைத்



தோ, அவனோடு ஸம்பந்தம் பெற்றிருக்கிறபடியை நினைத்தோ, அவனுக்குப் போலியாயிருக்கிறபடியை நினைத்தோ தளருமவரன் றோ ஆழ்வார். கீழ் நாலாம்பத்தில் *மண்ணை யிருந்து துழாவி* என் னும் பதிகத்திலே பட்டபாடு தெரியுமே. ஆக லௌகிக பதார்த்தங் கள், அவனை நினைப்பூட்டி நலிய அவற்றால் நோவுபடுகிற படியை அந்யாபதேசத்தாலே யருளிச் செய்வது இப்பதிகம். எம்பெருமா னோடே கலந்து பிரிந்த வொரு பிராட்டி, தன்னாற்றாமையாலே அவ னோடு போலியான பதார்த்தங்களைக் கண்டாகிலும் தரிப்போமென்று கொண்டு ஒரு பூஞ்சோலைக்குப் புறப்பட, அங்குண்டான குயில் மயில் முதலானவை அவனுடைய பேச்சையும் வடிவையும் நினைப்பூட்டி நலிய, 'இவை தாமாக நலிகின்றனவல்ல ; நம்மை முடிக்க வேணு மென்று பார்த்த எம்பெருமானாலே ஏவப்பட்டு நலிகின்றன வித்தனை' என்றெண்ணி, அக்குயில் முதலானவற்றை நோக்கி 'உங்களுக்கு என்னை நலிய நினைவாகில் இவ்வளவு பாரிப்பு வேணுமோ? என்னுயி ரை நானே கொடுக்கச் சித்தமாயிருக்கின்றேனே' என்று சொல்லியும், அவனுடைய திருக்குணங்களை ஒருவாறு நினைத்துத் தரித்தும் போருகிறது இத்திருவாய்மொழி.

## 486. ஒன்பதாம்பத்தில் ஆறும் பதிகம்— உருகுமால்நெஞ்சம்

திருக்காட்கரை.

கீழ்ப்பதிகத்தின் முடிவிலே *எழநண்ணிநாமும் நம்வான நாடனோடொன்றினோம்* என்றருளிச்செய்த பாசுரத்தைக் காணு மிடத்து ஆழ்வார் அந்தப் பாசுரத்தோடு திருவாய்மொழியைத் தலைக்கட்டி விட்டதாகவும், இனிப்பாசுரங்களருளிச்செய்ய ஆழ்வார் இந்நிலத்தில் இல்லையாகவும் தோன்ற நின்றது. ஆனாலும் ஆழ்வார் இன்னமும் இந்நிலத்திலேயே திருப்புளியாழ்வாரடி யிலேயே யெழுந்தருளியிருந்து மேலே பாசுரங்களருளிச்செய்ய ப்ராப்தமாகிறது. எம்பெருமான் வந்து முகங்காட்டி ஆழ்வாரைத் தரிக்கச் செய்தானோ? அதனால் தரித்து நின்று பேசுகிறாரோ வென்னில்; இல்லை; எம்பெருமான் வந்து முகங்காட்டி இவரைப் பெறுவது, இல்லையாகில் இழப்பது என்னும்படியான நிலைமையா யிருக்கச் செய்தேயும் அவன் வந்து முகங்காட்டாமலே ஒருவிரகு செய்தானாயிற்று. அந்த விரகுதான் ஏதென்னில்; கீழ் எட்டாம் பத்தில் *இருத்தும் வியந்தென்னை* என்கிற பதிகத்திலே ஒரு விலக்ஷணமான ஸம்ச்லேஷம் நடந்திருந்ததே; அதை நினைப்பூட்டி ஒருவாறு தரிக்கச்செய்தானாயிற்று எம்பெருமான்; அதுதான் அவன் செய்த விரகு. அதனால் ஆழ்வார் ஒருவாறு தரித்திருந்து இப்பதிகமருளிச் செய்கிறபடி. இதற்கு மூன்றுவிதமான காரணங்களை நம்பிள்ளை யருளிச்செய்கிறார் :—

(1) ஆழ்வார் முதற்பதிகமே தொடங்கி *குருகூர்ச்சடகோபன்

சொல்—ஆயிரம்* என்று, எம்பெருமானுக்கு ஒரு ஆயிரம் பாசுரம் பேசித் தலைக்கட்டவேணுமென்று ஸங்கல்பித்துக் கொண்டாராகையாலே அப்படி அவர் தாம் அதிகரித்த கைங்கரியத்தை முற்றமுடிய நடத்துகைக்கிடான அத்ருஷ்டராயிருந்தார்.

(2) ஆழ்வாருடைய ஈரச்சொற்களை இன்னமுங் கேட்கவேணுமென்று பாரித்துக்கொண்டிருக்கிற எம்பெருமானுடைய பாக்கியமுமொன்றுண்டு.

(3) *தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்* என்று ஆழ்வார்தாமே பணித்தபடி இப்பாசுரங்கொண்டு போதுபோக்கவிருக்கிற ஸம்ஸாரி சேதநர்களின் பாக்கியமொன்றுண்டே.

ஆக மூன்று காரணங்களினாலும் ஆழ்வார் இன்னமும் இந்நிலத்தில் தரித்து நிற்க ப்ராப்தமாகி, போனவுயிர் மீளும்படி *இருத்தும்வியந்தென்கிற வொருபதிகத்திலே நடந்த கலவி நினைவுக்கு விஷயமாயிற்று.

அசோகவனத்திலே திருவடிசென்று கிட்டினபோது முன்பு நெடுநாள்பட்ட கிலேசமெல்லாம் கிடக்கச்செய்தே, பெருமாளும் வந்து முகங்காட்டாதிருக்கச் செய்தேயும், வனவாஸத்திற்கு முன்பு திருவயோத்யையிலே பன்னிரண்டாண்டு பெருமாளும் தானும் ஏகபோகமாகவிருந்து பேரின்பம் நுகர்த்த நுகர்ச்சி நினைவுக்கு விஷயமாகி *ஸமா த்வாதச தத்ராஹம் ராகவஸ்ய நிவேசநே புஞ்ஜாநா அமாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ* என்று அதைச்சொல்லிப் போது போக்கினாப்போலே, *இருத்தும்வியந்து பதிகத்திலே "மூவுலகும் தன்னெறியாவயிற்றிற் கொண்டு—சிறியேனுடைச்சிந்தையுள்—நின்றொழிந்தான்" என்னும்படி முறைகெடப்பரிமாறின பரிமாற்றம் நினைவுக்கு விஷயமாகி, அது கேவலம் ஸ்மிருதி மாத்திரமேயல்லாமல் இப்போதைய அநுபவமேயென்றே கொள்ளலாம்படியாகி அந்த சீல குணத்தைப் பேசி சிதிலராகிறார். இப்படி பழையகலவியை நினைப்பூட்டி ஒருவாறு தரித்து நிற்கச்செய்து பேசுவிக்கிறவன் திருக்காட்கரை யெம்பெருமான் போலும். ஆகவே திருக்காட்கரைப்பெருமான் விஷயமாக அவதரிக்கின்றது இப்பதிகம். மலைநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாயிற்று திருக்காட்கரை யென்னும் தலம்.

**487. ஒன்பதாம்பத்தில் ஏழாம் பதிகம்—**
**எங்கானலகங்கழிவாய்**

கீழ்த்திருவாய்மொழியில், ஒருவாறு குணஸ்மரணத்தாலே தரிக்கும்படி செய்துவைத்தானெம்பெருமான்; குணங்களை ஸ்மரிக்க ஸ்மரிக்க அப்பெருமானை நேரே காணவேண்டும்படியான விடாய்



மிக்கது. அதனாலே தூது விடுவதாயிற்று இப்பதிகம். திருவாய்மொழியாயிரத்திலும் தூதுவிடும் பதிகங்கள் நான்கு: (1)* அஞ்சிறைய மடநாராய். (2) *வைகல் பூங்கழிவாய். (3) *பொன்னுலகாளீரோ. (4) இத்திருவாய்மொழி. *அஞ்சிறைய மடநாரையில் அபராதஸஹத்வமாகிற க்ஷமாகுணம் பற்றாசாக வியூஹத்திலே தூது விட்டார் *வைகல்பூங்கழிவாயில் ஆச்ரித ஜநரக்ஷண தீக்ஷிதத்வம் பற்றாசாக விபவத்திலே தூதுவிட்டார்; *பொன்னுலகாளீரில் ஐகரஸ்யம் பற்றாசாகப் பரத்வத்திலும் அந்தர்யாமித்வத்திலும் தூது விட்டார். இனி இத்திருவாய்மொழியில், அவனுடைய வடிவழகு பற்றாசாக அர்ச்சையிலே தூது விடுகிறார். மேலிரண்டாம்பாட்டில் "திருமூழிக்களத்து—தமரோடு அங்குறைவார்க்கு' என்கையாலே, *பின்னானார் வணங்குஞ் சோதியான திருமூழிக்களத்தில் தம் பரிஜந பரிவாரங்களோடே கூடிக் குலாவா நின்றாரவர்; அதனாலே நம்மை மறந்தார் போலும்; *செங்கமலத் தலர்போலுங் கண்கைகால் செங்கனிவாய் அக்கமலத்திலை போலுந் திருமேனி யழகை நினைப்பூட்டி "இப்படிப்பட்ட வடிவழகிலே யீடுபட்ட பராங்குசநாயகி உம்மைப்பிரிந்து தரித்திருக்கவல்லளோ வென்று சொல்லுங்கோள்" என்று சில பறவைகளைக் குறித்துக் கூறித் தூது விடுவதாய்ச் சொல்லுகிறது இத்திருவாய்மொழி.

**488. ஒன்பதாம்பத்தில் எட்டாம் பதிகம்—**
**அறுக்கும் வினையாயின**

கீழ்த்திருவாய்மொழியில் திருமூழிக்களத் தெம்பெருமான் பக்கலில் தூதுவிட்டார். தூது சென்றவர்கள் மீண்டுவந்து செய்தி சொல்லுமளவும் ஆறியிருக்கவேணுமே; எங்ஙனே ஆறியிருப்பர். திருநாவாயிலே சென்று கிட்டுவோமென்று பார்த்தார். *காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்* என்னவேண்டும் நிலைமையிலிருக்கு மிவர்தாம் எங்ஙனே திருநாவாய்க்குச் செல்வர்? இருந்தவிடத்திலேயிருந்து மநோரதிக்கக் குறையில்லையே. அந்த மநோரதமே இத்திருவாய்மொழியாகப் பரிணமிக்கிறதாயிற்று. "திருவடி சென்று பிராட்டியைத் திருவடிதொழுது மீண்டவனந்தரம் பெருமாளைக்கிட்டுவதற்கு முன்பு பிராட்டிக்குப் பிறந்த மநோரதம் போலே, கீழ்விட்ட தூதர் அத்தலைப்பட்டு அவனைக் கொண்டு வருவதற்கு முன்னே நடுவு இவர்க்குப் பிறந்த மநோரதத்தைச் சொல்லுகிறது," என்பது ஈடு. திருமூழிக்களம்போலே திருநாவாயும் மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றில் ஒன்று. அங்கே புகவல்லேனே? புகும்நாள் என்றோ? அங்கே புக்கு என் கண்ணாரக் கண்டு அடிமை செய்யவல்லேனோ? என்றிப்படி பல மநோரதங்களைப் பண்ணுகிறாராய்ச் சொல்லுகிறது இத்திருவாய்மொழி.

## 489. ஒன்பதாம்பத்தில் ஒன்பதாம் பதிகம்— மல்லிகை கமழ்.

நம்முடைய முதலிகள் இத்திருவாய் மொழியை 'மாலைப் பூசல்' என்று வழங்குவர். (இப்பதிகத்தின் முடிவு பாசுரங் காண்க.) மேல் பத்தாம் பத்தில் மூன்றும் பதிகமான *வேய்மருதோளிணை மெலியுமாலோ* என்கிற திருவாய்மொழிக்குக் 'காலைப்பூசல்' என்று ஸங்கேதம். கண்ணபிரான் விடியற் காலத்திலே பசு மேய்க்கப் போனாக அதிசங்கை பண்ணி அவன் முகத்தைப் பார்த்து, நீ பசு மேய்க்கப்போனால் நலியக்கடவ பதார்த்தங்கள் நலியா நின்றனவென்று முறையிடுவது, காலைப்பூசலான அத்திரு வாய்மொழியிலே. மாலைப்பூசலான இப்பதிகத்திலோவென்னில், *காடுகளூடுபோய்க் கன்றுகள் மேய்த்து மறியோடிக் கார்க்கோடல் பூச்சூடி வருகின்ற தாமோதரன் மாலைப்பொழுதிலே திருவாய்ப் பாடி யேறத் திரும்பி வரும்போது சில நாட்களில் பசுக்களை எல்லாம் பின்னே வரவிட்டுத் தான் முன்னே குழலூதிக்கொண்டு வருவன்; சில நாட்களில் பசுக்களை யெல்லாம் முன்னே போக விட்டுத் தான் பின்னே வருவதுமுண்டு; அப்படி வருகின்ற நாளில் அப்பெருமானைப் பசுக்களின் முற்கொழுந்தில் காணமல் திருவாய்ப்பாடியிற் பெண்கள் பட்ட பாட்டை ஆழ்வார் தாம் ஏறிட்டுக்கொண்டு பேசுகிறதாயிராநின்றது இத்திருவாய்மொழி.

## 490. ஒன்பதாம்பத்தில் பத்தாம் பதிகம்—மாலைநண்ணி

கீழ் *அறுக்கும் வினைப்பதிகத்திலே அவனைப் பெறவேணு' மென்கிற மநோரதமாய்ச் சென்றது. அந்த மனோரதம் நிறை வேறாமையாலே மிகவும் கிலேசித்தபடி சொல்லிற்று கீழ்த் திருவாய் மொழியிலே. இப்படி நோவுபடுகிற இவருடைய கிலேசத்தை யறிந்த எம்பெருமான் "ஆழ்வீர்! என்னைப் பெறுமையாலே நீர் நோவுபடுகிறது கிடக்கட்டும்; உம்மைப்பெறுமை இழவுபட்டுக் கிடப்போம் நாமன்றோ? உமக்கொரு குறையுண்டோ? திருநாட்டை விட்டுத் திருக்கண்ணபுரத்திலே நாம் ஸன்னிதி பண்ணியிருப்பது உமக்காகவன்றோ; இந்த சரீரத்தின் முடிவிலே உம்முடைய அபேக்ஷிதம் நிறைவேற்றக்கடவோம்" என்று சொல்லி ஸமாதானம் பண்ண, ஆழ்வாரும் ஸமாதானமடைந்து அதனைச் சொல்லி மகிழ்கிறார் இத்திருவாய்மொழியில். "மரணமானால் வைகுந்தம் கொடுக்கும்பிரான்" என்கிற பாசுரம் இப்பதிகத்திற்கு உயிரா யிருக்கும். ஸர்வேச்வரன் ஸர்வஜநஸமாச்ரயணீயனாய்க் கொண்டு திருக்கண்ணபுரத்திலே கோயில் கொண்டிராநின்றான்; எல்லீரும் அவனைச் சென்று ஆச்ரயியுங்கோள்; ஆச்ரயிக்குமிடத்தில் அவன்



திருவடிகளிலே பக்தியைப் பண்ணுங்கோள்; பக்திக்கு உபகரண மில்லாதார் ப்ரபத்தியைப் பண்ணுங்கோள்; அதற்குரிய அத்யவ ஸாயமில்லாதார் உக்திமாத்ரத்தையாகிலும் சொல்லுங்கோள்; அவ்வளவே கொண்டு அவன் தான் கைவிடான்; ஆனபின்பு எல்லாருமொக்க அவனை ஆச்ரயியுங்கோள் என்று பரோபதேச ரூபமாய் நிகழ்கின்றது இப்பதிகம். "மோஹித்துக்கிடந்தாராகில் கிடக்குமித்தனை போக்கி உணர்ந்தாராகில் பிறர்க்கு ஹிதஞ் சொல்லி யல்லது நிற்கமாட்டார்" என்பர் நம்பிள்ளை.

## 491. பத்தாம்பத்தில் முதல் பதிகம்—தாளதாமரை

கீழ்த்திருவாய்மொழியில் *மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்* என்றருளிச் செய்ததானது எம்பெருமானுடைய திருவுள்ளக் கருத்தை அநுவாதம் செய்தபடியன்றோ. 'ஆழ்வீர்! உமக்கு தேஹாவஸானத்திலே பேறு' என்று எம்பெருமான் ஆழ்வார்க்கு நாளிட்டுக் கொடுத்ததாகத் தேறிநின்றது. தேஹத்தின் முடிவு என்றைக்கு ஆகுமென்று ஆழ்வார் ஆலோசிக்க வேண்டுமோ. *இழை நல்லவாக்கையும் பையவே புயக்கற்றது* என்றும் *என்னுயிர் கூவிக் கொடுப்பார்க்கு மித்தனை வேண்டுமோ?* என்றும் கீழே யருளிச் செய்தவராகையாலே மிகவும் கட்டுக்குலைந்த தம் திருமேனியின் முடிவு அணித்தென்று தாமே அறுதியிட்டுக் கொண்டார். திருநாட்டுக்குப் பயணம் குறித்து ஸந்நாஹம் செய்ய வேணுமென்று கொண்டு முந்துறமுன்னம் வழித்துணை யாகத் திருமோகூர்க் காளமேகப் பெருமாளைப் பற்றுகிறதாகச் செல்லுகிறது இததிருவாய்மொழி. பரமபதத்திற்குச் செல்ல வழித் துணைவேணுமோ? "அர்ச்சிர் திநபூர்வபக்ஷஷடு தங்மாஸாப்த வாதாம்சுமத் க்லௌவித்யுத் வருணேந்த்ர தாத்ரு மஹித:* என்று நடாதூரம்மாள் பணித்தபடியே அர்ச்சிராதிகள் வழிநடத்த வன்றோ போகிறது' வேறு வழித்துணை ஏதுக்கு? என்று ஒரு கேள்வி பிறக்கும். வராஹ சரமச்லோகத்திலே *ததஸ் தம் ம்ரிய மாணம் து...அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம்* என்று எம்பெருமான் தானே வழிநடத்திக்கொண்டு போவதாகச் சொல்லியிருக்கையாலே திருநாடு செல்வார்க்கெல்லாம் அவனே வழித்துணையாகிறானென்னுமிடம், சாஸ்த்ர ஸித்தமாயிருந்தது. அப்படி வழித்துணையாகும் பெருமான் திருமோகூரிலே வந்து ஸந்நிதி பண்ணியிருக்கிறானாகக் கொண்டு அப்பெருமானையே வழித்துணையாகப் பற்றுகிறார். வழித்துணையாமிடத்து ஞானத் தாலும் சக்தியாலும் குறையற்றிருப்பானொருவனேயன்றோ ஆக வேணும்; அவன் தான் விரோதிநிரஸந ஸமர்த்தனாகவும் இருக்க வேணுமே; இப்படிப்பட்ட வாய்ப்பெல்லாம் திருமோகூரெம்

பெருமான் பக்கலிலே குறையற்றிருக்கிறபடியை அநுஸந்தித்துக் கொண்டு அப்பெருமானையே வழித்துணையாகப் பற்றுகிறாராயிற்று.

## 492. பத்தாம்பத்தில் இரண்டாம் பதிகம்—கெடுமிடர்

கீழ்த்திருவாய்மொழியில் திருமோகூரை யநுபவித்தார்; இத்திருவாய்மொழியில் திருவனந்தபுரத்தை யநுபவிக்கிறார்; மேலே திருவாட்டாறு, திருமாலிருஞ்சோலை, திருப்பேர் நகர் என்கிற திருப்பதிகளையும் பேசப்போகிறார். கீழே ஒன்பதாம் பத்திலும் பல திருப்பதிகளைப் பேசினார். இப்படி அடுத்தடுத்துத் திருப்பதிகளிலே யீடுபடுவதற்கு என்ன காரணமென்று ஆராய்ச்சி செய்ய ப்ராப்தம். திருமங்கையாழ்வாரும் பெரிய திருமொழியில் (10—1) *ஒரு நற்சுற்றம்* என்னும் பதிகத்தில் ஒவ்வொரு பாட்டிலும் இரண்டிரண்டு திருப்பதிகளைப் பேசியிருக்கிறார்; அதற்கு என்ன காரணமென்று ஆராய்ச்சிசெய்த ஆசாரியர்கள் வெகு ஆச்சரியமாகக் கருத்தறிந்து கூறியுள்ளார்கள்; பிறந்தகத்தில் நின்றும் புக்ககஞ் செல்லப் புறப்படுகின்ற பெண்பிள்ளை தான் நெடுநாள் வஸித்த விடத்திலே தன்னோடு மிகவும் முகம்பழகியிருந்த பரமப்ரேமாஸ்பதர்களான சில பெண்பிள்ளைகளைச் சென்று பணிந்து 'நங்காய்! நான் போய்வருகிறேன்; மாதே! நான் சென்று வருகிறேன்' என்று சொல்லி விடை பெற்றுக்கொள்வதற்காகச் சில குறடுகள் ஏறியிறங்குமாபோலே, இவ்வாழ்வாரும் தம் புக்ககமாகிய பரமபதத்தின் பயணத்திற்குப் பூர்வாங்கமாக, தமது மிக்க ஈடுபாட்டிற்கிடமான சில திருப்பதி யெம்பெருமான்கள் பக்கலிலே சொல்லிக்கொள்வதாக நுழைந்து புறப்படுகிறார் *ஒரு நல்சுற்றத்திலே—என்று. நம்மாழ்வாருமப்படியே *மாலை நண்ணிக்குப் பிறகு பரமபதப்ராப்தி அணித்தென்று துணிந்தவராகையாலே பல திவ்ய தேசங்களிலே புகுவதாகிறார். இப்போது திருவனந்தபுரத்தை ப்ராப்யமாகத் துணிந்து அவ்விடத்திலே யீடுபட்டுப் பேசுவதாய்ச் செல்லுகிறது இத்திருவாய்மொழி.

## 493. பத்தாம்பத்தில் மூன்றும் பதிகம்—வேய்மருதோளிணை

கீழ்த்திருவாய்மொழியில், ஆழ்வார் தாமும் ஸ்ரீவைஷ்ணவர்களுமாய்த் திருவனந்தபுரத்தேபுக்கு அடிமைசெய்யப் பாரித்தவர் அப்போதே அவ்விடத்தே புக்கு அடிமை செய்யப் பெறாமையாலே கலங்கினார்; 'பழையபடியே நமக்கு ஸம்ஸாரத்திலிருப்பே சேஷித்து விடுகிறதோ' என்று அதிசங்கை தோன்றப் பெற்றார்; இவ்வதிசங்கைக்கு நிதானமென்னென்னில்; ப்ரக்ருதி ஸம்பந்தத்தின் கொடுமையாலும் எம்பெருமானுடைய ஸ்வாதந்திரியத்தைப்



பற்றவும் இங்ஙனே அதிசங்கையுண்டாகக் குறையில்லையன்றோ. இப்படி தமக்குண்டான அதிசங்கையை நேர்கொடு நேரே விண்ணப்பஞ் செய்யாமல் முகபேதத்தாலே விண்ணப்பஞ் செய்கிறார் இத்திருவாய்மொழியில்; எங்ஙனேயென்னில், இடைப் பெண்களுக்குக் கண்ணபிரான் மீது ஒரு அதிசங்கை யுண்டாகி அவர்கள் கதறினபடியை வெளியிடும் முகத்தாலே தம்முடைய அதிசங்கையை வெளியிடுபவராகிறார்; அதாவது — ஒரு படுக்கையிலே கூடவிருக்கச் செய்தே பசுமேய்க்கப்போகிற விடியற்காலம் வந்து, அக்காலத்திற்கேற்ற குயில் மயில் முதலானவற்றினுடைய பாடலாடல் முதலான அடையாளங்களையுங் காண்கையாலே அவற்றையே கொண்டு 'கண்ணபிரான் பசுமேய்க்கப் போனான்' என்று அதிசங்கை பண்ணி நோவுபடுகிற இடைப் பெண்களது பேச்சை அநுவதிக்கும் முகத்தாலே ஆழ்வார் தமக்குண்டான அதிசங்கையை வெளியிடுகிறாரென்றவாறு. இத்திருவாய்மொழிக்கான நூற்றந்தாதிப் பாசுரத்தில் மணவாளமாமுனிகள் ஆய்ச்சிகளுக்குண்டான அதிசங்கையைப் பற்றிச் சிறிதும் ப்ரஸ்தாவியாமல் "தன்னையின்னம் பூமியிலே வைக்குமெனச் சங்கித்து" என்று ஆழ்வாருடைய அதிசங்கையொன்றையே இப்பதிகத்திற்கு ப்ரமேயமாக அருளிச் செய்திருப்பது இங்குக் குறிக்கொள்ளத்தக்கது. அந்யாபதேசத்தை விட்டு ஸ்வாபதேசத்தையே கொண்டருளினபடி. அதற்குமேல் "மால் தெளிவிக்கத் தெளிந்த" என்றுமருளிச் செய்துள்ளார்; ஆழ்வாருடைய அதிசங்கையைக் கண்ட எம்பெருமான் ஆழ்வாரைத் தெளிவு பெறுத்தியதாக இதன் பொருள் தேறுகின்றது; இப்பதிகத்தில் பத்தாம் பாட்டில் "செங்கனிவாயெங்களாயர்தேவே" என்றதின் சுவடறிந்து பூருவர்கள் நிர்வஹித்தருளினபடியைத் தழுவி "மால் தெளிவிக்கத் தெளிந்த" என்றருளிச் செய்யப்பட்டதென்க. இத்திருவாய்மொழிக்குக் காலைப்பூசல் என்று நம் ஆசாரியர்கள் வழங்கும் திருநாமம். (மல்லிகை கமழ்தென்றற்பதிகம்—மாலைப் பூசல்).

## 494 பத்தாம்பத்தில் நான்காம்பதிகம்—சார்வேதவநெறி

ஆழ்வார் தாமான தன்மையை விட்டுப் பெண்தன்மை யெய்திப் பேசும் பரிசு முதற்பத்தில் நான்காம் பதிகமான *அஞ்சிறையமட நாரையிலே தொடக்கமாயிற்று; அது கீழ்ப்பதிகத்தோடு தலைக்கட்டிற்று. இனிமேலுள்ள பதிகங்களிற் பெண்மை தலைகாட்டாதென்க. கீழ்த் திருவாய்மொழியின் ப்ரமேயத்தை அநுவதித்துக் கொண்டு இங்கே நம்பிள்ளை யருளிச் செய்யுமது காண்மின்:— "தம்மைப் பிரிய நினைவின்றிக்கே யிருக்க அதிசங்கையாலே

பிரிந்தார்படும் வ்யஸநத்தைப்பட்டு அத்தாலே அவஸந்நரானவரை 'உம்மையொருநாளும் பிரியேன்' என்று அவன் ஆச்வஸிப்பிக்க அத்தாலே தரித்து மிகவும் ப்ரீதரானார் கீழ்" என்று. நூற்றந்தாதியிலே மணவாள மாமுனிகள் "தன்னையின்னம் பூமியிலே வைக்குமெனச் சங்கித்து மால்தெளிவிக்கத் தெளிந்த மாறன்" என்றருளிச் செய்தபடியே ஆழ்வார் தம்முடைய அதிசங்கை தொலையப்பெற்று இனி நமக்குப் பரமபத ப்ராப்தியில் ஸந்தேஹமில்லையென்று துணிந்து, திருவாய்மொழியாகிற இந்த மஹா சாஸ்திரத்திற்குச் செய்யவேண்டுவதெல்லாம் செய்து தலைக்கட்டத் தொடங்குகிறார் இனி; "பிணக்கறவைச் சார்வாக நிகமித்து" என்ற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தியின்படியே, ஆதியிலே பிறர்க்கு உபதேசித்த பக்தி பலத்தோடே சேர்ந்தபடியைச் சொல்லி நிகமிக்கிறார் இதில். விபீஷணாழ்வான் இராவணனைக் குறித்து உபதேசிக்க, அவ்வுபதேசம் அவனுக்குப் பலியாதொழிந்தாலும், உபதேசித்தவற்குப் பெருமாள் பக்கலிலே ப்ராவண்யம் கனத்துத் தன் பேற்றுக்கு உறுப்பானாப்போலே இவர்க்கும் பரோபதேசம் தம்முடைய ப்ராவண்யம் கனக்கைக்கு உடலாகி ஸபலமானபடியைச் சொல்லி நிகமிக்கிறாரென்க. பிள்ளானுடைய நிர்வாஹமாக ஒரு ஸங்கதி ஈட்டிலருளிச் செய்யப்படுகிறது; நீ பசுமேய்க்கப் போக வேண்டா வென்றவாறே அதில் தவிர்ந்தேனென்றான் எம்பெருமான்; அந்த பெருங்குணத்திலே யீடுபட்டு இவன் பக்திஸுலபனென்பதை நிச்சயித்து அதுதன்னை யருளிச் செய்வது இத்திருவாய்மொழி என்று.

## 495. பத்தாம்பத்தில் ஐந்தாம் பதிகம்— கண்ணன் கழலிணை

முதற்பத்தில் *வீடுமுன் முற்றவுமென்கிற பதிகத்திலே பரோபதேசம் பண்ணத் தொடங்கின வாழ்வார் பத்துத்தோறும் உபதேசபரமான பதிகம் அருளிச்செய்துவந்து, இப்பதிகத்தோடே பரோபதேசத்தைத் தலைகட்டுகிறாராயிற்று. பெரியார்கள் தாங்கள் திருநாட்டுக்கெழுந்தருளும் சரம ஸமயத்திலே அந்தரங்கரானார்க்கு அருமையான சில வுபதேசங்களைச் செய்து போவதுண்டு. அதற்குச் சரம ஸந்தேசமென்று பெயர். இப்பதிகமும் அதுவாயிரா நின்றது. எம்பெருமானே ஆழ்வாரைத் திருநாட்டுக்குக் கொண்டுபோக விரையா நின்றான்; ஆழ்வாரும் இனி நமக்கு ப்ராப்தி தப்பாதென்று துணிவு கொண்டார். இவர்தாம் ஸம்ஸாரிகள் பக்கலிலே பரம கருணையே வடிவெடுத்தவராகையாலே, ஸம்ஸாரிகளுக்கு இதுகாறும் வேண்டியபடி உபதேசங்கள் செய்தருளியிருந்தாலும், விபீஷணாழ்வான் ராவண



பவனத்தை விட்டுப் பெருமாள் திருவடியேறப் போவதாகக் கிளம்பின பின்பும் "நகச்யந்தமுபேக்ஷேயம் ப்ரதீப்தம் சரணம் யதா" என்று சொல்லிப் பின்னையும் உபதேசிக்க வொருப்பட்டாப்போலே இவரும் சரமோபதேசம் செய்து நிகமித்தருளுகிறார். இவர்தாம் பெரிய திருவந்தாதியில் *ஆரானுமாதானுஞ் செய்க. அகலிடத்தை யாராய்ந்து அது திருத்தலாவதே!* என்று "ஸம்ஸாரிகளுக்கு உபதேசிப்பது கஷ்டம் கஷ்டம். இது நம்மாலாகாது" என்று சொல்லியிருந்தும் *பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணி கொள்ளவே தாம் அவதரித்தபடியைத் திருவுள்ளம் பற்றி *சொன்னால் விரோதமிதுவாகிலுஞ் சொல்லுவன்கேண்மினோ வென்று உபதேசத்தில் ருசி குலையாமே போந்தவர் *மண்ணார்க்குத் தானுபதேசிக்கை தலைக்கட்டினான் மாறன்* என்று நூற்றந்தாதியில் மணவாள மாமுனிகளருளிச் செய்தபடியே அவ்வுபதேசத்தை இப்பதிகத்தோடு தலைக்கட்டுகிறாராயிற்று.

## 496. பத்தாம்பத்தில் ஆறாம் பதிகம்— அருள் பெறுவாரடியார்

இத்திருவாய்மொழிக்கு அவதாரிகையிடத் தொடங்கும் போதே நம்பிள்ளை யருளிச் செய்வது பாரீர்—" *பொய்ந் நின்ற ஞானந் தொடங்கி இவ்வளவும் வர ஈச்வரனை ஆழ்வார் பின் தொடர்ந்தபடி சொல்லிற்று; இது தொடங்கி ஆழ்வாரை ஸர்வேச்வரன் பின் தொடருகிறபடி சொல்லுகிறது" என்று. அதாவது இதுவரையில் ஆழ்வார் எம்பெருமானிடத்தில் யாசகராய் நின்றார்; இனி (*முனியே நான்முகனென்னும் பதிகத்தளவும்) எம்பெருமான் ஆழ்வார் பக்கலிலே யாசகனாய் நிற்கிறானென்கை. இத்திருவாய் மொழியில் மூன்றாம் பாட்டில் *இன்று விண்ணுலகந் தருவானாய் விரைகின்றான்* என்றருளிச் செய்கையாலே ஆழ்வாரைப் பரமபதத்தேறக் கொண்டுபோகையிலே எம்பெருமான் தான் விரைந்து 'ஆழ்வாரே! வாரீர், வாரீர்' என்று வேண்டுகின்றமை தெரிகின்றது. அவ்வளவேயுமன்றிக்கே சரமசரீரமாகையாலே ஆழ்வாருடைய திருமேனியில் தனக்குண்டான வியாமோஹத்தாலே கொண்டுபோக விரைந்ததையுங்கூட மறந்து இத்திருமேனி யநுபவத்திலே மிகவும் சபலனாய், முன்பு ஆய்ச்சியரோடு குரவை கோத்தபோது அநேக விக்ரஹபரிக்ரஹம் பண்ணி யநுபவித்தாப் போலவும், நரகனைத் தொலைத்துக் கவர்ந்த பதினாறாயிரம் தேவிமார்களை த்வாரகையில் பதினாறாயிரம் விக்ரஹங்கள் கொண்டு அநுபவித்தாப்போலவும் அநேக விக்ரஹங் கொண்டு ஆழ்வாருடைய அவயவங்கள் தோறு மநுபவிக்கவும் விரும்பி அதற்கு அநுமதி பண்ணுமாறு வேண்டிக்கொண்டான். அதை ஆழ்வார் வெகு சிரமப்பட்டு விடு

வித்துக்கொள்ள வேண்டியதாயிற்று. ஆயினும் எம்பெருமானுடைய அநுவர்த்தனத்தில் குறைவில்லையே. இதையெல்லாம் திருவுள்ளம்பற்றியே நம்பிள்ளை ' இது தொடங்கி ஆழ்வாரை ஸர்வேச்வரன் பின் தொடருகிறபடி சொல்லுகிறது '' என்று மருமமறிந்து அருளிச்செய்தார். எம்பெருமானைப் பெறவேணுமென்று ஆழ்வார்க்கு விடாய் அதிகமா ? ஆழ்வாரைப் பெற வேணுமென்று எம்பெருமானுக்கு விடாய் அதிகமா? என்று ஆராய்ந்து பார்க்குமளவில் ஆழ்வாருடைய விடாய் சிறிது ; எம்பெருமானுடைய விடாய் தானே பெரிது என்று ஸித்தாந்தம் செய்ய வேண்டியதாகிறது. இவ்விஷயம் கீழேயே (9-6.10)* வாரிக் கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்றவென்னை யொழிய என்னின் முன்னம் பாரித்துத் தானென்னை முற்றப் பருகினான்* என்னும் பாசுரத்தினால் ஆழ்வார் தம்மாலேயே வெளியிடப்பட்டுள்ளது. எம்பெருமான் அப்படி பெருவிடாயனாயிருந்து வைத்தும், ஆழ்வாரைக் கொண்டு இவ்வுலகுக்கு [*தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்* என்னும் படியாக] உணவளிக்க விரும்பியிருந்ததனால் தன் விடாயை யடக்கிக் கொண்டு ஸமய மெதிர்ப்பார்த்திருக்க வேண்டியதாயிற்று. அக்காரியமும் ஒருவாறு தலைக்கட்டுமளவானவாறே இனி யெம்பெருமான் ஆறியிருக்கமாட்டானே. திருவாட்டாற்றிலே தங்கு வேட்டையாக வந்து நிற்கிறவனாகையாலே ஆழ்வாரைக் கொண்டு போகையிலே அவனுக்கு விரைவுமிக்கது. ஏன்? திருநாட்டிலே கொண்டுபோய் அநுபவிக்கவேணுமென்று என்ன நிர்ப்பந்தம்? இங்கேதான் அநுபவிக்கலாகாதோ ? என்று சிலர் கேட்கக்கூடும் ; *பாவியேனைப் பல நீ காட்டிப்படுப்பாயோ* என்னும்படியான இருள் தருமா ஞாலத்திலே அவிச்சிந்நமான அநுபவம் வாய்க்கமாட்டாதே ; '' ஒரு விச்சேதமும் வாராதபடி ஏகாந்தமாயிருப்பதொரு தேச விசேஷத்திலே கொண்டுபோய் வைத்து அநுபவிக்க வேணும் '' என்று பாரித்தான். அது தானும் கிடந்தானை கண்டேறுமா போலன்றிக்கே ஆழ்வார் நியமித்தருளுகிறபடியே செய்தோமாகவேணும் என்று பாரதந்திரியத்திலும் ருசியுண்டாகப் பெற்றான். ஆழ்வாரோ பாரதந்திரியத்தின் எல்லையிலே நிற்பவர். ஸர்வேச்வரனைத் தாம் நியமிக்கமாட்டாரே ! அவனோ கையுமஞ்ஜலியுமாய் நின்று ''ஆழ்வாரே ! நியமித்தருளீர் ;'' என்கிறான். ஆழ்வார்க்கோ நியமிக்க வாய் எழவில்லை. ''பராத்பரனாயிருந்து வைத்து இப்படி நம்பக்கலில் பரதந்திரனாய்த்தாழ நிற்கிறானே ! இதுவென் ?'' என்று அந்த சீல குணத்தை யநுபவிக்க விழிந்தாராழ்வார். அநுபவிக்குமிடத்துக் கைவல்யாநுபவம் போலே தனியநுபவம் ரஸிக்கமாட்டாதாகையாலே நால்வரோடே கூடி யநுபவிப்போமென்று நாட்டார் பக்கலிலே கண் வைத்தார். அவர்கள் உண்டியே உடையே உகந்தோடு வாராய் சப்தாதி விஷயங்களிலே அந்யபரராய் அவற்றோடே பணி



போந்திருந்தார்கள். அவர்களைவிட்டு, பரம ரஸிகனான ஸர்வேச்வரனோடுதான் கூடி இக்குணத்தை யநுபவிப்போமேயென்று அவன் மேலும் கண் செலுத்தினார். அவனோ ஆழ்வாரைக் கொண்டு போகையிலே விரைந்திருப்பானொருவனாகையாலே அதிலே அந்யபரனாய் ஆழ்வாருடைய அநுபவத்திற்கு உசாத்துணையாக மாட்டிற்றிலன். இப்படி ஸம்ஸாரிகளும் துணையன்றிக்கே ஸர்வேச்வரனும் துணையன்றிக்கே யானவிடத்து *யானுமென்னெஞ்சு மிசைந் தொழிந்தோம்* என்று முன்னமே சொல்லியிருக்கிறாரே யாழ்வார், தம்மோடு உடன் கேடான நெஞ்சிருக்க இனி என்ன குறையென்று தேறி அந்த நெஞ்சோடே யநுபவிக்கிறார்—'நெஞ்சே ! அவனுடைய மேன்மையிருந்தபடி கண்டாயே; அப்படி மேன்மையுடையவன் நம்பக்கல் இப்போது தாழநிற்கும்நிலை கண்டாயே : நாம் பெற்ற பேற்றின் கனமிருந்தபடி கண்டாயே ! என்று சொல்லிச் சொல்லி உள்குழைகிறார். ஸர்வேச்வரனாகிறான் ஸர்வ நியாமகனாய் ஸ்வதந்தரனாயிருப்பானொருவன் என்று இதுவரை நினைத்திருந்தாராழ்வார் ; ஆச்ரித பாரதந்திரியமே அவனுக்கு ஸ்வரூபமென்கிற உண்மையை இப்போதறிந்து ''இஃது என்ன சீலம் !'' என்று வியக்கிறாராயிற்று.

## 497. பத்தாம்பத்தில் ஏழாம் பதிகம்—செஞ்சொற் கவிகாள்

கீழ்த் திருவாய்மொழியில் ஆழ்வாருடைய ஆனந்தம் அபரிதமாயிருந்தது. எம்பெருமான் ஆழ்வாருடைய திருவுள்ளத்தை விடாதேயிருந்தவன். திருமேனியையும் விடாதவனாயினன். பலாப்பழத்தில் ஈ மொய்க்குமாபோலே திருமேனியில் அவயவங்கள் தோறும் மொய்ப்பவனாயினான். அபிமத விஷயத்தில் அழுக்கையுகக்கும் காமுகனைப்போலே ஞானிகளின் ஞானபரிமளம் விளங்கும் தேஹத்தை விடமாட்டானே யெம்பெருமான்: மணத்தின் வாசியறிந்து குருவேரைச் சூடும் போகிகளானவர்கள் மண்ணையுதறினால் மணம் குன்றுமென்று மண்பற்றுக்கழற்றாதே அதனைச் சூடுமாபோலே பரமபோகியான ஸர்வேச்வரனும் ஞானிகளை விரும்பி யநுபவிக்குமிடத்தில் *ஆஹ்லாத சீத நேத்ராம்பு புளகீக்ருத காத்ரவாந்* என்கிறபடியே ஜ்ஞாந கார்யமான விக்ருதிகளுக்கெல்லாம் ஆச்ரயமாய்க் கொண்டு ஜ்ஞாந பரிமளமெல்லாம் தோற்றும்படி யிருக்கிற விக்ரஹத்திலே அளவு கடந்த ஆதரத்தைப் பண்ணி அநுபவிக்கத் தொடங்கினான். அவ்வளவன்றிக்கே அதிசாபலத்தாலே இத்திருமேனியோடே தம்மைத் திருநாட்டிலே கொண்டு போவதாகவும் அபிநிவேசங்கொண்டான். அதனையறிந்த ஆழ்வார்—''இவன் நம்மைக் கொண்டு கவி பாடுவித்துக்கொள்வதற்காக நம்மை இங்கு வைத்திருக்கிறானென்றிருந்தோம்; இவனுடைய

முக்கியமான எண்ணம் அதுவன்று; நம்முடம்பை விரும்பி விட மாட்டாமையாலே நம்முடம்பில் நசையாலேயே இங்கு வைத்தான் போலும்; இவன் வெறுமுடம்பனாயிருந்தான்' என்று கொண்டு எப்படியாவது இப்பாழும் நசையை இவனுக்கு விடுவிக்கவேணுமென்று பார்த்து தேஹத்திலுள்ள தோஷங்களை யறிவித்து, "பிரானே! பரமரஸிகனான நீ இவ்வழுக்குடம்பையோ விரும்புகிறது? வெகு நன்றாயிருந்தது! என்ன! வத்ஸலனாய் தோஷ போக்யனானவன் காமினியின் அழுக்குகக்கும் காமுகன் படியிலே மேல்விழத் தொடங்கினான். அதனை விடுவிக்கு முபாயத்தை ஆழ்ந்து விமர்சிக்கப்புகுந்த ஆழ்வார்க்கு தைவாதீனமாய் ஒருபாயம் தோன்றிற்று. இவன் நிரங்குச ஸ்வதந்திரனாயிருக்கச் செய்தேயும் நம்மிடத்திலே பாரதந்திரியங் கொண்டாடி நாம் விதித்தபடியே செய்வதாக நம்முடைய நியமனத்தை யெதிர் பார்த்திருக்கின்றமை யுண்டே. விதிக்குக் கட்டுப்படுமவன் நிஷேதத்திற்கும் கட்டுப்படவேண்டியவனே யன்றோ; உலகில் ஒருவன் சாஸ்த்ரத்துக்குக் கட்டுப்படுகையாவது விதி நிஷேதங்களிரண்டுக்கும் கட்டுப்படுகையே யன்றோ; ஆகவே இவனிப்போது நம் சொல்லுக்கு உடன்படுகைக்கு இந்த வழியிலே சென்றுபேசுவோமென்று துணிந்து "பிரானே! என் பக்கலில் பாரதந்திரியங் கொண்டாடி எனது நியமனத்தை யெதிர் பார்த்திருப்பதாகச்சொல்லி நின்ற நீ இவ்விஷயத்தில் என் சொல்லுக்கு முரணாக நடப்பது தகுதியோ?" என்று கேட்க இதற்கு மேல் எம்பெருமானுக்கு மறுமாற்ற மில்லாமையாலே "ஆழ்வீர்! நான் உம்முடைய சொல்லுக்குக் கட்டுப்படவேண்டியவனாயினேன்; ஹாஹா நல்விரகாலே என்னுடைய ஆவலைத் தவிர்த்தீரே" என்று சொல்லிக் கொண்டாடி நிற்க, அது கண்ட ஆழ்வார் 'ஸர்வநியந்தாவாய், ஸர்வாதிகனான ஸர்வேச்வரன் தான் மிகுந்த ஆவலோடு செய்ய நினைத்த செயலையும், நம்முடைய வொரு சொல்லுக்குக் கட்டுப்பட்டு நிறுத்திக்கொண்டானே, இது என்ன சீலம்! இது என்ன பாரதந்திரியம்! என்று ஈடுபட்டு நெடும்போது உணர்த்தியற்றிருந்து பிறகு தெளிந்து, இம்மஹா குணத்தில் பிறரும் அமிழ்ந்து போகாமைக்காக செஞ்சொற்கவிகாள்' என்று தம்மோடொத்த சில அநுபவ ரசிகர்களை விளித்து அவர்களுக்கு அருமையான உபதேசமொன்று செய்யத்தொடங்குகிறார். பெருவெள்ளத்திலே யிறங்கிப் பெரும்பள்ளத்தி லாழங்காற்பட்டுச் சிரமத்துடன் மீண்டவர்கள் நிலையறியாதார்க்கு ஆழங்காலை யுணர்த்த ப்ராப்தமே யன்றோ அப்படியேயாயிற்று இதுவும். ஆக அவனுடைய சீல குணத்திலே கண் வையாதே கொள்ளுங்கோளென்று செஞ்சொற் கவிகளுக்குக் கள்ளவழி காவலிடுகிறாராயிற்று. இப்படி ஆழ்வாருடைய திருமேனியிலே வியாமோஹம் காட்டின எம்பெருமான் திருமாலிருஞ்



சோலைப் பெருமாளென்னுமிடம் இப்பதிகத்தில் விசதமாகும். ஆசார்ய ஹ்ருதயத்தில் (188) த்யாஜ்யதேஹ வ்யாமோஹம் 'மருள்கள் கடியும் மயல்மிகு பொழிலிலே தழைக்கும்' என்ற சூர்ணையும் அதன் வியாக்கியானமும் இங்கே அநுசந்திக்கத்தகும்.

## 498. பத்தாம்பத்தில் எட்டாம் பதிகம்—திருமாலிருஞ் சோலைமலை

ஆழ்வாரைத் திருநாட்டுக் கெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போக எம்பெருமான் விரைந்தமை சொல்லிற்று *அருள் பெறுவாரடியாரென்னுந் திருவாய் மொழியிலே. அதற்குச் சிறிது இடையூறு விளைந்தது கீழ்த் திருவாய் மொழியில்—ஆழ்வாருடைய திருமேனியிலே எம்பெருமான் அளவுகடந்த அபிநிவேசம் பண்ணி இத்திருமேனியோடே ஆழ்வாரைத் திருநாட்டுக்குக் கொண்டு போவதாக முயல, ஆழ்வார் தம்முடலின் தண்மையை அப்பெருமானுக்கு அறிவித்துத் தடுக்க இவ்வழியாலே எம்பெருமானுடைய விரைதல் சிறிது தடைபட்டதாயிற்று. எம்பெருமானும் ஆழ்வாருடைய நிஷேதத்திற்கு இணங்கி நின்று இவர்க்கு விண்ணுலகம் தர விரைந்தானாகி வானேறும் வழியிலே கொண்டு போவதாக முயன்றவளவிலே ஆழ்வார் அவனை மடிபிடித்து ஒரு கேள்வி கேட்கத் தொடங்கினார்; அதாவது, "இன்று இப்படி பதறுகின்ற நீ அநாதிகாலம் என்னை இவ்விருள் தருமாஞாலப்படுகுழியிலே தள்ளியிட்டு வைத்து ஆறியிருந்தமை எங்ஙனே? இன்று இப்படி ஆதரிக்கவைக்கும் அநாதிகாலம் அநாதரித்திருந்தமைக்கும் ஹேது சொல்லியருளவேணும்" என்றார்; அவனும் என்ன ஹேது சொல்லலாமென்று பலவாறு சிந்தித்துப் பார்த்தான். எதற்கும் ஆழ்வார் பிரதிகோடி சொல்ல வல்லலர்என்பதைத் தன்னில் தானுணர்ந்து, 'நிரங்குச ஸ்வாதந்திரியத்தாலே செய்யுமதுக்கு ஹேதுவுண்டோ' வென்று ஆழ்வார் தாமே ஸமாதானமடைந்திடுகவென்றும் கருதி, ஒரு மறுமாற்றமுங் காணாமையாலே கவிழ்ந்து நின்று காலாலே தரையைக் கீறி நின்றான். இது ஒரு நிர்ஹேதுக வீஷயீகாரமென்று ஆழ்வாரறிந்து விஸ்மிதராய்க் களித்துப் பேசுகிறதா யிராநின்றது--இத்திருவாய்மொழி.

## 499. பத்தாம்பத்தில் ஒன்பதாம் பதிகம்— சூழ்விசும் பணி முகில்

கீழ்த் திருவாய்மொழியில் *இன்றென்னைப் பொருளாக்கித் தன்னையென்னுள் வைத்தான், அன்றென்னைப் புறம்போகப் புணர்த்ததென் செய்வான்?* என்று எம்பெருமானை மடிபிடித்துக்

கேள்வி கேட்டாராழ்வார்; அதற்கு ஹேது தன்னுடைய நிரங்குச ஸ்வாதந்திரியமொழிய வேறென்றில்லையென்று ஆழ்வாரும் நன்கறிந்தவர், எம்பெருமானும் நன்கறிந்தவன்: ஆகவே 'ஆழ்வீர்! அன்று உபேக்ஷித்திருந்ததற்கும் ஸ்வாதந்திரியமே காரணம், இன்று ஆதரிப்பதற்கும் ஸ்வாதந்தரியமேதான் காரணம்' என்று பதில் சொல்லவேண்டும். தான் பரமகாருணிகனாயிருந்துவைத்து இங்ஙனே பதில் சொல்லத் தகாததலால் ஒரு வகையான உத்தரமுஞ் சொல்லாதே தலைகுனிந்து நின்றான். ஆழ்வாரைப் பரமபதத்தேறக் கொண்டுபோக விரைவு கொண்ட தான் இப்படி ஆழ்வாருடைய கேள்விக்கு பதில் சொல்லமாட்டாமல் .வெள்கி நிற்கிற நிலையை மறைப்பதற்காக ஒருவழி பண்ணினான்; கலியாணங்களில் சடங்கு காட்டும் உபாத்யாயர்கள் சொல்லவேண்டிய மந்த்ரம் தோன்றாவிட்டால், மேளதாளங்களைக் கொட்டச்சொல்லி வாத்ய கோஷத்தாலே அத்தை மறைத்து விடுமாபோலே, இப்போது நிருத்தரனானதானும் மேகஸமுத்ர பேரீகீதகாஹள சங்க ஆசீஸ் ஸ்துதி கோலாஹலங்களைச் செய்தான்.

அதாவது *சூழ்விசும்பணி முகில் தூரியம் முழக்கின, ஆழ் கடலலைதிரை கையெடுத்தாடின* என்று ராஜகுமாரர் போம்போது மங்களவாத்ய கோஷம் பண்ணுவாரைப்போலே பரமபதத்துக்குப் போமவர்களைக்கண்ட ப்ரீதியாலே முழங்குவது கோஷிப்பதாகா நிற்கும் மேகஸமுத்ரங்களாகிற பேரிகளின் கோலாஹலத்தையுண்டு பண்ணினான். *கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள்* என்கிற கீதங்களைச் செவிப்படுத்தினான்; *காளங்கள் வலம்புரி கலந்தெங்கும் இசைத்தனர்* என்கிற காஹளசங்கங்களினுடைய முழக்கத்தை மூட்டினான்; *வாளொண்கண் மடந்தையர் வாழ்த்தினர்* என்கிற ஆசீஸ்ஸின் ஆரவாரத்தைக் கிளப்பினான்; *தொடர்ந்தெங்கும் தோத்திரஞ் சொல்லினர்* என்கிற ஸ்தோத்ர கோலாஹலங்களைப் பிறப்பித்தான்.

ஆக இப்படிப்பட்ட கோலாஹலங்களை விளைவித்த மாத்திரமேயன்றிக்கே, அர்ச்சிராதி கதியையும், ஆதிவாஹிக ஸத்காரத்தையும் (பரமபத) திவ்ய தேசப்ராப்தியையும் அங்குள்ளாருடைய பஹுமானத்தையும் ஆனந்தமயமான ஆஸ்தானத்திலிருப்பையும் ஸ்வசரணகமலப்ராப்தியையும் பெற்றாராகப் பேசும்படியும் பண்ணி வைத்தான். அதெல்லாம் பேசப்படுகிறது இத்திருவாய்மொழியில்.



## 500. பத்தாம்பத்தில் பத்தாம் பதிகம்—முனியே நான்முகனே

கீழே அர்ச்சிராதிமார்க்க கதியைப் பறக்கப்பேசி *அந்தமில் பேரின்பத்து அடியரோடிருந்தமை* என்றார். திருக்கண்களைத் திறந்து பார்த்தவாறே திருப்புளியாழ்வாரடியிலேயே தாம் வீற்றிருக்கக்கண்டார். நித்ய முக்தர்களின் திரளிலே யிருந்ததாகச் சொன்ன இருப்பு, ஜ்ஞாநாநுஸந்தான மாத்திரமாயிருந்தது. ப்ரக்ருதியிலேயே தாம் சிக்குண்டிருக்கிறபடியைக்கண்டு போர நொந்தார். தம்முடைய ஆகிஞ்சந்யத்தையும் அநந்யகதித்வத்தையும் நன்குணர்ந்த எம்பெருமான் இன்னமும் தம்மை இப்படி நோவுபட விட்டிருப்பது என்னே! என்று மிகவும் கிலேசித்து மாதா பிதாக்கள் அருகேயிருக்க பசியாலும் தாஹத்தாலும் நோவு படுகிற ஸ்தநந்தயப்ரஜை ஆர்த்தியின் மிகுதியாலே தாய்பேரைச்சொல்லிக் கூப்பிடுமாபோலே. ஈர நெஞ்சு இள நெஞ்சு இல்லாதாருடைய ஹ்ருதயங்களுங்கூட இரங்கும்படியாகவும், அவனுக்குத் தம்மை ரஸித்தல்லது பரமபதத்திலும் இருப்பு அரிதாம்படியாகவும் காட்டுத் தீயிலே அகப்பட்டாரைப் போலே ஆர்த்தத்வநியோடே பெருமிடறு செய்து கூப்பிட்டு அவனும் வந்து தோற்றி இவருடைய ப்ரக்ருதிஸம்பந்தத்தை யறுத்து அடியார் தம் திரளிலே கொண்டுசேர்க்க, தாம் க்ருத க்ருத்யராய் அவாவற்று வீடுபெற்ற படியைப் பேசுகிறார் இத்திருவாய்மொழியில். இங்கே பரமபோக்யமான நம்பிள்ளை யீட்டு ஸ்ரீஸூக்தி காண்மின் :— "இப்ப்ரபந்தத்துக்கு ப்ரமேயமான வஸ்து ஸர்வேச்வரன்; இப் ப்ரபந்தம் - அவாவிலந்தாதி. மயர்வறமதிநலமருளப் பெற்றவர் கவி பாடினார்: இனி இவருடைய அவதாரந்தான் ஸர்வேச்வரனுடைய அவதாரத்தோபாதி ஸாதுக்களுடைய ஸுக்ருதபலம்."...

---

அண்ணஸ்வாமியின் அமுதமொழியாயிரத்தில்
ஐந்தாவது நூறு முற்றிற்று.
முதற்பகுதி முடிந்தது.

---

THE FREE INDIA PRESS, MADRAS-2.

# ஸ்ரீ P. B. A. ஸ்வாமியின் நூல்கள்

ஸ்ரீமான் P. B. அண்ணங்கராசாரிய ஸ்வாமியின்
நூல்கள் 16 துறைகளில் வெளிவந்துள்ளன.
அவைகளின் சுருக்கமான விவரம் வருமாறு:

## 1. நாலாயிர திவ்யப்பிரபந்தவுரைகள்

நாலாயிர திவ்யப்பிரபந்தங்களுக்கும் திவ்யார்த்த தீபிகை யென்னும் விரிவான தமிழ் உரை ஸ்ரீ ஸ்வாமிகளால் எழுதி அச்சிடப் பெற்று இதுவரையில் பல பதிப்புக்கள் ஏறியிருக்கிறது. தற்சமயம் இது முழுவதும் கிடைக்கும்.

தவிர, சில பகுதிகளுக்கு பொழிப்புரை யென்னும் சுருக்கமான உரையும் உளது. நித்யாநுஸந்தானத்திற்கு தனியாக உரை அச்சிடப்பட்டிருக்கிறது.

## 2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்தவுரைகள்

உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஞான ஸாரம், ப்ரமேயஸாரம், ஸப்தகாதை, ஆர்த்திப்பிரபந்தம் இவை களின் உரை இப்பகுதியில் சேர்ந்தவை.

## 3. பூர்வாசார்ய ஸ்தோத்ரவுரைகள்

ஆளவந்தார், எம்பெருமானுர், கூரத்தாழ்வான், பட்டர், முதலிய நம் பூர்வாசார்யர்கள் அருளிச்செய்த எல்லா வடமொழி ஸ்தோத்ர நூல்களுக்கும் தமிழில் எளிய உரை எழுதி அச்சிடப்பட்டிருக்கிறது. விஷ்ணுஸஹஸ்ரநாமம், முகுந்தமாலை, ஸ்தோத்ரரத்னம், சதுச்லோகீ, கத்யத்ரயம், பஞ்சஸ்தவம், அஷ்டச்லோகீ, ஸ்ரீரங்கராஜஸ்தவம், ஸ்ரீகுணரத்னகோசம், ஸுதர்சனசதகம், பூர்வ-உத்தர தினசரிகள், யதிராஜவிம்சதி, நக்ஷத்ரமாலிகா முதலிய பல சிறியஸ்தோத்ரங்கள், ஹயக்ரீவ ஸ்தோத்ரம் முதலிய 12 தேசிக ஸ்தோத்ரங்கள்—இவை களுக்கெல்லாம் எளிய தமிழ் உரை.

## 4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்

ஆழ்வார்கள் வைபவம், பூர்வாசார்யப்ரபாவம், மணவாள மாமுனிகள் வைபவம், நிகமாந்தகுரு வைபவம்—கூரத்தாழ்வான் வைபவம் மறுபதிப்பில்

### 5. இதிஹாஸ புராண சரித்திர நூல்கள்

1. வால்மீகி ராமாயண வசனம்
2. காஞ்சீ ஹஸ்திகிரி வைபவம்
3. திவ்யப்ரபந்தகதாம்ருதம் (ஆழ்வார்கள் அனுபவித்த இதிஹாஸபுராணக்கதைகள்) இது நாலாயிரதிவ்யப்ரபந்த புத்தகத்துடன் சேர்க்கப்பட்டிருக்கிறது.

### 6. ரஹஸ்யார்த்த விளக்க நூல்கள்

பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஸ்ரீவசனபூஷணம் ஆகிய மூன்றுக்கும் எளிய தமிழ் உரை. இவற்றில் சில வடமொழி, தெலுங்கு, ஆங்கிலம், ஹிந்தி பாஷைகளிலும் உள. ஆசார்யஹ்ருதயத்திற்கு பதவுரையும் தாத்பர்ய ஸாரமும் உளது.

### 7. வேதாந்தப்பொருள் விளக்க நூல்கள்

தமிழில் விசிஷ்டாத்வைத தரிசனம், விசிஷ்டாத்வைத ஸர்வஸ்வம், ஸ்ரீ பாஷ்யாதிகரணமெழுபத்தாறு, எம்பெருமானார் தரிசனம், ஸ்ரீ ராமாநுஜ ஜயந்தி மலர் முதலியவை.

வடமொழியில், உபயவேதாந்தஸதர்த்த ஸமுச்சயம், லோகாசார்யஸித்தாந்தஸாரம் முதலியவை. ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரன், ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியா, விசிஷ்டாத்வைதவிஜயத்வஜம், விசிஷ்டாத்வைத ஸித்தாந்தஸாரம், கீதார்த்தஸர்வஸ்வம், சாங்கர சிரோபூஷா முதலிய பல்நூல்களுள.

### 8. வேதவிசாரலக்ஷண நூல்கள்

வேதாத்யயநஸர்வஸ்வம், ஸர்வஸ்வ ஸம்ரக்ஷிணீ, ஸர்வஸ்வ ரக்ஷா, ஸர்வஸ்வகவசம், பதபாடபரித்ராணம், பதபாடபரிசுத்தி, ஸீத்வத்வைதிகபூஷணம், வைதிகவித்வதாபரணம், வேதபாஷ்ய விமர்சனம், வேதபாஷ்ய பரிசீலநம் முதலியவை. (பல வடமொழியில்)

### 9. ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்த விளக்க நூல்கள்

ஸ்ரீ லோகாசார்யஸித்தாந்தஸாரம்,
வைசாகோத்ஸவ உபந்யாஸமாலை,
திருவல்லிக்கேணியுபந்யாஸமாலை,
அத்புதோபந்யாஸ மாலை,
ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதி.

### 10. லோகாபிராம உபந்யாஸ நூல்கள்

ஸ்ரீ ராமாநுஜஜயந்தி மலர்
ஆழ்வார்கள் உகந்தராமன், கண்ணன்
தக்ஷிணோத்தரயாத்திரை விளக்கு
வரதன் ஸந்நிதி வரலாறு
(தானே யெழுதிய தன் சரிதை—விரிவானது, சுருக்கமானது)



### 11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்

இத்துறையில் நூற்றுக்கு மேற்பட்ட நூல்கள் வெளியாகியுள்ளன. பழைய நூல்கள் அநேகமாய் கிடைக்கமாட்டா. சமீப காலத்து நூல்கள் பல கிடைக்கும்.

### 12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடுகள்

(உபந்யாஸம் செய்பவர்களுக்கு மிகவும் பயன்படுபவை)
உபந்யாஸத்ரயம்
உபந்யாஸஸப்தகம்
உபந்யாஸவிம்சதி
உபந்யாஸ சதத்வயம்
மதுரோபந்யாஸ மாலை
அறுபத்திரண்டு உபந்யாஸமாலை
அறுபத்திமூன்று ,,
அறுபத்திநான்கு ,,
எழுபத்திநான்கு விருந்து
நற்பொருளெழுநூறு
நல்வார்த்தை நானூறு
அசீத்யுபந்யாஸமாலை (ஸம்ஸ்கிருதம்)
பண்டிதபோக்யபஞ்சாம்ருதம்
பன்னிறுதிங்கள் அனுபவம்
கம்பரின்பக் கவித்திரட்டு

### 13. வடமொழி நூல் திரள்கள்

திவ்யப்ரபந்தத்தில் முதலாயிரத்திற்கும், மற்ற மூவாயிரத்தில் சிற்சில பாகங்களுக்கும் (திருவாய்மொழியில் 600 பாசுரங்களுக்கும்) ஸம்ஸ்க்ருத வியாக்கியானம். பல பாகங்களுக்கு சுலோகரூபமான மொழிபெயர்ப்பு. தனி ஸ்தோத்ர, உபந்யாஸ க்ரந்தங்கள் பல. விசிஷ்டாத்வைத வேதாந்த விஷயமான நூல்கள் பல. வைதிக மநோஹரா மாதப்பத்திரிகை.

### 14. ஹிந்தி நூல்கள்

திவ்யப்பிரபந்தத்தில் முதலாயிரம் பூராவும், மற்றவைகளில் பல பாகங்களுக்கும் (திருவாய்மொழியில் 600 பாசுரங்களுக்கும்) ஹிந்தி டீகை. யதிராஜவிம்சதீ—முமுக்ஷுப்படி முதலியவற்றுக்கு டீகை-பல உபந்யாஸங்களும் வ்யாஸங்களும்.

### 15. தெலுங்கு பாஷை நூல்கள்

முகுந்தமாலை, ஆளவந்தார் ஸ்தோத்ரம், சதுச்லோகீ, கத்யத்ரயம், ஸ்ரீவைகுண்டஸ்தவம், அதிமானுஷஸ்தவம், ஹயக்ரிவஸ்தோத்ரம், ஸ்ரீஸ்துதி முதலிய பல ஸ்தோத்ரங்களுக்கும், நாலாயிர திவ்யப்ரபந்தத்தில், பெரிய திருமொழியில் சில பகுதிகள் தவிர மற்றவைக்கும் தெலுங்கு டீகை அச்சாகியிருக்கிறது. இதில் சிலபாகம் மறுபதிப்பில் உளது. ரஹஸ்யங்களுக்கும் டீகையுளது. ஸ்ரீ ராமாநுஜ பத்ரிகா—மாத வெளியீடு.

## 16. பூர்வாசார்யக்ரந்த வெளியீடுகள்

| | | Rs. | P. |
|---|---|---|---|
| 1. | ஆளவந்தார் அருளிச்செய்த ஸித்தித்ரயம் ஆகமப்ராமாண்யம், கீதார்த்தஸங்க்ரஹம், நடாதூரம்மாள்—தத்வஸாரம் (ஸம்.) | 4 | 00 |
| 2. | எம்பெருமானுர் அருளிச்செய்த எல்லா க்ரந்தங்களும்—பகவத்ராமாநுஜக்ரந்தமாலை (ஸம், தெ) | 20 | 00 |
| 3. | ஸ்ரீ விஷ்ணுபுராணம் விஷ்ணுசித்தீயவ்யாக்கியானத்துடன் | 12 | 00 |
| 4. | ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ரநாமபாஷ்யம் | 5 | 00 |
| 5. | திவ்யஸூரி சரிதம் (தெ) | 2 | 00 |
| 6. | ஸகலபூர்வாசார்யஸ்தோத்ரமாலை (ஸம், தெ) | 3 | 00 |
| 7. | வேதாந்ததேசிக ஸ்தோத்ரமாலை–மறுபதிப்பில் (ஸம், தெ) | 3 | 00 |
| 8. | ஸுதர்சனசதகம் மூலம் (ஸம், தெ) | 0 | 50 |
| 9. | வேதாந்ததேசிகக்ரந்தமாலை (மறுபதிப்பில்) | | |
| 10. | திவ்யஸூரிசரிதம் (தெ) | 2 | 00 |
| 11. | புருஷகாரமீமாம்ஸா, ரஹஸ்யத்ரய காரிகா (தெ) | | |
| 12. | யதீந்த்ரமததீபிகா (ஸம்) | 1 | (0 |
| 13. | நாலாயிரதிவ்யப்பிரபந்தம் (மூலம்) | 14 | 00 |
| 14. | ,, (தெ) | 11 | 00 |
| 15. | நித்யாநுஸந்தானம் (மூலம்) (த) | 2 | 50 |
| 16. | பெரியாழ்வார் திருமொழி வியாக்யானம் (மணவாளமாமுனிகள்) (த) | 10 | 00 |
| 17. | திருப்பாவை வியாக்கியானம் 3000, 6000 படிகள் (த) | 5 | 00 |
| 18. | பெரியதிருமொழி பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் (1–7 பத்துக்கள்) (தெ) | 10 | 00 |
| 19. | திருநெடுந்தாண்டகம் (பெரியவாச்சான்பிள்ளை) (த) | 5 | 00 |
| 20. | பகவத்விஷயம் (ஈடுமுப்பத்தாறாயிரப்படி) (தெ) ஷை தமிழ் (மறுபதிப்பில்) | 25 | 00 |
| 21. | பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த அஷ்டாதசரஹஸ்யத்தில் முதல்பகுதி (தெ) | 3 | 00 |
| 22. | முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஸ்ரீவசனபூஷணம் (மூலம் மட்டும்) (த–தெ) | 1 | 00 |
| 23. | தத்வசேகரம், ப்ரமேயசேகரம், ப்ரபன்னபரித்ராணம், அர்ச்சிராதி மூலம் (தெ) | 1 | 00 |
| 24. | அருளிச்செயல் ரஹஸ்யம் (தெ) | 0 | 50 |
| 25. | ஸ்ரீமத்வரவரமுநீந்த்ரக்ரந்தமாலா மணவாளமாமுனிகள் அருளிச்செய்த எல்லா க்ரந்தங்களும் (த) | 25 | 00 |
| 26. | ஷை ரஹஸ்யவ்யாக்யாநவிபாகம் மட்டும் (தெ) | 20 | 00 |

(மற்றும் பல நூல்களுண்டு)